# மொழி வளர்ச்சியும் மொழி உணர்வும்

(சங்க காலம்)










டாக்டர் செ.வை. சண்முகம்
பேராசிரியர், மொழியியல் துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்




விற்பனை உரிமை

**மணிவாசகர் பதிப்பகம்**

55, லிங்கி தெரு, சென்னை-600 001.

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | மொழி வளர்ச்சியும் மொழி உணர்வும் (சங்க காலம்) |
| ஆசிரியர் | : | செங்குந்தபுரம் வைத்திலிங்கம் சண்முகம் (1932) |
| உரிமை | : | ஆசிரியருக்கே |
| வெளியீடு | : | 'திருவேரகம்' 194, மாரியப்பாநகர், அண்ணாமலைநகர் அஞ்சல், 608002 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதற்பதிப்பு |
| பதிப்பு ஆண்டு | : | நவம்பர், 1989 |
| நூலின் அளவு | : | 21 × 14 செ.மீ. |
| அச்சமைப்பு | : | 10 புள்ளி |
| பக்கங்கள் | : | 296 + 12 |
| விலை | : | ரூ.40-00 |
| விற்பனை உரிமை | : | மணிவாசகர் பதிப்பகம், சென்னை |
| அச்சகம் | : | கே.பி.டி. இண்டஸ்ட்ரீஸ், அண்ணாமலை நகர். |

55/4

# முகவுரை

சங்க காலத்தில் நடைபெற்ற மொழிவளர்ச்சி நிலைகளான எழுத்தாக்கம், இலக்கிய உருவாக்கம், தொகையாக்கம், இலக்கண உருவாக்கம் ஆகியவற்றையும் அவைகளுக்கு மூல காரணமான மொழிச் சூழலையும் மொழி உணர்வையும் விளக்கும் கோட்டுருவமாக (Sketch) இந்த நூல் அமைந்துள்ளது. இங்கு மொழிவளர்ச்சிக்குக் காரணமான சமூக, பண்பாட்டு, அரசியல் சூழல்களின் முக்கியத்துவம் சுட்டிக் காட்டப்பட்டுள்ளதே தவிர அவை என்னவென்று விளக்கிக் காட்டப்படவில்லை. ஆனாலும் மொழியியல் நோக்கில் குறிப்பாக மொழிச் சமுதாயவியல் (Sociology of language) நோக்கில் மொழி வளர்ச்சியின் எல்லாப் பரிமாணங்களையும் ஆராயும் முயற்சி முதன்முதலில் இங்கு மேற்கொள்ளப்பட்டிருக்கிறது.

கடந்த மூன்று ஆண்டுகளாக மொழி வளர்ச்சியை ஆராய்ந்து வரும்போது அதற்கு வேண்டிய பல நூல்களைச் சென்னை, மதுரை - காமராசர், மைசூர், தமிழ்ப் பல்கலைக் கழகங்களிலிருந்தும், இந்திய மொழிகளின் நடுவண் நிறுவனம்' அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழியல்துறை நூலகங்களிலிருந்தும் நூல்களை எடுத்துக் கொடுத்தும், சொந்த நூல்களைத் தந்தும் இந்தப் பொருள் பற்றி விவாதித்தும் உதவிய நண்பர்களுக்கு என் நன்றி உரியது.

இந்த நூல் இறுதி வடிவம் பெற உதவியாய் இருந்தது தமிழ்ப் பல்கலைக் கழகமே. அங்கு இரண்டு வாரம் பல்கலைக் கழக மானியக்குழு வருகைதரு பேராசிரியராய்ச் சொற்பொழிவு ஆற்றப் பணித்த தமிழ்ப்பல்கலைக் கழகத் துணைவேந்தர் பேரா.ச. அகத்தியலிங்கம் அவர்களுக்கும், சொற்பொழிவுகளை ஏற்பாடு செய்த மொழியியல் துறைத்தலைவர் பேரா.கி. அரங்கன் அவர்களுக்கும் என் நன்றி உரியது.

எல்லாவற்றுக்கும் மேலாக, என் வாழ்வின் அடித்தளமாய் அமைந்தது, பிறந்தவீடும், புகுந்த வீடுமாகிய அண்ணாமலைப் பல்கலைக்கழகமே. வெள்ளி விழா ஆண்டில் படித்துப் பட்டம் பெற்று, அதே ஆண்டில் ஆசிரியனாய் நுழைந்து, பொன் விழா விலும் வைரவிழாவிலும் கலந்து கொள்ளும்படித் தொடர்ந்து பணியாற்றி வருவதால் நான் பெற்ற பேறுகள் பலப்பல. நெஞ்சு நிறைந்த உணர்வோடும், பிள்ளைப் பாசத்தோடும் இந்த நூல் வெளியிட அனுமதி அளித்த பல்கலைக் கழகத் துக்கு நன்றி, நன்றி.

கையெழுத்துப் பிரதியைப் படியெடுத்து உதவிய செல்வியர் கள் சி. கலைமகள், ஜெ. உமா, டாக்டர்கள் வி. அருள்ராஜ், ஆ. கார்த்திகேயன், முரளி, பெ. மாதையன், திரு. மூவேந்தன் ஆகியோருக்கும், அச்சுப் பிழை திருத்த உதவிய டாக்டர் இரா. பாலகிருஷ்ணன், திரு. க. இராதாகிருஷ்ணன் ஆகியோருக்கும் என் நன்றியும் வாழ்த்துகளும் உரியன.

நூலை வெளியிடத் துணைபுரிந்த மணிவாசகர் பதிப்பக டாக்டர் ச. மெய்யப்பன் அவர்களுக்கும், விரைவாகவும் செம்மையாகவும் அச்சிட்ட கே.பி.டி. இண்டஸ்ட்ரீசுக்கும் என் நன்றி.

அண்ணாமலைநகர் — செ.வை. சண்முகம்

23.11.1989

# உள்ளுறை

## ஆசிரியரின் பிற நூல்கள்

1. Naccinarkkiniyar's Conception of Phonology
2. The language of Tamil inscriptions: 1250-1350 A.D. (Co - author)
3. Dravidian Nouns (a Comparative Study)
4. Third Seminar on Dravidian linguistics (Co-editor)
5. Indonesian Studies
6. Aspects of Language Development in Tamil
7. சுவாமிநாதம் (உரையும் பதிப்பும்)
8. சுவாமிநாதம் மூலமும் உரையும் (பதிப்பு)
9. எழுத்துச் சீர்திருத்தம்
10. எழுத்துச் சீர்திருத்த மலர் (இணை பதிப்பர்)
11. எழுத்திலக்கணக் கோட்பாடு
12. சொல்லிலக்கணக் கோட்பாடு-1
13. மொழியும் எழுத்தும்
14. சொல்லிலக்கணக் கோட்பாடு-2

# 1. மொழி வளர்ச்சியும் மொழிஉணர்வும்

## 1.1. *மொழி*

மொழியைப் பலரும் பலவிதமாகத் தங்கள் நோக்கங்களுக்கும் தேவைகளுக்கும் ஏற்பக் கருதுகிறார்கள். அவர்களுள் மொழியியலார் மொழியின் அமைப்பு (இலக்கணம்) பற்றித் தெரிந்து கொள்வதே முக்கியக் கடமையாகக் கொண்டவர்கள். மொழி அமைப்பில் காணப்படும் ஒழுங்கு மூலமே மொழியைப் பேசவும் கேட்டுப் புரிந்துகொள்ளவும் முடிகிறது. எனவே மொழி தனி மனித ஆற்றலின் வெளிப்பாடு என்றாலும், அந்த மொழியைக் கேட்போர் புரிந்துகொள்வதும் முக்கியம்; இல்லாவிட்டால் மொழியால் பயன் இல்லாமல் போய்விடும். ஆகவேதான் மொழி சமூக உறவுக்கு உதவும் ஒரு பெரும் கருவியாகக் கருதப்படுகிறது. இதுவே மொழியின் பயன்பாடுகளில் தலையாயது. வளர்ந்த சமூக வாழ்க்கையிலும் பலமொழிகள் பேசும் நாட்டிலும் மொழிகளின் பயன்பாடு வேறுபடலாம். உதாரணமாக, சில சூழல்களில் மட்டுமே ஒருமொழி பயன்படும்; சில மொழிகளின் பயன்பாடு குறுகியதாக இருக்கும்; வேறுசில மொழிகளின் பயன்பாடு விரிவானதாக இருக்கும். அதுபோலவே எழுத்துமொழி என்று எடுத்துக் கொண்டால் மொழிப் பயன்பாடு மொழிக்கு மொழி மாறுபடுவதை எளிதாக அறிந்து கொள்ளலாம். எனவே மொழிப் பயன்பாட்டின் எல்லையை அறிவதை முக்கியமானதாகச் சமூக மொழியியலார்கள் கருதுகிறார்கள். இந்த உண்மையை ஹாகன் (Haugen, 1972:102) என்ற சமூக மொழியியலார் கூற்றால் உணரலாம்.

> தெளிவாக வேறுபட்ட இரண்டு பரிமாணங்களை மொழியைப் பற்றிய பிரயோகங்களில் காணலாம். ஒன்று அமைப்பு:- அதாவது மொழியை வருணிப்பது.

மற்றொன்று பயன்பாடு:- அதாவது கருத்துப் பரிமாற்றத்தில் மொழியின் சமூகப் பயன்கள். பொதுவாக மொழியின் அமைப்பை மட்டும் ஆராய்வதையே மொழியியலார் முக்கிய கடமையாகக் கொள்வதால் மொழியின் பயன்பாட்டை ஆராய்வது சமூக மொழியியலாரின் கடமையாக ஆகிவிட்டது. சமூகப் பயன்களை ஆராய்வதும் மொழிக்குத் தரும் சமூக மதிப்பை ஆராய்வதும் கூட முக்கியமானவையாகும்.[1]

## 1.2. மொழி வளர்ச்சி

மொழிவளர்ச்சி என்பது மொழி அமைப்பில், அதாவது மொழி இலக்கணத்தில் மாற்றத்தையும் வளர்ச்சியையும், மொழியைப் பயன்படுத்துவதில் – மொழிப் பயன்பாட்டில், ஏற்படும் மாற்றத்தையும் வளர்ச்சியையும் குறிப்பதாகக் கொள்ள வேண்டும். மேலும் மொழிப் பயன்பாட்டு வளர்ச்சியும் மொழியமைப்பில் மாற்றத்தை ஏற்படுத்தலாம்.

மொழி அமைப்பை மொழியின் இலக்கணம் என்று கூறுவதற்கேற்ப, மொழி அமைப்பு வளர்ச்சியை இலக்கண வளர்ச்சி என்றும் குறிப்பிடலாம். அப்படியே மொழிப்பயன்பாட்டு வளர்ச்சியை இலக்கியவளர்ச்சி என்று குறிப்பிடுவது தவறு ஆகாது. ஏனெனில் மொழிப்பயன்பாட்டு வளர்ச்சி எழுத்துமொழி வளர்ச்சியோடு சம்பந்தப்பட்டது.

மொழி அமைப்பு வளர்ச்சி, மொழி வரலாறு என்ற துறையாக வளர்ந்துள்ளது. மொழிப் பயன்பாட்டுவளர்ச்சி சமூக மொழியியலின் ஒரு கூறாகக் கருதப்படுகிறது. இங்கு மொழி வளர்ச்சி என்பது பயன்பாட்டு வளர்ச்சியை மட்டும் குறிப்பதாக, சிறப்பாகக் கொள்ளப்பட்டுள்ளது. எனவே அமைப்பு வளர்ச்சி பிறமொழித் தாக்கத்தால் ஏற்பட்ட மொழி உணர்வைப் பிரதிபலிப்பனவாகச் சில கூறுகள் ஆறாம் இயலில் விளக்கப்பட்டுள்ளன.

## 1.3. மொழிப் பயன்பாட்டு வளர்ச்சி

மொழிப் பயன்பாட்டு வளர்ச்சி எழுத்து மொழியோடு தொடர்பு உடையது என்று மேலே குறிப்பிடப்பட்டது. அத

னால் மொழிவளர்ச்சியில் எழுத்து வடிவம் - எழுத்து மொழி உண்டாக்குவது-எழுத்தாக்கம் (Creation of writing system) என்று சமூகமொழியியலாளரால் (உ.ம். Fishman, 1977:xv) அழைக்கப்படுகிறது. ஏனெனில் அந்தமொழியின் சமூக வரலாற்றையும் சமூக உறவையும் புலப்படுத்தும் சாதனமாகவும் எழுத்தாக்கம் அமைகிறது.[2]

எழுத்தாக்கம் என்பது எந்தமொழிக் கூறுக்கு (ஒலியன், அசை, அல்லது உருபன்) எந்த வடிவத்தைக் கொடுத்துச் சொற்களை எப்படி எழுதுவது என்று தீர்மானிப்பதே. எனவே வரி வடிவ எண்ணிக்கை, வரி வடிவ அமைப்பு, சொல்லெழுத்து நிர்ணயம் என்று மூன்று கூறுகள் எழுத்தாக்கத்தில் அடங்கியுள்ளன (சண்முகம், 1985:37).

எழுத்தாக்கம் ஏற்பட்ட மொழியிலேயே எழுத்திலக்கியம் உருவாக முடியும். எனவே மொழியில்' இலக்கிய வளர்ச்சி ஏற்பட முதலில் எழுத்தாக்கம் ஏற்பட வேண்டும். எனவேதான் எழுத்தாக்கம் மொழிவளர்ச்சியில் முதல்கட்டமாகக் கருதப்படுகிறது.

இலக்கியம் இன்று வாய்மொழி இலக்கியம் என்றும் எழுத்து இலக்கியம் என்றும் பிரித்துப் பேசப்படுகிறது. வாய்மொழி இலக்கியம் எல்லா மொழிச்சமூகத்துக்கும் பொதுவானது. அந்த உண்மை, பழங்குடிமக்கள் என்று நாகரிகவளர்ச்சியில் குறைந்தவர்களாகக் கருதப்படும் மக்களிடையேயும் இன்று வாய்மொழி இலக்கியம் வழங்கிவரக் காண்பதால், தெளிவாகிறது. எழுத்து மொழி இலக்கியத்தின் பழமை மொழிக்கு மொழி மாறுபடுவதற்கு அந்தந்த மொழிகளில் எழுத்தாக்கம் ஏற்பட்ட கால வேறுபாடே காரணம் ஆகும். எழுத்தாக்கம் ஏற்பட்ட பிறகு வாய்மொழி மரபையும் பிறமரபுகளையும் ஒட்டியே எழுத்து இலக்கியம் உருவாகும். இதை, 'இலக்கிய உருவாக்கம்' (இந்தத் தொடரைத் தமிழண்ணல் (1980:8) கையாண்டுள்ளார்) என்று குறிப்பிடலாம். மொழிவளர்ச்சியில் இலக்கிய உருவாக்கம் இரண்டாவது கட்டமாகும்.

அடுத்து அந்த மொழியில் ஏற்பட்ட எழுத்து இலக்கியத்தின் தன்மைக்கு ஏற்ப மொழிவளர்ச்சியின் அடுத்த கட்டம் அமையும். சிலமொழிகளில் காப்பியங்களே முதல் இலக்கியமாக உருவானால் அந்தக் காப்பியங்களைப் புரிந்து கொள்வதற்கு இலக்கணம் உருவாகும். தமிழ்மொழியின் இலக்கண உருவாக்கம் வேறுபட்டதால் மொழிவளர்ச்சி நிலையிலும் வேறுபாடு காணப்படுகிறது.

தமிழில் ஆதி இலக்கியம் வீரயுகப் பாடல்களாகவும் தனிப் பாடல்களாகவும் அமைந்தது. ஆகவே அந்தப் பாடல்களைத் தொகுத்துத் தொகை நூல்களாகப் பிற்காலத்தில் அமைத்தார்கள். அந்தத் தொகை நூல்களே தமிழின் மிகப் பழைய இலக்கியம். எனவே மொழிவளர்ச்சியில், பாடல்களைத் தொகுத்து நூல்களாக ஆக்கியதைத் 'தொகையாக்கம்' (ஞானசம்பந்தர் 'தொகை ஆக்கினான்' என்ற தொடரைக் கையாண்டுள்ளார்) என்று குறிப்பிடலாம். தொகையாக்கமும் அந்த மொழிச் சமூகத்தின் ஒருவகையான மொழி உணர்வின் வெளிப்பாடு; அன்றைய சமூகப் பயன்பாட்டு, அரசியல் சூழலின் புலப்பாடு. எனவே தமிழ்மொழி வளர்ச்சியில் 'தொகையாக்கம்' அடுத்த காலகட்டமாகக் கருதப்படுகிறது.

தொகையாக்கம் இலக்கியக் கோட்பாட்டையும் இலக்கிய ஆய்வு - இலக்கணக் கோட்பாட்டையும் அடிப்படையாகக் கொண்டது; அந்த மொழிச் சமூகத்தின் மொழி, இலக்கியம் பற்றிய சிந்தனை தூண்டப்பட்டதன் விளைவு. இதனால் மொழிக்கு இலக்கணம் எழுதும்பணி சிலரால் மேற்கொள்ளப்படும்.[3] ஒருமொழிக்கு இலக்கணம் உருவாவது அந்த மொழிச் சமூகத்தில் அறிவியல் பார்வை மொழித்துறையில் ஏற்பட்டதன் பயன். எனவே, இலக்கண உருவாக்கம் என்பது மொழிவளர்ச்சியில் ஒரு கட்டமாகக் கொள்ளத் தகுந்தது.

எழுத்தாக்கம் ஒரு காலகட்டத்தோடு முடிவடைந்துவிடுவதல்ல. அந்த மொழிச் சமூகத்தில் பெரிய அரசியல், பொருளாதார, பண்பாட்டு மாற்றம் நடைபெறுமானால் எழுத்துமொழியிலும் மாற்றம் ஏற்படும். அதை எழுத்துத் திருத்தம் (Revi-

sion of writing) என்பார் ஃபிஷ்மன் (1977). ஆனால், இலக்கியத்திலும் இலக்கணத்திலும் காலந்தோறும் ஏற்படும் மாற்றம் வளர்ச்சி என்றே பொதுவாகக் கருதப்படுகிறது. இலக்கிய வளர்ச்சியை இலக்கியக் காலப்பகுதிகள், இலக்கிய இயக்கங்கள், இலக்கிய வகைகள் என்று மூன்றாகப் பிரித்துத் தமிழண்ணல் (1979:9) விளக்கியுள்ளார். இலக்கண உருவாக்கத்தில் ஏற்படும் மாற்றமே மொழியியல் வரலாறு ஆகும். எனவே ஒருமொழிச் சமூகத்தில் ஒரு குறிப்பிட்ட பெரிய காலகட்டத்துக்குள் எழுத்தாக்கம், இலக்கிய உருவாக்கம், தொகையாக்கம், இலக்கண உருவாக்கம் என்ற வளர்ச்சி நிலைகளை மொழி வளர்ச்சியைப் பொறுத்த வரையில் காணமுடியும். இது ஒவ்வொரு மொழியின் மொழிவரலாறு, இலக்கிய வரலாறு ஆகியவற்றில் உள்ள முக்கியமான காலகட்டங்களில் இந்த நான்கும் ஏதோ ஒருவிதத்தில் காணப்படும்.

அடுத்து மொழிவளர்ச்சியின் கட்டங்கள் அல்லது நிலைகள் பற்றித் தமிழ் அறிஞர்களின் கருத்துகளைப் பார்ப்போம். இது தமிழ் மொழிச் சமூகத்தின் அறிவுவளர்ச்சி வரலாற்றையும் மொழி உணர்வையும் காட்டும்.

## 1.4. தமிழ்மொழி வளர்ச்சிநிலை

'இலக்கியம் கண்டதற்கு இலக்கணம்' என்று பொதுவாகக் கூறப்படுவதால் (நன்னூல் 140), இலக்கிய வளர்ச்சிக்குப் பிறகு இலக்கண உருவாக்கம் என்ற கருத்து தெளிவாகிறது.

இலக்கியம் என்பது இங்கு எழுத்து இலக்கியத்தையே குறிக்கும். எனவே எழுத்து இலக்கியம் இருந்தது என்றால் எழுத்தாக்கம் நடைபெற்றிருக்க வேண்டும் என்று நாம் ஊகிக்கலாம். ஆனாலும் இலக்கிய வரலாற்று ஆசிரியர்கள் எழுத்தாக்கம் பற்றித் தமிழ் இலக்கிய வரலாற்றில் விவாதிக்கவே இல்லை. மாறாகப் பிறநாட்டுத் தமிழ் அறிஞர்களே இலக்கிய வரலாற்றில் எழுத்தாக்கத்தைப்பற்றியும் பேசியுள்ளார்கள். (உ.ம். சுவலபில், 1974)

இதைப்போல இலக்கிய உருவாக்கத்திற்கு முன்னர் அந்த மொழிச் சமூகத்தில் ஏதோ ஒரு வகையில் வாய்மொழி இலக்கியம் இருந்துவந்திருக்கும். அதனுடைய செல்வாக்கு, பொருள், யாப்பு, இலக்கியஅமைப்பு ஆகியவற்றில் புதைந்திருக்கும் என்று நாட்டுப் புறவியலார் (உ.ம். P.R. சுப்பிரமணியம். 1968:13)[4] பொதுவாகவும் தமிழில் சிறப்பாகவும் கூறிவருகிறார்கள். இதற்கேற்பத் தமிழில் ஆதி இலக்கியமான சங்க இலக்கியங்களும் வாய்மொழிப் பாடல்களாக இருந்தன என்று வாய்மொழிப்பாடல்களின் பல பண்புகளைக் கைலாசபதி (1968) தெளிவாக எடுத்துக்காட்டியுள்ளார். அது இன்று பல இலக்கிய வரலாற்று ஆசிரியர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது.

வரதராசனார் (1977:29தொ.) தன்னுடைய இலக்கிய வரலாற்றில் மொழிவளர்ச்சியின் பெரும்பாலான படிநிலைகளைச் சூசகமாக எடுத்துக் காட்டியிருப்பது குறிப்பிடத்தகுந்தது.

> சங்க இலக்கியம் என்ற தொகுப்பில் உள்ள பாட்டுக்களின் காலம் கி.மு. 500 முதல் கி.பி. 100 வரையில் என்று கூறுவர். தொல்காப்பியமும் ஏறக்குறைய அந்தக் காலத்தைச் சார்ந்தது என்று கூறுவர். ஆனால் தமிழ்மொழியும் தமிழ் இலக்கியமும் அவற்றிற்கும் முன்னமே வளர்ந்திருந்தவை என்பதில் ஐயமில்லை.

என்று தமிழ்மொழி வளர்ச்சியைக் குறிப்பிட்டு, உடனே பொதுவாக

> ஒரு நாட்டில் எத்தனையோ நூற்றாண்டுகளாக வாய்மொழி இலக்கியம் (Folk literature) மக்களிடையே வழங்கிய பிறகே புலவர் சிலர் அவற்றில் எழுத்து வடிவம் தருவது உண்டு. அதற்குப் பிறகே புலவர்கள் எழுதும் இலக்கியம் ஒரு தனிவகையாக வளர்ச்சி பெறுவது வழக்கம்.

என்று குறிப்பிட்டு, மீண்டும் தமிழைப் பற்றி

> அவ்வாறே தமிழ்நாட்டிலும் சங்க இலக்கியத்தில் உள்ள பாட்டுக்கள் தோன்றுவதற்கு முன்னமே அவற்றிற்கு அடிப்படையான வாய்மொழிப் பாடல்கள் நாடு முழுதும் ஆங்காங்கே மக்களின் மகிழ்ச்சிக்காகப் பாடப்

> பட்டு வந்தன. அந்த வாய்மொழிப் பாடல்களின் மரபுகள் பின்னர்ப் புலவர்களால் இயற்றப்பட்ட பாட்டுக்களில் படிந்துள்ளன. புலவர் பாட்டுக்களின் மரபுகளை ஆராய்ந்து புலவர் சிலர் இலக்கண நூல்கள் இயற்றினார்கள். அவ்வாறு புலவர்களின் இலக்கியங்களும் இலக்கணங்களும் ஏற்பட்ட பிறகே தொல்காப்பியனார் தோன்றித் தம்முடைய நூலை இயற்றினார்.

என்று கூறியுள்ளார். மொழிவளர்ச்சியைக் குறிப்பிடும்போது வாய்மொழி இலக்கியம்', 'எழுத்து வடிவம்', 'எழுதும் இலக்கியம்', என்றும் தமிழைப்பற்றிக் கூறும்போது 'இலக்கியம்' 'இலக்கனம்' என்னும் தொடர்களையும், சொற்களையும் கையாண்டிருப்பதால் மொழிவளர்ச்சிநிலைகளைச் சூசகமாக வெளியிட்டிருப்பதை அறியலாம். அப்படியே அடுத்த பத்தியில் (ப.28) தொகையாக்கத்தைப் பற்றியும் தனியே குறிப்பிட்டுள்ளார்.

> புலவர்கள் நாட்டின் மூலை முடுக்குகளிலும் நகரங்களிலும் தோன்றி ஆங்காங்குப் பலவகைப் பாட்டுக்களை இயற்றியிருந்தனர். அவை பல்லாயிரக் கணக்கில் புலவர்களின் வீடுகளிலும் அரண்மனைகளிலும் இருந்தன. நாட்டின் பல பகுதிகளிலும் சிதறுண்டு கிடந்த அவற்றில்பல, காலப்போக்கில் அழிந்தன. ... அப்போது புலவர் சிலரும் புரவலர் சிலரும் முன் வந்து அவற்றில் சிறந்தவை மட்டுமாவது காப்பாற்ற முயன்றார்கள். அவர்களின் நல்ல முயற்சியினால் தொகுக்கப்பட்டவைகள் எட்டுத்தொகை என்னும் தொகை நூல்கள்... எட்டும் பத்துப்பாட்டு என்னும்... தொகை நூல் ஒன்றும் ஆக ஒன்பது நூல்கள் ஆகும். அவைகளே சங்க இலக்கியம் என்று கூறப்படுவன.

என்ற அவர் வாசகத்தில் தொகையாக்கம் குறிப்பிடப்பட்டாலும், அதை மொழிவளர்ச்சிக் கட்டத்தில் எந்த நிலையைச் சார்ந்தது என்று கோடிட்டுக் கூடக் காட்டவில்லை. இதற்குக் காரணம் மொழியின் ஆரம்பகால வளர்ச்சிநிலையைப் பற்றி இவர் மட்டும் அல்லாமல் தமிழ் இலக்கிய வரலாறு எழுதிய ஆசிரியர்கள் பலரும் அதிக கவனம் செலுத்துவதில்லை என்பது தான். ஆனாலும் வளர்ச்சிநிலைகளை ஊகங்களாக உணர்ந்து சுட்டிக்காட்டியிருப்பது பாராட்டுவதற்கு உரியது.

சுவலபில் (Zvelebil, 1974:11) என்ற செக்நாட்டு அறிஞர் தமிழ்மொழி வளர்ச்சியைக் குறிப்பிட்டிருப்பது வரலாற்று உணர்வையும் மொழியியல் அறிவையும் புலப்படுத்துகின்றது.

> கிட்டத் தட்ட கி.மு. 200 அல்லது அதற்குப் பிறகு அசோகனது (கி.மு. 272-232) தென்பிராமி எழுத்துகள் இலக்கியத் தமிழ் உருவாவதற்கு முன்னால் தழுவிக் கொள்ளப்பட்டிருக்க வேண்டும் ... பிராமி - தமிழ்க் கல்வெட்டுகளின் மொழி, எழுத்து, சொல் அமைப்பு களில் சில தனித்தன்மைகளைக்கொண்டு சொற் களஞ்சியத்தில் பிராகிருத செல்வாக்குக் கொண்டும் காணப்படுகிறது. அதே சமயத்தில் சொற்களிலும் நடையிலும் அதிகம் வேறுபட்ட, மொழி அமைப்பில் அதிகம் வேறுபடாத மொழியிலே வாய்மொழிப் பாடல்களாகப் பாணர்களால் பாடப்பட்டு வந் தது, அரசவைப் பாடல்களாக மாற்றம் பெற்றது. இது பின்னர் செம்மைப்படுத்தப்பட்டு உருக்கொடுக்கப் பட்டிருக்க வேண்டும். இதுவே தொகுக்கப்பட்டு விமர்சிக்கப்பட்டும் ஆராயப்பட்டும் தொல்காப்பியரின் இலக்கணத்துக்குரிய அடிப்படை மொழியாக எடுத்துக் கொள்ளப்பட்டிருக்க வேண்டும்.

என்ற அவருடைய கருத்தும் மேலே குறிப்பிட்ட மொழி வளர்ச்சி நிலைகளைக் கொஞ்சம் தெளிவாகவே சுட்டுகிறது.

தொகை நூல்களைப் பற்றி அவர் கூறுவதாவது (ப.11) 'சங்கத்தொகை நூல்கள் வேறுவேறு காலத்தில் எழுதப்பட்ட நான்கு கூறுகளை உடையவை. அவையாவன: 1) கடவுள் வாழ்த்து, 2) மூலபாடம் (அதாவது பாடல்கள்), 3) பிற் குறிப்பு, 4) உரை.இ ந்தப்பாடல்கள் இலக்கியமரபு வழக்கு வீழ்ந்த பிறகே தொகுக்கப்பட்டிருக்க வேண்டும்.[5] எனவே, அவர் கருத்துப்படியும் எழுத்துருவாக்கம், இலக்கிய உருவாக் கம், தொகையாக்கம், இலக்கண உருவாக்கம் என்ற மொழி வளர்ச்சி நிலைகளைச் சங்ககாலத் தமிழில் காணலாம் என்பது உறுதியாகிறது.

சிவத்தம்பி (1986) சமூக உருவாக்கத்தில் இலக்கியம் பங்கு உடையது என்றும் (ப.8) அப்படியே வரலாற்று உணர்வும் சமூகத்தன்னுணர்வும் மொழிச் சமூகத்தின் இலக்கியவரலாற்று

உணர்வுக்கு அடிப்படை என்றும் பொதுவாகக் குறிப்பிட்டுச் சங்கத்தொகை நூல்கள் -(தொகையாக்கம் என்பது) தமிழ் மொழிச் சமூகத்தில் ஏற்பட்ட இலக்கிய மரபைப் பாதுகாக்கும் உணர்வின் முதல் வெளிப்பாடு ஆகும் என்று குறிப்பிட்டுத் - (ப.30)[6] தொகையாக்கத்தின் சமூக - அரசியல் - பண்பாட்டுப் பின்னணிகளை ஓரளவு விளக்கியுள்ளார். இது விரிவாக நான்காவது இயலில் விளக்கப்படும். எனவே மொழிவளர்ச்சி நிலையில் தொகையாக்கமும் சிறப்பானதொரு இடத்தைப் பெறுகிறது என்பது உறுதிப்படுகிறது.

## 1.5. மொழி அமைப்பு வளர்ச்சி

மொழி அமைப்பு வளர்ச்சி என்பது மொழி வரலாறு என்ற மொழியியல் ஆய்வின் ஒரு கூறு என்று மேலே விளக்கப்பட்டது. மொழிஅமைப்பின் இயல்பை ஒட்டியும் மொழிபேசும் மக்களின் அரசியல்-சமூக வரலாற்றை ஒட்டியும் மொழி அமைப்பில் ஏற்படும் இரண்டு உண்மைகள் மட்டும் இங்குச் சுட்டிக்காட்டத் தகுந்தவை.

ஒரு மொழி பரந்த நிலப்பகுதியில் பல்வேறு சமூகத்திரனரால் பேசப்படும் போது வட்டார வேறுபாட்டை ஒட்டி வட்டாரக் கிளை மொழியும் சமூகவேறுபாட்டை ஒட்டிச் சமூகக்கிளை மொழியும் அமைவது மொழியின் இயல்பு. அந்தவட்டார-சமூகக் கிளை மொழிகளுக்கிடையே ஒரு வட்டாரத்தில் பேசப்படும் ஒரு சமூகக்கிளைமொழியே அரசியல் - சமூக - பொருளாதாரக் காரணங்களால் நிலைமொழியாக, அந்த மொழி பேசும் எல்லா மக்களாலும் ஏற்றுக்கொள்ளப்படும் எழுத்தாக்கம், அந்த நிலை மொழியை ஒட்டியே செய்யப்படும். எனவேதான் ஃபெர்கூசன் என்ற சமுதாய மொழியியலார் (1968) எழுத்தாக்கமும் நிலைமொழியாக்கமும் - நிலையாக்கமும் மொழிவளர்ச்சியின் பரிமாணங்களாகக் கொள்ளப்பட வேண்டும் என்பார். எழுத்தாக்கமும் நிலையாக்கமும் இலக்கிய உருவாக்கத்துக்குக் காரணமாகின்றன.

மொழியமைப்பு காலந்தோறும் மாறுபடுவது போல அந்த மொழிச் சமூகத்தில் பெரிய அரசியல்-பொருளாதார-பண்பாட்டு மாற்றங்கள் ஏற்படும்போது நிலைமொழியிலும் மாற்றம் ஏற்படும். எனவே மொழிப்பயன்பாட்டு வளர்ச்சியில் எந்த வட்டாரச் சமூகக் கிளைமொழி நிலைமொழியாகச் செயல்படுகிறது என்பதை ஆராய்ந்து அறிந்து கொள்வது அவசியம். மேலும் நிலைமொழி மாற்றம் பற்றிய அறிவு மொழி அமைப்பு வளர்ச்சியின் வரலாற்றைச் சரியான கோணத்தில் புரிந்து கொள்ள உதவும்.

## 1.6. மொழி உணர்வு

மொழி உணர்வு என்பது மொழிபற்றிய மனப்பாங்கைக் (Attitude) குறிக்கும். இது, தன்னுடைய மொழி அந்தமொழியில் உள்ள கிளைமொழிகள் பற்றிய மனப்பாங்கையும் அந்த மொழிச் சமூகத்தோடு தொடர்புடைய பிறமொழிகள் பற்றிய பாங்கையும் குறிக்கும்.

உணர்வு பொதுவாக இரண்டு வகைப்படும் (Fasold, 1984. 146.தொ.). ஒன்று: மனவழிப்பட்டது (Mentalist view). இன்னொன்று: நடத்தை வழிப்பட்டது. (Behaviourist view).

உணர்வு மனத்து வழிப்பட்டது என்னும் போது ஒன்றின் தூண்டுதலால் (Stimulus) மனத்தில் ஏற்படும் எதிர்விளைவே (Response) உணர்வு எனப்படும். இந்த உணர்வு மூன்று கூறுகளை உடையது. அவையாவன: i) அறிவு (Cognitive-knowledge);ii) உணர்ச்சி(Affective feeling), iii) செயல் (Conative-action). (இந்த நோக்கில் தற்காலத் தமிழ் பற்றிய உணர்வுகளை அறியச் சண்முகம் 1972 பார்க்கவும்).

உணர்வு நடத்தைவழிப்பட்டது என்னும் போது சமூகச் சூழலை (Social situation) மனிதர்கள் எப்படி எதிர்கொள்கிறார்கள் அல்லது சமூகச்சூழலில் மனித நடத்தையில் ஏற்படும் எதிர்விளைவு என்ன என்று ஆராயப்படும். இது ஒரு அலகு உடையதாகக் கருதப்படுகிறது.

மொழி உணர்வு சமுதாய உளவியலைச் (Social Psychology) சார்ந்தது. மொழிவளர்ச்சியில் மொழி உணர்வுக்கும் பங்கு உண்டு. அது பாலில் வெண்ணெய் போலக் கலந்திருந்தாலும் தனித்து எடுத்து அறிந்து கொள்ள வழியுண்டு.

மொழி உணர்வு மனவழிப்பட்டதாக இருந்தாலும் அதுவும் அரசியல்-பொருளாதார- பண்பாட்டுத்தாக்கத்துக்கு ஏற்ப உருப்பெறும். எனவே, மொழி உணர்வுகளை அந்த மொழிச் சமூகத்தின் அரசியல், பொருளாதாரப் பின்னணிகளில் பொருத்திப் பார்த்தால்தான் அதன் எல்லாப் பரிமாணங்களையும் புரிந்து கொள்ள முடியும்.

இந்த நூலில் சங்ககாலத் தமிழ்மொழிச் சமூகத்தின் மொழி வளர்ச்சியும் மொழி உணர்வும் ஆராய எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளது. ஒவ்வொரு மொழி வளர்ச்சி நிலையிலும் மொழி உணர்வின் பங்கு ஆங்காங்குச் சுட்டிக்காட்டப்படும்.

---

# 2. எழுத்தாக்கம்

## 2.0. முன்னுரை

மனிதன் இந்த உலகத்தில் சுமார் 100,000 ஆண்டுகளாக வாழ்ந்திருக்கவேண்டும் என்பது தொல்வரலாற்று ஆசிரியர் களின் முடிவு. ஆயினும் மனிதன் பேசக் கற்றுக் கொண்ட காலத்தை அவர்கள் உத்தேசமாகக் கூட வரையறுத்துக் கூற வில்லை.

இன்றும் காடுகளிலும் மலைப்பகுதிகளிலும் வெளி உலகத் தொடர்பு அதிகம் இல்லாமல் வாழும் பழங்குடிகள் யாரும் கூட பேச்சுமொழி இல்லாமல் வாழவில்லை. எனவே ஆயிரக்கணக் கான ஆண்டுகளாக மனிதன் பேசக் கற்றுக் கொண்டு வாழ்ந்து வந்திருக்க வேண்டும் என்று நம்ப வேண்டியிருக்கிறது. ஆனாலும், இதுவரை கிடைக்கும் எழுத்து மொழிகளில் மிகப் பழமையா னது என்பது ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டதுதான். எனவே, எழுத்து மொழி மனித வரலாற்றில் மிகவும் பிற்பட்ட காலகட்டத்தைச் சார்ந்தது என்பது தெளிவாகிறது.

இன்றுள்ள மொழிகளில் கூட எல்லா மொழிகளும் ஒரே கால கட்டத்தில் எழுத்து மொழியைக் கொண்டிருந்ததாக வர லாறு இல்லை. இதுவரை கிடைத்த சான்றுகளின் படி கன்னட மொழி கி.பி. 500 ஆம் ஆண்டிலும், தெலுங்கு மொழி கி.பி. 576-ஆம் ஆண்டிலும், வங்காளம் கி.பி. 950 - இலும், மராத்தி கி.பி. 1000-இலும் எழுத்து மொழிச் சான்று பெற்றுள்ளன.

எழுத்து மொழி என்பது பல கூறுகளை உடையன என்ப தும், அதன் கூறுகளும் முன்னரே விளக்கப்பட்டு எழுத்தாக்கம் என்று சுருக்கமாகக் குறிப்பிடப்பட்டது,

எழுத்தாக்கம் ஒரு மொழி வரலாற்றில் ஒரு மைல்கல் ஆகும். ஏனென்றால் வரலாற்று நோக்கில் பிறமொழிச் சமூகத் தோடு ஏற்பட்ட தொடர்பையும் அதனால் உண்டான பொரு ளாதார பண்பாட்டுத் தொடர்பையும் புலப்படுத்துவது; மொழி வளர்ச்சி நோக்கில் எழுத்தாக்கம் இலக்கிய உருவாக்கத் துக்கும் அதன் அடிப்படையில் இலக்கணம், பிறதுறை நூல்கள் அதாவது அறிவியல்மொழி ஆக்கத்துக்கும் பாதை அமைப்பது. எனவே எழுத்தாக்கத்தின் மூலம் அந்த மொழியின் அமைப்பு - ஒலியன் அமைப்பு, உருபொலியன் அமைப்பு (புணர்ச்சி அமைப்பு) ஆகிய இரண்டைப் பற்றியும் சமூக மொழியியல் உணர்வைப் பற்றியும் அறிந்து கொள்ளலாம்.

எழுத்தாக்கத்தின் மூலம் ஒலியன் அமைப்பைத் தெரிந்து கொள்வதற்கு அந்த மொழியில் உள்ள எழுத்துகளின் எண் ணிக்கையையும், புணர்ச்சி பற்றித் தெரிந்துகொள்வதற்குச் சொற்களின் மாற்று வடிவம் எழுதப்பட்ட முறையையும் அறிய வேண்டும். சமூக மொழியியல் உணர்வைப் புரிந்து கொள்ள எழுத்தாக்கம் செய்யப்பட்ட முறையை ஆராய வேண்டும். இவைகளுக்கு அடிப்படையாக முதலில் ஒரு மொழியின் மிகப் பழைய எழுத்துச் சான்று எது என்று நிர்ணயித்துக் கொண்ட பிறகே, அதன் அடிப்படையில் மேலே கண்ட அமைப்பு உண் மையையும், உணர்வின் தன்மையையும் ஆராய்ந்து அறிந்து கொள்ளமுடியும்.

## 2.1. *மிகப் பழைய எழுத்துச்சான்று*

தமிழ் மொழியின் மிகப் பழைய எழுத்துச் சான்று எது என்பது பற்றியே தமிழ் அறிஞர்களிடையேயும், ஆய்வாளர்களி டையேயும் கருத்து வேறுபாடுகள் காணப்படுவதால், எழுத் தாக்கம் சிக்கல் நிறைந்ததாகக் காணப்படுகிறது. இது பற்றி இரண்டு கருத்துகள் உள்ளன:

1) தொல்காப்பியமே மிகப்பழைய எழுத்துச் சான்று என்று இலக்கிய வரலாற்று ஆசிரியர்களில் பெரும்பான்மை

யானவர்களும், நாட்டு வரலாற்று ஆய்வாளர்களில் சிலரும் (இராமச்சந்திரன், 1977, ந.சுப்பிரமணியன், 1966), தமிழ் ஆய்வாளர்களில் சிலரும் (மயிலை சீனிவேங்கடசாமி, 1981, இரத்தினசாமி, 1988) கருத, 2) தமிழ் பிராமி கல்வெட்டுக்களே மிகப்பழைய எழுத்துச் சான்று என்று மொழியியலாளரும் பிறரும் கருதுகிறார்கள்.

**2.1.1. தொல்காப்பியம்**

> அசோகமன்னன் பௌத்த சமயத்துறவிகளைத் தமிழகத்திற்கு அனுப்பிப் பிராமியைப் பரப்பிய காலம் கி.மு. 250. அதற்கு முன்னமே தமிழில் இலக்கணமும் இலக்கியமும் எழுத்தும் இருந்தமை மறுக்க முடியாத உண்மையாகும். தொல்காப்பியர் கூறும் எழுத்து வடிவங்கள் பிராமி எழுத்துக்களைப் பற்றியன அல்ல (ப.424)...

> கி.மு. 1000 - க்கு முற்பட்ட பழங்காலத்தில் இயற்றப்பட்ட தொல்காப்பியம் என்னும் தொன்மைத் தமிழ் நூலில் கூறப்பட்ட எழுத்து வடிவங்கள் வட்டெழுத்துக்களைக் குறிப்பனவே ஆகும். (ப.420.தொ.).

என்பன வரதராசனின் (1954) வாசகம். இராச மாணிக்கனாரும் (1963) இந்தக் கருத்தினரே.

> தமிழகத்துக் கல்வெட்டுக்கள் பிராமி எழுத்திலும் வட்டெழுத்திலும், கிரந்த எழுத்திலும் அமைந்திருக்கின்றன. தொல்காப்பியத்தையும் சங்க நூல்களையும் நுண்ணறிவோடு படியாத பலர் வட்டெழுத்துக்கள் பிராமியிலிருந்து வந்தவைஎன்று எழுதிவிட்டனர். வட்டெழுத்துக்கள் பிராமி எழுத்துக்களிலிருந்து பிறந்தவை அல்ல; கிரந்த எழுத்துக்களின் திரிபும் அல்ல. வட்டெழுத்துக்கள் தமிழரே தமது முயற்சியால் கண்டு வளர்த்தவை ஆகும்...

> தொல்காப்பியர்க்கு முன்னரே இலக்கண இலக்கிய நூல்கள் பல இருந்தன என்பது தெளிவு. கி.மு. 3ஆம் நூற்றாண்டில் அசோகனால் பொறிக்கப்பெற்ற பிராமி எழுத்துக்களிலிருந்து வட்டெழுத்துக்கள் தோன்றின என்று கூறுவோர் இந்த உண்மையை உணர வேண்டும்; உணரின் தமிழ் எழுத்துக்களாகிய வட்டெழுத்துக்கள் தமிழராலேயே பேணி வளர்க்கப்பட்டவை என்னும் உண்மையை எளிதில் உணர்வர். (ப.11)

என்ற இராசமாணிக்கனார் வாசகத்தில் i) தமிழ்நாட்டுக் கல்வெட்டுகளில் உள்ள எழுத்துவகைகளின் எண்ணிக்கை. i) வட்டெழுத்து தமிழுக்காகத் தமிழரால் கி.மு.3ஆம் நூற்றாண்டுக்கு முன்னால் ஆக்கப்பட்டவை என்ற இரண்டு உண்மைகள் தெளிவாக்கப்பட்டுள்ளன.

வரதராசன் (1972:6) இலக்கிய வரலாற்றிலும் இந்தக் கருத்தைக் கூறியுள்ளார். இந்தக் கருத்து எண்பதுகளிலும் தொடர்ந்து வந்தது என்பதற்கு இரத்தினசாமி (1988) வாசகமே நல்ல சாட்சி.

> சமணர்கள் தென்னகம் வருவதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே – கி.மு. ஐந்தாவது நூற்றாண்டில் எழுந்த தொல்காப்பியத்திற்குப்பல நூற்றாண்டுகளுக்கு முன்பே தமிழ் நெடுங்கணக்கு உருவாயிற்று என்பது தொல்காப்பியத்தால் அறிய முடிகிறது (ப.30).
>
> அவ்வெழுத்துக்கள் (தொல்காப்பியச் சூத்திரங்களால் பெறப்படும் எழுத்துக்கள்) வட்டெழுத்துக்களே என்பது தேற்றம். எனவே பிராமி எழுத்துக்களிலிருந்து வட்டெழுத்துக்கள் தோன்றியிருத்தல் வேண்டும் என்று கூறுவது சிறிதும் பொருந்தாது (ப.38)

என்பதே அவரது வாசகம். மயிலை சீனிவேங்கடசாமியின் (1981) கருத்து கொஞ்சம் வேறுபட்டது.

> தமிழின் பழமையை அறிந்தவர் பிராமி எழுத்து வருவதற்கு முன்பு தமிழில் எழுத்து இல்லை; நூல்கள் இல்லை என்று கூறமாட்டார். தொடக்க காலத்தில் தமிழில் 'ஏதோ ஒரு வகையான தமிழ்' எழுத்து வழங்கி வந்தது. பிராமி எழுத்து தமிழகத்துக்குப் புதிதாக வந்த பிறகு அதற்கு முன்பு வழங்கி வந்த பழைய தமிழ் எழுத்து மறைந்து போய் பிராமி எழுத்து நிலைத்து விட்டது...
>
> பிராமி எழுத்து வருவதற்கு முன்பே கி.மு. 3-ஆம் நூற்றாண்டுக்கு முன்பே தமிழ் இலக்கியங்களும் எழுதப்பட்டன. கி.மு 8 – ஆம் நூற்றாண்டிலேயே தொல்காப்பியம் எழுதப்பட்டது. (ப.9.தொ.)

தமிழ் நாட்டுப் பிராமி எழுத்துக்களில் தமிழுக்கே தனிச் சிறப்பாக உள்ள ழ,ற,ன என்னும் எழுத்துக்களும் காணப்படுகின்றன. இந்தச் சிறப்பு எழுத்துக்களைப் பிராமி எழுத்து வருவதற்கு முன்னே தமிழகத்தில் வழங்கி வந்த பழைய தமிழ் எழுத்திலிருந்து எடுத்தும் பிராமி எழுத்துக்களோடு அமைத்துக் கொண்டனர் என்று தோன்றுகிறது (ப.10. தொ.).

தொடக்க காலத்திலிருந்து இன்று வரை தமிழர் நான்கு வகையான எழுத்துக்களை எழுதி வந்தனர் என்று அறிகிறோம். i)சங்க காலத்தில் வழங்கி வந்த பழந்தமிழ் எழுத்து, ii) பிறகு வந்த பிராமி எழுத்து, iii) பிராமியிலிருந்து உருவம் பெற்ற வட்டெழுத்து, iv) தற்காலச் சோழர் எழுத்து என்பவை அவை. பழந் தமிழ் எழுத்துச் சுவடிகளும், பிராமி எழுத்துச் சுவடி களும், வட்டெழுத்துச் சுவடிகளும் இக்காலத்தில் அடி யோடு மறைந்து போய்விட்டன (ப.4)

என்ற மயிலை சீனி வேங்கடசாமியின் வாசகத்தில் i) ஏதோ ஒரு வகையான எழுத்தே பழமையானது; ii) தமிழ்நாட்டு கல்வெட்டுகளில் காணப்படும் எழுத்து வகைகளின் எண்ணிக்கை; iii) எழுத்துகளின் வளர்ச்சி வரலாறு ஆகிய மூன்று செய்தி கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

எனவே, இவர்கள் எல்லாம் தொல்காப்பியமே மிகப்பழ மையான எழுத்துச் சான்று என்ற கருத்து உடையவர்கள் என் பது தெளிவு. ஆனால் இவர்களுக்குள் பண்டைத் தமிழ் எழுத்து எது என்பதில் கருத்து வேறுபாடு உள்ளது. வரதராசன், இராச மாணிக்கம், இரத்தினசாமி ஆகிய மூன்று பேரும் வட்டெழுத்து களே பண்டைத் தமிழ் எழுத்து; வட்டெழுத்திலிருந்து பிராமி எழுத்து வந்தது என்று கருத, மயிலை சீனி வேங்கடசாமி 'ஏதோ ஒரு வகையான எழுத்து'தான் பழைய தமிழ் எழுத்து என்றும் பிராமி எழுத்திலிருந்து வட்டெழுத்து வந்தது என்றும் கருதுகிறார். இந்த நால்வரும் தமிழ்மொழிப் பழமையைப் பற்றி உணர்ச்சி வயப்படுவதை அவர்கள் வாசகங்கள் தெளிவு படுத்துகின்றன.

### 2.1.2. தமிழ் பிராமி கல்வெட்டுகள்

> தமிழ் நாட்டில் கிடைக்கும் பிராமிக் கல்வெட்டுக்கள் ஒன்றிரண்டு வரிகளை உடையனவாக மதுரை, திருநெல்வேலி மாவட்டங்களில் அதிகமாகக் கிடைக்கின்றன...இவை அசோக மன்னன் காலத்தையோ அல்லது அதற்குச் சற்றுமுந்திய காலத்தையோ சேர்ந்தனவாகக் கருதப்படுகின்றன (ப.18)

என்று குறிப்பிட்டுத் தி.நா.சுப்பிரமணியன், (1938)

> தமிழ் நாட்டில் வழங்கி வரும் லிபிகள் பிராமியினின்றுமே வளர்ந்தன ... இக்கல்வெட்டுக்களே தமிழ் நாட்டிற் கிடைப்பனவற்றுள் மிகவும் பழமையானவை (ப.19).

> தொல்காப்பியனார் காலத்தில் வழக்கிலே இருந்த லிபி வடமொழியாளர் வழங்கி வந்த ஒருவகை லிபியே என்பது தெரியவரும். அவ்விதம் அக்காலத்தில் வழக்கில் இருந்தது பிராமியே ஆகும். ஆதலின் தொல்காப்பியனார் காலத்தில் வழக்கில் இருந்ததும் பிராமியே ஆகும் என்று ஊகிக்க வேண்டியிருக்கிறது (ப.87)

என்று கூறுவதால், தமிழ் பிராமி கல்வெட்டுகளே மிகப் பழைய எழுத்துச் சான்று என்பது அவர் கருத்து என்று கொள்ளலாம்.

கல்வெட்டு ஆய்வாளர்கள் எல்லோரும் தமிழ் பிராமியே தமிழுக்குக் கிடைக்கும் மிகப் பழைய எழுத்துச் சான்று என்று கொண்டாலும், அதன் காலம் பற்றிய கருத்தில் வேறுபட்டு, எழுத்தாக்கம் பற்றியும் மாறுபட்ட முறையில் விளக்கியுள்ளார்கள். இவர்களில் கிருஷ்ணனும் (1972,1983), கிஃப்ட்சிரோமணியும் (1982,1983) தமிழ் பிராமி கல்வெட்டுகளே தமிழுக்கு மிகப்பழைய எழுத்துச் சான்று என்றும் அவை அசோகன் பிராமியை விட காலத்தால் முந்தியது என்றும் கருத்து உடையவர்கள்.

பெரும்பான்மையான பிற கல்வெட்டு ஆய்வாளர்கள் தமிழ் பிராமியின் பழமையை ஏற்றுக் கொண்ட போதிலும், அது அசோகன் பிராமிக்குப் பிந்தியது என்ற கருத்து உடைய வர்கள். வரலாற்று ஆசிரியர்களில் நீலகண்ட சாஸ்திரி, கல் வெட்டு ஆய்வாளர்களில் ஐராவதம் மகாதேவன், நாகசாமி, மொழியியல் ஆய்வாளர்களில் தெ.பொ.மீனாட்சி சுந்தரன் ஆகியோரும் இந்தக் கருத்தை உடையவர்கள்.

எனவே, தமிழ் ஆராய்ச்சி உலகில் மிகப்பழைய எழுத்துச் சான்று தொல்காப்பியம் என்று ஒரு பிரிவினரும்; அவர்களுக்குள் வட்டெழுத்தே மிகப் பழமையானது என்று ஒரு சிறு பிரி வினரும்; ஏதோ ஒரு வகையான எழுத்து இருந்து மறைந்து விட்டது என்றும், தமிழ் பிராமியே பழமையாகக் கிடைக்கிறது என்றும் மற்றொரு சிறு பிரிவினரும் கருதுகிறார்கள். இன்னொரு பெரும் பிரிவினர் தமிழ் பிராமி கல்வெட்டுகளே மிகப் பழமை யானது என்று கருதுகிறார்கள். எழுத்தாக்கம் பற்றிய கருத்து களை யெல்லாம் கீழ்க்கண்டவாறு விளக்கலாம்.

| | | மிகப்பழைய எழுத்துச் சான்று | மிகப்பழைய எழுத்து | எழுத்தாக்க முறை |
|---|---|---|---|---|
| 1 | அ | தொல்காப்பியம் | வட்டெழுத்து | தமிழர்களே கண்டது |
| | ஆ | ” | ஏதோ ஒரு வகைஎழுத்து | ” |
| 2 | அ | தமிழ்பிராமி கல்வெட்டுகள் | தமிழ்பிராமி | ” |
| | ஆ | ” | ” | இந்தியப் பொதுமையும் தமிழ்ச்சிறப்பும் |
| | இ | ” | ” | அசோகன் பிராமி தழுவல் |

### 2.1.3 எழுத்தாக்கமுறை

தமிழ் பிராமி எழுத்து மிகப்பழைய எழுத்துச் சான்று என்று கருதுபவர்களுக்குள் 1)தமிழ் பிராமியே இந்திய எழுத்துகளுக் -கெல்லாம் மூலம் அதாவது தமிழ் பிராமியிலிருந்தே அசோகன் பிராமி பிறந்தது என்று கருதுபவர்கள், 2) அசோகன் பிராமிக்கும் தமிழ் பிராமிக்கும் பொதுவான எழுத்துகள் இந்தியா முழுமைக்கும் உரிய எழுத்துகள்; பிராகிருதத்திலும் தமிழிலும் காணப்படும் சிறப்பெழுத்துகள் அந்தந்த மொழி இலக்கணத்தை ஒட்டி அமைக்கப்பட்டவை; அல்லது அவை வேறொரு மூலத்திலிருந்து கடனாளப்பட்டவை என்று கருது பவர்கள், 3) அசோகன் பிராமியிலிருந்து தழுவிக் கொள்ளப் பட்டவையே தமிழ் பிராமி எழுத்துகள் என்று கருதுபவர் கள் என்ற மூன்று பெரும் பிரிவினர் காணப்படுகிறார்கள். ஆகவே, தமிழ் மொழியின் எழுத்தாக்கம் பற்றி மொத்தம் ஐந்து மாறுபட்ட கருத்துகள் தமிழ் ஆராய்ச்சி உலகில் காணப் படுகின்றன.

## 2.2. எழுத்தாக்கம்

ஒவ்வொரு பிரிவாரும் கூறும் வாதப்பிரதிவாதங்களை யும் அந்தக் கருத்தின் வன்மை மென்மைகளையும் பார்ப் போம்.

எழுத்தாக்கம் விஞ்ஞான உணர்வு அடிப்படையில் சமூக உணர்வு கலந்து உண்டாவது. அதற்கு முக்கியமானது கிடைக் கும் தரவுகளை நம்பக அடிப்படையில் ஏற்றுக் கொள்ளாது, வரலாற்று உணர்வோடு ஏற்றுக் கொண்டு வளர்ச்சி முறை களை விஞ்ஞான ரீதியாக விளக்கவேண்டும்.

### 2.2.1. வட்டெழுத்து

வரதராசன் (1954) எழுத்து மொழியின் தோற்றம் பற்றி உலகளாவிய நிலையில் காணப்படும் கருத்துகள் அடிப் படையில் ஓவிய எழுத்திலிருந்து (Pictography) அடையாள எழுத்துகளும் (Hieroglyphs), அசையோவிய எழுத்துகளும்

(Syllabic) ஒலி எழுத்துகளும் (Alphabetic) உண்டாயின என்றும், அதற்குத் தமிழ் இலக்கியச்சான்றும் மொகஞ் சதாரோ எழுத்து சான்றும் உண்டு என்றும், தமிழ் எழுத்து களில் உயிர்மெய் எழுத்து எண்ணிக்கை (216) அதிகம் இருப்ப தால், தமிழ் எழுத்துகளை அசை எழுத்து எனக் கொள்ளா மல், மெய்யை அடுத்துவரும் உயிராக – மெய்யும் உயிருமாகத் தனித்தனியே விளங்குவதால் ஒலிஎழுத்து எனக் கொள்வதே பொருந்தும் (ப. 410 தொ.) என்பார்.

> வடபிராமி வட இந்திய மொழிகளுக்கு ஏற்றாற் போல் அமைந்திருக்கிறது. தென்பிராமி தமிழ் மொழி களுக்கு ஏற்றாற்போல் அமைந்திருக்கிறது. தென் பிராமியில் வடமொழிக்கு இன்றியமையாத பல ஒலி கள் இல்லை... வடமொழிக்கு வேண்டாத எகரக் குறிலும் ஒகரக்குறிலும் உள்ளன. ஆகையால் தொல் காப்பியனார் காலத்துப் பழந்தமிழர்க்கு உரிய ஒலி களை மட்டும் உணர்த்தி வந்தன என்றும் பழந்தமிழ் எழுத்தை ஒட்டி அமைக்கப்பட்டவை என்றும் கொள்ள லாம் (ப.426)

என்பதும் அவர் கருத்து. தமிழ்நாட்டில் கிடைக்கும் கல்வெட்டு கள் பற்றிய அவர் கூற்றும் தவறானது.

> தொண்டை மண்டலத்தில் பல்லவர் ஆட்சிக்காலத் தில் பிராமி எழுத்துக்கள் பல்லவர்களின் எழுத்துக்க ளாக விளங்கின. அவை கி.பி. 650 ஆம் ஆண்டு வரை யில் சென்று ஆராய இடம் தருகின்றன. கூரத்து சாச னத்தை எடுத்துக்காட்டாகக் கூறலாம். சோழ நாட் டில் மிகப் பழைய கல்வெட்டுகளாகக் காணப்பட்டவை கி.பி. 10 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை. அவை கிரந்த எழுத்துக்களில் அமைந்துள்ளன. சோழ நாட் டில் ஆங்கொன்றும் ஈங்கொன்றுமாக வட்டெழுத்துச் சாசனங்கள் உள்ளன. அவை பெரும்பாலும் பாண்டிய வேந்தர்களால் ஏற்பட்டனவாக உள்ளன. பாண்டிய நாட்டில் கி.பி. எட்டாம் நூற்றாண்டில் ஏற்பட்ட பழைய கல்வெட்டுக்களும் உள்ளன. அவற்றுள் சில வட்டெழுத்துக்களாலும் சில கிரந்த எழுத்துகளாலும் அமைந்தவை. சேர நாட்டில் வட்டெழுத்து நெடுங் காலம் வாழ்ந்து வருகின்றது.

என்பது அவர் வாசகம் (1954:420). இங்குப் பல்லவர்காலக் கல்வெட்டுகள் பிராமி எழுத்துகளாலும் சோழநாட்டுக் கல் வெட்டுகள் கிரந்த எழுத்தாலும் அமைந்தவை என்பதே வர லாற்று உண்மை இல்லை. மேலும் கூரம் சாசனம் (7 - ஆம் நூற்றாண்டு) கிரந்த தமிழ் எழுத்தில் எழுதப்பட்டது; எனவே பிராமி எழுத்தில் எழுதப்பட்டது என்பதும் தவறு. மேலும் வட்டெழுத்துக் கல்வெட்டுகள் இவர் கருத்துப் படியே பிற எழுத்துக் கல்வெட்டுகளை விட காலத்தால் பிந்தியே கிடைக் கின்றன என்றாலும் தொல்காப்பியம் கூறுவது வட்டெழுத்து என்று கொண்டதால்தான் மிகப் பழைய எழுத்து வட்டெ ழுத்து என்று கொண்டிருக்கவேண்டும்.

தென்பிராமி (தமிழ் பிராமி) கி.மு. 2-ஆம் நூற்றாண் டிலோ அல்லது கி,பி. 250க்குப் பிறகோ ஆக்கப்பட்டிருக்கலாம் என்றும் வட்டெழுத்துக் கல்வெட்டுகள் கி.பி. 8 ஆம் நூற்றாண்டு முதலே கிடைக்கின்றன என்றும் இரத்தினசாமி (1988:82,93) கூறுவார்.

இங்கு இரண்டு முக்கிய சந்தேகங்கள்எழுகின்றன. 1: வட் டெழுத்து மிகப்பழைய எழுத்து என்றால் அதில் எழுதிய முற் கால கல்வெட்டுகள் ஏன் கிடைக்கவில்லைஎன்பது. 2: இவர்கள் கூறும் தமிழ் மொழிக்குரிய கல்வெட்டு எழுத்துகளின் எண் ணிக்கை பற்றியது. வரதராசன், இரத்தினசாமி ஆகிய இரண்டு பேரும் அ) தென் பிராமி, வட்டெழுத்து ஆகிய இரண்டு எழுத்துகளே தமிழ்க் கல்வெட்டுகளில் பயன்படுத்தப்பட்டுள் ளன; ஆ) இன்றைய தமிழ் எழுத்து வட்டெழுத்துகளின் மாற் றங்களே (வரதராசன், 1954:419, இரத்தினசாமி, 1988:100) என்ற கருத்து உடையவர்கள்.

இந்த இரண்டு கருத்துகளையுமே கல்வெட்டு ஆய்வாளர் கள் பல காலமாக ஒத்துக் கொள்ளவில்லை என்பது குறிப்பிடத் தகுந்தது. 1938-இலேயே தி.நா. சுப்பிரமணியன், தமிழ் நாட் டில் கிடைக்கும் சாசனங்கள் பொதுவாகத் தமிழ், கிரந்தம், வட் டம் என்று வழங்கப்படும் மூன்று வகை லிபிகளில் 'உள்ளன என்று குறிப்பிட்டு, கிரந்த லிபி வடமொழிச் சாசனங்

களையும் தமிழ் மொழிச் சாசனங்களில் வரும் வடமொழிச் சொற்களையும் எழுதுவதற்கு உபயோகப்பட்டு வந்தது; தமிழ் மொழியில் உள்ள சாசனங்கள் தமிழ், வட்டம் என்னும் இரு வகை லிபிகளிலும் பொறிக்கப்பட்டு வந்தன; இப்பொழுது வழங்கி வரும் தமிழ் எழுத்துக்களையும் அவற்றின் பழைய வடிவங்களையுமே 'தமிழ்' என்னும் பெயரால் குறிப்பிடப் பட்டுள்ளது; வட்டெழுத்தும் தமிழ் மொழிச் சாசனங்களை எழுதுவதற்கே உபயோகப்பட்டு வந்தாலும் தமிழ், வட்டம் என்பது தனித்தனிவகை என்பதைக் கல்வெட்டுகளே உணர்த்து கின்றன என்றெல்லாம் கூறியுள்ளார்.

பராக்கிரம பாண்டியன் திருக்குற்றாலம் குற்றால நாத சுவாமி கோயிலைப் புதுப்பித்தபோது அதில் உள்ள கல்வெட்டு கள் வட்டெழுத்தில் இருந்ததைத் தமிழ் எழுத்தில் எழுதுவித் தான் என்பதை அங்குள்ள கல்வெட்டு 'திருமலை ஜீ(ர்)ண் ணிக்கை (யால் உத்தா) ரணம் பண்ணின (வி)டத்து திருமலை யிற் கல்வெட்டு வட்டம் ஆகையால் தமிழாகப் படியெடுத்து' (454 of 1917) என்று குறிப்பிடுகிறது.

எனவே தமிழ் பிராமி, தமிழ், வட்டம் (வட்டெழுத்து) ஆகிய மூன்று எழுத்துகளில் தமிழ் மொழி கல்வெட்டுகள் உள்ளன என்பதும், தமிழ் பிராமி (தென்பிராமி) காலத்தால் முந்தியது என்பதும் தெளிவாகிறது.

பின்னர் நடந்த கல்வெட்டு ஆராய்ச்சியினால் எழுத்து வகைபற்றிய கருத்து மாறுபடவில்லை. தமிழ், வட்டம் ஆகிய எழுத்துகளை உடைய பழைய கல்வெட்டுகளின் காலம் மாறிவிட்டது. 1972-இல் நாகசாமியின் கருத்து வருமாறு:

கி.பி. 3-ஆம் நூற்றாண்டில் இருந்து தமிழ் மொழியை எழுதி இருவகை எழுத்துக்கள் வழக்கில் காணப்படுகின்றன. ஒன்று, தமிழ் என்றும் மற்றது வட்டெழுத்து என்றும் கூறலாம். இதற்கு எடுத்துக்காட்டு அரச்சலூர் கல்வெட்டாகும்... (ப 16), அரச்சலூர் கல்வெட்டு தமிழும் வட்டெழுத்தும் கலந்து எழு தப்பட்டுள்ளது. (ப 19).

பல்லவர் காலத்தில் சிம்ம விஷ்ணு, மகேந்திரன், முதல்நரசிம்மன், நந்திவர்மன், நிருபதுங்கன், அபராஜிதன், கம்மவர்மன் ஆகிய மன்னர்களின் ஆட்சிக் காலத்தைச் சேர்ந்த தமிழ்க் கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன. முதல் நரசிம்ம வர்மனின் திருக்கழுக்குன்றக் கல்வெட்டில் ஒரு சில வட்டெழுத்து உருவங்களும் உள்ளன. முதல் பரமேஸ்வரவர்மனின் கூரம் செப்பேட்டில் தமிழ் நல்ல முறையில் எழுதப்பட்டுள்ளன (ப. 20). அண்மையில் வட ஆற்காடு மாவட்டத்திலும் தருமபுரி மாவட்டத்திலும் கண்டுபிடிக்கப்பட்ட பல்லவர்கால நடுகற்கள் வட்டெழுத்தில் உள்ளன. பல்லவர் அவையில் தமிழும் கிரந்தமுமே செல்வாக்கு பெற்றிருந்தன. சில இடங்களில் வட்டெழுத்துக்களும் இருந்தன என்று தெரிகிறது.

இந்தக் கருத்து கல்வெட்டு எழுத்துகள் பற்றிய இன்றைய நிலையைப் பிரதிபலிக்கிறது. இதை எல்லோரும் ஒத்துக் கொள்கிறார்கள் தற்காலத் தமிழ் கல்வெட்டு ஆய்வாளர்கள் எல்லோரும் இன்றைய தமிழ் எழுத்துகளின் முன்னோடி மேலே குறிப்பிட்ட 'தமிழ்' எழுத்துகளே; வட்டெழுத்துகள் அல்ல என்பதையும் கூறியுள்ளார்கள். எனவே வட்டெழுத்து மிகப் பழமையானது என்ற கருத்தே வரலாற்றுப் பிறழ் உணர்வால் ஏற்பட்டது என்று கருதவேண்டியிருக்கிறது.

ஒரு மொழிக்கு எழுத்தாக்கம் செய்கிறவர்கள் அந்த மொழியின் ஒலியன்களின் எண்ணிக்கை பற்றியும் ஒலியன்களுக்கிடையே உள்ள ஒலி உறவு பற்றியும் நுண்ணுணர்வு உடையவர்களாக இருப்பார்கள். இந்த அடிப்படையில் தமிழ் பிராமி எழுத்துகளைப் பார்த்தால் உயிர்களில் குறில் - நெடில் வேறுபாடு தெரிந்து அ,இ,உ ஆகிய மூன்று உயிர்க் குறிலில் ஒரு குறியீட்டைச் சேர்ப்பதன் மூலம் நெடிலை உண்டாக்கியுள்ளது போல வேறு சில ஒற்றுமைகளைக் காண முடிகிறது. அப்படியிருக்கும்போது ஏகார ஓகாரத்தைப் பொறுத்த வரையில் நெடிலிலிருந்து ஒரு பொதுக் குறி சேர்த்துக் குறிலை உண்டாக்கியிருப்பது முன்னைய பண்புக்கு முரணாக காணப்படுவது எதனால் ஏற்பட்டது? என்று எழுத்தாக்க முறையில் பார்க்கும்போது கேள்வி எழுகிறது. பொது

வாக இதற்கு இரண்டு வித வாய்ப்புகள் உண்டு. ஒன்று: அந்த மொழியில் முன்னால் ஏகாரம், ஓகாரம் மட்டுமே ஒலியன்களாக இருந்து, பிற்காலத்தில் ஒலி மாற்றம் ஏற்பட்டதாலோ அல்லது பிற மொழியிலிருந்து சொற்களைக் கடனாண்டதாலோ எகரமும், ஒகரமும் ஒலியனாக அமைந்ததால் புதியதாக நெடிலையும் குறிலையும் வேறுபடுத்திக் காட்ட வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்க வேண்டும். தமிழைப் பொறுத்த வரையில் வரலாற்று ரீதியில் பார்க்கும் போது எகர, ஒகரங்களில் குறிலும் நெடிலும் தொல் திராவிட நிலையிலிருந்தே ஒலியனாக இருந்து வந்திருக்க வேண்டும் என்பது தெளிவாகிறது (Emeneau1970: 20,71, Subrhamanyam,1983:36) எனவே இந்தக் காரணம் பொருந்தாது போய் விடுவதால் எழுத்து மொழி இன்னொரு மொழியிலிருந்து கடனாளப்பட்டுத் தங்கள் மொழிக்கு ஏற்பத் தழுவிக் கொள்ளப்பட்டதன் அடையாளமே என்ற முடிவுக்கு வர வேண்டியிருக்கிறது. மேலும் பல வட்டெழுத்து கல்வெட்டுகளில் உயிர் எழுத்துகளில் மட்டும் அல்லாமல் உயிர்மெய் எழுத்திலும் எகர, ஏகார, ஒகர, ஓகாரம் வேறுபடுத்தப்படாமல் எழுதப்பட்டுள்ளன என்ற உண்மையும் எழுத்து மொழி பிற மொழியிலிருந்து கடனாளப்பட்டிருக்க வேண்டும் என்ற சந்தேகத்தை உறுதி செய்வதாக அமைந்துள்ளது. எனவே எகர, ஒகர உயிர்களில் வடிவ வேறுபாடு செய்யப்பட்டுள்ளது என்று மட்டும் கூறுவது எழுத்தாக்க முறையைக் கவனிக்காமல் போய் விட்டதாகக் கருத வேண்டியுள்ளது. அடுத்துத் தனிமெய், அகரமெய்வரிவடிவங்களைப்பார்த்தாலும் ஒலி எண்ணிக்கைக்கும் வரி வடிவ எண்ணிக்கைக்கும் உள்ள முரண் தெரியவரும். தனிமெய் என்பது ஒரு ஒலி என்பதால் ஒரு வடிவம் மட்டும் பெற்று, அகர உயிர்மெய் இரண்டு ஒலி என்பதற்கு ஏற்ப இரண்டு வடிவங்களைப் பெற்றிருக்க வேண்டும். அப்படி அமையாமல் தலைகீழாய் - தனிமெய்யான ஒரு ஒலிக்கு இரண்டு குறிகளும் (மெய் வடிவம்-புள்ளி) அகர உயிர் மெய்யான இரண்டு ஒலிக்கு ஒரே குறிகளும் (தனிமெய் வடிவம் மட்டும்) சில வட்டெழுத்துகளிலும், தொல்காப்பிய சூத்திரப்படியும், அமைத்திருப்பது சில சந்தேகங்களை எழுப்புகின்றன. இவை வட்டெழுத்து வரிவடிவமும் சரி, தென் பிராமி

வடிவமும் சரி தமிழுக்காகத் தனியே செய்யப்பட்ட எழுத்தாக்கம் இல்லை என்பதைப் புலப்படுத்தி விடுகின்றன. எனவே எழுத்தாக்கத்தில் வரிவடிவ அமைப்பையும் ஒலியின் அமைப்பையும் வரதராசன் போன்றவர்கள் கவனிக்கவில்லை என்ற குறை ஏற்பட்டுவிடுகிறது.

வட்டெழுத்து தமிழுக்காகத் தனியாக உண்டாக்கப்பட்ட வடிவம் என்பதை எழுத்தாக்கம் என்ற அறிவியல் துறை நோக்கிலிருந்து பார்க்கும்போது ஒத்துக்கொள்ள முடியாது. வட்டெழுத்து தமிழுக்காக உண்டாக்கப்படவில்லை என்று பிற அறிஞர்கள் ஒத்துக் கொள்ளாததும் இந்தக் கருத்தை வலியுறுத்துகிறது. பொதுவாக விஞ்ஞான ரீதியாகப் பார்த்தால் தன்னுடைய கருத்துக்குஆதரவாக சில கருத்துகளைத் திரட்டி விட்டு, அந்தச் சாட்சியங்கள் எப்படிப் பட்டது என்று சோதித்துப் பார்க்காத குறை வட்டெழுத்து தமிழுக்காக ஆக்கப்பட்டது என்று கூறுபவர்களிடம் ஏற்பட்டுவிட்டது எனலாம்.

### 2.2.2. 'ஒரு வகையான எழுத்து'

தமிழில் மிகப் பழைய எழுத்து 'ஒரு வகையான எழுத்து' என்பதற்கு இரண்டு காரணங்கள் கூறப்படுகின்றன. அவை யாவன:

1) அசோகன் பிராமியின் காலத்துக்கு முன்னாலேயே தமிழில் எழுத்து இலக்கியம் இருந்தது. உதாரணம் கி.மு.8ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட தொல்காப்பிய இலக்கணம்.

2) தமிழ் பிராமியில் சிறப்பு எழுத்துகளான ழ,ற,ன ஆகிய மூன்றும் இருப்பது தமிழுக்கு முன்னரே எழுத்து மொழிஇருந்ததன் அடையாளமாகக் கருத வேண்டும்( மயிலை சீனி வேங்கடசாமி, 1981:9)

இவற்றின் வன்மை மென்மைகளைப் பார்ப்போம்.



தமிழ் நூல்களின் பழமை – குறிப்பாகத் தொல்காப்பியத்தின் பழமை. நேரடியான வரலாற்று ஆதாரங்கள் நூலுக்குள் இல்லாததால் காலத்தைத் திட்டவட்டமாக வரையறுக்க முடியவில்லை. எனவேதான் ஒவ்வொரு தமிழ் அறிஞரும் ஒவ்வொரு காலத்தைக் குறிப்பிட்டுள்ளார்கள். எழுத்தாக்கத்தைப் பற்றி ஆராய்ந்த அறிஞர்களிடையேயும் கருத்து வேறுபாடு காணப்படுகிறது. வரதராசன் 1954-இல் கி.மு. 1000 என்றும், 1972-இல் கி.மு. 3–ஆம் நூற்றாண்டு என்றும், இராச மாணிக்கனார் கி.மு. 3–ஆம் நூற்றாண்டு என்றும், இரத்தின சாமி கி.மு.5-ஆம் நூற்றாண்டு என்றும் வேங்கடசாமி கி.மு. 8-ஆம் நூற்றாண்டு என்றும் குறிப்பிட்டுள்ளார்கள். என்றாலும் பொதுவாக இவர்கள் அசோகன் பிராமிக்கு முற்பட்ட காலம் என்ற கருத்துடையவர்கள் என்பது உணரத்தகுந்தது. ஆனால் தொல்காப்பியத்தில் வரிவடிவம் பற்றிக் கூறப்பட்டிருக்கிறது என்று மட்டும் குறிப்பிட்டு விட்டு, அந்தச் செய்திகளின் முழு அர்த்தம் பற்றி இவர்கள் கருத்து செலுத்தவே இல்லை. ஆதாரத்தை எடுத்துக் காட்டிவிட்டு எந்த ஆதாரம் எப்படிப் பட்டது என்று பார்க்கவில்லை.

அடுத்துத் தமிழ் பிராமியில் உள்ள சிறப்பு எழுத்துகள், இவைகளில் னகரம் நகரத்திலிருந்தும் றகரம் தகரத்திலிருந்தும் அல்லது தகர, டகரம் சேர்ந்த கூட்டெழுத்திலிருந்தும் உண்டானவையாக வரிவடிவத்தை உற்று நோக்கினால் புலப்படுகிறது. அப்படியானால் சிறப்பு எழுத்துகள் என்று கருதப்படுபவையும் அசோகன் பிராமியின் தழுவல் போல உள்ளதே என்ற சந்தேகம் எழுகிறது. எனவே, வேங்கடசாமி கூறும் இரண்டு காரணங்களும் அவருடைய கருத்துக்கு ஆதரவாக இல்லை.

எழுத்து இருந்து மறைந்து விட்டது என்பதற்கும் வேறு வலுவான காரணங்கள் காட்டவேண்டும். ஒரு சரியான தடயம் கூட இல்லாமல் மறைந்து போய்விட்டது என்பது ஆராய்ச்சியாளர்களால் ஏற்றுக் கொள்ள முடியாது. மேலும் அப்படிப்பட்டவர்களையும் அந்தக் கருத்துகளையும் விமர்சித்த

முறையே' அவருக்குச் சரியான ஆதாரம் கிடைக்காததால் கோபம் ஏற்பட்டு விட்டதையே காட்டுகிறது.

'தமிழ் இலக்கியங்களின் பழமையை அறியாதவர்கள்' (ப.7), 'தமிழ் மொழி மீதும் தமிழர் மீதும் வெறுப்புள்ளவர்கள்' (ப.13), 'இவை ஆழ்ந்து ஆராயாமல் மேற்போக்காகக் கூறப்படுகிற கருத்துக்கள்', 'தமிழ் வெறுப்பு, சமஸ்கிருத வெறி (ப.13), 'குழப்பத்தை உண்டாக்குதல்' 'தாறுமாறாக்குதல்' (ப. 14)போன்ற வாசகங்கள் ஆசிரியர் காரண காரியங்களால் தன்னுடைய கருத்தை நிலை நிறுத்தமுடியாத நிலைமையை – தன்னுடைய இயலாமையைக் காட்டுவதாக அமையும். இதனால் இவரிடம் கருத்து முரண் கூட (அடிக்குறிப்பு பார்க்கவும்)[1] ஏற்பட்டு விட்டது. எனவே தமிழ் பிராமியிலிருந்து'வேறுபட்ட ஒரு வகையான எழுத்துமுறை இருந்தது என்பதை நிலை நாட்ட அவரது ஆதாரங்கள் ஆதரவாக அமயவில்லை. அதே சமயத்தில் வரதராசன், இரத்தினசாமி ஆகியவர்களின் கருத்துக்கு மாறாக, வட்டெழுத்து தமிழ் பிராமியிலிருந்து வளர்ந்தது; இன்றைய தமிழ் எழுத்துகளுக்கு முன்னோடி வட்டெழுத்திலும் வேறான சோழர்கால 'தமிழ்' எழுத்துகளே என்ற கருத்து உடையவர் மயிலை சீனி வேங்கடசாமி என்பது இங்குச் சுட்டிக் காட்டத் தகுந்தது.

### 2.2.3. தமிழ் பிராமி

தமிழ் பிராமியே தமிழ் மொழிக்காக உண்டாக்கப்பட்ட எழுத்துமுறை என்ற கருத்தைத் தி.நா. சுப்பிரமணியனும் கிஃப்ட் சிரோமணியும் வாதிட்டுள்ளார்கள். மேலும், அசோகன் பிராமியும் தமிழ் பிராமியின் தழுவலாக இருக்கலாம் என்றும் அவர்கள் விளக்கியுள்ளார்கள். ஆனாலும் தி.நா. சுப்பிரமணியன் (1938: 100 – 3) இப்பொழுது கிடைக்கும் தமிழ் பிராமி அசோகன் பிராமியின் தழுவல் என்றும்; தொல்காப்பியம் கூறும் எழுத்து முறை வடமொழியை ஒட்டியது என்றும் ஒத்துக் கொண்டு, அசோகன் பிராமி வரிவடிவங்களை உற்றுப்

பார்த்து, அதிலிருந்து சில பொதுமைகளைக் கண்டு, அசோகன் பிராமி எழுத்துகளுக்குப் புதை வடிவமாக தமிழ்பிராமியே இருந்திருக்கலாமோ என்றுதான் ஐயப்படுகிறார். இந்த ஆய்வு முறை உள்நிலை மீட்டுருவாக்கம் (Internal reconstructions) என்று மொழியியலார் கையாளும் வரலாற்று ஆராய்ச்சி முறையை ஒத்துள்ளது.

**2.2.3.1.** சுப்பிரமணியன்

சான்று ஆதாரம் கிடைக்கும் தொன்மையான காலத்தில் பிராமி எழுத்துமுறை ஒலியெழுத்து நிலையை அடைந்து விட்டது. ஆனால் அது ஒலியெழுத்து நிலையை எப்படி அடைந்தது என்று தெரியவில்லை. அதே சமயத்தில் கி.மு. 7-ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட சமண நூல்களிலும் (ஸமவாயங்க சூத்திரம், கி.மு. 168-ஆம் ஆண்டில் எழுதப்பட்ட பண்ணாவணா சூத்திரம்) லலிதவிஸ்தாரம் என்ற புத்த நூலிலும் பிராமி (அல்லது பம்மி), திராவிடி (அல்லது தமிழி) என்ற இரண்டு வகை காணப்படுவதால் (ஆனால் கோயல் (Goyal: 1979: 22) இந்த நூல்கள் பிற்காலத்தில் மாற்றம் அடைந்த நிலையிலேயே கிடைத்துள்ளதாக அந்தச் செய்திகள் பிற்காலத்தனவாக இருக்கலாம் என்று குறிப்பிட்டுள்ளார்) பிராமி இந்தியாவிலேயே தோன்றி வளர்ச்சி பெற்றிருக்க வேண்டும்.

பிராமி எழுத்துகளை உற்றுநோக்கினால் அ) வரிவடிவ ஒற்றுமையைக் கொண்டு அவை சில இனங்களாக உள்ளதும், அவற்றுள் சில எழுத்துகளின் உருவங்கள் புதியனவாக உண்டாக்கப்பட்டன என்பதும் தெரியவரும். அப்படியானால் புதியதாக உண்டாக்கப்பட்ட எழுத்துகள் இல்லாத ஒரு மொழியிலிருந்தோ, தேசத்திலிருந்தோ இந்த லிபி முதலில் பெறப்பட்டிருக்க வேண்டும் என்றும் (ப.100) அந்த லிபி தமிழுக்கென அமைந்த லிபியாக இருத்தல் கூடுமா? இது ஆராய்தற்குரியது! (ப.103) என்றும் கூறியுள்ளார் சுப்பிரமணியன் (1938).

இங்கு அவர் குறிப்பிடும் வரிவடிவ ஒற்றுமைகளே விவாதத்திற்குரியவை. உதாரணமாக, 1. வர்க்க எழுத்துகள் முதல்

எழுத்துகளிலிருந்து பெறப்பட்டன என்பது அவரது ஒரு கருத்து. ஆனால் முதல் எழுத்துகளுக்கும் வர்க்க எழுத்துகளுக்கும் வரி வடிவ ஒற்றுமை காணப்படவில்லை. இந்தக் கருத்தைக் கிருஷ்ணனும் (1974: 30) நேரடியாகக் குறிப்பிட்டுள்ளார்.

2. அ) டகர மெய்யும் தகர மெய்யும் வேறாகக் காணப்பட்டாலும் அவற்றின் வர்க்க எழுத்துகள் நெருங்கிய தொடர்பை உடையன.

ஆ) டகர வர்க்கத்தின் இரண்டாவது எழுத்தில் (ṭh) புள்ளி வைத்தால் தகர வர்க்கத்தின் இரண்டாவது எழுத்து (th) ஆகும்.

இங்கு 'அ' கருத்து மேலே சொன்ன கருத்தின் விளக்கம் தான். 'ஆ' என்ற கருத்தே புதியது. இங்கு, புள்ளியில்லாத வடிவம் நாமடி ஒலியாகவும் புள்ளியிட்ட வடிவம் பல்லொலி (Dental) யாகவும் உள்ளது. இந்த முறை வேறு எழுத்துகளில் காணப்படவில்லை. எனவே இந்த ஒற்றுமை – வேற்றுமை தற்செயலானதே தவிர திட்டமிட்டது அல்ல. அதனால் ஒன்றிலிருந்து மற்றொன்று தழுவிக் கொண்டது என்று கூறமுடியாது.

3) மெல்லினங்கள் ஓர் இனமாக உள்ளன என்பதும் முழு உண்மை இல்லை. நகரமும் ணகரமுமே வடிவ ஒற்றுமை உடையன.

4) உயிர் எழுத்துகளில் அ,இ,உ, ஆகிய மூன்றுமே மூல எழுத்துகள். ஏகாரம் இகரத்திலிருந்தும், ஓகாரம் உகரத்திலிருந்தும் பெறப்பட்டன என்பது அவர் கருத்து. ஆனால் ஏகாரமும் ஓகாரமும் ஒரே முறையில் பெறப்படவில்லை. அப்படியே அ,இ,உ, ஆகிய மூன்று குறில்கள் மட்டும் அடிப்படையானவை என்றும் கூறமுடியாது.

உயிர் எழுத்துகளில் அ,இ,உ, வல்லினத்தில் முதல் எழுத்து மெல்லெழுத்தில் ஒன்று ஆகிய எழுத்துகளைக் கொண்ட மூல மொழியின் வரிவடிவத்திலிருந்து அசோகன் பிராமி தோன்றியிருக்க வேண்டும் என்பதும்;அந்த மூல மொழி தமிழாக இருக்கலாம் என்பதுமே அவர் வாதம். மேலே ஒவ்வொரு வாதத்துக்

கும் எதிர் வாதம் காட்டப்பட்டது. மேலும் அவர் காட்டும் மூலமொழி தமிழ் என்பதும் பொருந்தாது. ஏனெனில் i) தமிழில் அ, இ, உ, எ, ஒ ஆகிய ஐந்து குறிலும் அடிப்படையானவை. வடமொழி போல ஏகரத்தை அகரத்தையும் இகரத்தையும் சேர்த்தும் ஓகரத்தை அகரத்தையும் உகரத்தையும் சேர்த்தும் பெறமுடியாது. ஏனென்றால் தமிழ் மொழியில் ஏகரமும் ஓகாரமும் அடிப்படையானவை. அகரமும் இகரமும் ஐகாரமாகவும், அகரமும் உகரமும் ஔகாரமாகவும் தமிழில் மாறும்.

ii) எழுத்துக்கள் நெடுங்கணக்கு நிலையை அடைவதற்கு முந்திய காலங்களில் பெற்றிருந்த உருவங்களைப் பற்றிய குறிப்புகள் தமிழைத் தவிர வேறு இந்திய மொழிகளில் உள்ள 'இலக்கியங்களில் காணப்படவில்லை என்பது அவருடைய இன்னொரு வாதம்.

இதற்கு எதிர் வாதமாக இரண்டு கருத்துகளை எடுத்துக் காட்டலாம்: முக்கியமாக 11 - ஆம் நூற்றாண்டைச் சார்ந்த யாப்பருங்கல உரையில்தான் இந்தச் குறிப்பு கிடைக்கிறது. மேலும் அந்த உரை குறிப்பிடும் உருவு, உணர்வு, ஒலி, தன்மை என்பனவற்றை எழுத்துவடிவங்களின் தோற்றத்தைப் பற்றி மேலை நாட்டு ஆசிரியர் கருத்துகளோடு ஒப்பிடமுடியுமா என்பது சந்தேகமே.

அடுத்து 'எழுத்து ஆராய்ச்சியில் கண்கண்ட சாட்சியாகக் கருதப்படுவது கல்வெட்டு எழுத்துகளோ, பிற பொருளில் எழுதப் பட்ட எழுத்துகளோதான். இலக்கியச் சான்றுகள் இரண்டாம் தரமானவை என்று வடமொழி எழுத்துகள் பற்றி குப்தா (1979: xxi) கூறும் உண்மை தமிழ்க்கல்வெட்டுக்கும் பொருந்தும். என்றாலும், அசோகன் பிராமியின் மூலவடிவங்கள் தமிழ் மொழி எழுத்து என்றால், இன்றைய தமிழ் பிராமி எப்படி அசோகன் பிராமியின் தழுவல் என்று கூறுவது? என்ற கேள்வி எழுகிறது. இந்தக் கேள்வியை அவரே எழுப்பிப் பதிலும் கூறியுள்ளார்.

பிராமி மொஹெஞ்சாதாரோ குறிகளின்றும் முதலில் தமிழுக்கெனப் பெறப்பட்ட லிபியாக இருக்குமானால்

> ஏன் எகர ஒகரங்களுக்கு மட்டில் நாம் முன்பு காட்டிய வேறுபாடு(நெடிலிருந்து குறில் உண்டாக்குவது)காணப் பட வேண்டும்? (ப.104)

என்ற கேள்வியை அவரே எழுப்பி

> 'ஒருகால் ஆரியர்கள் தமிழர்களிடமிருந்து கடன் வாங்கிய எழுத்துக்கள் வளர்ச்சி அடைந்து தமிழ் நாட்டில் ஆரிய நாகரிகத்துடன் புதிய வடிவத்தில் வந்துள்ளன என்று கூறலாமா?

என்று கேள்விக் குறியுடன் முடிப்பதால், அவருக்கே அந்தக் கருத்தில் சந்தேகம்தோன்றிஇருக்கிறது என்று பொருள். மேலும் இந்தக் கருத்துப்படி முதலில் தமிழர்களிடமிருந்து ஆரியர்கள் எழுத்துமுறையைக் கையாண்டு, பின்னர் தமிழர்கள் ஆரியர் களிடமிருந்து வாங்கினார்கள் என்றால் அதற்குத் தெளிவான வரலாறு வேண்டும். அசோகன் பிராமிக்கு முன்னாலும் மொஹெஞ்சதாரோ குறியீடுகளுக்குப் பின்னாலும் இன்றுவரை வேறு எழுத்துகள் இந்தியாவில் காணப்படவில்லை என்பதைக் கல்வெட்டு ஆய்வாளர்களும் ஒத்துக்கொள்கிறார்கள்.

எனவே வரலாற்று உணர்வோடு எழுத்து ஆதாரங்களை– புதிய கல்வெட்டுகளைத் தேடும் முயற்சியில் ஈடுபடவேண் டும். மொஹெஞ்சதாரோ, ஹரப்பா குறியீடுகளைச் சரி யாக வாசிக்கும் முறையிலும் ஈடுபட்டு உழைக்க வேண்டும். அதற்குப் பிறகே தெளிவு பிறக்கும்.

**2.2.3.2. கிஃப்ட் சிரோமணி**

கிஃப்ட் சிரோமணி (1982, 1983) தமிழ் பிராமி அசோகன் பிராமியை விட காலத்தால் முந்தியது என்பதற்கு இரண்டு வரலாற்றுக் காரணங்களைக் காட்டி விட்டு, இரண்டு எழுத்து முறைகளையும் ஒப்பிட்டு ஆராய்ந்து, அந்த உண்மையை வலி யுறுத்துகிறார்.

வரலாற்றுக் காரணங்கள்:

1) இலங்கை நாட்டு வரலாற்று நூலான மகாவம்சம் கி.மு. ஐந்தாம் நூற்றாண்டில் ஆண்ட இலங்கை மன்னன் விஜயன், பாண்டியன் மகளைத் திருமணம் செய்து கொள்ள விரும்பிய

தாகவும் அதனால் பாண்டிய மன்னன் தன்னுடைய மகளோடு ஒரு கடிதத்தை அனுப்பியதாகவும் குறிப்பிடுகிறது. எனவே தமிழகத்தில் கி.மு. ஐந்தாம் நூற்றாண்டுக்கு முன்னரே எழுத்து மொழி இருந்தது என்று புலனாகிறது.

2) தொல்காப்பிய உரையாசிரியரான நச்சினார்க்கினியர் தமிழ் எழுத்து சதுரம், வட்டம் ஆகியவற்றிலிருந்து தோன்றிய தாகக் குறிப்பிட்டுள்ளார். எனவே தமிழ் இலக்கணிகள் எழுத்து மொழி நிலக்கணித வடிவத் (Geometrical design) திலிருந்து தோன்றியது என்ற கொள்கை உடையவர்கள் என்பது புலனாகிறது. மூலநூலாகிய தொல்காப்பியத்தில் இந்த உண்மை காணப்படாவிட்டாலும் இது பழைய மரபை ஒட்டியது என்று கருதலாம்.

இந்த இரண்டுமே வலுவான காரணங்களாகக் கருத முடியாது (விமர்சனத்துத்துக்குப் பின் பகுதி பார்க்கவும்).

எழுத்து முறைகள் வடிவங்கள் பற்றிய ஆய்வு:

1. தமிழ் பிராமி:-

தமிழ் பிராமி கல்வெட்டுகளில் காணப்படும் வடிவங்களிடையே சில வேறுபாடுகள் தெளிவாக உள்ளன. பெரும்பாலான வரிவடிவங்கள் எல்லாக் கல்வெட்டுகளிலும் அதிக வித்தியாசம் இல்லாமல் இருக்கத், தனிமெய், அகர ஆகார உயிர்மெய்கள் ஆகிய மூன்றுவகை எழுத்துகளில் மட்டுமே வடிவ வேறுபாடுகள் உள்ளன என்பதை உணர்ந்து மகாதேவன் (1968, 1987) தமிழ் பிராமி எழுத்துகளில் ஒன்றுக்கு மேற்பட்ட எழுத்துமுறை இருப்பதாகக் குறிப்பிட்டார். அந்தக் கருத்தை ஒட்டி கிஃப்ட் சிரோமணி தமிழ்பிராமி I, தமிழ் பிராமி II, தமிழ் பிராமி III என்று மூன்று வகையாகப் பிரித்து அவை எப்படி வளர்ந்து அசோகன் பிராமியாக பரிணமித்தது என்று காட்டியுள்ளார்.

தமிழ்பிராமி I என்பது மெய்யெழுத்து (எந்தத் துணைக் குறியீடும் இல்லாத வடிவம்) தனி மெய்யாகவும் வலது பக்கம் உச்சியில் ஒரு சிறு படுக்கைக்கோடு சேர்த்த வடிவம்

அகர உயிர்மெய்யாகவும் பயன்படுத்தப்படுவது. கிஃப்ட் சிரோமணி கருத்துப்படி ஆகார உயிர்மெய், அகர உயிர்மெய் வடிவத்தோடு இன்னொரு அகர உயிர்க் குறியையும் சேர்த்து எழுதுவது (கா என்பது கஅ என்று எழுதுவது போன்றது). கிருஷ்ணனும் (1983:16) மாங்குளம் கல்வெட்டில் இந்த முறை காணப்படுவதாகக் குறிப்பிட்டுள்ளார். ஆனால் மகாதேவன் (1987:3) இந்த முறை தமிழ் பிராமி கல்வெட்டுகளில் காணப் படவில்லை என்று சொன்னாலும், அவர் கொடுத்துள்ள கல் வெட்டு வரியில் 'தா' என்ற எழுத்து 'தஅ' என்று எழுதப்பட் டுள்ளது குறிப்பிடத்தகுந்தது. மாங்குளம் கல்வெட்டே இந்த முறைக்கு உதாரணம் ஆகும்.

தமிழ் பிராமி II மெய்வடிவம் தனிமெய்யாகவும், அகரமெய் யாகவும் வலதுபக்க உச்சியில் ஒரு சிறு படுக்கைக்கோடு சேர்ந் தது (அதாவது மாங்குளம் கல்வெட்டு அகர உயிர் மெய்வடி வம்) ஆகார உயிர்மெய்யாகவும் கையாளப்படுவது. புகளூர் கல்வெட்டு இந்த முறையில் அமைந்தது. நிறைய கல்வெட்டுகள் இந்த முறையில் காணப்படுகின்றன. இவை அசோகன் பிராமி யோடு ஒத்தவை.

தமிழ் பிராமி III மெய்வடிவம், அகர உயிர்மெய்யாகவும் மெய்யின் மேல்புள்ளிவைத்த வடிவம் தனி மெய்யாகவும் வலது பக்க உச்சியில் ஒரு சிறு படுக்கைக்கோடு சேர்ந்தது ஆகார உயிர் மெய்யாவும் அமைவது. இதற்கு உதாரணமாக அமை வது அரச்சலூர் கல்வெட்டு (கி.பி. 3-ஆம் நூற்.). இங்கு எக ரம் மட்டும் ஏகார வடிவத்தில் புள்ளி வைத்துக் குறில் குறிப் பிடப்பட்டிருப்பதைத் தவிர தனி மெய்யைக் குறிக்கப் புள்ளி கையாளப்படவில்லை. பொதுவாக இது தொல்காப்பிய விதி களை ஒத்ததாகக் கல்வெட்டு அறிஞர்களால் கருதப்படுகிறது.

கிஃப்ட் சிரோமணி கருத்துப்படி அசோகன் பிராமியில் மாற்றம் எதுவும் இல்லை. ஆனால், பட்டிப்ரோலு பிராகிருத மொழியில் எழுதப்பட்ட கல்வெட்டு ஆனதால் அதைத் தனியா கக் கருதாமல் அசோகன் பிராமிII என்று கருதவேண்டும். ஆனா லும் பட்டிப்ரோலு என்ற ஓரிடத்தில் (ஆந்திராவில் கிருஷ்ணா

மாவட்டத்தில் உள்ள ஊர்) மட்டும் காணப்பட்டு அதே மாவட்டத்தில் அடுத்துள்ள ஊர்களில் காணப்படும் கல்வெட்டு களில் அசோகன் பிராமி I முறையே பயன்படுத்தப்பட்டுள்ள தும் குறிப்பிடத்தகுந்தது.

இனி தமிழ் பிராமியே அசோகன் பிராமிக்கு மூலம் என்பதற் கான அவருடைய வாதங்கள்:

அ) தமிழ் பிராமியில் அசோகன் பிராமியை விட எழுத் துக் குறியீடுகள் குறைவு.

ஆ) அசோகன் பிராமியிலுள்ள சில புதிய வடிவங்கள் தமிழ் பிராமியின் தழுவலாகக் கொள்ளலாம். உதாரணமாகப் பகர வர்க்கத்தின் முதலெழுத்தின் (p) திரிந்த வடிவமே இரண் டாவது எழுத்து (ph). அப்படியே தமிழ் பிராமியின் மகர வடி வத்தின் தழுவலே அசோகன் பிராமியின் மகர வடிவம்.

இ) தமிழ் பிராமியில் மூன்று மாறுபட்ட எழுத்து முறை காணப்பட அசோகன் பிராமியில் ஒரே முறை அவர் கருத்துப் படி எங்கும் உள்ளது. இந்த நிலையில் உயிரியலில் காணப்படும் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டால், தமிழ் பிராமி I அசோகன் பிராமியின் மூலம் ஆகும். அதாவது உயிரியலில் ஓரிடத்தில் ஒரு இனத்தைச் சேர்ந்த பலவகைத் தாவரங்கள் காட்டுத்தாவரங்களாகக் காணப்பட்டு, மற்ற எல்லா இடங்களி லும் அந்த இனத்தைச் சேர்ந்த ஒன்றிரண்டு வகைமட்டும்காணப் பட்டால், முந்தைய இடமே அந்த இனத்தாவரங்கள் ஆதியில் தோன்றிய இடமாகக் கருதப்படும். அந்த முறையில் தமிழகத் தில் மூன்று வகை எழுத்து காணப்பட, தமிழகம் நீங்கிய இந்தி யாவில் (இவற்றின் தமிழ் பிராமி II-ஐ ஒத்த) அசோகன் பிராமி காணப்படுவதால், தமிழ் பிராமி I தான் அசோகன் பிராமியின் மூலமாக இருக்க முடியும். இந்தக் கருத்தை உறுதி செய்வதற் காகத் தெளிவாகத் தெரிந்த ஒரு வரலாற்றுக்காரணத்தையும் இவர் சுட்டிக் காட்டியுள்ளார். கிரந்த எழுத்து தென்னகத்தில் தோன்றித்தாய்லாந்துக்குப் பரவியது என்பது எல்லோரும் ஏற் றுக்கொள்ளக்கூடிய உண்மை. தென்னகத்தில் பலவிமான கிரந்த

எழுத்து காணப்படத் தாய்லாந்தில் ஒரு விதமான கிரந்த எழுத்து காணப்படுவதால், உயிரியல் கோட்பாடு எழுத்தாக்கக் கோட்பாட்டுக்கும் பொருந்தும் என்பது உறுதிப்படுகிறது. இதனாலும் தமிழ் பிரோமியே அசோகன் பிராமிக்கு மூலம் என்று கூறலாம்.

உயிரியலில் காணப்படும் இன்னொரு கோட்பாடும் அவர் கருத்துக்கு ஆதரவாக உள்ளது என்று சுட்டிக்காட்டியுள்ளார். ஒரு தாவரம் ஒரே இடத்தில் காட்டுச்செடியாக நீண்டகாலமாக இருக்க, இன்னொரு இடத்தில் வளர்ப்புச் செடியாகக் கொஞ்ச காலமாக இருந்தால், முன்னைய இடமே அந்தத் தாவரம் தோன்றிய இடமாகக் கருதப்படும். இந்த முறையில் மிளகாய்ச் செடி பல காலமாகக் காட்டுச் செடியாக தென் அமெரிக்காவில் வளர்ந்து வர, இந்தியாவில் 500 ஆண்டுகளாக வளர்ப்புச் செடியாக வளர்க்கப்படுவதால் தென் அமெரிக்காவே மிளகாய் தோன்றிய இடம் என்று கூறலாம்.

தமிழ் பிராமியே அசோகன் பிராமியை விட காலத்தால் முந்தியதாய் இருப்பதாலும், ஒன்றுக்கு மேற்பட்ட முறை காணப்படுவதாலும் தமிழ் பிராமியிலிருந்தே அசோகன் பிராமி தோன்றியிருக்க வேண்டும். தருக்க ரீதியாகவும் தமிழ் பிராமி அமைந்தது என்பதும் அவர் கருத்து. எப்படியென்றால் தமிழ் பிராமியில் மெய்வடிவம் தனி மெய்யாகவும் உயிர் மெய்கள் துணைக்குறிகள் மட்டும் சேர்த்தோ அல்லது துணைக்குறிகளும் உயிர்க்குறிகளும் சேர்த்தோ அமைக்கப்படுகின்றன. ஆனால் அசோகன் பிராமியில் மெய் வடிவம் தனி மெய்யாகவும் அகர உயிர் மெய்யாகவும் பயன்படுத்தப்பட்டு, ஏனைய உயிர்மெய் வடிவம் அகர உயிர்மெய்வடிவத்தில் துணைக்குறியீடு சேர்த்து உண்டாக்கப்படுகின்றன. எனவே அந்த உயிர்மெய்கள் எல்லாம் அகர உயிரை நீக்கி இன்னொரு உயிரைச் சேர்ப்பதாக அமைவதால் தருக்க ரீதியாக அமையவில்லை என்று ஆகிறது. ஆகவே நீண்டகாலமாகவும் தருக்க ரீதியாகவும் அமைந்துள்ள தமிழ் பிராமியே மூலமாக அமைந்தது என்பது அவர் முடிவு.

அதே சமயத்தில் தமிழ் பிராமி மூலம் என்று கூறும்போது அதையொட்டி எழும் பிரச்சனைகளை நினைத்துப் பார்த்து, உருவாக்கப்பட்ட முறையும் வளர்ந்த முறையும் பரவிய முறையும் விளக்கியது அவருடைய சிந்தனையின் ஆழத்தை யும்; தமிழ் பிராமியில் உள்ள சில முரண்களையும் எழுத்தாக்க ஆராய்ச்சியில் உள்ள சிக்கல்கள் பற்றியும் குறிப்பிட்டுள்ளது, அவருடைய ஆராய்ச்சியில் கடைபிடித்த நேர்மையையும் புலப் படுத்துகின்றன. இவர் கருத்துகளைக் கீழ்க்கண்டவாறு சுருக் கிக் கூறலாம்.

i. எழுத்தாக்கம்

பொதுவாகத் தமிழ் எழுத்துகள் நிலக்கணித வடிவங்களிலி ருந்து உருவாக்கப் பட்டிருக்க வேண்டும். இகரத்தின் வடிவம் சதுரமும் குறுக்கு-நெடுக்குக் கோடும் (சிலுவை) சேர்ந்தது. எகரம் முக்கோண வடிவத்திலிருந்து உண்டாக்கப்பட்டது.

ii. வளர்ந்த முறை

தமிழ் பிராமியின் ஆரம்ப கட்டத்தில் எல்லாத் தமிழ் எழுத்துகளும் உருவாக்கப்பட்டிருக்கலாம் அல்லது ள,ழ, ற,ன ஆகிய தமிழ் எழுத்துகளோ, தமிழ் மொழிக்கு உரி யது அல்லாத (dh,s போன்றவை) எழுத்துகளோ முதலில் உருவாக்கப்படாமல் கொஞ்ச காலம் கழித்து உருவாக்கப்பட்டி ருக்கலாம்.

இரண்டாவது கட்டமாகத் தமிழ்பிராமி மவுரிய அரச வைக்குப் பரவியிருக்க வேண்டும். அதாவது மவுரிய அரசு அதி காரிகள் தமிழ் எழுத்து முறையை அறிந்துகொண்டு பிராகிருத மொழி ஒலியன் அமைப்புக்கு ஏற்ப புதிய வரிவடிவங்களைத் தமிழ் வடிவங்களிலிருந்து தழுவிக்கொண்டு, பிராகிருத மொழிக்கு எழுத்தாக்கம் செய்திருக்க வேண்டும். அசோகன் காலத்தில் வடநாட்டிலும், தென்னகத்தில் தமிழகம் ஒழிந்த பகுதியிலும், இலங்கையிலும் பிராமி எழுத்து பரப்பப்பட்டது. இதனால் முன்னே இருந்த தமிழ் முறை (தமிழ் பிராமிI) அசோகன் பிராமிச் செல்வாக்கால் தமிழ் பிராமி II ஆக

உருப்பெற்றிருக்க வேண்டும். பின்னர் அதுவே பெருவழக்காகத் தமிழகம் ஏற்றுக்கொண்டிருக்க வேண்டும். தமிழ் பிராமி I-உம் தமிழ் பிராமிII - உம் ஒரே சமயத்தில் வழக்கிலிருந்ததால் தான் பல கல்வெட்டுகளில் இரண்டு முறையும் கலந்து காணப்படுகின்றன.

மூன்றாவது முறையான புள்ளிமுறை இரண்டாவது முறையிலிருந்து திருத்தம் செய்யப்பட்டதாக இருக்கலாம். மூன்று முறையும் ஆனைமலைக் கல்வெட்டில் கலந்து காணப் படுகின்றன.

iii. தமிழ் பிராமிக் கல்வெட்டுகளின் நிலை

பெரும்பாலான கல்வெட்டுகள் தமிழ் பிராமி II முறையில் அமைந்துள்ளன. தமிழ் பிராமி கல்வெட்டுகளில் ஒரு எழுத்து பல விதமாக எழுதப்பட்டுள்ளது. அவைகளில் குறிப்பிடத் தகுந்த மாற்றம் உடையவற்றை இன்னும் சரியாகக் கண்டு பிடிக்கவில்லை. ஐம்பைக் கல்வெட்டுகளின் வடிவம் அசோகன் பிராமி வடிவத்தோடு பெரும்பாலும் ஒத்துள்ளது. இதில் அதிய மான் குறிப்பிடப்படுவதால் கி.பி. 2–ஆம் நூற்றாண்டு என்று கொள்ளலாமென்றால் வரிவடிவ நோக்கில் அசோக பிரா மிக்குப் பெரிய அளவில் ஒத்து வருவதால் கி.மு. - வுக்கு முன் னர் கொண்டுபோக வேண்டியிருக்கும். எனவே கல்வெட்டு களின் காலம் நிர்ணயிப்பது கடினமாக உள்ளது. அசோகன் பிராமியிலும் எழுத்துகளின் வடிவத்தில் அதிக மாற்றம் காணப் படுகிறது. தமிழ்க் கல்வெட்டுகள் தேதி குறிக்கப்படாததால் அவைகளின் காலத்தைச் சரியாக வரையறுக்க முடியவில்லை. எனவே இன்னும் பிராமி கல்வெட்டுகள் நிறைய கண்டுபிடிக்கப் பட்டால்தான் எழுத்தாக்கம் பற்றித் தெளிவான முடிவுக்கு வரமுடியும். இந்த நிலையில் இது ஒரு மாற்றுக் கொள்கை யாக முன்மொழியப்பட்டு, இன்று இருந்துவரும் கொள்கையில் உள்ள சிக்கல்கள் சுட்டிக்காட்டப்படுகின்றன என்பது அவர் முடிவுரை.

விமர்சனம்:

1) அவருடைய வரலாற்று ஆதாரங்கள், 2) எழுத்து வடி

வங்களுக்கு மூலம், 3) தமிழ் பிராமி எழுத்துகளில் மூன்றுவகை, 4) தமிழ்பிராமி, அசோகன் பிராமி ஆகியவற்றின் பண்புகள், 5) உயிரியல் கோட்பாட்டுப் பொருத்தம் ஆகியவை பற்றிய கருத்துகளைப் பார்ப்போம்.

1) இங்கு எழுத்து பற்றிய பிற சான்றுகளுக்கும் எழுத்து மொழி கிடைப்பதற்கும் உள்ள கால முரண்பாடு அடிப்படையாக உள்ளது. வடமொழியில் எழுத்து மொழி பற்றிய குறிப்புகள் கி.மு. ஆறு, ஏழாம் நூற்றாண்டுகளிலேயே உள்ளன. ஆனால் எழுத்துமொழி கிடைப்பது கி.மு. 3-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த அசோகன் பிராமியே. அசோகன் பிராமியின் காலத்தைத் தெளிவாக வரையறுக்கக் கூடிய சான்று இருப்பதால் அதன் காலம் கி.மு. 3 – ஆம் நூற்றாண்டு என்று எல்லோராலும் ஒத்துக்கொள்ளப்படுகிறது. ஆனால் தமிழ்க் கல்வெட்டுகளில் அப்படித்திட்டவட்டமாக வரையறுக்கும் சான்றுகள் கொண்டவை இல்லை. ஆதலால், நாம் நினைக்கிற காலத்துக்குத் தமிழ் பிராமி கல்வெட்டுகளைக் கொண்டுபோக முடியாது. எனவே மகாவம்சக் குறிப்பை மட்டும் தமிழ் பிராமியின் பழமையை நிர்ணயிக்கப் போதுமானதாகக் கருதமுடியாது.

2) நச்சினார்க்கினியர் கருத்தை எழுத்து பற்றிய அவருடைய கணிப்பாகவும் கருத்தாகவும்தான் கொள்ளவேண்டும். மேலும் எழுத்து ஓவியத்திலிருந்து உண்டாகியிருக்கவேண்டும் என்று எழுத்துகளின் தோற்றத்தை ஆராய்பவர்கள் கூறுவதால் கணித வடிவத்திலிருந்து தோன்றியிருக்க முடியாது.

3) தமிழ் பிராமி கல்வெட்டுகளில் எழுத்து வடிவங்களில் வேறுபாடு இருப்பதால் ஒன்றுக்கு மேற்பட்ட முறை இருப்பதாகக் கொள்ளலாம் என்று மகாதேவன் கூறிய கருத்தைக் கிஃப்ட் சிரோமணி தவிர கிருஷ்ணன் (1974:29; 1983:16) மகாலிங்கம் (1974:138) போன்றவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. பெரும்பான்மையான கல்வெட்டுகள் தமிழ்பிராமி II முறையில் உள்ளதால் தமிழ்பிராமி I - ஐக் கொஞ்சம் பிறழ்ந்ததாகக் கொள்ளவேண்டுமே அல்லாமல் தனிமுறையாகக் கொள்ள முடியாது. மேலும் சிறுபான்மையாக உள்ள கல்வெட்டுகளில்

காணப்படும் தமிழ் பிராமி I முறையே மிகப் பழமையானது என்று எப்படிக் கருதுவது என்ற சந்தேகமும் எழுகிறது.

தமிழ் பிராமி I முறை பழையமுறை, தமிழுக்காக அமைக்கப்பட்டமுறை என்றால் எழுத்தாக்க முறை பற்றிய சில சந்தேகங்கள் எழுகின்றன.

அ) இந்த முறையில் ஏன் கல்வெட்டுகள் குறைவாகக் காணப்படுகின்றன. ஆ) உயிர் எழுத்துகளில் குறில் எகர ஒகர வடிவங்கள் மட்டும் பிற குறில் எழுத்துகளைப் போல குறிலுக்குத் தனி வடிவம் அமைக்கப்பட்டு, நெடில் வடிவம் அதிலிருந்து துணைக் குறி சேர்த்து உண்டாக்கப்படாமல்; நெடிலுக்குத் தனி வடிவம் உண்டாக்கப்பட்டு அதில் துணைக்குறி சேர்த்து குறில் உண்டாக்கப்பட்டது ஏன்? இ) உயிர்மெய் வடிவங்களில் ஆகார உயிர்மெய் வடிவத்தை மட்டும் அகர உயிர் மெய்+அகர உயிர் என்று உண்டாக்கி, ஏனைய உயிர்மெய்களை மெய்+உயிர் எழுத்துக் குறிஎன்று உண்டாக்குவானேன்? அதாவது உயிர்மெய் வடிவத்தில் இரண்டு விதம் அமைப்பானேன்? மகாலிங்கம் (1974:140) உகர, ஊகார உயிர்மெய்கள் கூட மெய்+உயிர் எழுத்துக்குறி (கு=க்+உ) என்று எழுதப்பட்டுள்ளது என்று சுட்டிக் காட்டியுள்ளார். ஏன் இந்த முறை கையாளப்படுகிறது. ஈ) உயிர்மெய் எழுத்துகளில் குறில் எகர ஒகரங்கள் ஏன் வேறுபடுத்தப்படவில்லை. ஆகையால் தமிழ் மொழிக்கு என்று தமிழ் பிராமி I முறை அமைக்கப்படவில்லை என்பதையே புலப்படுத்துகின்றன. தமிழ் பிராமி I தமிழுக்கென்று அமைக்கப்பட்டிருந்தால் இந்த முரண்களும் குறைகளும் ஏற்பட்டிருக்க முடியாது. மேலும் தமிழ் பிராமி I இல் அகர உயிர் மெய்யும் ஆகார உயிர்மெய்யும் வேறுபடுத்தப்படும் முறையையும் கைவிட்டு தனிமெய்யும் அகர உயிர் மெய்யும் வேறுபடுத்தப்படாத தமிழ் பிராமி II முறையை ஏற்றுக் கொண்டால் பின்னேற்றமே ஆகும். ஏனெனில் தமிழில் தனிமெய்யும் அகர உயிர்மெய்யும் பல சொற்களை வேறுபடுத்தி அறிய உதவும். பல:பல்; காலன (காலை உடையன):. காலன்; வாழ: வாழ் போன்ற உதாரணங்கள் உள்ளன

பிறமொழி மோகத்தால் தங்கள் எழுத்து முறையை மாற்றிக் கொள்ள நினைத்தாலும் அந்த முறைக்குள்ளே தங்கள் மொழிக்கு ஏற்ற மாற்றத்தைச் செய்தே ஏற்றுக் கொள்வார்கள்; கண்ணை மூடிக்கொண்டு ஏற்றுக் கொள்ளமாட்டார்கள்.

பிராகிருத மொழியில் தனிமெய்யும் அகர உயிர்மெய்யும் சொற்களை வேறுபடுத்தி அறிய உதவுவது இல்லை. ஆனாலும் மகர மெய்யில் அந்த வேறுபாடு இருப்பதால் தனி மெய்க்கு ஒரு வடிவமும் அகர உயிர்மெய்க்கு வேறு வடிவமும் வைத்துக்கொண்டுள்ளார்கள்.

தமிழ் பிராமி III ஆன புள்ளி முறை தமிழ் பிராமி IIஇல் உள்ள குறைகள் நீக்கப்பட்ட முயற்சி. துரதிர்ஷ்ட வசமாக புள்ளிமுறை கல்வெட்டுகளில் ஒழுங்காகப் பின்பற்றப்படவில்லை என்றாலும் குறையை உணர்ந்து அதைப் போக்க வழி கண்டது பாராட்டத் தகுந்தது. மேலும் புள்ளியுள்ள கல்வெட்டுகள் கி.பி. 2–ஆம் நூற்றாண்டுக்குப் பிறகே கிடைக்கின்றன.

4) அசோகன் பிராமி தமிழ் பிராமியை விடத் தருக்க ரீதியாக அமையவில்லை என்பதை அவருடைய பார்வையே நிர்ணயித்துள்ளது. அசோகன் பிராமியில் தனி மெய்க்கும் அகர உயிர்மெய்க்கும் வேறுபாடு இல்லை என்னும்போது, ஏனைய உயிர்மெய்கள், சிரோமணி கருதுவது போல், அகர உயிர்மெய்யிலிருந்து அமைந்ததாகக் கருதாமல் தனிமெய்யிலிருந்து அமைந்ததாகக் கருதினால் முரண் ஏற்படாது. அசோகன் பிராமியில் உள்ளமுறை தமிழ் பிராமி II, III ஆகிய இரண்டிலும் கூட இருப்பதாகச் சொல்லமுடியும். எனவே, எழுத்து அமைப்புமுறையை நுண்மையாகப் பார்த்தால் தமிழ் பிராமி தமிழுக்காக முதலில் ஏற்பட்ட எழுத்து முறை என்று கொள்ள முடியாது.

5) உயிரியல் மாற்றம் இயற்கை பரிணாமத்தால் ஏற்படுவது; எழுத்துமுறை ஒரு நோக்கம் உடையது; மனிதன் மாற்றிக் கொள்வது. எழுத்தாக்கத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட முறை காணப்படுவது சோதனை முயற்சிகள்; கொஞ்ச காலத்துக்குப் பிறகுஒரு முறை எப்பொழுதும் பின்பற்றப்படும். எனவே

உயிரியல் கோட்பாட்டை எழுத்தாக்கத்தில் பொருத்திப் பார்க்கமுடியாது.

2.2.4. பொதுவும் சிறப்பும்

இது கிருஷ்ணனின் (1974, 1983) கருத்து. 1) அசோகன் பிராமியை விடத் தமிழ்பிராமி காலத்தால் முந்தியது.

அ) அசோகன் பிராமிக் கல்வெட்டுகளில் சோழ பாண்டிய கேரள (சேர) மன்னர்களைத் தன்னுடைய தரும நெறியைப் பரப்பும்படி அசோகன் விண்ணப்பித்துள்ளான். இதனால் அசோகன் தமிழக மூவேந்தர்களும் எந்த மொழியில் (பிராகிருதம்), எந்த எழுத்தில் (பிராமி) கூறினாலும் அறிந்து கொள்ளும் அளவுக்கு நாகரிகம் அடைந்தவர்கள் என்று கருதினான் என்பது புலப்படும். அப்படிப்பட்ட நாகரிகம் உடையவர்கள் பிற மொழிக்கு உரிய எழுத்தைக் கடனாள மாட்டார்கள்.

ஆ) தமிழ் பிராமிக் கல்வெட்டுகள் சமணத் துறவிகளோடும் அசோகன் பிராமிக்கல்வெட்டுகள் பவுத்தமதத் தோடும் தொடர்புடையவை. ஆகவே தமிழ்பிராமிக் கல்வெட்டுகள் பவுத்தமதம் தமிழகத்துக்கு வருவதற்கு முன்னரே எழுதப் பட்டிருக்க வேண்டும்.

இ) பட்டிப்ரோலு கல்வெட்டிலும், மாங்குளம் கல்வெட்டிலும் அகர ஆகார உயிர்மெய் எழுத்துகளை எழுத்தாக்கத்தின் சோதனை முயற்சியாகக் கருத வேண்டியுள்ளது. அசோகன் பிராமி போன்ற நல்லமுறை அவர்களுக்குத் தெரிந்திருந்தால் அப்படிப்பட்ட முயற்சிகளை மேற்கொண்டிருக்க மாட்டார்கள். அதாவது பட்டிப்ரோலு, மாங்குளம் கல்வெட்டுகள் அசோகன் பிராமிக்கு முந்தியவை என்பது 1983 - ஆம் ஆண்டு கட்டுரையின் கருத்து

2. எழுத்தாக்க முறை:

அ) தமிழ் பிராமிக் கல்வெட்டுகளில் வர்க்க எழுத்துகள் இல்லாவிட்டாலும் ஸ, (Š), dh ஆகியஒலிகளுக்கு உரிய எழுத்துகள் சில கல்வெட்டுகளில் காணப்பட்டு, அவையும் பிற்காலத்தில் நீக்கப்பட்டதால் தமிழ் நெடுங்கணக்கில் இல்லாதஎழுத்துகளைத் தவிர்க்கும் முயற்சி மேற்கொள்ளப் பட்டிருக்க வேண்டும். இந்த முயற்சிக்கு ஆதரவாகவே

தொல்காப்பிய சொல்லதிகார 401-ஆம் (வடசொல் வடவெழுத்து ஒரீஇ) சூத்திரம் அமைந்துள்ளது. எனவே தமிழ் மொழி எழுத்தாக்கத்தில் தமிழ் நெடுங்கணக்கில் இல்லாத எழுத்துகளை நீக்கும் முயற்சி தொல்காப்பியர் காலத்துக்கு முன்னரே ஆரம்பித்திருக்க வேண்டும்.

ஆ) மகர மெய்யின் வடிவத்தில் அசோகன் பிராமிக்கும் தமிழ் பிராமிக்கும் இடையே காணப்படும் வித்தியாசமே இரண்டும் தனித்தனி மூலத்திலிருந்து தோன்றியிருக்க வேண்டும் அதாவது ஒன்றிலிருந்து மற்றொன்று தோன்றியிருக்க முடியாது என்பதைப் புலப்படுத்துகிறது.

இ) வேறுஒரு மூலத்திலிருந்து அப்படிஉருவாக்கும் போதே தமிழின் சிறப்பு எழுத்துகளான ன,ழ,ள ஆகியவயைம் உருப் பெற்றிருக்க முடியும்.

ஈ.) அசோகன் பிராமியிலுள்ள 15 வர்க்க (வல்லின) எழுத்துகள், ஸகரங்கள் (s,ṣ,ś), ஹ ஆகியவையும் தமிழ் பிராமியில் நான்கு எழுத்துகளும் (ழ,ள,ற,ன) அந்தந்த மொழிக்காக உண்டாக்கப்பட்டவை. அசோகன் பிராமியின் வர்க்க எழுத்துகள், அவற்றின் முதலெழுத்துகளிலிருந்து அமைந்ததாகக் கொள்ள முடியாது. பூலர் செய்த முயற்சி அவற்றின் ஒலியியல் தன்மையை அறியாமல் செய்ததாகும். தமிழ் பிராமியில் ழ,ற ஆகிய இரண்டு எழுத்துகளுக்குரிய வடிவங்களும் அவை பிறக்கும் இடத்தில் உண்டாகும் பிற எழுத்துகளிலிருந்து தோன்றியதாகக் கருத முடியாது. எனவே அவை வேறு ஒரு மூலத்திலிருந்து கடனாளப்பட்டிருக்க வேண்டும்.

உ) குறில் எகர, ஒகரத்திலும் தனிமெய்க்கும் புள்ளி வைத்ததும் மாத்திரை குறுக்கத்தைக் காட்டுவதற்காக அமைக்கப்பட்ட ஒரு முறையே அல்லாமல் அசோகன் பிராமியின் தழுவல் முறை அல்ல. ஏனெனில் தனிமெய்யும் அகர உயிர்மெய்யும் பல கல்வெட்டுகளில் வேறுபடுத்தப்படவில்லை; மொழி அறிவைக் கொண்டே நாம் வித்தியாசப்படுத்த வேண்டியுள்ளது. எனவே கல்வெட்டுகளில் புள்ளி இல்லாமல் இருப்பது தமிழில் முதலில் எழுத்தாக்கம் செய்தபோது புள்ளி அமைக்கவில்லை என்று பொருள் அல்ல.

விமர்சனம்:

1. அ) எந்த மொழியில் எந்த வரிவடிவத்தில் எழுதினாலும் தமிழ் மன்னர்கள் படித்து அறிந்து கொள்ளும் நாகரிகம் பெற்றவர்கள் என்று அசோகன் கருதினால் பிராகிருத மொழியும் பிராமி வரிவடிவமும் தமிழர்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும் என்று பொருள் ஆகும். அப்படியானால் அவர்கள் பிராகிருதம் எப்படிப் படித்தார்கள்? ஏன் படித்தார்கள்? என்று கேள்விகள் எழுகின்றன. மேலும், நாகரிகவளர்ச்சிக்கும் எழுத்தாக்கத்துக்கும் தொடர்பு இல்லை. எனவே இந்தக் காரணம் வலுவானதல்ல.

ஆ) அசோகன் பிராமியையும் தமிழ் பிராமியையும் பயன்படுத்தியவர்கள் வேறு வேறு சமயத்தைச் சேர்ந்தவர்கள் என்பதால் தமிழ்பிராமி கல்வெட்டுகள் காலத்தால் முந்தியது என்பது பொருந்தாது. ஏனென்றால் பவுத்தர்களுக்கும் சமணர்களுக்கும் சமயச் சண்டை எதுவும் அந்தக்காலத்தில் காணப்படாததால் பவுத்தர்களிடமிருந்து எழுத்தைச் சமணர்கள் கற்றுக்கொண்டு, பிறமொழிக்கு வரிவடிவம் கொடுத்தார்கள் என்பதில் வரலாற்று முரண் ஏற்பட்டுவிடாது.

2. எழுத்து எப்பொழுதும் மொழியோடு இரண்டறக் கலந்தது; பிரிக்கமுடியாதது. எனவே பொதுவான எழுத்துகள் இந்தியா முழுமைக்கும் பொது என்றால் அந்த எழுத்துகளை மட்டும் கொண்ட ஒரு மொழி இந்தியாவில் இருந்து அந்த மொழி பொது மொழியாக வழங்கியது என்றால்தான் பொது எழுத்து என்ற கொள்கையை ஏற்றுக்கொள்ள முடியும். அப்படி எதுவும் இல்லாததால் பிராமி எழுத்துகள் அடிப்படையாகத் தமிழுக்கு அமைக்கப்பட்டதாகவோ அல்லது பிராகிருத மொழிக்கு அமைக்கப்பட்டதாகவோ தான் இருக்க முடியும். இந்த இரண்டு வாய்ப்புகளில் ஒன்றான தமிழுக்கு அமைக்கப்பட்டதாக இருக்க வாய்ப்பு இல்லை என்பதற்கு மேலே சில காரணங்கள் காட்டப்பட்டன.

தமிழ் மொழி அமைப்புக்குத் தேவை இல்லாத எழுத்துகள் தமிழ் பிராமி கல்வெட்டுகளில் இருப்பதே எழுத்துகளைக் கடனாண்டதற்கு இன்னொரு சான்றாக அமையும். காலம் செல்லச் செல்ல அந்த எழுத்துகள் நீக்கப்பட்டது என்பது-எழுத்தாக்

கம் என்பது எப்பொழுதும் ஒரே சமயத்தில் முடிந்த முடிபாகச் செய்யப்படுவதில்லை என்ற உண்மையைப் புலப்படுத்துகிறது. சமீப காலங்களில் எழுத்தாக்கம் செய்யப்பட்ட மொழிகளில் கூட இந்த உண்மையைத் தெளிவாக அறிய முடிகிறது. உதாரணமாக இந்தோனேஷியமொழி ரோமன் எழுத்தைத் தழுவிய போது ஆறு தடவை மாற்றி அமைத்த பிறகே இறுதியாக ஒரு முறை நிலையாக்கம் பெற்றது (முழு விவரத்துக்குச் சண்முகம், 1979 பார்க்கவும்)

ஒரு மொழி எழுத்தை மற்றொரு எழுத்துத் தழுவிக் கொள்ளும்போது மூல மொழியின் வரிவடிவத்தை மட்டும் அல்லாமல் எழுத்தாக்கம் செய்யப்படும் மொழியில் காணப் படும் சில வடிவங்களைச் சேர்த்தும், சிலவடிவங்களை மாற்றியும் எழுத்தாக்கம் செய்து கொள்ளும். முறை பலமொழிகளில் காணப்படுகிறது அப்பொழுதுதான் அந்தமொழிக்காகத் தனியே எழுத்தாக்கம் செய்யப்பட்டது என்ற எண்ணம் ஏற்பட்டுச் சுயக வுரவம் போற்றப்படும்(சண்முகம் 1985: 43).மேலும் கிருஷ்ணன் கருத்துப்படியே அசோகன் பிராமியில் காணப்படும் சிறப்பு எழுத்துகள் (வர்க்க எழுத்துகள், ஸகரங்கள் போன்றவை) பொது வடிவங்களிலிருந்து உண்டானவை அல்ல என்பது தமிழ்பிராமியிலிருந்து அசோகன் பிராமி உண்டாகவில்லை என்ற கருத்தை மறைமுகமாகத் தெரிவிக்கிறது. அதே சமயத்தில் தமிழ்பிராமியின் சில வடிவங்கள் பொது வடிவங்களிலிருந்து தழுவிக் கொள்ளப்பட்டவை என்பது அசோகன் பிராமியிலிருந்து தமிழ் பிராமி தழுவிக் கொண்டது என்ற உண்மையை ஒத்துக் கொள்வதாக அமைந்துவிடுகிறது. ற,ழ ஆகிய எழுத்துகளுக்கு மூலம் அசோகன் பிராமியே என்ற கருத்து பல கல்வெட்டு அறிஞர்களிடம் காணப்படுகிறது. றகரத்தின் வடிவம் தகர எழுத்தும் டகர எழுத்தும் சேர்ந்த வடிவம் என்று மீனாட்சி சுந்தரனாரும் (1965அ: 41) நாகசாமியும் (1979:74) டகரத்தின் திருத்தப்பட்ட வடிவம் என்று மகாதேவனும் (1968: 39) மகாலிங்கமும் (1974: 137) விளக்கியுள்ளார்கள். ழகரத்தைப் பொறுத்த வரையில் தமிழுக்காக வேண்டாத ḍa என்ற ஒலிக்குரிய வடிவத்தின் தழுவல் என்று மகாதேவனும் (1968),டகர வர்க்கத்தின் இரண்டாவது எழுத்தும் (ṭh), மூன்

றாவது எழுத்தும், (d) சேர்ந்த வடிவம், அல்லது அவை மேலும் கீழும் சேர்த்து எழுதப்பட்ட வடிவம் என்று நாகசாமியும் (1979: 75) கூறியுள்ளார்கள். இல்லாவிட்டால் தமிழகத்தில் அன்று வழக்கில் இருந்த குறிகளிலிருந்து எடுத்துக்கொள்ளப் பட்டதாகவும் கொள்ளலாம். எனவே தமிழ் பிராமியிலுள்ள சிறப்பு எழுத்துகள் வேறொரு மூலத்திலிருந்து கடனாளப்பட் டது என்ற கருத்து பொருந்தாது.

இலக்கண அடிப்படையில் எழுத்தாக்கம் நடைபெற்ற கிருஷ்ணனின் வாதம் பிராமி எழுத்துகள் வடமொழி இலக்கண நூல்களை ஒட்டி அமைக்கப்பட்டவை என்ற கோயல் (Goyal 1979) கருத்தின் தழுவலாகும். வடமொழியில் அசோகன் பிராமிக்கு முற்பட்ட காலத்தைச் சார்ந்ததாகப் பாணினியின் இலக்கணமும் பிற வடமொழி இலக்கணமும் கருதப்படுகின்றன. தமிழில், தொல்காப்பியம் கூறிய வரிவடிவம் பற்றிய செய்தி களே தமிழ் எழுத்து பிறமொழியிலிருந்து தழுவிக்கொள்ளப்பட் டது என்ற கருத்தைப் புலப்படுத்துவதால், எழுத்தாக்கத்துக்குப் பிறகே இலக்கணம் ஏற்பட்டிருக்க வேண்டும் என்று நினைக்க வேண்டியிருக்கிறது.

மகர வடிவத்தில் மட்டும் அல்லாமல் யகரம், ஐகாரம், இகர, ஈகாரம் ஆகியவற்றிலும் அசோகன் பிராமிக்கும் தமிழ் பிராமிக்கும் உள்ள வேறுபாடுகளைத் தமிழ் மொழிக்குக் கடனாண்டு எழுத்தாக்கம் செய்தவர்கள் தமிழ் எழுத்துகளின் தனித்தன்மையை நிலை நாட்ட முயன்றதன் வெளிப் பாடாகவே கருதலாம். ஆகவே கிருஷ்ணன் கருத்தான பொது வடிவங்கள் இந்தியா முழுமைக்கும் பொதுவானவை; சிறப்பு வடிவங்கள் அந்தந்த மொழியின் இலக்கணப்படி வேறு ஒரு மூலத்திலிருந்து கடனாண்டு இருக்கலாம் என்ற கருத்துகள் ஏற்றுக் கொள்ளத் தகுந்தவையாய் இல்லை.

### 2.2.5 அசோகன் பிராமி

கல்வெட்டு ஆய்வாளர்களான மகாதேவன் (1968), நாக சாமி (1979) போன்றவர்களும், மொழியியல் அறிஞர்களான மீனாட்சிசுந்தரனாரும் (1965 அ) வரலாற்று அறிஞர்களான

மகாலிங்கம் (1974:141) போன்றவர்களும் அசோகன் பிராமி யின் தழுவல் என்ற கருத்து உடையவர்கள். எனவே அசோகன் பிராமியின் வரிவடிவங்களை ஏற்றுக் கொண்ட போதும் தமிழ் மொழி ஒலியன் அமைப்புக்கு ஏற்பச் செய்து கொண்ட மாற்ற மும், அங்கு அவர்கள் செய்த சோதனை முயற்சியும் சிறப் பாகக் கவனிக்கத் தகுந்தவை: iஅ) தேவையான வடி வங்களை ஏற்றுக்கொண்டபோதும், iஆ) அங்குச் சில மாற்றங் கள் செய்து கொண்டது, ii அ) பெரும் பான்மையான தேவை யற்ற வடிவங்களை ஒதுக்கிய அதே சமயத்தில் ii ஆ) பயன் படுத்திய ஒன்றிரண்டு தேவையற்ற வடிவங்களைப் பிற்காலத் தில் நீக்கியது, iii) பிராகிருத மொழியில் இல்லாமல் தமிழில் இருக்கிற ஒலியன்களுக்கு அவைகளின் ஒலித்தொடர்பு உடைய எழுத்துகளிலிருந்தும் பிற எழுத்துகளிலிருந்தும் வரி வடிவம் அமைத்துக்கொண்டது ஆகிய மூன்றும் முக்கிய மானவை.

1) அ,ஆ,இ,ஈ,உ,ஊ,ஏ,ஓ,ஐ ஆகிய உயிர்க்குரிய வடிவங்களும் அவைகளுக்குத் துணை வடிவங்களும் க,(ங),ச,ஞ,ட,ண,த,ந,ப, ம,ய,ர,ல,வ ஆகிய மெய்யெழுத்துகளுக்குரிய வடிவங்களும் அப்படியே ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளன. அதே சமயத்தில் அந்த வடிவங்களிலும் சில மாற்றங்கள் செய்து கொள்ளப் பட்டுள்ளன. பொது எழுத்துகளில் ஏற்பட்ட மாற்றங்களா வன:

அ) <.|.> என்ற குறி வடபிராமியில் கிறித்துவ சகாப் தத்துக்குப் பிறகே காணப்படுகிறது. ஆனாலும் க்ஷத்ரபர், சாத வாகனர், குப்தர் ஆகியோரின் கல்வெட்டுகளில் ஈகார ஒலி யைக் குறிப்பதாக அமைந்துள்ளது. எட்டாம் நூற்றாண்டில் கிடைக்கும் தமிழ்க் கல்வெட்டுகளில் ஈகார ஒலி மதிப்புடன் அமைந்துள்ளது. ஆனால் தமிழ் பிராமி கல்வெட்டுகளிலும் இலங்கையில் சிங்களமொழிக் கல்வெட்டுகளிலும் இகர ஒலி மதிப்புடன் அமைந்துள்ளது.

ஆ) அசோகன் பிராமியில் இகரம் < ∴ > என்றும் ஈகாரம் < ·:· > என்றும் எழுதப்படும். ஆனால் தமிழ் பிராமியில்

சதுர வடிவமாக < :: > எழுதப்பட்டு இகரத்தின் மதிப் புடையதாகக் கருதப்படுகிறது. இதனைச் சுப்பிரமணிய ஐயர் தொல்காப்பியச் சூத்திரத்தை ஒட்டிப் புள்ளி வைத்து மாத் திரை குறுக்கத்தைக் குறிக்கக் கையாண்டிருக்கலாம் என்பார். தமிழ் பிராமியில் ஈகாரத்தைக் குறிக்கும் ./. என்ற வடிவம் ஈகாரத்தில் :: செங்குத்துப் புள்ளியை இணைத்து உண்டாக் கியதாக இருக்க வேண்டும். இ) ஐகார வடிவம் அசோகன் பிராமியில் ஏகார வடிவத்தில் (அதாவது படுக்கைவாட்டில் அமைந்த முக்கோண வடிவத்தில்) ஏகாரத்துக்குரிய துணைக் குறி போன்ற நேர்க்கோட்டை இடது பக்கமாகச் சேர்த்து எழுதுவதால் உண்டாக்கப்படும். ஆனால் தமிழ் பிராமியில் ஐகாரம் திரிசூலம் போன்று அமைந்துள்ளது. இது யகரமெய் வடிவத்தோடு தொடர்பு உடையதாக உள்ளது.

ஈ) மகரத்தின் வடிவத்தில் மாற்றம்

உ) உயிர்மெய்களைப் பொறுத்தவரையில் அசோகன் பிராமியில் ஆகார உயிர்மெய்யைக் குறிக்க தனிமெய்யுடன் வலது பக்கத்தில் படுக்கைக் கோடு எழுதப்படுவது தமிழ் பிராமி யில் அகர உயிர்மெய்யாகப் பெரும்பான்மையாகப் பயன் படுத்திச் சிறுபான்மையாக ஆகார உயிர்மெய்யைக் குறிக்க இன்னொரு படுக்கைக் கோடு சேர்க்கப்பட்டுள்ளது. ஏனைய இடங்களில் ஆகார உயிர்மெய் இன்னொரு அகரத்தைச் சேர்த்து எழுதிக் குறிக்கப்பட்டுள்ளது. வேறு சில உயிர்மெய் களும் இதே முறையில் மெய்வடிவமும் உயிர் வடிவமும் (கஇ- கி) சேர்த்து எழுதப்பட்டுள்ளன. இருந்தாலும், மகாலிங்கம் (1974:141) கருத்துப்படி அசோகன் பிராமி முறையே பெரும் பாலும் தமிழ் பிராமியில் பின்பற்றப்பட்டுள்ளது. இவர்கள் இதற்கான காரணத்தைக் கூறவில்லை ஆனால் உலகமொழி களில் நடந்த எழுத்தாக்க முறைகளைப் பார்க்கும்போது இவைகள் அசோகன் பிராமியைக் கடனாண்ட போதும் சில தனித்துவ முறை புகுத்த முயற்சித்ததன் விளைவாக இருக்க லாமோ என்று நாம் காரணம் கூறலாம் என்று எண்ண வேண்டியிருக்கிறது.

2) dh,s போன்ற தமிழ்மொழிக்குத் தேவையற்ற எழுத்து களைப் பிறமொழிச் சொற்களை எழுதுவதற்காக முதலில் பயன்படுத்தினாலும் போகப்போக அவைகளைக் கைவிட்டுத் தமிழ் மொழி அமைப்பை ஒட்டி எழுத்துகளைக் கையாண்டது எழுத்தாக்கம் ஒரே சமயத்தில் முற்றுப்பெறுவதில்லை என்ற உண்மையின் பிரதிபலிப்பாகும்.

3) பிராகிருத மொழியில் இல்லாத ஒலியன்களுக்குரிய வரி வடிவங்களை அசோகன் பிராமியின் ஒத்த ஒலி மதிப்புடைய வடிவங்களுலிருந்து தழுவிக் கொள்வது, தமிழ் மொழி ஒலியன் அமைப்பை உணர்ந்ததைப் புலப்படுத்துகிறது. இங்கு மெய் யெழுத்துகளைப் பொறுத்தவரையில் தமிழ் மொழிஅமைப்புக்கு ஏற்ற முறையில் புதிய நான்கு வடிவங்கள் அமைத்துக் கொள் ளப் பட்டுள்ளன. ஆனால் உயிரெழுத்திலும் தனிமெய்யெழுத்தி லும் தடுமாற்றம் காணப்படுகிறது. இதுவும் ஒரே சமயத்தில் எழுத்தாக்கம் நிலைபேறு அடையாது என்ற உண்மையை ஒட்டி யது ஆகுமோ? எழுத்துமொழி முழுமையும் பேச்சுமொழியை பிரதிபலிப்பதில்லை என்பதை நிரூபிப்பது போலத் தமிழிலும் அசோகன் பிராமியைத் தழுவினாலும் மொழி அமைப்பு நோக்கில் எழுத்தாக்கம் முழுமையாக அமைக்கப்படவில்லை.

தமிழில் அ,இ, உ உயிர்களில் குறில் நெடில் இருப்பது போலவே எகர, ஒகரங்களிலும் குறில் நெடில் வேறுபாடு தொல் திராவிட காலத்திலிருந்தே தொடர்ந்து வந்துள்ளது. அதா வது தொல் திராவிடத்திலேயே எகரமும் ஏகாரமும், அது போலவே ஒகரமும் ஓகாரமும் வேற்று நிலை வழக்கில் வந்த தனி ஒலியன்களாக உள்ளன.

சங்கத் தமிழிலும், தொல்காப்பியத்திலும் இந்த இரண்டு உயிர்களும் குறில் நெடில் வேறுபாடு உடையனவாய் இருந்த தற்குப் பல சான்றுகள் உண்டு. அப்படியிருக்கும் போது தமிழ் பிராமியில் இந்த வேறுபாடு சரியாக எழுத்தாக்கம் செய்யப் படவில்லை. ஒரு சில கல்வெட்டுகளில் மட்டுமே குறில் ஒலிகள் நெடில் வடிவத்தின்மேல் புள்ளிவைத்து வித்தியாசப் படுத்தப்பட்டுள்ளன. எகரத்தை உடையது அரச்சலூர் கல்

வெட்டு. அதில் முதல் எழுத்தே எகரம். இது ஏகாரமாக மகா தேவனும் (1968) சித்தம் என்ற சொல்லைக் குறிக்கும் அடை யாளமாக மகாலிங்கமும் (1974; 290), மத்திய அரசு கல்வெட் டுத் துறையினரும் அதையொட்டி நாகசாமியும் (1972;77 எகரம் என்று படித்துள்ளார்கள். பிள்ளையார்பட்டி கல்வெட்டில் (ஆறாம் நூற்றாண்டு) எருக்காட்டூர் என்ற சொல்லில் எகரம் உள்ளது. இது தொன்மையான வட்டெழுத்து வடிவில் பொறிக் கப்பட்டுள்ளதாக நாகசாமி குறிப்பிட்டுள்ளார். (1972:79) மகாதேவனும் எகர வடிவத்தை ஒத்துக் கொண்டுள்ளார்.

1) எகர, ஒகரங்களின் குறில் வடிவங்கள் வேறுபாடு செய் யாதது,

2) உயிர்மெய்களில் அகர, ஆகார வேறுபாடு செய்யாதது,

3) தமிழ்மொழி அமைப்புக்குத் தேவையான எழுத்துக் களைத் தழுவிப் பயன்படுத்தியது,

4) தமிழுக்குத் தேவையில்லாத பெரும்பான்மையான எழுத்துகளை நீக்கியது ஆகிய நான்கு முக்கிய காரணங்க ளோடு

5) அசோகன் பிராமி எழுத்துக்கும் தமிழ் பிராமி எழுத்துக் கும் வடிவ ஒற்றுமை இருப்பதுமே தமிழ் பிராமி எழுத்துகள் அசோகன் பிராமியின் தழுவல் என்று முடிவு செய்ய வேண்டிய நிலையை ஏற்படுத்துகிறது.

### 1.3. சமூக நோக்கம்

எழுத்தாக்கம் செய்யவேண்டிய வரலாற்று, சமூக, பண் பாட்டுச் சூழல் என்ன என்பதையும் சமுதாய மொழியியல் நோக்கில் எழுத்தாக்கத்தை ஆராயும் போது பார்க்க வேண் டும்.

பொதுவாக அரசன் தன் ஆணைகளுக்காகவும் மதத் தலைவர்கள்சடங்குகளுக்காகவும் வணிகர்கள் தங்கள் வர்த்தகக் கணக்குகளுக்காகவும் எழுத்து மொழி ஆதிகாலத்தில் பயன்படுத் தப்பட்டது (Sampson 1985:48).மெசபட்டோமியாவில் வர்த்தக

கணக்கைக் குறிக்கும் வகையாக சுமேரிய மொழிச் சான்று களும் அரசன் ஆணைகளாக எகிப்திய மொழியிலும் சமயத் தொடர்பாகச் சீன மொழியிலும் பழைய எழுத்துச் சான்றுகள் அமைந்துள்ளன. அசோகன் பிராமி கல்வெட்டுகள் அரசு ஆணைகளாகப் பெரும்பான்மையாக அமைந்தாலும் சிறு பான்மை பவுத்த தர்ம நோக்கத்தைப் பரப்பவும் பயன்படுத்தப் பட்டன.[3] (Gupta, 1979:xxii)

எழுத்து மொழி மிகப் பழைய காலத்தில் மிகச் சாதாரண காரியங்களுக்கே பயன்படுத்தப்பட்டது. அறிவில் சிறந்தவர் களாகக் கருதப்படும் கிரேக்கர் எழுத்துமொழி உண்டான முதல் 400 ஆண்டு காலம் சாதாரண விஷயங்களைத் தெரிவிப் பதற்கே எழுத்து மொழியைப் பயன்படுத்தியுள்ளார்கள். பின் னரே இலக்கியத்துக்கும் தத்துவத்துக்கும் பயன்படுத்திக் கொண் டார்கள்.

இந்த நிலையில் தமிழ் பிராமிக் கல்வெட்டுகளில் பெரும் பான்மையும் சமணத்துறவிகளுக்கு அளித்த கொடை – கல் தரையைச் சமப்படுத்தி வழவழப்புள்ள படுக்கையாகச் செதுக்கி கொடுத்த செய்திகளே எழுதப்பட்டுள்ளன. (நாகசாமி 1972:13, மகாலிங்கம் 1974:131, 157, வேங்கடசாமி 1981:21) இங்கு சமயமும் அரசு தொடர்பும் புலப்படுகின்றன.

## 2.4. பரவல்

### 2.4.1. வட்டாரநிலையில்

தமிழ் பிராமி கல்வெட்டுகள் பெரும்பான்மையும் இன்று சுலபமாக அணுகமுடியாத பாறையில், இயற்கையான குகைகளில் காணப்படுகின்றன. எனவே, அன்று சாதாரண மக் கள் இந்த எழுத்துகளைப் பற்றி அறிந்திருப்பார்களா என்பது சந்தேகமே. எனவே, எழுத்தாக்கம் முதலில் தனிமனித முயற்சி யாக அமைந்ததால் மொழியைப் பொறுத்த வரையில் பல குறைகள் காணப்படுகின்றன. அதனால்தான் செம்மை யடைந்த எழுத்து மொழி அமையவில்லை.

எழுத்துமொழி பரவியது பற்றியும் இங்குக் குறிப்பிடவேண்

டும். இந்த உண்மையைத் தமிழ் பிராமிக் கல்வெட்டுகளின் பகிர்வே (distribution) ஓரளவு உணர்த்துகிறது.

பெரும்பான்மையான கல்வெட்டுகள் பாண்டி நாட்டிலும் சிறுபான்மையான கல்வெட்டுகள் வடபகுதியிலும் (காஞ்சிபுரம்), கிழக்குப் பகுதியிலும் (அரிக்கமேடு), மேற்குப் பகுதியிலும் (கரூர், ஈரோடு) கிடைக்கின்றன. எனவே பாண்டிய நாட்டில் எழுத்தாக்கம் செய்யப்பட்டுத் தொண்டை நாடு, சேரநாடு, சோழநாடு ஆகிய நாடுகளுக்குப் பரவியதை இவை காட்டுகின்றன.

## 2.4.2. பயன்பாட்டு நிலையில்

வட்டார நிலையில் மட்டும் அல்லாமல் பயன்பாட்டு நிலையிலும் எழுத்துமொழி சங்ககாலத் தமிழகத்தில் பரவியதை இலக்கியங்கள் புலப்படுத்துவதும் அறியத் தகுந்தது.

நடுகற்கள் மூலம் பொதுமக்கள் பார்வைக்குச் சில செய்திகளும், ஓலைமூலம் ஒருவர் மற்றொருவருடன் கருத்துப் பரிமாற்றிக் கொள்ளும் செய்தியும் சங்க இலக்கியங்கள் தெரிவிக்கின்றன. எல்லாவற்றுக்கும் மேலாக எழுத்து இலக்கியம் உருப்பெற்றது எழுத்தாக்கத்தின் மிகப்பெரிய பயன்பாடு ஆகும்.

### 2.4.2.1. நடுகல்

சங்க இலக்கியங்கள் நடுகற்கள் தெருவெங்கும் வழிநெடுகிலும் நடப்பட்டதைக் குறிப்பதன் மூலம் போரில் இறந்த வீரர்களின் பெயரும் புகழ்ச் செய்திகளும் ஆன வரலாற்றுச் செய்திகளும், எழுது கருவி, எழுத்துப் பயன்பாடு ஆகிய செய்திகளும் கூட அறிந்து கொள்ள முடிகின்றன. மேலும் நடுகல் பொதுமக்கள் பார்வையில் அமைக்கப்பட்டதால் எழுத்து மொழி ஓரளவு பரவலாக்கப்பட்ட உண்மையும் புலனாகிறது.

நடுகற்கள் போரில் இறந்த வீரர்களுக்காக அமைக்கப் பட்டது என்பதை ஐங்குறுநூறு(352.1,2) மலைபடுகடாம்(387,8) அடிகள் உணர்த்துகின்றன. அந்தக் கல்லில் இறந்த வீரர்களின்

பெயரும், புகழ்ச் செயல்களும் எழுதப்பட்டு. அவை செல்லும் வழிதோறும் நடப்பட்டன என்பதைப் புறநானூறு (264.3,4) அகநானூறு. (131. 9-11, மலைபடுகடாம். 385-9) ஆகியவை தெளிவுபடுத்துகின்றன.

நடுகல்லில் எழுதப்பட்ட எழுத்துகளைப் பொதுமக்கள் படித்துப் பார்க்கும் வழக்கம் உடையவர்கள் என்றும் கல்லாத வர்கள் செய்யும் செயலால் அந்த எழுத்துகளைப் படிக்க முடியாமல் தடுமாறுவதையும் கூட அகநானூறு (343.481) குறிப்பிடுகிறது.மேலும் நடுகல்லில் உளியால் எழுத்துச்செதுக்கப்படுவதையும் ஒரு கல்லில் எழுதப்பட்ட எழுத்துகள் வண்டியின் பூண் பட்டுச் சிதைந்து எழுத்துக் கோடுகள் மறைந்து விடுவதால் வேறு பொருள் உடையனவாய்த் தோன்றுவதையும் அந்தப் பாடல் குறிப்பிடுகிறது.

இன்னுமொரு அகநானூற்றுப் பாடலில் (297:-610) கல்லாதவர்கள் தங்கள் அம்புகளைக் கூர்மைபடுத்துவதற்காக நடுகல்லில் தேய்ப்பதனால் ஒரு கல்லில் எழுத்துகள் மறைந்து போய்விடுவதையும் அதனால் வழிப்போக்கர்கள் எழுத்துகளை ஒன்று சேர்த்துப் படித்துப் புரிந்துகொள்ள முடியாமல் விட்டு போய்விடுவதையும் சுட்டுகின்றன.

**2.4.2.2.** ஓலை

ஓலைகளைப் பார்ப்பனர்கள் ஓரிடத்திலிருந்து இன்னொரு இடத்துக்கு எடுத்துச் செல்வதை அகநானூற்று அடிகள் (237: 5-7) குறிப்பிடுகின்றன. இதனால் ஓலையில் எழுதிய எழுத்து மூலம் இருவருக்கிடையே கருத்துப் பரிமாற்றம் நடைபெற்றதை அறியலாம்.

இந்த இடத்தில் சிலப்பதிகாரத்தில் மாதவி எழுதிய கடிதங்கள் மூலம் எழுதுகோல், எழுதுபொருள் ஆகியவை பற்றியும் தெளிவாகக் கூறப்பட்டிருப்பது குறிப்பிடத்தகுந்தது.

எழுத்துமொழி இன்னும் இரண்டு வகையில் பயன்பட்டுள்ளது. அவற்றைப் புதை பொருள் ஆராய்ச்சி தெரிவிக்கிறது.

### 2.4.2.3. பானை

புதைபொருள் ஆராய்ச்சியின் மூலம் பானைகளில் தமிழ் பிராமி எழுத்து எழுதப்பட்டுள்ளதையும் அறியமுடிகிறது (மகாலிங்கம், 1974:319). ஆனால், இப்பொழுது நமக்குக் கிடைப்பவை பானை ஓடுகளே. அவைகளின் முழுவாசகமும் அறிந்துகொள்ள முடியாததால் அங்கு எழுத்துமொழி எதற்காகப் பயன்படுத்தப்பட்டது என்று தெரிந்து கொள்ள முடியவில்லை.

### 2.4.2.4. காசு

காசுகளில்—அதாவது நாணயங்களில் எழுத்து பொறிக்கப்பட்டிருப்பதையும் புதைபொருள் ஆராய்ச்சியே வெளிப்படுத்தியது. சங்ககாலப் பாண்டிய மன்னர்களில் பெருவழுதி என்ற மன்னன் வெளியிட்ட எழுத்து பொறிக்கப்பட்ட காசுகள் தமிழகத்தில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன (கிருஷ்ணமூர்த்தி. 1987:16) இவைகளில் தமிழ் பிராமி எழுத்துகளே உள்ளன.

யவனர்கள் தொடர்பு ஏற்பட்ட பிறகே நாணயங்களில் எழுத்து பொறிக்கும் முறை இந்திய மன்னர்களிடையே பரவியது என்று நாணயவியல் அறிஞர்கள் கருதுகிறார்கள்.

நாணயத்தில் எழுத்து பொறிக்கப்பட்டது காசின் மதிப்பையும் அந்த காசு வெளியிட்ட மன்னன் பெயரையும் அறிந்துகொள்ள உதவும். எனவே, அரசு. வணிகம் ஆகிய இரண்டுநிலையிலும் எழுத்துமொழி பயன்பட்டதை நாணயங்கள் புலப்படுதுகின்றன.

### 2.4.2.5. இலக்கியம்

எழுத்தாக்கத்தின் பெரிய பயன் எழுத்து இலக்கியம் உருவாகுதலே. தமிழைப் பொறுத்தவரையில் சங்க இலக்கியம் உருவானதற்கும், அது இன்று நீடித்துவாழ்வதற்கும் எழுத்தாக்கமே மூலகாரணம். இலக்கியம் எப்படி உருவாகிறது என்பது இலக்கிய உருவாக்கம் என்று அடுத்த இயலில் விரிவாக ஆராயப்படும்,

## 2.5. வைப்பு முறை

எழுத்தாக்கம் ஏற்பட்டுப் பல நிலைகளில் எழுத்து மொழி பயன்பட்ட பிறகு இலக்கிய, இலக்கணங்கள் உருவாகும். அவை களே மொழிக்கல்விக்கு ஆதாரங்களாக அமையும். மொழிக் கல்வியில் எழுத்து மொழி சிறப்பிடம் பெறும். எழுத்துமொழிக் கல்வி என்னும் போது வரிவடிவங்களை ஒரு குறிப்பிட்ட வரி சையில் கற்றுக் கொள்வது அடங்கும்.எழுத்துகளின் வரிசைக்கு நெடுங்கணக்கு வைப்புமுறை என்று பெயர்.

நெடுங்கணக்கு வைப்புமுறை எழுத்துமொழி ஆய்வின் ஒரு கூறாக அமையும். எனவே எழுத்துகளின் வைப்பு முறையை அறிந்து கொள்வதன் மூலம் எழுத்தாக்கத்தின் வரலாற்றை ஓரளவு தெரிந்துகொள்ளமுடியும். ஆகவே, தமிழ் நெடுங் கணக்கு வைப்பு முறையும் அதில் காணப்படும் மொழியியல் அறிவு, மொழி உணர்வுகளையும் இங்கு அறிந்துகொள்ள முயலுவோம்.

முதலில் தமிழ் நெடுங்கணக்கு வைப்பு முறை என்ன என் பதை அறிந்து கொண்டால்தான் அதற்கான காரணங்களைப் புரிந்து கொள்ள முடியும்.

தமிழ் நெடுங்கணக்கு வைப்பு முறை பற்றி மூன்று கருத்து கள் தமிழ் உலகில் காணப்படுகின்றன. அவையாவன: 1) இன் றைய வைப்பு முறையே சங்க காலத்திலும் இருந்தது என்பது: அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ, க, ங, ச, ஞ, ட, ண, த, ந, ப, ம, ய, ர, ல, வ, ழ, ள, ற, ன. இந்தக் கருத்தே பெரும்பாலான அறிஞர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. இதை மரபு வழிக் கருத்து என்று கூறலாம். அடுத்த இரண்டு கருத்திலும் உயிரெழுத்து வரிசை முறையில் மாற்றம் இல்லை. 2) ய, ர, ல, வ, ழ, ள, க, ங, ச, ஞ, ட, ண, த, ந, ப, ம, ற, ன. இந்தக் கருத்துக்குரியவர் அறவாணன் (1972). 3) வல் லினம், மெல்லினம், இடையினம் என்று கொடுமுடி சண்முகம் (1983: 14) தெரிவித்துள்ளார். எனவே இந்த மூன்று கருத்து களில் முதல் இரண்டு கருத்துகளே இங்கு விவாதிக்கப்படுகின்

றன. காரணம் கொடுமுடி சண்முகம் தன்னுடைய கருத்து முழுவதையும் விளக்கவில்லை.

முதலில் எந்த வைப்புமுறை சங்ககாலத்தில் இருந்திருக்க வேண்டும் என்று முடிவு செய்தால்தான் அதன் அடிப்படையில் அந்தக்கால மொழியியல் அறிவின் ஒரு கூறையும் மொழி உணர்வின் ஒரு கூறையும் அறிந்து கொள்ள முடியும்.

### 2.5.1. வல்லினம் முதல்

தொல்காப்பியர் எழுத்துகளின் வரிசையைப்பற்றி 'அகர முதல் னகர இறுவாய்' (எழுத்து 112) என்று கூறியுள்ளதால் உயிரெழுத்துகளில் அகரம் முதலாகவும் மெய்யெழுத்துகளில் னகரம் கடைசியாகவும் வரும் என்பது தெளிவாகிறது. 'ஔகார இறுவாய்ப் பன்னீர் எழுத்தும் உயிர் என மொழிப' என்ற தொல்காப்பியச் சூத்திரத்தால் உயிர் எழுத்துகளில் ஔகாரம் கடைசியாக வரும் என்ற உண்மையும் தெளிவு படுத்தப்பட்டுள்ளது. ஆனால் மெய்யெழுத்துகளில் முதல் எழுத்து எது என்று தொல்காப்பியம் நேரடியாகக் குறிப்பிட வில்லை. எனவே, மாற்று வைப்பு முறை இருந்திருக்க வேண் டும் என்று கருதுவதற்கு இது ஒரு காரணம். ஆனாலும் 11-ஆம் நூற்றாண்டில் இளம்பூரணர் என்ற உரையாசிரியரும் 'கம்முன் பிறந்த பதினெட்டு மெய்' (வீர. 1) என்ற அடி மூலம் வீரசோழிய நூலாசிரியரான புத்தமித்தரானரும் நேரடியாகவே மெய்யெழுத்துகளில் ககரம் முதலாவது என்று குறிப்பிட்டுள்ளார்கள். இந்தக் கருத்தைப் பிற்கால இலக்கண ஆசிரியர்களும் (முழு விளக்கத்துக்கு இலக்கணத் தொகை எழுத்து ப. 19; ப.317 பார்க்கவும்) இன்றைய அறிஞர்களும் ஏற்றுக் கொண்டுள்ளார்கள்.

### 2.5.2. இடையினம் முதல்

மேலே குறிப்பிட்டமுறை, வடமொழியைத் தழுவியது என்று ஆகிவிடும் என்பதற்காகத் தொல்காப்பியர் காலத்தில் இடையினம் மெய்யெழுத்துகளில் முதலில் வைக்கப்பட்டிருக்க வேண்டும் என்றும்; இடைக்காலத்தில் வடமொழிச் செல்வாக்

கால் வல்லினம் முதலில் வைக்கப்பட்டிருக்க வேண்டும் என்றும் அறவாணன் (1972) வாதாடியுள்ளார். எனவே அவருடைய வைப்பு முறைக்கான வாதத்தைப் பார்ப்போம்.

1) தொல்காப்பியர் நேரடியாக மெய்யெழுத்துகளில் வல்லினம் அதுவும் ககரம் முதலில் வரும் என்று கூறவில்லை.

2) இடையினம் என்பது உயிரொலிக்கும் மெய்யொலிக்கும் இடைப்பட்டது. மாறாக வல்லொலிக்கும் மெல்லொலிக்கும் இடைப்பட்டது என்ற கருத்து பொருத்தம் இல்லை. ஏனெனில் இது சமஸ்கிருத முறை வைப்புக்குச் சொல்லப்படும் விளக்கத்தை (அந்தஸ்தா-antasta 'standing between) பின்பற்றி சொல்லப்பட்டு வந்த விளக்கம்.

அரை உயிர் எனப்படுகின்ற யகர வகரங்கள் இடை எழுத்துகளுள் இருக்கின்றன. மேலும் உயிர் எழுத்துகளுக்கும் இடை எழுத்துகளுக்கும் 'மிடற்று வளிப் பிறப்பு' ஒற்றுமை உண்டு. ஆகையால் அரை உயிர்கள் அல்லாத ஏனைய ர,ல,ழ,ள இடையியல் இடம் பெற்றிருப்பது பொருத்தமானதே. கிரேக்க லத்தீன் மொழிகளில் அரையுயிர் ஒலிகளோடு அல்லாத ஒலிகளையும் அரைஉயிர் என்றே குறிக்கிறார்கள் என்று விளக்கி விட்டு

> தொல்காப்பியர் காலத்தில் மெய் எழுத்துகள், ய, ர, ல, வ, ழ, ள, க, ங, ச, ஞ, ட, ண, த, ந, ய, ம, ற, ன என்றே அமைந்திருத்தல் கூடும் என்பதும், இவ்வைப்பு முறை யாரையும் பார்த்துச் செய்தது அன்று என்பதும் தமிழறிஞரே ஒலியியல்புக்கு ஏற்பச் செய்தனர் என்பதும் உறுதியாகின்றன.

என்று அவர் முடித்துள்ளார். அறவாணன் கருத்தை ஏற்றுக் கொள்ளவேண்டுமானால இங்கு

1) தொல்காப்பியத்தில் மறைமுகமாவது எந்த வைப்பு முறை குறிப்பிடப்பட்டிருக்கிறது,

2) இடையினம் என்பதைத் தொல்காப்பியர் என்ன பொருளில் கையாண்டுள்ளார்,

3) அவருடைய புதிய வைப்புமுறை அவ்வளவு தூரம் ஒலியியல்புக்கு ஏற்ப அமைந்தது?

என்பனவற்றை யெல்லாம் பார்க்க வேண்டும். முதலில் மரபு முறைக்கு மறைமுகமாகவாவது ஆதாரமுள்ளதா என்று பார்போம்.

1) மெய்யெழுத்துகளில் முதல் எழுத்தாகக் ககரத்தைக் கருதினார்என்பதற்குத் தொல்காப்பியத்தில் குறிப்புகள் உண்டு. உதாரணமாகச் சொல்லுக்கு முதலில் வரும்மெய்யெழுத்து களைக் குறிப்பிடும்போது ககரத்தையே முதலில் குறிப்பிட்டுள் ளார் (சூ.61). அப்படியே பிறப்பியலில் மெய்யெழுத்துகளின் பிறப்பை வருணிக்கும் போது ககரத்தை முதலில் கூறுவதாலும் புணரியலில் பல இடங்களில் க, ச, த, ப, என்ற வரிசையில் கூறுவதாலும் மெய்யெழுத்துகளில் வல்லெழுத்து முதலிலும், அந்த வல்லெழுத்துகளில் ககரம் முதலிலும் வருவதாகத் தொல் காப்பியர் கருதினார் என்று ஊகிக்கலாம். மேலும், தொல்காப் பியருக்குக் கிட்டத்தட்ட பத்து நூற்றாண்டுகளுக்குப் பின்னரும், நமக்குப் பத்து நூற்றாண்டுகளுக்கு முன்னரும் வாழ்ந்த உரை யாசிரியர்களின் மரபு வைப்பு முறை பற்றிய கருத்தும் பிற இலக்கண ஆசிரியர்கள் கருத்தும் ஒத்திருப்பதால் இன்றைய வைப்பு முறையே தொல்காப்பியர்கால வைப்பு முறை என்று ஊகிப்பதில் தவறு இல்லை.

2 அ) தொல்காப்பியர் ஒலிகளை உயிர், மெய் என்று இரண்டு பிரிவாகப் பிரித்து நூன்மரபு எட்டாம், ஒன்பதாம் சூத்திர த்தில் பேசிவிட்டு, உயிரெழுத்துகளின் குறில், நெடில் பாகு பாடு மூன்று நான்காம் சூத்திரங்களிலும், மெய்யெழுத்துகளின் பாகுபாடான வல்லினம், மெல்லினம், இடையினம் என்பதை 19,20,21 சூத்திரங்களிலும் பேசியுள்ளார். மேலும், இடை யொலிகளுக்குள் யகரத்துக்கு மட்டுமே 'மிடற்று வளி' (சூ.99) குறிப்பிட்டுள்ளார். எனவே, தொல்காப்பியர் வல்லினத்துக்கும் மெல்லினத்துக்கும் இடைப்பட்டதாக இடையினத்தைக் கருது வதாகவே நினைக்கத் தோன்றுகிறது. இதற்குச்சார்பாகத் தொல்காப்பியர் எங்கும் உயிரெழுத்துகளை அடுத்து இடையின எழுத்துகளை விளக்கவில்லை என்பது அறியத்தகுந்தது.

ஆ) மேலும் சொல்லுக்கு முதலில் வரும் எழுத்துகளை வருணிக்கும் போது உயிர்மெய்யாக வரும் எழுத்துகளின் எண் ணிக்கை அடிப்படையில் (க,த,ந,ப,ம-12 உயிர்; ச-9 உயிர்; வ-8

உயிர் ஞ-3 உயிர் ; ய-1 உயிர்) கூறினாலும் சொல்லுக்கு இறுதியில் வரும் எழுத்துகளை வருணிக்கும் போது மெல்லினத்துக்குப் பிறகே இடையினத்தை விளக்கிவிட்டு, அதே முறையில் சொல் எண்ணிக்கை அடிப்படையில் எழுத்தை வரிசையில் (ந்-2 சொல்; ஞ்-1 சொல், வ்-4 சொல்) வருணித்துள்ளார். பிறப்பியலில் நாக்கின் பகுதி செயல்படும் இடத்தை ஒட்டி எழுத்துகளின் பிறப்பு வருணிக்கப்பட்டுள்ளது. அங்கும் உயிரெழுத்துகளின் பிறப்பை வருணித்துவிட்டு மெய்யெழுத்துகளின் பிறப்பை வருணிக்கும் போது வல்லினம், அதுவும் ககரமே முதலில் விளக்கப்பட்டுள்ளது. புள்ளிமயங்கியலில் மெல்லினத்துக்குப் பிறகே இடையினங்களின் புணர்ச்சி மாற்றம் விளக்கப்பட்டுள்ளது. சொல்லதிகாரத்தில் விளிமரபில் மெல்லினத்துக்குப் பிறகே இடையினம் குறிப்பிடப்பட்டுள்ளது. எனவே தொல்காப்பியர் உயிரொலிக்குப் பிறகு இடையொலி கருத்துடையவர் என்று கூறமுடியாது.

3. அ) இடையினத்தில் யகரம் முதலில் வைக்கப்பட்டிருப்பதால் நாவின் அடிப்பகுதியில்-இடை நாவில் பிறக்கும் ஒலி முதலில்வைக்கப்பட்டுள்ளது என்று ஆகும். நுனி நாவில் பிறக்கும் ரகரம் அடுத்தும், அண்பல் அடியாகப் பிறக்கும் லகரம் அதை அடுத்தும், பல் அடியாகப் பிறக்கும் வகரம் பின்னரும் வைக்கப்பட்டுள்ளதால் ய, ர, ல, வ, என்ற வைப்பு முறை ஒலி இயல்புக்கு ஏற்ப அமைந்துள்ளது. அது வடமொழிக்கும் ஒத்தது. ஆனால், தமிழ் எழுத்துகளில் ரகரமும் ழகரமும் ஒரே இடத்தில் பிறப்பவை (தொல். 95); எனவே ஒலியியல்புப்படி வைப்பதானால் ரகரத்துக்குப் பிறகு ழகரம் வைக்கப்பட்டிருக்க வேண்டும். அப்படியே லகரமும் ளகரமும் ஒரே இடத்தில் பிறந்து உச்சரிப்பு முறையால் (லகரம் ஒற்றுவதாலும் ளகரம் வருடுவதாலும் (சூ.96) மாறுபடுவதால்) லகரத்துக்குப் பிறகு ளகரம் வைக்கப்படவேண்டும். அதாவது ஒலி இயல்புக்கு ஏற்ப இடையின வைப்புமுறை அமைவதாக இருந்தால் ய, ர, ழ, ல, ள, வ என்ற முறையில் அமைத்திருக்க வேண்டும். அப்படி இல்லாததால்தான் உரையாசிரியர்களும் தற்கால அறிஞர்களும் (உம். வேங்கடராசலு ரெட்டியார்) 1949, மீனாட்சி சுந்தர

னார். 1974) தமிழுக்குரிய சிறப்பு எழுத்து என்ற முறையில் வகரத்துக்குப் பின்னால் ழ,ள அமைக்கப்பட்டுள்ளது என்று கருதுகிறார்கள். எனவே இடையின வைப்புமுறை கூட ஒலி இயல்புக்கு ஏற்ப அமையவில்லை. ஒலியியல் நோக்கில் பார்க்கும் போது இதிலும் பிறமொழி வாடை உள்ளது.

ஆ) வல்லினமும் மெல்லினமும் அடுத்தடுத்து வைக்கப் பட்டிருந்தாலும் வல்லினம் வைப்புமுறையும் அதன் ஒலி தன்மையை ஒட்டியே மெல்லினமும் இடையிடையே வைக்கப் பட்டுள்ளது என்பது மறுக்க முடியாது.

க, ச, ட, த, ப, ற என்ற வல்லின வரிசை முறையே ஒலி அமைப்புக்கு ஏற்ற முறையில் வைக்கப்படவில்லை. க, ச, ட, த, ப, என்ற வரிசை முறை கடை அண்ணம், இடை அண்ணம், நுனி அண்ணம், நுனி அண்ண நுனி, மேல் உதடு என்று பிறக்கும் இடத்தின் வரிசையை ஒட்டி-ஒலி இயல்புக்கு ஏற்ப அமைக்கப்பட்டது. அதே முறையில் றகரம் இடம் பெற வேண்டுமானால், அது நுனி அண்ண முகடுக்கும் நுனி அண்ண நுனிக்கும் இடையில் பிறப்பதால் டகரத்துக்கும் தகரத்துக்கும் இடையே வைக்கப்படவேண்டும். அதாவது க, ச, ட, ற, த, ப என்ற முறையில் அமைந்திருந்தால் தான் ஒலியியல்புக்கு ஏற்ப வல்லின வைப்பு முறை அமைந்ததாகக் கருத முடியும். மெல்லினங்களின் வைப்புமுறைக்கும் அதே விவாதங்கள் பொருந்தும்.

அப்படியானால் மெய்யெழுத்துகளில் வல்லினம், மெல்லினம் என்ற இன எழுத்துகளில் கூட வைப்புமுறை ஒலி இயல்புக்கு ஏற்ப வைக்கப்படவில்லை என்பது தெளிவாகிறது. அப்படியானால் நெடுங்கணக்கு வைப்புமுறை இடையினம், வல்லினம், மெல்லினம் என்று மாற்றினாலும் வைப்புமுறை இன்னொரு மொழியிலிருந்து தழுவல் என்பதை மறைக்க முடியாது. ஆகையினால், இன்றைய வைப்பு முறையும் உரையாசிரியர்களும், பிற்கால இலக்கண ஆசிரியர்களும் கூறிய வைப்பு முறையுமே தொல்காப்பியர் காலத்திலும் இருந்தது என்பது

கருதுவது தவறான ஊகம் ஆகாது. ஆகையால் வைப்பு முறை பிறமொழி தழுவல் என்றே கருத வேண்டும். அப் பொழுதுதான் முழு ஒலியியல் படி வைப்புமுறை அமையாத தற்குக் காரணம் கண்டவர்கள் ஆவோம்.

உயிரெழுத்துகளில் குறில் எகரமும் ஒகரமும் புதிய எழுத்து கள் ஆனாலும் தமிழ் உயிரெழுத்து வைப்பு முறை முழுவதும் ஒலி இயல்பு முறை பின்பற்றப்பட்டிருக்கிறது; அவை வரலாற்று முறையில் ஏன் வைக்கப்படவில்லை என்ற சந்தேகம் எழு கிறது.

உயிரெழுத்துகளில் ஒலி ஒற்றுமை அடிப்படையில் குறில் எகர ஒகரங்களுக்கு ஒரு பொது வரி வடிவம் அமைத்துக் கொண்டது பலராலும் ஒத்துக் கொள்ளப்படுகிறது. நெடில் களில் புள்ளி வைத்து இணையான குறில் அமைத்துக் கொள் ளப்பட்டிருக்க வேண்டும் என்ற கருத்தே பரவலாக உள்ளது. அதாவது, எகரத்துக்கும் ஒகரத்துக்கும் தனித்தனி வரிவடிவம் அமைக்காததால் அவை குறில் என்பதை உணர்ந்திருந்தார் கள் என்பது புலனாகிறது. அதனால்தான் போலும், அவைக ளுக்குரிய ஒலியியல் இடத்தில் வைத்து விட்டார்கள். அதாவது எழுத்தாக்கம் செய்தவர்கள் சிறப்பு ஒலிகளின் தன்மையில் இரண்டு விதம் உணர்ந்ததற்கு (அதாவது உயிர் ஒலிகளை ஒரு விதமாகவும் மெய்யொலிகளை இன்னொரு விதமாகவும்) ஏற்ப எழுத்து வைப்புமுறையும் அமைக்கப்பட்டிருக்கிறது என்றே கருத வேண்டியிருக்கிறது. மேலும், இன்னொரு உண்மையும் இங்கு நினைவுபடுத்தப்படவேண்டும். எழுத்தாக் கம் செய்யும் போது அப்படியே கண்ணை மூடிக்கொண்டு வரி வடிவங்களை ஏற்றுக் கொள்ளாமல் புதிய சோதனை முயற்சி செய்து பார்ப்பது என்பதே அது. எழுத்து வைப்பு முறையில் எங்கும் ஒகர முறை பின்பற்றியிருக்க வேண்டும் என்று எதிர் பார்க்கக் கூடாது.

அறவாணன் இன்னும் இரண்டு எதிர்க் கேள்விகள் கேட் டுள்ளார். அவைகளுள் ஒன்று:

> மெல்லொலி மாற்றங்களைச் சமஸ்கிருதத்தை ஒத்த வர்க்கங்களைத் தெலுங்கு, மலையாளம், போல தமிழில் காட்டியிருக்கலாம் அல்லவா.

என்பதே அவருடைய வாசகம். வல்லொலி மெல்லொலி மாற்றம் என்று இங்கு குறிப்பிடுவது அடைப்பொலிகளில் அதாவது வல்லின ஒலிகளுள் அதிர்விலா வல்லொலிகளும் (p,t,k போன்றவை) அதிர்வுடைய வல்லொலிகளும் (b,d,g, போன்றவை) மாற்றொலியாக வருவதை வரிவடிவத்தில் எழுதுவதைக் குறிப்பது ஆகும்.

தெலுங்கு, மலையாள மொழிகளில் வடமொழிச் சொற்களை அதிகம் கடனாண்டதால் அதிர்வுடைய வல்லொலிகள் ஒலியன்களாக அமைந்து அவைகளுக்குத் தனித்தனி எழுத்துகள் அமைக்கப்பட்டன. ஆனால், தமிழில் அவை சங்ககாலத்தில் மாற்றொலிகளாகவே அமைந்திருக்க வேண்டும். பொதுவாக எழுத்தாக்கம் செய்பவர்கள் ஒலியன்களுக்கு மட்டுமே தனி வடிவங்கள்-எழுத்துகள் அமைப்பார்கள். பொதுவாக ஒலியன் கொள்கை இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில் தான் தெளிவுபடுத்தப்பட்டாலும் பல மொழிகளுக்கு எழுத்தாக்கம் செய்தவர்கள் உள்ளூர அதை உணர்ந்திருந்தார்கள் என்று டேனியல் ஜோன் (Danial Jone 1967:23) குறிப்பிட்டுள்ளார். மேலும் ஒலியன்களை மட்டுமே தாய்மொழியாளர்கள் உணர்வார்கள்; மாற்றொலிகளை உணரமாட்டார்கள் என்று மொழியியலார் குறிப்பிடுவதும் சுட்டிக்காட்டத் தகுந்தது. அதனால்தான் பிறமொழி எழுத்துகளைக் கடனாண்டாலும் மாற்றொலிகளுக்குத் தனி எழுத்துகள் அமைக்கவில்லை. அறவாணனுடைய கடைசி ஐயம் எதிர் வாதமானது:

> சமஸ்கிருதத்தைப் பார்த்து தமிழ்மொழி அமைக்கப்பட்டது என்பதற்கு மறுதலையாக தமிழ் மொழியைப் பார்த்து அல்லது சிந்துவெளி காலத்தில் அங்கு வாழ்ந்த திராவிடப் பழங்குடியினரின் எழுத்தைப் பார்த்து சமஸ்கிருத எழுத்து அமைக்கப்பட்டிருக்கலாம் அல்லவா

என்பதே அவர் வாசகம்

அசோகன்பிராமிக்கு மூலம் எது என்று முடிவாகவில்லை. சிந்துவெளிக் குறிகள் தெளிவாக வாசிக்கப்படாததாலும்

சிந்து வெளி எழுத்துகளுக்குக் குறைந்தது 1500 ஆண்டுகள் கழித்துத்தான் அசோகன் பிராமி எழுத்துகள் கிடைப்பதாலும் இரண்டுக்கும் உள்ள உறவு புலப்படவில்லை. ஆராய்ச்சியில் வெறும் எதிர்வாதம் மட்டும் உண்மையை நிலை நிறுத்தாது. அதற்கான ஆதாரங்களைத் தேடி உண்மையை நிறுவ முயல வேண்டும்.

ஆகவே, தொல்காப்பியர் காலத்திலும் இன்றைய வைப்பு முறையே இருந்தது என்பதும் அந்த முறை உயிரொலிகளைப் பொறுத்த வரையில் ஒலியியல் இயல்புக்கு ஏற்ப அமைந்தது என்பதும் மெய்யொலிகளைப் பொறுத்தவரையில் பெரும் பான்மையும் ஒலியியல்புக்கு ஏற்ப அமைத்தாலும் சிறுபான்மை வரலாற்றுச் செல்வாக்கால் ஒலியியல்புக்கு மாறாக அமைக்கப் பட்டது என்பதும், இதற்குக் காரணம் நெடுங் கணக்கு வைப்பு முறை பிறமொழித் தழுவலே என்பதும் குறிப்பிடத் தகுந்தவை. அன்றைய தமிழ் அறிஞர்கள், வைப்பு முறை பிற மொழியின் தழுவல் என்று தெரிந்து விடுமோ என்பதைப் பற்றிக் கவலைப்படவில்லை.

---

# 3. இலக்கிய உருவாக்கம்

## 3.0. முன்னுரை

மொழி வளர்ச்சியில் எழுத்தாக்கத்துக்கு அடுத்த கட்டம் இலக்கிய உருவாக்கம் (Creation of literature அல்லது Literary formation). இங்கு இலக்கியம் என்பது பரந்த பொருளில் கையாளப்படுகிறது. அதாவது ஒரு மொழியில் எழுதப்பட்ட இலக்கியம் என்று சிறப்பித்து அழைக்கப்படும் கலை இலக்கியத்தையும், பிற அறிவுத்துறை நூல்களான அறிவியல் இலக்கியத்தையும் உள்ளடக்கியதாகக் கொள்ளப்பட்டுள்ளது. அப்பொழுது தான் இலக்கிய வளர்ச்சி மூலம் மொழி வளர்ச்சியையும் சமூக வளர்ச்சியையும் அறிந்து கொள்ள முடியும். இதனால்தான் இலக்கிய வரலாறு (History of literature) என்ற துறையோடு இலக்கியத்தின் வழி வரலாறு (Literary history) என்ற புதிய துறையும் கிளைத்துள்ளது. தமிழில் சிவத்தம்பி (1986) இந்த முயற்சியில் ஒரு நூல் எழுதியுள்ளார். இதன்படி ஒரு மொழியில் ஒரு காலகட்டத்தில் எழுந்த அனைத்து நூல்களின் மூலமே அந்த மொழிச் சமூகத்தின் அறிவு வளர்ச்சியையும் மொழி வளர்ச்சியையும் அறிந்துகொள்ள முடியும் என்ற கருத்து வலியுறுத்தப்படுகிறது (சிவத்தம்பி, 1986: 93).

இங்கு இன்னொரு உண்மையையும் அதன் விளைவையும் சுட்டிக் காட்ட வேண்டும். எழுத்தாக்கம் ஏற்பட்ட மொழிச் சமூகத்தில் இலக்கியம் என்றால் எழுதப்பட்ட இலக்கியம் என்ற கருத்துணர்வு இருக்கும். ஆனால் அந்தச் சமூகத்திலும் எழுத்தறிவற்ற மக்களிடையே வாய்மொழிப் பாடல்கள், நெடுங்கதைகள், விடுகதைகள், பழமொழிகள் போன்ற வாய்மொழி இலக்கிங்கள் பரம்பரை பரம்பரையாக இருந்துவரும். எழுத்தாக்கம்

ஏற்படாததற்கு முன்பு வாய்மொழி இலக்கியம் இன்னும் பரவலாக இருந்துவந்திருக்கும். இதனால் எழுத்து இலக்கியம் முதலில் தோன்றும்போது அதில் வாய்மொழி இலக்கியத்தின் பண்புகள் நிறைய படிந்திருப்பதைக் காணலாம். எழுத்திலக்கியம் வளர்ந்த பிறகு கூடச் சில நல்ல கவிஞர்கள் வாய்மொழி இலக்கியத்தை ஒட்டிப் புதிய இலக்கிய வகையையும், யாப்பையும் ஒவ்வொரு காலத்திலும் பின்பற்றுவது உண்டு. இடைக்காலத்தில் மாணிக்கவாசகர் கோத்தும்பி, பொற்சுண்ணம், பாவைப்பாடல்கள், கும்மி போன்றவற்றுக்கும், இக்காலத்தில் சுப்பிரமணிய பாரதியார் குடுகுடுப்பைக்காரன் பாட்டு, காவடிச் சிந்து போன்றவற்றுக்கும் நாடோடிப் பாடல்களிலிருந்து உருவங்களை எடுத்துக்கொண்டு அவரவர்கள் விரும்பிய உள்ளடக்கத்தில் பயன்படுத்தியுள்ளார்கள். எனவே, இலக்கிய உருவாக்கத்தில் வாய்மொழி இலக்கியத்தின் பங்களிப்பையும் எழுத்து இலக்கியத்தின் தனித்தன்மையையும் அறிந்துகொள்வது அவசியம். இந்த உண்மை தமிழைப் பொறுத்தவரையில் மேலைநாட்டுக் கல்வியின் தாக்கத்தால் ஏற்பட்டது என்பதும் குறிப்பிடத் தகுந்தது.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் மேலை நாட்டு அறிஞர்கள் எழுத்து இலக்கியத்துக்கு அடிவேராக அந்த மொழியில் உள்ள வாய்மொழி இலக்கியங்கள் அமைந்திருந்தன என்பதைக் களஆய்வு மூலம் கண்டார்கள். இதனால் மிகப்பழைய இலக்கிய மொழி எனப்படும் கிரேக்க மொழி இலக்கியத்துக்கும் இது பொருந்தும் என்பதையும் நிரூபித்தார்கள். சாட்விக் (Chadwick) என்ற மேலை நாட்டு அறிஞர் இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில் கிரேக்க காப்பியங்களையும் செர்மானியக் காப்பியங்களையும் ஒப்பியல் நோக்கில் ஆராய்ந்து அவை வாய்மொழி இலக்கியங்களாகத் தோன்றின என்று கண்ட முடிவை மில்மன் பாரி (Milman Parry) என்பார் ஹோமரது காவியங்களுக்கும் சித்தாந்தா (Siddhanta) வடமொழி காப்பியங்களுக்கும் பொருத்திப் பார்த்து உறுதிப்படுத்தினார்கள். இவைகளின் தாக்கமே சங்க இலக்கியங்களும் வாய்மொழிப் பாடல்களிலிருந்து உருவாகியிருக்கலாம் என்ற கருத்து தோன்றுவதற்குக்

காரணம். இதில் கைலாசபதியின் (1968) பங்களிப்பு பெரியது. எனவே, தமிழில் இலக்கிய உருவாக்கம் எப்படி நடைபெற்றது என்பதைத் தெரிந்துகொள்ள i) சங்க கால இலக்கியங்கள் எவை (3.2), ii) அந்த இலக்கியம் உருவாகிய விதம் பற்றிய கருத்து கள்; அவைகளின் வன்மை (3.3), iii) வாய்மொழிப் பாடலும் சங்க இலக்கியமும் (3.4), iv) இலக்கியப் புலவர்கள் யார்–எவர்? (3.5), v) இலக்கியம் யாருக்காக? (3.6), vi) இலக்கியத் தின் பொருள் என்ன? (3.7), vii) இலக்கியப் படைப்பாளிகளும் சமூகமும் (3.8) என்ற தலைப்புகளில் விளக்குவோம்.

## 3.1. தமிழின் முதல் இலக்கியங்கள்

சங்க இலக்கியம் என்று அழைக்கப்படுபவையே தமிழின் முதல் இலக்கியம் என்பதில் கருத்து வேறுபாடு இல்லை. ஆனால், சங்க இலக்கியம் என்பதில் என்னென்ன நூல்கள் அடங் கும் என்பதில் கருத்து வேறுபாடு உண்டு. இங்கும் இன்றைய பெரும்பாலான தமிழறிஞர்கள் ஒத்துக்கொள்கிற எட்டுத் தொகை, பத்துப்பாட்டு ஆகிய இரண்டிலும் கலித்தொகை. பரிபாடல், திருமுருகாற்றுப்படை ஆகியவற்றை ஒதுக்கிவிட்டு ஏனையவைகளே முதல் இலக்கியமாக எடுத்துக்கொள்ளப்படு கின்றன. இவை கலை இலக்கியமாகும். அறிவியல் இலக்கியம் என்று கூறத்தகுந்த நூல் எதுவும் கிடைக்கா விட்டாலும் அது பற்றிக் கலை இலக்கியங்களில் காணப்படும் குறிப்புகள் மூலம் மொழி வளர்ச்சி பற்றிப் பின்னர் விளக்கப்படும்.

## 3.2. இலக்கிய உருவாக்கம்

இந்த நூற்றாண்டின் இடைப்பகுதிவரை சங்க இலக்கியம் புலவர்களால் எழுதப்பட்ட இலக்கியம் என்ற கருத்தே நிலவி வந்தது. 1968 – இல் கைலாசபதி சங்க இலக்கியங்கள் வாய் மொழிப் பாடல்களாக உருவானவை என்று நிரூபித்தார். ஆயினும் அவரே சங்க இலக்கியம் வாய்மொழிப் பாடல் மரபில் உருவானவை என்று குறிப்பாகச் சொல்லிச் சென்றுள் ளார் என்பது பின்னால் விளக்கப்படும். ஹார்ட் (1975) மீனாட்சிசுந்தரன் (1981) ஆகியோர்களும் வாய்மொழிப் பாடல்கள் அல்ல; வாய்மொழிப் பாடல்களின் மரபிலும்

எழுத்து மரபிலும் உண்டானவை என்று கருதுகிறார்கள். எனவே, தமிழின் முதல் இலக்கியம் சங்க இலக்கியம் உருவாகியது பற்றிக் கீழ்க்காணும் மூன்று கருத்துகள் காணப்படுகின்றன: i) எழுதப்பட்டவை, ii) வாய்மொழிப்பாடல்கள், iii) வாய்மொழிப்பாடல் மரபில் எழுதப்பட்டவை.இவற்றில் முதல் கருத்து ஓரளவு வலுவிழந்து வருகிறது என்றே சொல்லவேண்டும். இரண்டாவது கருத்து பரவலாக இருக்கிற அளவுக்கு மூன்றாவது கருத்து பரவலாக இல்லாததால் அந்த நோக்கில் நிறைய ஆதாரங்கள் காட்டப்படவில்லை.

### 3.2.1. எழுதப்பட்டது

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றான களவழி பற்றிய குறிப்புரை அந்த நூல் 'வாய்மொழியாக'ப் பாடியதாகக் காணப்பட்டதை 'எழுதியதாக'ப் பாடப்பட்டது என்று மாற்றப்பட்டதிலிருந்து சங்க இலக்கியம் 'எழுத்து இயக்கியம்' என்ற கருத்தைப் பிரதிபலிப்பதாகக் கதிர்மகாதேவன் (1975:229) சுட்டிக் காட்டியுள்ளார்.

> சேரமான் கணைக்கால் இரும்பொறை சோழன் செங்கணானோடு திருப்போர்புறத்துப் பொருது பற்றுக் கோட்பட்டுக் குடவாயிற் கோட்டத்துச் சிறையில்கிடந்து தண்ணீர் தா என்று பெறாது பெயர்த்துப் பெற்றுக் கைக்கொண்டிருந்து உண்ணான் சொல்லித் துஞ்சியபாட்டு

என்பது பழைய குறிப்புரை (புறம் 174). இடைக்காலத்தில் இலக்கியம் எழுதப்பட்டது என்ற கருத்து பிறந்ததும். 'சொல்லித் துஞ்சியபாட்டு' என்பதை 'எழுதி விடுத்தது' என்று மாற்றிவிட்டார்கள். இதற்குக் காரணம் இடைக் காலத்தில் சங்கப் பாக்களைப் புலவர்கள் அப்போதைக்கு அப்போது எழுதிய பாடல்கள் என்று தவறாக எண்ணியதே ஆகும்.

> அப்புலவர்கள் எழுதிய செய்யுட்களையே சங்கச் செய்யுட்களாகக் கொண்டு அச்செய்யுட்கள் அடங்கிய நூல்கள்

என்று வித்தியானந்தன் (1954:18) வாசகமும் எழுத்து இலக்கியம் என்பதைக் குறிப்பாகக் கொள்ளலாம் என்று கைலாசபதி போன்றோர் கருதுகிறார்கள்.

மேலே குறிப்பிட்டபடி கைலாசபதி (1968) ஆய்வுக்குப் பிறகு தமிழ் உலகில் சங்க இலக்கியம் வாய்மொழியாகப் பாடப்பட்டவை என்ற கருத்து பரவலாக ஒத்துக் கொள்ளப் பட்டுள்ளது (உ.ம் வரதராசன் 1972:28; தமிழண்ணல், 1980: 114: 1984:66)

**3.2.2 வாய்மொழிப் பாடல்கள்**

கைலாசபதி (1968) சங்க இலக்கியத்தில் அடிக்கருத்துகள் (Themes), திணைக்கூறுகள் (Situations), தொடர்கள், அடிகள் பலபாடல்களில் திரும்பத் திரும்ப வந்துள்ளதையும்; கிரேக்க கெல்டிக் நாட்டு வீரயுகப் பாடல்களை ஒத்துள்ளதையும்; கிரேக்க நாட்டுப் புலவர்களைப் போலச் சங்கப் புலவர்கள் அரசவைக் கவிஞர்களாக இருந்ததையும் விரிவாக எடுத்துக்காட்டியுள்ளார். மேலும், அவர் அந்தக் காலத்தில் ஏற்பட்ட சமூக வளர்ச்சியையும் மொழி வளர்ச்சியையும் விளக்கியுள்ளார். சங்க இலக்கியம் வாய்மொழிப்பாடல் என்பதை விளக்கித் தமிழில் சில நூல்கள் வந்துள்ளன (உ.ம். கதிர் மகாதேவன், 1975).

i) தொடர்கள் திரும்ப வருதல்

முல்லை சான்ற கற்பு - சிறுபாண். 30; நற். 142.

பெருங்கல் நாடன் - குறுந். 389.3; நற். 156-3, 234-4 259-3.

சீறியாழ் செவ்வழிப் பண்ணி - புறம். 144-2, 146-3, 147-2,

ஆசாகு எந்தை யாண்டுளன் கொல்லோ - புறம். 235-16,307-1. குறுந். 176-5, 325-4.

படலைக் கண்ணிப் பரேர் எறுழ்த் திணிதோள், முடலை யாக்கை முழுவலி மாக்கள் - பெரும். 60-1, நெடு. 31-2

ii) பகுதி மட்டும் திரும்ப வருதல்

இங்கு ஒருசொல், தொடர் என்ற முறையில் ஒற்றுமைப் பட்டு ஏனையவை மாறிவரும்.

வாணுதல் விறலி-புறம். 105 – 2
வாணுதல் அரிவை-ஐங். 40 – 8
தண்ணுதல் விறலி-புறம். 32 – 4

முல்லை சான்ற கற்பு-நற்.142
முல்லை சான்ற முல்லை – சிறுபா. 167
முல்லை சான்ற புரவு – மதுரை. 285

கடும்பகட்டு யானை நெடுந்தேர்க் குட்டுவன்-நற். 395-4
கடும்பகட்டு யானை நெடுமானஞ்சி-நற். 381 – 7

கூற்றத்தன்ன மாற்றரு மொய்ப்பு-முருகு. 81
கூற்றத்தன்ன மாற்றரு முன்பு-புறம். 362 – 7

அரவு வெகுண்டன்ன தேறல் – புறம். 376 – 14

பாம்பு வெகுண்டன்ன தேறல் – சிறுபா. 237

மேலும், சில பாடல்களில் துவக்கம், நடுப்பகுதி, கடைப் பகுதி ஆகியவற்றிலும் ஒற்றுமை காணப்படுகிறது.

மேலும், அவர் சங்கப்பாடல்களிடையே பொதுப் பண்புகள் அதிகமாக இருப்பதால் ஒவ்வொரு புலவருக்கும் உரிய தனிப் பண்பை, நடைச்சிறப்பைக் கண்டறிய முடியவில்லை; எல்லாம் ஒரே பட்டறையிலிருந்து வெளிவந்தவை போலக் காணப்படு கின்றன – என்று பொதுமையாகவும் குறிப்பிடுள்ளார் (ப.185). இதுவும் 'வாய்மொழிப் பாடல்கள்' என்பதை உறுதி செய் கிறது. இதை இன்னும் வலிவுபடுத்துவதற்காக

1) புலவர்கள் வாயால் பாடுவது பற்றிய குறிப்புகளையும்
2) வாய்மொழியாகப் பாடிய பாடல்களை, வீரர்களும் அரசர் களும் கேட்டார்கள் என்பது பற்றிய குறிப்புகளையும்

3) கல்வியும் பாட்டும் வாய்மொழியாக இருந்தது பற்றிய குறிப்புகளையும், எடுத்துக்காட்டியுள்ளார்:

செய்யாநாவிற் கிளத்தல்
எய்யாதாகின்று எம்சிறு செந்நா-புறம். 148-6,7
வையக வரைப்பின் தமிழகம் கேட்ப
பொய்யாச் செந்நா நெளிய ஏத்தி
பாடுவ என்ப பரிசிலர். புறம் - 168
செந்நாப் புலவர். புறம் - 107 - 2

என்ற அடிகள் புலவர்கள் வாய்மொழியாகப் பாடி வந்ததைப் புலப்படுத்கிதுன்றன. அப்படியே வீரர்களின் புகழ் புலவர்களின் வாயில் உள்ளன என்பதை

சேண்விளங்கு நல்லிசை நிறீஇ
நாநவில் புலவர் வாயுளானே புறம். 280 - 10,11.

என்று கூறுவதன் மூலம் வாய் வழியாக வீரர்களின் புகழ் பாடப்பட்டது என்பது விளங்கும். அரசவையிலும், வாய் மொழியாகப் பாடப்பட்டன என்பதை 'நல்லோர் குழீஇய நாநவில் அவையத்து வல்லார்' என்ற மலைபடுகடாம் அடிகளும் (77 - 8) காட்டுகின்றன. சங்க இலக்கியங்களில் பாடல்கள் பற்றிக் குறிப்பிடும் போது எழுத்துமொழி குறிப்பிடப் படவில்லை (ப.94). எனவே பெரும்பான்மையும், கல்வியும், பாடல்களும் வாய்மொழியாகவே இருந்திருக்க வேண்டும் என்றும் கருத வேண்டியிருக்கிறது (ப.95).

எழுத்து இலக்கிய மரபு வீரயுகத்தின் கடைசியில் ஏற்பட்டிருக்க வேண்டும். புத்த, சமண துறவிகளின் செல்வாக்காலேயே பள்ளிகள் தமிழகமெங்கும் ஏற்பட்டிருக்க வேண்டும் (ப.133). வீரயுக காலத்தில் எழுத்து மொழி மிகவும் குறைவாகவே; அதுவும் இயற்பெயர் (Proper names) களையும், சிறுசிறு தொடர்களையும் குறிக்கப் பயன்படுத்தப்பட்டிருக்க வேண்டும் என்பார் (ப.236) கைலாசபதி. எனவே, பொதுவாகச் சங்கப் புலவர்கள் வாய்மொழிப்புலவர்கள் என்றும் சங்கப் பாடல்கள் வாய்

மொழிப் பாடல்கள் என்றும் அவர் கருதுகிறார் (ப.137)[2]. இந்தக் கருத்து பரவலாக ஏற்றுக்கொள்ளப்பட்டாலும், (Zvelebil 1974.29, சிவத்தம்பி, 1981) சங்க இலக்கியங்கள் வாய்மொழிப் பாடல்கள் என்று முழுவதுமாக ஏற்றுக் கொள்ள முடியாது என்று சில காரணங்களை ஹார்ட்(1975: 152-21) செயராமன் (1975) மீனாட்சி சுந்தரனார் (1981) போன்றவர்கள் எடுத்துக்காட்டியுள்ளார்கள்.

3.2.3. வாய்மொழி மரபில் தோன்றியவை

பொதுவாக வாய்மொழிப் பாடல்கள், இயற்றிய ஆசிரியர் பெயர்கள் தெரியாதவை. ஆனால் 1)சங்க இலக்கியப் பாடல்களை இயற்றிய புலவர்களின் பெயர்கள் காணப்படுகின்றன. மொத்தம் சங்கப்புலவர்கள் 473 பேர் மொத்தம் 2381 பாடல்களைப் பாடியுள்ளார்கள். 2) பாணர்கள் பாடல்களாக உள்ளவைகளில் பாணர் அல்லாத புலவர் பெயர்கள் காணப்படுகின்றன. உதாரணமாகப் புறம். 60 – ஆம் பாடலில் விறலியைக் குறிப்பதால் பாணன் பாடுவதாகக் கொள்ளலாம். ஆனால், இந்தப் பாடல் உறையூர் மருத்துவன் தாமோதரனார் பாடியதாக பிற்குறிப்பு கூறுகிறது. எனவே, பாணர் மரபை ஒட்டிப் புலவர் பாடியதாக இது கருதப்படவேண்டும் என்பார் ஹார்ட் (1975:148). அப்படியே ஔவையார் பாடிய பாடல்களிலும் (புறம்.390,392) கோவூர் கிழார் பாடல்களிலும் (புறம் 373,382,400) இசைக் கலைஞர் போல் பாடப்பட்டுள்ளதையும் சுட்டிக் காட்டியுள்ளார்.

> கிரேக்க மொழியிலும் பிற மொழிகளிலும் உள்ளது போல வாய்மொழி இலக்கியத்தில் எந்தப் பாக்களிலும் பாணர் மரபை ஒட்டி சொற்களோ, சொற்றொடர்களோ, அடிகளோ திரும்பத்திரும்ப வருவது அக்காலச் செய்யுள்களுக்கு உயிர் ஊட்டுவதாம். கருத்தாழமான செய்யுட்களைப் பாடவரும்போது இங்கே கூறியபடி பெரும்பான்மையும் எளிமை யாக இருந்தால்தான் அருமையான கருத்தாழத்தை இனிதே அனுபவிக்க முடியும். இல்லையானால் பாடல் முழுதும் அல்லவா அறுவையாகிவிடும்.

என்று மீனாட்சி சுந்தரனார் (1981:50) சொற்களும் சொற்

றொடர்களும் திரும்பத்திரும்ப வருவது பாணர் மரபை ஒட்டியது என்று ஒத்துக்கொண்டு, அது புதிய இலக்கிய உத்தியை உள்ளடக்கியது என்று வெளிப்படுத்தியுள்ளார்.

செயராமன் (1975:319, தொ.) சங்கப்பாடல்களை வீர நிலைக் காலப்பாடல்களாகக் கொள்ளக் கூடாது என்பதற்கு மேலைநாட்டு வாய்மொழிப் பாடல்களுக்கும் சங்கப் பாடல்களுக்கும் உள்ள வேறுபாடுகளைச் சுட்டிக்காட்டி

> சங்ககால பாடாண்திணைப் பாடல்கள் வீரநிலைக் காலத்துக்கு உரியவை அல்ல; வீரநிலைக் காலத்துக்குப் பிற்பட்ட காலத்துக்கு உரியவை ஆகும் (ப.331).

> தொல்காப்பியர் காலத்திலும் பின் வந்த சங்க காலத்திலும் தலைவனைப் புகழும் பாடாண் பாடல்களே சிறப்பிடம் பெற்றன. எனவே, சங்க காலத்தைப் 'பாடாண் காலம்' என்றும் வீரநிலைக் காலத்தை அடுத்த காலம் என்றும் கூறுவார் (ப.332)

செயராமன்.

சங்க இலக்கியப் பாடல்களுக்கும் பிறமொழி வீர இலக்கியப் பாடல்களுக்கும் வித்தியாசம் இருப்பது உண்மையே. ஆனாலும் சங்க காலத்தைப் பாடாண் காலம் என்றும் கொடைப் பண்பு மிகுந்த காலம் என்றும் கூறுவது பொருந்தாது. பாடாணுக்கும் கொடைக்கும் காரணம் யாது? எதனால் கொடை சாத்தியம் ஆகிறது? என்ற கேள்விகள் எழுகின்றன. அதனால் பின் வீரயுக காலம் என்று கொள்வதே பொருந்தும். சங்க இலக்கியப் பாடல்களில் புலவர்கள் தனித்தன்மையையும் பார்க்க முடிகிறது. வாய்மொழிப் பாடல்கள் என்று கருதுகிற சுவலபில் (Zvelebil. 1974:43) கபிலர், நக்கீரர், பரணர் போன்ற சிலர் தனித்தன்மை உடையவர்களாக உள்ளார்கள் என்பதைக் குறிப்பிட்டுள்ளார். கபிலர், பரணர் ஆகிய இருவர் பாடல்களை ஒப்பீட்டு நடையியல் நோக்கில் ஆராய்ந்து இருவருக்கும் இடையே ஒற்றுமை (ஒலிக்கோலம்,திட்டப்பாங்குகள்), வேற்றுமைகளை (கபிலர்-இயற்கை கவிஞர்; பரணர்-வரலாற்றுக் கவிஞர்; கபிலர் மனிதஉணர்ச்சிகளைப் பாடியுள்ளார்; பரணர் மனிதர்களைப் பாடியுள்ளார்; பரணரிடம் இரட்டைச் சொல்

பயன்படுத்து முறை காணப்படுகிறது கபிலரிடம் அந்தமுறை காணப்படவில்லை) நீதிவாணன் (1979:75-100) விரிவாக குறிப்பிட்டுள்ளார். எனவே, பாடல்களுக்குள் ஆசிரியரை ஒட்டி நடை வேறுபாடு காணப்படுவது சங்க இலக்கியத்தை முழுவதும் வாய்மொழிப் பாடல்களாகக் கொள்ளமுடியாது என்பதை வலியுறுத்தும். எனவே, சங்க இலக்கியத்தை வாய்மொழிப் பாடல்களாக முழுவதும் ஒத்துக்கொள்ள முடியாது என்ற கருத்தை ஏற்றுக் கொண்டு, இலக்கியம் எழுந்ததற்கான சமூகச் சூழல், எழுத்துமொழிப் பயன்பாடு ஆகியவற்றைப் பார்ப்போம்.

### 3.3.2. சமூகச் சூழல்

கைலாசபதியே (1968) சங்கப் பாடல்கள் எழுந்த சூழ்நிலையைக் குறிப்பிடும்போது அரசு நிலையிலும் கலைஞர்கள் நிலையிலும் ஏற்பட்ட மாற்றங்களைச் சுட்டிக்காட்டி அவைகளின் விளைவு சங்கப்பாடல்கள் என்று கூறியுள்ளது அறியத்தகுந்தது.

i) பெரும்பான்மையான வீரயுகப் பாடல்கள் பழைய இனக்குழு வாழ்க்கை முறை அழிந்து சிற்றரசு-மூவேந்தர் ஆகியவர்கள் தோன்றிக் கொண்டிருந்த காலம் என்றும், புலவர்கள் அந்த இடைப்பட்ட காலத்தையே பெரும்பாலும் பாடியுள்ளார்கள் என்றும் அவர் கூறியுள்ளார் (ப.73-79)[3].

ii) சங்க காலத்தில் பலவகையான கலைஞர்கள் நாடோடிகளாகத் திரிந்து, மக்களை மகிழ்வித்து வாழ்க்கை நடத்தி வந்த செய்தி இலக்கியத்தில் உள்ளது. கைலாசபதி (1968:94) சங்ககாலத்தில் பாணர், கூத்தர், விறலியர், புலவர், அகவுநர் போன்றோர் இருந்தனர் என்றும், அவர்கள் வாய்மொழிப் பாடல்களில் வல்லவர்கள் என்றும் குறிப்பிட்டுள்ளார். அதே சமயத்தில் அவர்களுக்குள்ளே இருக்கும் வித்தியாசத்தையும் புலவர்களின் சிறப்புத் தன்மையையும் சுட்டிக் காட்டி விளக்கியுள்ளார். (ப.115 – 123). இது ஓரளவு சமூகநிலையில் புலவர்களின் தோற்றமாகக் கொள்ளலாம்.

பாணர்களும், பொருநர்களும் தனிக்கலைஞர்கள்—அதாவது, தனியாக இருந்து தொழில் செய்வோர் (Non - Choral bards)

கூத்தர், விறலியர் போன்றவர்கள் குழுக் கலைஞர்கள். இவர்கள் இசைக்கருவிகளை இசைத்துப்பாடியும் ஆடியும் மகிழ்விப்பவர்கள். அகவுநர்கள் பாட்டுக்களை ஓசை இனிமையுடன் பாடுபவர்கள். பெரும்பாலும் ஆசிரியப்பாவில் பாடுவதில் வல்லவர்கள்; புலவர்களே கவிஞர்கள்.

பாணர், கூத்தர், விறலியர், பொருநர் வீரயுகத்தையும் புலவர்கள் வீரயுகத்திற்குப் பின்னரும் சிறப்பு பெற்றவர்கள் (ப.121)[4]. பொதுவாக வீரயுகத்தைச் சார்ந்த கலைஞர்கள் அரசவையிலும், போர்க்களத்திலும் அரசர்களுக்கும் வீரர்களுக்கும் மகிழ்ச்சியூட்டுவதையே கடமையாகக் கொண்டவர்கள். செயல்வீரமே சிறந்ததாகப் போற்றப்பட்டுக் கற்பனையான சிந்தனை மேம்பாடு ஒதுக்கப்பட்ட காலத்தைச் சேர்ந்தவர்கள். புலவர்கள் பின்வீரயுக காலத்தில் சமய உணர்வோடு சிந்தனை மேம்பாட்டை (தத்துவ விசாரணை) சிறப்பாகக் கருதினார்கள். இந்தக் காலத்தில்தான் வடமொழிக் கலப்பு ஏற்பட்டது. பிறகு பிராமணர்களும், புலவர்களுமாக இடம் பெற்றார்கள். இவர்கள் பொருநர், கூத்தர் போன்ற கலைஞர்களின் சில மரபினைப் பின்பற்றினார்கள் என்பது அவருடைய கருத்தின் சாரம். அதாவது, புலவர்கள் பாணர்களாக, கூத்தர்களாகச் செய்யுள்களைப் பாடி மகிழ்வித்திருக்க வேண்டும். எனவே, கைலாசபதியும் இலக்கியச் செய்யுள்கள் புலவர்களால் இயற்றப்பட்டவை என்ற கருத்து உடையவர்-என்று கூறலாம். ஆனால், சமூகத்தில் புலவர்கள் சிறப்பு பெற்றது, பவுத்த தத்துவங்கள் பரவிய பிறகும் வணிக வர்த்தகம் மேனிலை அடைந்ததும் ஆகிய காலத்தில் என்று கருதுகிறார் (ப.122).[5] இந்த கால கட்டத்தில் அறஇலக்கியம் இயற்றப்பட்டது என்பதும் தொகையாக்கம் செய்யப்பட்டது என்பதும் (ப.123) சர்ச்சைக்கு உரியது. எப்படியானாலும் சங்க இலக்கியச்செய்யுட்கள் வாய்மொழிப் பாடல்கள் அல்ல என்பதைக் கைலாசபதி உணர்ந்திருந்தார் என்பதே முக்கியம்.

தமிழண்ணல் (1980:114) கூறியபடி 'சங்கப் பாடல்கள் வாய்மொழி இலக்கிய மரபிலிருந்து தோன்றி வளர்ந்து வரிவடிவம் பெற்றவை' என்பதே பொருத்தமாக இருக்கும். அப்படி

யானால் சங்ககாலத்தில் எழுத்துமொழிப் பயன்பாடு குறித்துச் குறிப்புகள் இருக்கிறதா என்று தேடிப்பார்க்க வேண்டும். அப் படிப்பட்ட குறிப்புகளே எழுத்துமொழி-கலை இலக்கியத்துக்கு மட்டும் அல்லாமல் பிற துறையிலும் பயன்பட்டன என்பதை நிரூபித்துக் கலை இலக்கியமும் எழுத்து வடிவம் பெற்று இருக் கும் என்பதை உறுதிப்படுத்தும். எனவே, எழுத்து மொழியின் விரிவான பயன்பாடு எழுத்துமொழி இலக்கிய உருவாக்கத் துக்குப் பயன்பட்டதைத் தெளிவு படுத்தும்.

## 3.3. எழுத்துமொழிப் பயன்பாடு

பலதுறை நூல்கள் இருப்பதே எழுத்து மொழிப் பயன்பாட் டின் விரிவைக் காட்டும். முன் இயலில் எழுத்துமொழி கல் வெட்டுகளாகவும், நடுகற்களாகவும், பானைஎழுத்துகளாகவும், ஓலை எழுத்துகளாகவும் பயன்பட்டன என்று சுட்டிக்காட்டப் பட்டவையும் இங்கு நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும்.

சங்க இலக்கியங்களில் பலதுறை பற்றிய நூல்கள் இருந் தன என்று பொதுவாகக் குறிப்புகள் இருக்கின்றன. அவை துறை நூல்கள் என்று தலைப்பு இட்டு வழங்கப்படவில்லை; பிற்காலத்திலேயே அவை தனித்தனிப் பெயர்களைப் பெற்றன,

### 3.3.1. சிற்பநூல்

சிற்பம் என்பது கட்டிடக் கலையைக் குறிப்பது; அதாவது கட்டிடத்தைக் கட்டும் முறையையும், வடிவமைப்பு முறையை யும் விளக்குவது.

அரண்மனை கட்டுவதற்கான மனைமுகூர்த்தம் செய்யும் போது சிற்பநூலே வழிகாட்டியாகக் கொள்ளப்பட்டது.

இருகோல் குறிநிலை வழுக்காது குடக்கு ஏற்பு
ஒருதிறம் சாரா அரைநாள் அமையத்து
நூலறி புலவர் நுண்ணிதிற் கயிறு இட்டு
தேஎங் கொண்டு தெய்வம் நோக்கி
பெரும் பெயர் மன்னர்க்கு ஒப்ப மனை வகுத்து

என்ற நெடுநெல்வாடை அடிகள் (74-3) சான்றாகிறது. இங்கு 'நூலறி புலவர்' என்ற தொடரே கவனிக்கத்தகுந்தது. இது கட்டிடக்கலை நூல்.

............... செறிந்த
நூல்வழிப் பிழையா நுணங்கு நுண் தேர்ச்சி
ஊர் ............

என்ற மதுரைக்காஞ்சி அடிகளுக்கு (645-7)'நூல்வழி பிழையா ஊர்' எனக்கூட்டி 'நூலில் சொன்னபடி சமைந்த ஊர்' என்று நச்சினார்க்கினியர் விளக்கம் எழுதியுள்ளார். எனவே, நகர் அமைப்பினை விளக்கும் நூல் என்று கொள்ளலாம். 'நூலோர் அறிந்த.........மாடம்' என்ற சிலப்பதிகார அடிகளுக்கு (14-97) மயமதம் அறிவராற் புகழ்ச்சியை உடைய மாடம்' என்ற அரும்பத உரையும்; 'மயமதம்' என்ற நூலுண்மை பெறப் படும்' என்ற உ.வே.சா. அடிக்குறிப்பும் அறியத்தகுந்தது. இதை ஊரமைப்பு பற்றிய நூல் என்று கொள்ளலாம்.

**3.3.2. இசைநூல்**

சங்க இலக்கியங்களில் இசைக் கருவிகள், இசைக் கலைஞர் கள் பற்றி ஏராளமான குறிப்புகள் காணப்படுகின்றன. (வித்தி யானந்தன் 1954: 270-95). அங்குள்ள இரண்டு குறிப்புகளால் இசைநூல் பற்றி அறிந்துகொள்ள முடிகிறது.

கூடு, இன்னிசை, குரல் குரலாக
நூனெறி மரபிற் பண்ணி

என்பது சிறுபாணாற்றுப்படை அடிகள் (229 – 30). இதற்கு 'இசைநூல் கூறுகின்ற முறைமையாலே செம்பாலையாக வாசித்து' என்று நச்சினார்க்கினியர் உரை எழுதியுள்ளார்.

நல்லிசை நிறுத்த நயவருபனுவல்
தொல்லிசை நிறீஇய உரைநூல் பாண்மகன்
எண்ணுமுறை நிறுத்த பண்

என்ற அகநானூற்றடிகள் (352:13-15) 'நல்ல இசைகளை வரையறை சுவைமிக்க நூலின் (பனுவல்) எண்ணின் முறைப் படி இயற்றிய பண்' என்ற கருத்தைக் குறிப்பிடுகின்றன.

... ... ... பேரியாழ்
அமைவரப் பண்ணி அருணெறி திரியாது
இசைபெறு திருவின் வேத்தவை ஏற்பத்
துறைபல முற்றிய பைதீர் பாணர்

என்ற மலைபடுகடாம் அடிகளில் (37-8) 'அருள் நெறி' என்பதற்கு நச்சினார்க்கினியர் 'நூலில் கூறிய வழி' என்று பொருள் எழுதியுள்ளார்.

### 3.3.3. சமையல் நூல்

... ... ... நுண்பொருட்
பனுவலின் வழாஅப் பல்வேறு அடிசில்

என்பது சிறுபாணாற்றுப்படை அடிகள் (240-1). இங்கும் 'நுண் பொருட் பனுவல்' என்பது பொதுவாகக்குறிப்பிடப் பட்டாலும் 'பனுவலின் வழாஅ அடிசில்' என்ற பின்வரும் தொடரால் சமையல் நூல் என்பது தெளிவாகிறது. இந்த அடிகளுக்கு நச்சினார்க்கினியர் 'கூரிய பொருளை உடைய மடைநூலில் தப்பாத பலவேறுபாட்டை உடைய அடிசில்' என உரை எழுதி யுள்ளார். மணிமேகலையில் 'மடை நூற் செய்தி' (2.22) என்ற தொடர் வந்துள்ளதை நோக்கினால் மடைநூல் (சமையல் நூல்) இருந்த உண்மை அறியலாம்.

### 3.3.4. குதிரைநூல்

'நூனெறி நுணங்கிய கானவில் புரவி' என்ற அகநானூற்று அடிக்கு (214-8) நூல்கூறும் முறைப்படி நுண்ணிதாக அமைந்த காற்று என்று கூறத்தகுந்த குதிரை என்று பொருள். எனவே, குதிரைநூல் என்ற ஒன்று இருந்திருக்க முடியும் என்பது தெளி வாகிறது.

நூலமைப் பிறப்பின் ... ...
... ... ... நன்னான்கு
... ... ... பூட்டி ...

என்ற அகநானூற்று அடிகளும் (400-5,9,11).

நூலோர் புகழ்ந்த மாட்சிய மால்கடல்
வளைகண்டன்ன வாலுளைப் புரவி

என்ற பெரும்பாணாற்றுப்படை அடிகளும்(489-8) குதிரைபற்றி நூல் இருந்ததை உறுதிப்படுத்துகின்றன. நச்சினார்க்கினியர் பெரும்பாணாற்றுப் படை உரையில் ‘குதிரை நூல்’ என்ற குறிப்பு தருகிறார். உ.வே.சா.வும் (பத்துப்பாட்டு ப.259) ‘குதிரையின் இலக்கணங்களைக்கூறும் சாலிசாத்திரம்’ என்பது ஒரு நூல் உண்டு என்று தக்கயாகப் பரணி 665-ஆம் தாழிசை உரையால் அறியப்படுகின்றது’ என்று அடிக்குறிப்பு எழுதி யுள்ளார்[6].

### 3.3.5. அறநூல்

புறநானூற்றில் ‘அறம்பாடிற்றே ஆயிழை கணவ’ (341-1) என்றும் ‘அறம் குறித்தன்று பொருள் ஆகாமையின்’ என்றும் வரும் அடிகள் (362.10) வாழ்க்கைக்கு வழி காட்டும் அறநூல் கள் இருந்ததைப் புலப்படுத்தும்.

பொதுவாக ஆசிரியர் - மாணவர் என்ற முறையில் நேரடித் தொடர்பு மூலமாக பல அறிவுத்துறைகள் வளர்ந்திருக்க வேண் டும்; பின்னோர்கள் பலருக்கும் பயன்தரும் படியாக - நூலாக எழுதும் மரபு தமிழகத்தில் குறைவு என்று பரவலாகக் கருதப் படும் எண்ணத்துக்கு மாறாகச் சமையல்துறை பற்றிக்கூட நூல் கள் இருந்ததாக இலக்கியம் குறிப்பிடுவது வியப்பாகத் தோன் கிறது. ஆனாலும் பலதுறை நூல்கள் இருந்திருக்க வேண்டும்; நூலறிவு சில நிலைகளில் பயன்படுத்தப்பட்டது என்பது இன் னும் இரண்டு வகையால் நிருபணம் ஆகிறது.

தொல்காப்பியம் இலக்கியவகையில் ‘நூல்’ என்ற ஒரு வகையைக் குறிப்பிட்டதோடு (செய்.-75) நூலின் அமைப்பு (செய்-159,165), நூலின் வகை (மரபு 95-9), நூலின் இயல்பு (மரபு 103-4), என்றெல்லாம் விரிவாக விளக்குவது எழுத்து மொழி பலதுறை நூல்கள் எழுதப் பயன்படுத்தப்பட்டன என் பதைப் புலப்படுத்துகின்றன. திருவள்ளுவர் ‘நுண்ணிய நூல்பல கற்பினும்’ (373) என்றும், ‘மதிநுட்பம் நூலோடு உடையார்’ (636) என்றும் நூலறிவு பற்றிக் குறிப்பிடுவதோடு வாய்மொழி மூலம் பெறும் அறிவைக் ‘கேள்வி’ என்றும் நூல் மூலம் படிப் பதைக் ‘கல்வி’ என்றும் வேறுபடுத்திக் காட்டுவதும் பின்சங்க

காலத்தில் எழுத்து இலக்கியம் பரவலாக உபயோகத்தில் இருந்ததைக் காட்டுவதாகவே கொள்ள வேண்டும்.

எனவே சங்க இலக்கியம் நாட்டுப்புறப் பாடல்களின் மரபை ஒட்டி எழுத்து இலக்கியமாக உருவாகியிருக்க வேண்டும் என்பதில் சந்தேகமில்லை.

### 3.4. எழுத்து இலக்கியங்களும் வாய்மொழிப் பாடல்களும்

முதலில் இலக்கியம் உருவாகும்போது வாய்மொழிப் பாடல்களின் பண்புகளை நிறைய பெற்றிருக்கும். ஆனாலும் எழுத்துமொழி இலக்கியத்துக்கு எனச் சில தனிப் பண்புகளையும் கொண்டிருக்கும். எனவேதான் வாய்மொழி இலக்கியம் எழுத்து இலக்கியமாக உருப்பெறுவது இலக்கிய உருவாக்கம் என்று தனிப் பெயரிட்டு அழைக்கப்படுகிறது.

வரதராசன் (1972:32) 'ஐங்குறு நூற்றுப் பாடல்களில் இயற்கை வருணனை மிகுந்து விளங்குவது; தலைவன், தலைவி பெயர் குறிப்பிடப்பெறாதது ஆகியவை சங்க இலக்கியங்களில் காணப்படுவதற்கு எழுதா இலக்கியமாகிய நாட்டுப் பாடல்களில் அவ்வளவு ஆழமாக அந்த மரபு வேரூன்றியிருந்ததே காரணம்' என்பார். மேலும் மீனாட்சிசுந்தரன் (1965ஆ) அடி தொடர், கருத்து ஆகியவை மறித்து வருவது நாட்டுப் புறப் பாடல் மரபினை நினைவூட்டுவதாகக் குறிப்பிட்டுள்ளார். தமிழவன் (1974) இலக்கிய வடிவத்தில் எப்படி நாட்டுப் பாடல்களின் பண்புகள் காணப்படுகின்றன? எப்படி இரண்டும் வேறுபடுகின்றன? என்பதை ஐங்குறுநூற்றிலிருந்து சில உதாரணங்கள் மூலம் விளக்கியுள்ளார்.

1) ஒரு சொல்லே ஒவ்வொரு பாடலிலும் திரும்ப வருவது. இந்தப் பண்பு நாட்டுப்புற பாடல்களில் ஒரு குறிப்பிட்ட அடிக்குக் கடைசியிலோ அல்லது பாடலின் கடைசியிலோ வரும். ஆனால், ஐங்குறுநூற்றில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் வரவில்லை.

2) பாடலில் சில அடிகள் திரும்பத் திரும்ப வருவது.

நாடோடிப் பாடல்களில் இரட்டைப்படை எண்ணுள்ள அடிகள் எல்லாம் (2, 4, 6, 8, 10) ஒரே அடி திரும்பி வர, ஐங் குறுநூற்றில் வேட்கைப்பத்தின் முதல் பாடலில் வந்த அடி மீண்டும் ஏழாவது அடியிலும் அடுத்து பதிமூன்றாவது அடியி லும் அதற்கடுத்து பத்தொன்பதாவது அடியிலும் அதாவது ஆறடிக்கு ஒருமுறை திரும்ப வந்துள்ளது. கிழவற்கு உரைத்த பத்தில் இரண்டு அடிக்கு ஒருமுறை ஒரே அடி வந்துள்ளது.

3) திரும்பிவரும் சொல்லோடு வேறு சொல் ஒட்டி ஒரு குறிப்பிட்ட இடத்தில் நின்று முதலடியில் திரும்பி வருவது எல்லா இடத்திலும் மாறாது நிற்கும். இந்தப் பண்பு நாடோடிப் பாடல்களிலும், ஐங்குறுநூறு 'தாய்க்கு உரைத்த பத்து' என்ற தலைப்பில் வரும் பாடல்களிலும் காணப்படுகின் றன. ஆனாலும் நாடோடிப் பாடல்களில் ஒவ்வொரு அடியி லும் திரும்பி வரல் காணப்பட-ஐங்குறுநூற்றில் 1, 6, 10 ஆகிய அடிகளில் மட்டுமே திரும்பி வரல் காணப்படுகிறது.

4) அந்தாதித் தொடைக்கு நாடோடிப் பாடல்களில் மூலம் இருக்கிறது. எனவே, 'இம்மாதிரி இலக்கியக் கட்டுப்பாடு களாலும் எழுத்து இலக்கியப் பண்பு நாடோடி இலக்கியத் தினின்று மாறுபடுவதை இலக்கியமாதல் (Poetised) என்று தமிழவன் (1974:55 தொ) கூறியுள்ளார். இலக்கியமாதலே இலக்கிய உருவாக்கம் என்று இங்கு குறிப்பிடப்பட்டுள்ளது. இங்கு உருவம், உள்ளடக்கம் ஆகிய இரண்டிலும் நாட்டுப் புறச் செல்வாக்கு எழுத்து இலக்கியத்திலும் குறிப்பாக-சங்க இலக்கியத்திலும் உண்டு என்றுச் பொதுவாகக் கூறலாம். எனவே, இனி நாட்டுப்புறப் பாடல்களை அடிப்படையாகக் கொண்டு எழுத்து இலக்கியம் யாரால், யாருக்காக, எப்படி உருவாக்கப்பட்டது என்று பார்ப்போம்.

### 3.5. எழுத்து இலக்கியப் புலவர்கள் யார் - எவர்?

எட்டுத்தொகை,பத்துப்பாட்டு ஆகிய இரண்டிலும் அடங்கி யுள்ள எல்லா நூல்களையும் கிட்டதட்ட 473 புலவர்கள் பாடி யுள்ளனர். (இந்த விவரமும் இனி பேசப்படும் விவரங்களும்

சஞ்சீவி (1974) யிலிருந்து எடுத்தவை). அவர்களில் 30 பெண் பாற் புலவர்கள். அதாவது கிட்டதட்ட 7 சதவீதத்தினரே பெண் புலவர்கள். சங்கப் புலவர்களில் பல தொழில் செய்தவர்கள் (அதாவது ஆசிரியர், தட்டார், பொற்கொல்லர், கொல்லர், அறுவைவணிகர் போன்றவர்கள்) இருந்துள்ளார்கள். புலவர் பெயரால் அறியப்படும் தொழில்கள் என்று பத்தொன் பதைக் குறிப்பிட்டு அவைகளில் வினைத்தொழில் (வினைத் தொழில் கோசிகீரனார் என்று ஒரு புலவர் பெயர்) என்ன என்பது தெரியவில்லை என்பார் சஞ்சீவி. மேலும் அரசபுல வர்கள் என்ற இன்னொரு தனிப்பட்டியலும் அவர் கொடுத் துள்ளார். அரசர் என்பதையும் ஒரு தொழிலாகக் கொள்ள லாம். இவர்களைத் தொழில்முறைப் புலவர்கள் என்று பொது வாகக் குறிப்பிடலாம். இவர்களை அல்லாமல் வெறும் புலவர் கள் பலர் இருந்திருக்க வேண்டும். இதை

கறிசோறுண்டு வருந்துதொழில் அல்லது
பிறிதுதொழில் அறியா.................
செருமிகு சேஎய் நிற்பா டுநர்கை

(இறைச்சிச் சோறு சாப்பிட்டு வருந்தும் செயல் அல்லாமல் வேறு தொழில் எதுவும் செய்யாமல் அரசர்களைப் பாடுவோர் கை) என்ற புறநானூற்று அடிகள் (14-14, 15,19) தெளிவு படுத்துகின்றன. இவர்களே முழுநேரக் கலைஞர்கள். எனவே முன்னவர்களைப் பகுதிநேரக் கலைஞர்கள் என்று கூறலாம். இந்த வேறுபாடு முக்கியமானது. ஏனென்றால் முழுநேரக் கலைஞர்களின் சமூக நிலையே இலக்கியத்தின் உள்ளடக் கத்தை ஓரளவுநிர்ணயிக்கும் தன்மை உடையது. இதுபற்றிப்பின் பகுதியில் விளக்கப்படும்.

அடுத்துச்சங்கப் புலவர்களில் கோத்திரத்தால் பெயர் பெற்ற புலவர்களாக 11 புலவர் பெயர்கள் காணப்படுகின்றன. இவர்களை அந்தணர் அல்லது பார்ப்பார் என்று சங்க இலக் கிய வழக்கால் குறிப்பிடலாம். இன்றைய மொழியில் இவர் களை ஆரியர்கள் என்று இனப்பெயரால் குறிப்பிடலாம். இவர் கள் பிறமொழி – குறிப்பாக வடமொழித் தொடர்பு உடைய

வர்கள். இந்த நோக்கில் பார்க்கும்போது இன்னும் நிறைய புலவர்களை இந்தப் பிரிவில் அடக்க வேண்டும் என்பது புலனாகிறது. உதாரணமாகக் கபிலர் தன்னை 'யானே பரிசிலன், மன்னும் அந்தணன்' என்று (புறம் 200 - 13) கூறியுள்ளதால் அவரும் அந்தப்பிரிவில் அடங்குவார். புலவர்களின் சமயமும் இலக்கிய உருவாக்கத்திற்கு ஏதோ ஒரு வகையில் உதவி செய்திருக்கவேண்டும். சங்க காலத்தில் புறச்சமயம் என்று கருதப்படுகிற பவுத்த, சமணத்தைச் சேர்ந்த புலவர்களும் இருந்திருக்கிறார்கள். எனவே, புறச்சமயத்தைச் சேராத எல்லாப் புலவர்களையும் அகச்சமயத்தினர் என்று கருதலாம். எனவே, சங்கப்புலவர்களில் அந்தணர் குலத்தைச் சேர்ந்தவர்கள் மொத்தம் எத்தனை பேர் என்று காண வேண்டும். கிட்டதட்ட 10 சதவிதத்தினர் இந்தக் குலத்தைச் சேர்ந்தவர்கள் என்ற கருத்தும் உண்டு (Hart, 1975: 149). இந்த உண்மை பிறமொழியோடு தொடர்புடையவர்கள் தமிழ் இலக்கிய உருவாக்கத்தில் ஈடுபட்டார்கள் என்பதைப் புலப்படுத்துவதோடு வேறுசில உண்மைகளை அறியவும் (அவர்கள் பயன்படுத்திய மொழியில், கருத்துகளில் பிறமொழிச் செல்வாக்கு எப்படியிருக்கிறது என்பதைப்பிரித்து அறிய) உதவியாக இருக்கும். உருவம், உள்ளடக்கம் ஆகியவை பற்றி ஆழமாகப் பார்க்கும்போது புலவர்களின் குலம் பற்றிய அறிவும் துணையாக இருக்கும். கிழார் புலவர்களாக பலபேர் காணப்படுகிறார்கள். அவர்களை வேளாளர் குலத்தைச் சார்ந்தவர்களாகக் கருதலாம்.

சமயத்தால் பெயர் பெற்றவர்களாக மூன்று பேர் குறிப்பிடப்பட்டு ஒருவர் பவுத்தர் என்றும், இருவர் சமணர் என்றும் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. ஆனால், அந்தப் பட்டியலில் இல்லாத சங்க வருணன் (புறம். 360) தேரதரன் (குறுந். 195) சிறுவெண் தேரையார் (புறம் - 362) முதலிய சங்கப்புலவர்கள் பெயரினால் புத்த சார்பினராயினும் காதலையும் பாடியுள்ளனர் என்று கந்தசாமி (1975:327) கூறுகிறார். சஞ்சீவி பட்டியலில் காணப்படும் பவுத்த மதத்தைச் சார்ந்த இளம் போதியா

ரும் காதலைப் பாடியுள்ளார். எனவே, பவுத்தப் புலவர்கள் சங்க இலக்கியத்தில் நான்கு பேர் என்று கொள்ளலாம். சமணப் புலவர்களாகச் சஞ்சீவி குறிப்பிட்ட இரண்டு புலவர்களையே சமணரின் கொடையை விரிவாக ஆராய்ந்த அறவாணனும் (1974:26 தொ.) குறிப்பிட்டுள்ளார். எழுத்தாக்கத்தில் அதிகம் ஈடுபட்ட சமணர்கள் ஏன் அதிக அளவில் இலக்கிய உருவாக்கத்தில் பங்குகொள்ளவில்லை என்று சிந்தித்து விடை காண அவர் முயன்றுள்ளார்.

> சங்கப் பாக்களைத் தொகுத்தவர், தொகுப்பித்தவர் அனைவரும் வைதீக சமயச் சார்பினர் ஆவர். தொகுப்புப் பணியில் பெரும்பங்கு பெற்றவர் என்று கருதப் படும் கடவுள் வாழ்த்துப் பாடிய பெருந்தேவனார் தீவிரவைதிகர் ஆவார். அவர் முகப்பில் பாடிச்சேர்த்த பாடல்களே இதனை உறுதிப்படுத்தும் தலைமைச் சான்று...... ஆதலான் சங்க இலக்கியங்களில் சைனப் புலவர்களின் பாடல்கள்பல இடம் பெறாமல் போனமைக்கும், சைன சமயக் குறிப்புகள் வெளிப்படையாக விரவிக் கிடக்காமல் போனமைக்கும் காரணம்; அவ்விலக்கியங்களைத் தொகுத்த வேதசமயத்தார் வேண்டுமென்றே செய்த புறக்கணிப்பே ஆகும்.

என்ற அறவாணனின் (1974:45) வாசகம் சமணப்புலவர்கள் குறைவாக இருப்பதற்கான காரணத்தைத் தெளிவுபடுத்துகிறது. இது ஓரளவு உண்மை; ஆனாலும், இன்னும் ஏதாவது காரணம் இருக்கலாமோ என்று நினைக்க வேண்டியிருக்கிறது.

சமணர்களோடு பள்ளிக்கூடங்களும், அற இலக்கியங்களும், இலக்கண நூல்களும் அதிகம் தொடர்புபடுத்தப்படுவது இதற்கு ஆதாரமாகும். பதினெண் கீழ்க் கணக்கு நூல்கள், தொல்காப்பியம் ஆகியவற்றில் சமண சமயச் செல்வாக்கு இருக்கிறது என்று எல்லோரும் ஒத்துக்கொள்கிறார்கள். எனவேதான் சமணர்கள் அக, புறப்பொருளைக் கொண்ட சங்க இலக்கியத்தில் பெரும்பங்கு கொள்ளவில்லை போலும். எழுத்தாக்க காலத்துக்குப் பிறகு களப்பிரர் காலத்தில் சமணர் எழுச்சி பெற்று விளங்கியபோதே அற இலக்கியத்திலும், இலக்கணத்திலும் ஈடுபட்டு உழைத்திருக்க வேண்டும். ஆகவே, சங்க இலக்

கியத்தில் சமண பவுத்தர்கள் பற்றிய குறைவான குறிப்புகள் கிடைப்பதற்குத் தொகுத்தோரும் தொகுப்பித்தோரும் மட்டு மல்லாமல் இலக்கியப் பொருள் காரணமாக அவர்கள் ஈடு பாடு குறைவானதும் காரணமாக இருக்கலாம். அதாவது இலக்கிய உருவாக்கத்தில் அகச்சமயத்தினர் பணி அதிகம்; புறச்சமயத்தினர் பணி குறைவு.

மேலும், வைதிக சமயத்தவர்களுக்கும் புத்த, சமண சம யத்தவர்களுக்கும் இடையே போராட்டம் நடைபெற்று வைதிக சமயத்தார் வெற்றி பெற்றிருக்க வேண்டும் என்பதற் கும் புறநானூற்றில் குறிப்பு இருப்பதைக் குருசாமி (1974:92) எடுத்துக் காட்டியுள்ளார்.

... ... ... ... ... ... ஒரு முதுநூல்
இகல் கண்டோர் மிகல்சாய்மார்
மெய்யன்ன பொய்யுணர்ந்து
பொய்ஒ ராது மெய்கொளீஇ
மூவேழ்துறையும் முட்டின்றுபோகி
உரைசால்மருகின் உரவோர் மருக

என்ற புறநானூற்று (166. 5-9) அடிகள் மூலம் வேத நெறிக்கு மாறுபட்டவர்களின் வலிமையைக் குறைப்பதற்கு அவரது மெய் போன்ற பொய்யை அறிந்துகொண்டு அந்தப் பொய்யை நீக்கி மெய்யை எடுத்துச் சொல்லி இருபத்தொரு வேள்வியை யும் குறையில்லாமல் செய்து முடித்த புகழ் உடையவர் என்று கூறும்போது, மதக் காழ்ப்பும் (மெய்யன்ன பொய்), மதப் போராட்டமும் (ஒரு முதுநூல் இகல் கண்டோர் மிகல்சாய் மார்) அரசு ஆதரவிலே (சாய்மார் ... மெய்கொளீஇ) நடை பெற்றதும், அரசர் வேத நெறியை ஆதரித்ததும் வெளிப்படு கின்றன. அதனாலும் சமணர் இலக்கிய உலகிலிருந்து ஒதுங்கி யிருக்கலாம் என்று அனுமானிக்கலாம்.

சங்கப் புலவர்களை இன்னொரு கோணத்திலும் பார்க்க வேண்டும். அதுதான் வட்டார அடிப்படை. தொண்டை நாட்டுப் புலவர்களாக ஒன்பது பேரும், சேரநாட்டுப் புலவர்க ளாக 24 பேரும், சோழநாட்டுப் புலவர்களாக55 பேரும், பாண்டி

நாட்டுப் புலவர்களாக 90 பேரும் இருந்ததாக ஆராய்ச்சி அட்ட வணை (சஞ்சீவி, 1974: 36 தொ.) பட்டியல் போட்டுக் காட்டு கிறது. இதனால் மொத்தம் 473 பேர்களில் 178 புலவர்களுக்கே அவர்களுடைய வட்டாரம்-நாடு அடையாளம் காட்டப்பட்டுள் ளது. மீதியுள்ள புலவர்களையும் கூடியவரை வட்டார அடை யாளம் காண்பது சங்ககால நிலைமொழி, கிளைமொழி வழக்கு கள் பற்றியும் இலக்கிய உருவாக்கம் எந்த வட்டாரத்தில், ஏன் நடைபெற்றது என்பது பற்றியும் அறிந்துகொள்ள உதவும் அதுவும் இலக்கியத்தை முழுமையாக அறிந்துகொள்ள கை கொடுக்கும்.

ஆகவே, சங்க இலக்கியப் புலவர் யார்-எவர் என்பதில் இன் னும் விரிவான ஆராய்ச்சி நடைபெற வேண்டும் என்பதை இது புலப்படுத்துகிறது.

## 3.6. இலக்கியம் யாருக்காக?

இங்கு புறப்பாடல்களையும் அகப்பாடல்களையும் பிரித்துப் பார்ப்பது நல்லது.

புறப்பாடல்களில் பதிற்றுப்பத்து சேரமன்னர்கள் பத்து பேரின் புகழைப்பாடுவது. புறநானூறு தமிழ்நாட்டு மன்னர் கள், சிற்றரசர்கள், வள்ளல்கள், சிறந்த குடிமக்கள் முதலான வர்களின் பெருஞ் செயல்களும், அரும்பண்புகளும் பற்றியது. எனவேதான் புறப்பாடல்களை வீரயுகப் பாடல்கள் என்று இந்தக்காலத் தமிழறிஞர் பலரும் கூறிவருகிறார்கள். புறப் பாடல்கள் மேல்குடி மக்களின்—உயர்ந்தோரின் வாழ்க்கையைச் சித்ரிப்பதாகவும், மக்களின் வீர உணர்ச்சியைத் தூண்டி அரசர் களுக்கு உதவியாக போரில் ஈடுபடும்படி வைப்பதாகவும் உள்ளன (ஜான் மார், 1958: 453; கைலாசபதி, 1968: 84 தொ.). அதே சமயத்தில் சங்ககாலத்தில் நடைபெற்ற சமுதாய மாற்றத்தையும் -இனக்குழு அழிந்து நிலஉடைமையாக மலரும் காலகட்டத்தையும் குறிக்கிறது (கா. சுப்பிரமணியன் 1982:5). புறப்பாடல்களில் சீறூர் மன்னர், பெரியமன்னர், முதுகுடி மன் னர், வேந்தர் ஆகிய நான்கு வகைப்பட்ட சமூகத் தலைவர் களைக் காணமுடிவதாகவும், இவர்களுள் வேந்தர்கள் மீதி

யுள்ள மூன்றுவகை தலைவரோடு உறவு கொண்டதாக மகட்பாற்காஞ்சி பாடல்கள் புலப்படுத்தும் என்பார் மாதை யன் (1989:51). எனவே, உயர்ந்தகுடிகள் அரசியல் நோக்கி லேயே சித்தரிக்கப்பட்டுள்ளார்கள்.

புறநானூற்றில் புலவர்களின் வறுமை சித்தரிக்கப்பட்ட போதிலும் அது அரசர்களிடம் பரிசில் தருவதற்காகத் தூண்டும் வகையிலே அமைக்கப்பட்டுள்ளது (உதாரணம், புறம். 159) என்பதே உண்மை. கைலாசபதி (ப.12.தொ) அகப்பாடல் களில் புறத்திணைச் செய்திகள் (உதாரணமாக அகநானூற்றில் 288 புறவரலாற்றுச் செய்திகள்,) உள்ளன என்று குறிப்பிட்டுள் ளார். அதனால் அவர் அகத்திணைக்குரியவர்களும் அர சர்களாக இருக்க வேண்டும் என்பார். அகத்திணைப் பாட லில் கலித்தொகையில் மட்டுமே பொதுமக்கள் சிலரின் காதல் வாழ்க்கை விளக்கப்பட்டுள்ளது. ஆனால், மாணிக்கம் (1962: 189,191) அகத்திணை இலக்கியம் ஆணுக்கும் பெண்ணுக்கும் பால்கல்வி (Sex education) போதிப்பதற்காக இயற்றப்பட் டது என்பார். இதற்கு ஆதாரமாக அகத்திணைப் பாடல்களில் தலைவன் தலைவி பெயர் குறிப்பிடாமல் இருப்பதையும், மெய்ப்பாட்டியலில் புணர்ச்சி நடைபெறும் போது ஏற்படும் மெய்ப்பாடுகளை விவரிப்பதையும் எடுத்துக்காட்டியுள்ளார். அப்படியானால் இலக்கியம் எல்லோருக்கும் பொதுவானது என்று ஆகும். அதேசமயத்தில் இலக்கியத்தின் உண்மைப் பய னும் சுருங்கிவிடும்.எனவே, இலக்கியத்தை வாழ்க்கைக்கு நேரடி யாகப் பயன்படும் கருவியாக மட்டும் கொள்வது பொருந்தாது.

### 3.7. என்ன இலக்கியம்

சங்க இலக்கியம் என்பது அகத்திணைப் பாடல்களும் புறத்திணைப் பாடல்களும் அடங்கியது- அதாவது மனிதன் குடும்ப வாழ்க்கை, புறவாழ்க்கை பற்றிய சமயச் சார்பற்றவை. ஆனால் எட்டுத்தொகை நூல்களில் பரிபாடலிலும் (இன்று கிடைக்கும் 22 பாடல்களில் 14 பாடல்கள் கடவுளைப் பற்றி யது) பத்துப்பாட்டு நூல்களில் திருமுருகாற்றுப் படையும் சமயம் பற்றியவை என்பது குறிப்பிடத்தகுந்தது. எனவேதான்

இவை பின் சங்க காலத்தவை எனச் சிலரால் கருதப்படுகிறது. முன் சங்க இலக்கியம் அகமும், புறமும் ஆக அமைந்தாலும் அரசு, சமூக வளர்ச்சி ஆகியவற்றைப் பற்றியும் பலகுறிப்பு களைக் கொண்டது. கடைசியாக இலக்கிய கர்த்தாக்களின் சமூக மதிப்பு என்ன என்று பார்ப்போம்.

## 3.8. படைப்பாளிகளும் சமூகமும்

படைப்பாளிகள்-புலவர்கள் சமூகத்தில் யார் யாராலெல் லாம் மதிக்கப்பட்டார்கள் என்று அறிவது இலக்கியம் யாருக் கெல்லாம் உதவியாக இருந்தது என்பதைப் புலப்படுத்தும்.

சங்க காலத்தில் அரசர்களிடத்தில் புலவர்கள் செல்வாக் குப் பெற்றிருந்தார்கள் என்பது பரவலான கருத்து. வேந்தர் களுக்குள்ளும் சிற்றரசர்களுக்குள்ளும் போர் நிகழ்ந்த போது தலையிட்டு அமைதி ஏற்படுத்தியதுதான் காரணம் என்று கூறப்படுகிறது. இங்கு இலக்கியப் பணியும் அடங்கியிருக்கிறது. புறப்பாடல் ஒன்றில் (புறம்.72) பாண்டியன் நெடுஞ்செழியன் தன் பகைவர்களை முறியடிக்காவிட்டால் 'மாங்குடிமருதன் முதலான சிறப்புடைய புலவர்கள் என் நாட்டைப் பாடாமல் நீங்கும் தாழ்வு அடைவேனாக' என்று கூறியுள்ளதால் (புறம் 72) 'போர்க்களத்திற்கு வெகுண்டெழும்போதும் நினைந்து போற்றும் அளவிற்கு வேந்தர்களின் நெஞ்சில் புலவர்களைப் பற்றிய மதிப்பு விளங்கியது' என்று வரதராசன் (1972:44) கூறியுள்ளார். அதே சமயத்தில் புலவர் ஒருவரைப் பகைவரின் ஒற்றன் எனக்கருதிச் சோழன் கொல்லத் துணிந்தபோது கோவூர் கிழார் பாடிய பாட்டு காட்டும் சமூக உண்மை வேறு விதமானது. எல்லா அரசர்களும் எல்லாப் புலவர்களையும் ஒரே மாதிரி மதிப்பிடவில்லை என்பதே அந்த உண்மை. ஒவ் வொரு அரசரும் ஒருசில புலவரையே பாராட்டினார்கள். ஒரு புலவருக்கும் ஒரு அரசனுக்கும் இருந்த தொடர்பு அந்தப் புல வனை இன்னொரு அரசன் சந்தேகிக்க வைத்துவிட்டது. ஓரி டத்தில் நெருங்கிய தொடர்பு இன்னொரு இடத்தில் ஆபத் துக்கு இடம் ஆகிவிட்டது. எனவே, புலவர்களும் ஒரு குறிப் பிட்ட அரசனின் ஆதரவாளர்களாகி விடுகிற நிலையை இது

காட்டிவிடுகிறது. பாரியின் ஆதரவாளராக இருந்த கபிலர், மலையமான் திருமுடிக் காரியைப் பாடிய பாட்டில் (121.2,3,6)

பலரும் வருவர் பரிசின் மாக்கள்
வரிசை அறிதலோ அரிது.........
..................
பொது நோக்கு ஒழிமதி புலவர் மாட்டே.

என்று கூறியஅடிகள் புலவர்களின் திறமையை மட்டுமல்லாமல் தனிப்பட்ட உறவையும் குறிப்பதாகக் கொள்ளலாம். தனிப்பட்ட நெருக்கமே புலவர்கள் அரசனின் குடும்ப வாழ்க்கையிலும் அறிவுரை கூறுவதற்குக் காரணமாகும். புலவர்கள் அரசர்களால் பெரிய அளவில் மதிக்கப்பட்டதற்குப் பலரும் எடுத்துக் காட்டுவது மோசி கீரனார் பாட்டு (புறம். 50) ஆகும். சேரமான் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை அறியாமல் அரசு கட்டிலில் ஏறித் தூங்கிவிட்ட மோசிகீரனாரைத் தண்டிக்காமல் அவர் எழுந்திருக்கும் வரை கவரி வீசியதைப் புலவரே 'அதூஉஞ்சாலும் நற்றமிழ் முழுது அறிதல், என்று குறிப்பிட்டது தமிழ் அறிஞர் உலகில் பலரைப் புல்லரிக்க வைத்துவிட்டது.

இந்தப் பாடலை எடுத்துக்காட்டிச் சிவஞானம் (1974:19) 'சங்ககாலத்தில் தமிழ்ப் புலவருக்கு இருந்த மதிப்பு அரசியல் சம்பிராயதங்களுக்கு அப்பாற்பட்டது' என்பார். கிருஷ்ணன் (ப.84)இந்த அடியை எடுத்துக்காட்டிப் புலவரின் பாராட்டுரை 'தமிழ் மீது மன்னனுக்குள்ள பற்றினால் தமிழறிந்த புலவரை மன்னித்துவிட்டான்' என்ற பொருளை மட்டும் உள்ளடக்கி நிற்கவில்லை; இன்றைய மொழியில் கூறின், அம்மன்னன் உள்ளத்தே 'தேசிய உணர்ச்சி' அரும்பிவிட்ட நிலையினை அப்பாடல் வரி புலப்படுத்துகிறது' என்று விளக்கியுள்ளார்.

ஆனால், உண்மையில் அரசர்களின் தமிழ்ப் பற்றுமட்டும் அல்லாமல் சமயப்பற்றும் அந்தப்பாடல் காட்டுவனவாக உள்ளது என்பது கவனிக்கத் தகுந்தது.

இவண் இசையுடையோர்க் கல்லது அவண்
உயர்நிலை உலகத்து உறையுள் இன்மை
விளங்கக் கேட்ட மாறுகொல்
வலம்படு குரிசினீ ஈங்கிது செயலே.

என்ற அந்தப் பாடலின் கடைசி நான்கு அடிகள் – இந்த உலகத்தில் புகழ் உடையவர்களுக்குத்தான் மேலுலகம் உண்டு என்ற சமயக் கருத்துகாரணமாகவும் அரசன் கவரி வீசினான் என்பதைப் புலவரே கூறியதாகக் குறிப்பிடுகின்றன. இடைக் காலத்தில் சமயமும் தமிழும் இறண்டறக்கலந்து தழைத் தோங்குவதாகப் பேசப்படும் குரலின் ஆரம்பமாக இதைக் கொள்ளலாம். எனவே, புலவர்களுக்கு அரசர்கள் கொடை கொடுத்து ஆதரித்ததற்கு அரசியல், மொழி, சமயம் ஆகிய மூன்று காரணங்களும் கலந்தே செயல்பட்டுள்ளன.

புலவர்களைப் பொது மக்கள் எவ்வளவு தூரம் மதித்தார்கள்; சமூகம் அவர்களுக்கு என்ன தகுதியைத் தந்தது என்பதற்கும் இலக்கிய ஆதாரம் தேடவேண்டும். அப்பொழுது தான் சமூகத்தில் மொழி, இலக்கியம் பற்றிய உணர்வுகளைக் கணிக்க முடியும்.

---

# 4. தொகையாக்கம்

## 4.0. முன்னுரை

'தொகைநூல்கள் என்று வழங்கப்படும் தகுதியுடையன வாய்த்தமிழில்இதுவரை ஏறக்குறைய இரண்டாயிரம் வெளியீடுகள்வந்துள்ளன' என்று சுந்தர சண்முகனார்(1972:419)குறிப்பிட்டுத் தொகுப்புக்கு இலக்கணம் பன்னிரண்டாம் நூற்றாண்டில் எழுதப்பட்ட தண்டியலங்காரத்தில் இருப்பதையும் (ப.84) சுட்டிக் காட்டியுள்ளார்.

> தொகை நிலைச் செய்யுள் தோன்றக் கூறின்
> ஒருவர் உரைத்தவும், பல்லோர் பகர்ந்தவும்
> பொருள், இடம், காலம், தொழில் என நான்கினும்
> பாட்டினும் அளவினும் சுட்டிய வாகும்.

என்பதே அந்தப்பாடல் (பொது அணியியல்.5). இதையொட்டிச் சாமிநாத ஐயர் (1935: அ)

> ஒவ்வொன்றும் பலரால் செய்யப்பட்டுத் தொழில், அளவு, பாட்டு, பொருள் என்பனவற்றுள் ஒவ்வொன்றால் தொகுக்கப்பட்டமையின் இவை தொகை(அதாவது எட்டுத்தொகை) என்று பெயர் பெற்றன

என்று பொதுவாகவும், புறநானூறு பற்றி

> இந்நூற் செய்யுட்களாற் பாடப்பட்டவர்கள் ஒரு காலத்தார் அல்லர்; ஒரு குலத்தார் அல்லர்; ஒரு சாதியார் அல்லர்; ஓரிடத்தாரும் அல்லர்; பாடியவர்களும் இத்தன்மையரே; இவர்களில் அந்தணர் சிலர்; அரசர் பலர்; வணிகர் பலர்; வேளாளர் பலர்; பெண்பாலாரும் உளர்

என்று சிறப்பாகவும் (ப.கூ) கூறியுள்ளதை எல்லாச் சங்க இலக்கியத்துக்கும் பொருந்தும் பொது உண்மையாகக் கொள்ளலாம்.

ஞான சம்பந்தர் (ஏழாம் நூற்றாண்டு) 'தொகையாக்கினான்' என்று கூறுவதால் தொகையாக்கம் (Anthologisation) என்று இங்கு பொதுவாகக் குறிப்பிடப்படுகிறது. இந்தத் தொகையாக்கம் மொழி வளர்ச்சியில் ஒரு வளர்ச்சி நிலையைக் குறிப்பிடுவதாக முன்னரே விளக்கப்பட்டது. அதை முழுமையாகத் தெரிந்து கொள்ள, தொகையாக்கம் என்ற நிகழ்வில் புதைந்த சில பொது உண்மைகளையும் (5.1), தொகுக்கப் பட்ட வரிசை முறைகளையும் (5.2), தொகை நூல்களின் அமைப்பையும் (5.3), தொகுக்கப்பட்ட நோக்கத்தையும் காலத்தையும் (5.4), மொழி வளர்ச்சியில் அதன் பங்களிப்பையும் (5.5) தொயையாக்க உணர்வையும் (5.6) அறிந்து கொள்ள முயலுவோம்.

## 4.1. *சில பொது உண்மைகள்*

தொகுப்புக் கலையைப் பற்றி விரிவாக ஆராய்ந்த சுந்தர சண்முகனார் (1972:21) மனிதனுக்கு உள்ள இயல்பு ஊக்கங்களில் (Instincts) திரட்டு ஊக்கம் (Acquisition) என்பது ஒன்று என்பதை உளவியல் நோக்கில் எடுத்துக்காட்டி, இந்தத் திரட்டு ஊக்கமே பழைய உதிரிப்பாடல்களை ஒரு நூலாகத் தொகுத்து வைப்பதற்கும், பல நல்ல நூல்களைத் திரட்டி வைப்பதற்கும் காரணம் என்று விளக்கியுள்ளார்.

தொகுப்புக்கு அரசியல், சமூக, பண்பாட்டுப் பின்னணியும் உண்டு என்பதும் அறியத் தகுந்தது. இந்தப் பின்னணியை நூல்களைத் தொகுத்த முறையாலும், தொகையாக்கத்தின் வரலாற்றாலும் ஓரளவு உணர்ந்து கொள்ள முடியும். பொதுவாகத்தொகையில் சேர்த்துள்ள பாடல்களைப் பொறுக்குவதில் தொகுத்தோர், தொகுப்பித்தோர் ஆகிய இருவரின் விருப்பு-வெறுப்பும், நோக்கமும் கலந்திருக்கும் என்பதை மறுக்க முடியாது. இங்கு பாடல்கள் எண்ணிக்கை வரையறை, பாடல் வைப்பு முறை ஆகிய இரண்டிலும் தொகுத்தவரின் உள் நோக்கு புலப்படும். இதைப் பற்றிச் சங்க இலக்கியங்கள் பலவற்றைப் பதிப்பித்த உ.வே.சா. நினைத்துப் பாாத்துள்ளார்.

பாடல்கள் எண்ணிக்கையில் குறிப்பிட்ட அளவு பாடல்கள் கிடைக்காத போது கையாண்ட முறையைப் பற்றிச் சாமிநாதையர் கீழ் வருமாறு குறுந்தொகைப் பதிப்பில்(1937:2) குறிப்பிட்டுள்ளார்.

> பல புலவர்கள் தனித்தனியே இயற்றிய அகப்பொருள் செய்யுள்களைத் தொகுத்து அவற்றை அடியளவாய் வகைப்படுத்தியபின் அவற்றைத் தொகுத்தவர்கள் ஒவ்வொன்றிலும் நானூறு பாக்கள் இருக்கும்படி தற்காலத்துப் புலவர்கள் இயற்றியவற்றையும் சேர்த்து அமைத்தார்கள் என்று கருத இடம் உண்டாகின்றது.

என்ற வாசகத்துக்கு விளக்கம் தேவையில்லை. இதை 'நிறைத்தல்' என்று பொதுமைப் படுத்தலாம். இந்தக் கருத்து பின்னால் வந்த அறிஞர்களாலும் (உ-ம. வையாபுரிபிள்ளை 1956:49; சுந்தர சண்முகனார் 1972:252) ஒத்துக்கொள்ளப்பட்டுள்ளது. சுந்தர சண்முகனார். (ப.253) இன்னொரு சாத்தியக் கூறையும் எடுத்துக் காட்டியுள்ளார். அதுதான் எண்ணிக்கையில் அதிகமாகக் கிடைத்தபோது சிலவற்றை நீக்கிவிடுவது இதைக் 'குறைத்தல்' என்று பொதுமைப்படுத்தலாம். எனவே, தான் கைலாசபதி (1968: 123) தொகுத்தவரின் மனஉணர்வையும் காலத்தேவையையும் தொகை நூல்களில் காணமுடியும் என்று குறிப்பிட்டுள்ளார்.

தொகையில் சேர்க்கப்படாத சங்கப்பாடல்கள் இன்று நமக்குக் கிடைக்காததால் தொகுத்தவரின் பாடல் தேர்வுகளைக் கொண்டு அவருடைய இலக்கிய, அரசியல், சமூக உணர்வுகளை எளிதாகப் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆனால் பாடல் வரிசை முறைகளைக் கொண்டு ஓரளவு அந்த உணர்வுகளை ஊகிக்க இடம் இருக்கிறது. புறநானூற்றில் உள்ள மகட்பாற் காஞ்சிப்பாடல்கள் சமூக வளர்ச்சியை ஒட்டி இனக்குழுக்களாக (சிறூர் மன்னர்) வாழ்ந்த நிலையிலிருந்து நிலவுடைமை சமுதாயமாக (வேந்தர்) மாறிய நிலையைக் குறிக்கிறது என்பார்கள் (உ-ம். கா. சுப்பிரமணியன், 1982:5). எனவே, மகட்பாற் காஞ்சிப் பாடல்கள் காலத்தால் பழமையானதாக இருக்க வேண்டும். ஆனாலும் புறநானூற்றுத்

தொகுப்பில் மூவேந்தர்களைப்பற்றிய பாடல்கள் முதலில் வைக்கப்பட்டிருப்பதால் தொகுத்த காலத்தின் அரசியல் உணர்வைப் பிரதிபலிப்பதாகக் கொள்ளலாம். இப்படிக் கிடைக்கும் பாடல்களைக் கொண்டும், சமூக, அரசியல், இலக்கிய உணர்வுகளைப் பற்றி ஊகிக்க வாய்ப்பு இருக்கிறது. அவை பின்பகுதியில் விளக்கப்படும். மேலும் தொகையாக்க வரலாறும் தொகுத்த முறையும் கூடத் தொகுத்தவரின் நோக்கத்தைப் புலப்படுத்தும். ஆகையால், அதை விரிவாகப் பார்ப்போம்.

## 4.2. தொகையாக்க வரலாறு

எட்டுத்தொகை நூல்களிடையே காணப்படும் சில பொதுமை குறிப்பிடத்தகுந்தவை. அது வரலாற்று அறிவுக்கும் உதவியாக இருக்கும்.

அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு ஆகிய நான்கும் அகப்பாடல்கள்; அதாவது பொருளால் ஒற்றுமை உடையவை; பாடல் அளவால் மட்டும் வேற்றுமை உடையவை. புறநானூறு, பதிற்றுப்பத்து ஆகியஇரண்டும் புறப் பாடல்கள் ஆனதால் பொருளான் ஒற்றுமை உடையவை. பாடியோர், பாடிய முறையால் ஒரு குலத்தைச்சேர்ந்த, அரசனைப் பற்றிய பத்துப் பாடல்கள் என்ற முறையால் பதிற்றுப் பத்தும் பல அரசர்களைப் பற்றிய பாடல்கள் என்ற முறையால் புறநானூறும் வேறுபட்டவை.

ஒரு தொகை நூலில் உள்ள பாடல்களைப் பாடிய புலவர் களின் பாடல்கள் இன்னொரு தொகை நூலிலும் உள்ளன. அப்படியே ஒரு அரசனைப் பற்றிய பல புலவர்கள் பாடி யுள்ளார்கள் (உ-ம். ஆய் அண்டிரனை ஐந்து புலவர்களும் பாரியை ஏழு புலவர்களும் பாடியுள்ளார்கள்); அவை பல தொகை நூல்களிலும் (உ-ம். பாரி மற்றிய பாடல்கள் புற நானூறு, அகநானூறு. நற்றிணை, குறுந்தொகை, பத்துப்பாட்டு ஆகியவற்றிலும் வல்வில் ஓரியைப்பாடிய பாடல்கள் புறம், அகம், குறுந்தொகை, பத்துப்பாட்டு ஆகியவற்றிலும்) காணப்படு

கின்றன. எனவே, தொகை நூல்கள் ஆனாலும் ஒரு நூலுக்கும் இன்னொரு நூலுக்கும் பொருள், பாடினோர், பாடப்பட்டோர் என்ற வகையில் தொடர்பு உண்டு. இந்த உண்மையைச் சாமிநாதையர் தான் பதிப்பித்த ஒவ்வொரு நூலின் முன்னுரையிலும் பாடினோர் வரலாறு, பாடப்பட்டோர் வரலாறு என்ற தலைப்பில் விளக்கியுள்ளார். இதுவே தொகையாக்கத்தின் வரலாறு பற்றி அறிய உதவியாய் இருக்கிறது.

### 4.2.1.1. நூல்களின் வரிசைமுறை

எட்டுத்தொகை நூல்களில் எது முதலில் தொகுக்கப் பட்டது. அடுத்தடுத்துத் தொகுக்கப்பட்டவை எவை? என்று கேள்வி கேட்டுத் தொகையாக்க வரலாற்றைத் துவக்கி வைத்த பெருமை சாமிநாதையருக்கே உரியது.

### 4.2.1. முதல் நூல்

குறுந்தொகை முதல் பதிப்பில் சாமிநாதையர் (1937: கூ) இதுவே முதலில் தொகுக்கப்பட்டிருக்க வேண்டும் என்று சில காரணங்களைக் குறிப்பிட்டுள்ளார்.

புலவர் பெயர்களைக் கொண்டு ஆராய்ந்தால் எட்டுத் தொகையில் முதலில் தொகுக்கப்பட்ட நூல் குறுந்தொகை என்பது தெரியவரும். காக்கைப்பாடினியார் நச்செள்ளையார் என்பது ஒரு புலவர் பெயர். அவருடைய இயற்பெயர் நச் செள்ளையார் என்பது; விருந்துவரக் கரைந்த காக்கையைப் பரராட்டினமையின் ('விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே' குறுந். 210: 6) காக்கைப்பாடினியார் என்ற சிறப்புப் பெயர் அவருக்கு உளதாயிற்று. குறுந்தொகையை முதலில் தொகுக்கையில் நச்செள்ளையார் என்பவர் காக்கைப்பாடினி யார் எனக் குறிக்கப்பட்டார்: அப்பால் தொகுக்கப்பட்ட நூல்களில் (பதிற்றுப்பத்து-ஆறாம்பத்து, புறம். 278) அவ் வாறே குறிக்கப்பட்டார் என்பார் உ.வே.சா.

அப்படியே கயமனார் என்ற புலவர்க்கு அந்தப் பெயர் குறுந்தொகையில் ('கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும்' - 9.6)

என்ற அடியால் ஏற்பட்டிருக்கலாம். அவர் இயற்றிய பாடல் பிறதொகைகளிலும் (புறம் 254, அகம். 145முதலிய 19 பாடல் கள்) கயமனார் என்ற சிறப்புப் பெயராலேயே குறிக்கப் பட்டிருக்கிறது.

> இவ்வாறு குறுந்தொகையிலுள்ள சொற்றொடர் காரணமாகப் பெயர் பெற்ற புலவர்கள் அப்பெயரா லேயே பிறநூல்களில் வழங்கப் பெறுவது போல அந் நூல்களிலுள்ள செய்யுட்பகுதி காரணமாகப் பெயர் பெற்றாரது பெயர்ஒன்றேனும் குறுந்தொகையில் வர வில்லை. இதனாலும் முதலிற் குறுந்தொகை தொகுக்க பட்டது என்பது தெளிவாகும்

என்பது உ.வே.சா. வாசகம். இங்கு தன்னுடைய கருத்துக் குரிய காரணத்தைக் குறிப்பிட்டு உடன்பாட்டாலும், எதிர் மறையாலும் சான்று காட்டித் தெளிவாக விவாதித்துள்ளார். இவர், தொகுக்கப்பட்ட முதல் நூல் எது என்பதில் மட்டுமே கவனம் செலுத்தியுள்ளார். பிற நூல்கள் எப்பொழுது தொகுக் கப்பட்டன என்பது பற்றி அவர் விவாதித்ததாகத் தெரிய வில்லை.

**4.2.1.2. தொகைகளின் வரிசை**

4.2.1.2.1. அ. வையாபுரிப்பிள்ளை

வையாபுரிப்பிள்ளை (1952), சாமிநாதையரின் கருத்தை யும் காரணத்தையும் ஒத்துக்கொண்டு ஏனைய தொகை நூல் கள் தொகுக்கப்பட்ட காலம் பற்றி வரையறுக்க முயன்றுள் ளார். தொகுத்தோர், பாடியோர் பாடப்பட்டோர் ஆகிய இரண்டிலும் தொகை நூல்களுக்கு இடையே காணப்படும் ஒற்றுமை, பாடல் அடிகள் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டே இந்த முயற்சியில் ஈடுபட்டுள்ளார்.

> குறுந்தொகை 270 ஆம் செய்யுளைப் 'பாண்டியன் பன் னாடு தந்தான்' எபவன் இயற்றினானெனக் காணப் படுகிறது. நற்றிணையில் இரண்டு செய்யுட்களை(98, 301) இயற்றியவன் பாண்டியன் மாறன் வழுதி எனக் காணப்படுகிறது. முன்கூறிற்ய பன்னாடு தந்தானுக்கு மாறன் வழுதி என்ற பெயரும் உள்ளது.பிறர் யாருக்கும் இப்பெயர் உள்ளதாகத் தெரியவில்லை. நற்றிணையைத்

> தொகுப்பித்தான் 'பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதி' என்று கூறப்படுவது இதனை நன்கு விளக்குகிறது. எனவே பன்னாடு தந்தானும் மாறன் வழுதியும் ஒருவரே என்று கொள்வதற்குச் சான்று உளது....
>
> மேற்கூறியபடி 'பன்னாடு தந்தான்' குறுந்தொகைச் செய்யுள் ஒன்றை இயற்றியவனாதலினால் இந்நூலைத் தொகுத்த காலத்துக்கு முன்பாகவேனும் அல்லது சம காலத்திலேனும் இவன் வாழ்ந்தவன் ஆதல் வேண்டும். நற்றிணையைத் தொகுத்தவனும் இவனேயாவான். ஆகவே, இவ்விரண்டு நூல்களும் ஏறத்தாழ சமகாலத்தில் தொகுக்கப்பட்டனவென்று கொள்ளலாம். இங்ஙனமாயினும் முதலில் தோன்றியது குறுந்தொகை என்பது வேறொரு செய்தியால் தெளிவாகிறது

என்பது வையாபுரிப்பிள்ளை (1952 : 71 தொ.) வாசகம். இன்னொரு செய்தி என்பது கயமனாரைப் பற்றியது. அதுவும் உ.வே.சா. எடுத்துக்காட்டியது தான்.

> அகநானூற்றைத் தொகுப்பித்தவன் உக்கிரப்பெரு வழுதி. இவன் இயற்றிய செய்யுட்கள் அகநானூற்றிலும் (26), நற்றிணையிலும் (98) காணப்படுகின்றன. எனவே, நற்றிணை தொகுக்கப்பெற்ற காலத்தேனும் அல்லது சிறிது முன்பாகவேனும் உக்கிரப் பெருவழுதி வாழ்ந்தவனாதல் வேண்டும். இவன் அகநானூறு தொகுத்த காலத்தும் இருந்தவன். ஆதலால் இவன் இருந்த காலத்திலேயே நற்றிணையும் அகநானூறும் தொகுக்கப்பெற்றன என்று கொள்ளலாம். இரண்டு நூல்களும் பெரும்பாலும் சமகாலத்தன என்று கொள்ளுதல் பொருத்தமுடைத்தாம். இங்ஙனமாக குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு என்ற மூன்று தொகை நூல்களும் ஏறத்தாழச் சமகாலத்தன என்பது விளங்கும். எனினும் குறுந்தொகை முற்பட்டும் நற்றிணை இதன்பின்னும் அகநானூறு இதற்குப் பிற்பட்டும் தொகுக்கப்பட்டன என்று ஒருவாறு துணியலாம்.

என்ற அவருடைய வாசகத்தில் (ப.73). 'முன் – பின்' 'ஏறத்தாழ', 'சமகாலம்' போன்ற தொடர்கள் அவருக்குள்ள ஐயத்தைப் புலப்படுத்துகின்றன. கூறியது கூறலும் காணப்படுகிறது. இந்த ஐயம் ஏனைய நூல்களின் தொகுக்கப்பட்ட

காலத்தை நிர்ணயிப்பதிலும் கடைசியாகத் தொகுக்கப்பட்ட வரிசையை முடிவு செய்வதிலும் காணப்படுகிறது.

பின்னர் புறநானூறு, ஐங்குறுநூறு என்ற இரண்டு நூல்களையும் எடுத்துக்கொண்டு (ப.74)

> புறநானூறு தொகுக்கப்பெற்றதற்கு முன்பே ஐங்குறுநூறு தொகுக்கப் பெற்றததால் ஒரு தலை

என்றும், இன்னொரு இடத்தில் (ப.77)

> குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு என்ற மூன்றும் ஏறத்தாழச் சமகாலத்துத் தொகுக்கப்பட்டிருக்க வேண்டும் என்று முன்னர்த் துணிந்தோம். இத்துணிவோடு பொருந்த ஐங்குறுநூறு எல்லாவற்றிலும் முற்படத் தொகுக்கப்பட்டது என நாம் கொள்ளலாம்

என்றும்

> புறநாறு இம்மூன்றிற்கும் (குறுந்தொகை முதலியன) பின் தோன்றியிருக்கவேண்டும் (ப.75) என்றும் விளக்கியுள்ளார். பதிற்றுப்பத்தின் தொகுக்கப்பட்ட காலத்தைப் பொறுத்தவரையில் குறுந்தொகையின் பின் பதிற்றுப்பத்துத் தொகுக்கப்பட்டிருக்க வேண்டும் என்பதும் எளிதில் புலப்படும். (ப.75)... புறநானூற்றின் முன்பாகப் பதிற்றுப்பத்து தோன்றியிருக்க வேண்டும். (ப,76). 'ஐங்குறு நூற்றின்பின்னும் குறுந்தொகை முதலியவற்றின் பின்னும் தோன்றியது பதிற்றுப்பத்து (ப.80)

கன்றும் குறிப்பிட்டுள்ளார். ஆனால் தொகுத்த வரிசையைக் கூறும்போது வையாபுரிப்பிள்ளை குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, புறநானூறு என்று கூறியுள்ளார். இது முன்னர் வாதித்த முறைக்கு-ஐங்குறுநூறு, குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு, பதிற்றுப் பத்து, புறநானூறு, என்பதற்கு மாறுபட்டது. இதற்குக் காரணம் உ.வே. சா. வின் செல்வாக்கு என்பார் அகத்தியலிங்கம் (1983:90). ஆனால் 1956 இல் அவர் (1956:29) ஐங்குறுநூறு, குறுந்தொகை, நற்றிணை, பதிற்றுப்பத்து, அகநானூறு, புறநானூறு என்று குறிப்பிட்டுள்ளார். இங்குப் பதிற்றுப் பத்துக்குப் பிறகு அகநானூற்றினை அமைத்ததற்கு அவர் காரணம் ஒன்றும் குறிப்பிடவில்லை.

4.2.1.2.2. சுந்தரசண்முகனார்

அதிக அடியையுடைய பாடல்கள் முதலில் தொகுக்கப்பட்டிருக்கப் பட்டிருக்கலாம் எனவும் நெடுந்தொகை, குறுந்தொகை, நற்றிணை, புற நானூறு, ஐங்குறுநூறு என்பது தொகுப்பு வரிசைமுறை எனவும் சுந்தரசண்முகனார் (1972:231) கருதுகிறார். மேலும் பாடல் அடிகளால் பெயர் பெற்ற புலவர் அந்தப் பாடலைத் தவிர அந்தப் பெயரால் வழங்கும் ஏனைய பாடல்களையும் பாடியதாக எப்படிக் கொள்வது என்பதற்கும் விளக்கம் தர முயன்றுள்ளார். ஒரே வீட்டிலிருந்து சேகரிக்கப்பட்ட பாட்டுக்கள் ஆசிரியர் பெயர் இல்லாமல் இருந்தால் ஒரு பாடல் அடியால் பெயர் வைத்து ஏனைய பாடல்களையும் அதே ஆசிரியர் பெயரால்தொகுத்தவர் என்று குறிப்பிட்டிருக்க வேண்டும் என்பதே அவருடைய விளக்கம் (ப.230). இது ஒருவரே ஒரு சமயத்தில் ஒரு இடத்தில் பாடிய பாடலாக இருந்தால் பொருத்தமாக அமையும். பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு ஆகியவை சேர நாட்டிலும் குறுந்தொகை, நற்றிணை அகநானூறு பாண்டிய நாட்டிலும் தொகுக்கப்பட்டன என்னும் போது வெவ்வேறு அடிப்படையில் ஒருவர் தொகுக்கும் போது இன்னொரு தொகுப்பாளரிடமிருந்து சுவடி பரிமாற்றம் செய்து கொண்டிருக்கவேண்டும் என்று வேண்டுமானால் கொள்ளலாம். எப்படியாயினும் இவர் கருத்து வையாபுரிப்பிள்ளை கருத்துக்கு எதிர்வாதமாக உள்ளது என்பது சுட்டிக்காட்டத் தகுந்தது. ஏனென்றால் வையாபுரிப் பிள்ளை குறைவான அடிகளை உடைய பாடல்கள் முதலில் தொகுக்கப்பட்டிருக்கிறது என்று கருத, சுந்தர சண்முகனார் அதிக அடியை உடைய பாடல்கள் முதலில் தொகுக்கப்பட்டிருக்க வேண்டும் என்று வாதாடுகிறார்.

4.2.1.2.3 அகத்தியலிங்கம்

அகத்தியலிங்கம் (1983:81 - 98) தொகுப்பு வரிசையைப் பற்றி விரிவாக ஆராய்ந்து புதியதொரு வரிசை முறையை முன்மொழிந்துள்ளார். பாடல் தொடர்களால் பெயர் பெற்ற புலவர்கள் குறுந்தொகையில் வந்து அந்தப் புலவர்கள் பாடல்

கள் பிறதொகை நூல்களில் வருவதால் குறுந்தொகை முத லில் தொகுக்கப்பட்டது என்ற வாதத்தை இவர் ஏற்றுக் கொள்ளவில்லை. இதற்கு மறுப்பாக

> 1. ஒரு பாடலைப்பாடிய காரணத்தினால் ஏற்படும் பெயர் முன்னாலும் பின்னாலும் பாடப்பட்ட பிற பாடல்களைக் குறிப்பிடும் போதும் ஏற்படலாம் (ப.95).
> 2. வேறு நூல்களினால் சிறப்புப் பெயர் பெற்ற கீரனாரோ (அகம்.398 மட்டும்) அல்லது இரும்பிடர்த் தலையாரோ (புறம்.3 மட்டும்) அல்லது அவர்களைப் போன்ற பிறரோ குறுந்தொகையில் பாடியதாகத் தெரியவில்லை. அவர்கள் வேறு நூல்களில் பாடி, ஆனால் இயற்பெயர் குறிப்பிடப்பட்டிருந்தால் குறுந் தொகை முன்னர் தொகுக்கப்பட்டிருக்க வேண்டும் எனக் கருதலாம் (ப.96).

என்று அவர் இரண்டு வாதங்களைக் குறிப்பிட்டுள்ளார். பதிற் றுப்பத்து, ஐங்குறுநூறு, அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை புறநானூறு என்ற வரிசையைக் குறிப்பிட்டு

> சங்க இலக்கியத் தொகுப்பு முதன்முதலில் சேர நாட்டிலேயே தொடங்கிற்று என்றும், யானைக்கட் சேய்மாந்தரஞ்சேரல் இரும்பொறைதான் இதற்கு மூல காரணமாக இருந்தான் என்றும், அவனைப் பின் பற்றி அவன் காலத்தில் வாழ்ந்த உக்கிரப்பெருவழுதி அகநானூற்றைத் தொகுத்தான் என்றும், அதன்பின் னர் நற்றிணை, குறுந்தொகை, புறநானூறு ஆகிய நூல் கள் தொகுத்தான் என்றும் முடிவு கட்டலாம். தொகுக்கப்பட்ட காலமேயன்றிப் பாடல்களின் காலம் பற்றி இங்குக் குறிப்பிடவில்லை.

என்று அவர் முடித்துள்ளார் (ப.98). பதிற்றுப்பத்து சேர மன்னர்கள் பற்றிய பாடல்கள் ஆனதால் சேர அரசர் ஒருவ ரால் தொகுக்கப்பட்டிருக்க வேண்டும் என்பது ஏற்றுக்கொள் ளத் தகுந்ததே. மேலும் பதிற்றுப்பத்தில் பாடிய புலவர்கள் வேறு தொகை நூல்களிலும் பாடியுள்ளார்கள். இதில் முக்கிய மாக இப்பொழுது நமக்குக் கிடைக்கும் கடைசி பத்தாகிய ஒன்பதாம் பத்தைப் பாடிய பெருங்குன்றூர்க்கிழார் அகம், புறம், நற்றிணை, குறுந்தொகை நூல்களில் பாடியிருக்கிறார். எனவே, 'ஒன்பதாம் பத்து குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு ஆகியவற்றிற்கும் பிந்தியது அன்று' என்பது

அவரது வாதம் (ப.93). மேலும் பத்தாம் பத்து யானைக்கட் சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறையைப் பற்றியது என்று பலர் கருதுவதும் அவனே ஐங்குறுநூறு தொகுப்பித்தோனாக இருப்பதும் பதிற்றுப்பத்து தொகுத்த பிறகு ஐங்குறுநூறு தொகுக்கும் எண்ணம் ஏற்பட்டிருக்க வேண்டும் என்றும் ஐங்குறுநூறு பாடிய ஐந்து புலவர்களில் மூவர் சேரநாட்டின ராக இருப்பதும் அதற்குத் தூண்டுகோலாக இருந்திருக்கலாம் என்றும் அவர் கருதுகிறார்(ப.94). மேலும் ஐங்குறுநூறு திணை வைப்பு முறையிலும் சேரநாட்டுவாடை வீசுவதை உ.வே.சா. (1920) சுட்டிக்காட்டியுள்ளதை அறியும்போது தொகுப்புக்குப் பின்னர் 'நாட்டுப்பற்று' புதைந்துள்ளதை உணரலாம். ஐங்குறு நூற்றில் திணை வைப்பு முறை தொல்காப்பிய முறையிலிருந்து மாறுபட்டிருப்பதை நச்சினார்க்கினியர் கவனித்திருந்தாலும் உரையாசிரியர் என்ற முறையில் பொருளதிகார உரையில் (சூ.51) 'சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே' என்று சூத்திர அடியை விளக்கும் போது

> உம்மை எதிர்மறையாகலின் இம்முறையன்றிச் சொல்லவும்படும் என்பது பொருளாயிற்று. இது தொகைகளிலும் (எட்டுத்தொகை), கீழ்க்கணக்குகளி லும் இம்முறை மயங்கிவரக் கோத்தவாறு காண்க

என்று பொதுவாகவும் கலித்தொகை உரை முன்னுரையில்

> சொல்லாத முறையாற் சொல்லவும் படும் என்று பொருள் கொண்டமை பற்றி பாலை, குறிஞ்சி, மருதம், முல்லை யெனக் கோத்தார் (இது கலித் தொகை திணை வரிசை பற்றியது). ஐங்குறு நூற்றி னும் பிறவற்றினும் வேறுபடக் கோத்தவாறு காண்க

என்று வெளிப்படையாகவும், இலக்கண ரீதியாக மட்டுமே விளக்கியுள்ளார்.

> இந்நூலைத் (ஐங்குறுநூறு) தொகுத்தோரும் தொகுப்பித்தோரும் முறையே மலைநாட்டுப் புலவ ரும் மலைநாட்டு அரசரும் ஆதலால் ஆதன் அவினி என்னும் சேரனைத் தலைவனாகப் பெற்ற முதற் பத்தை உடைய மருதம் முதலிலும் நொண்டிப் பத்தை உடைய நெய்தல் மருதத்தின் பின்னும்... சேர்க்கப் பெற்றன.

என்ற உ,வே.சா. வாசகத்தில் (1920:viii). திணை வைப்பு முறையிலும் 'அரசுவிசுவாசம்' புலப்படுவது வெளிப்படுத்தப் பட்டுள்ளது. எனவே, நாட்டு விசுவாசம் மட்டும் அல்லாமல் அரசு விசுவாசமும் தொகுப்புக்குக் காரணமாக இருந்திருக் கலாம் என்று ஊகிக்கலாம். இந்தக் கருத்து பின்னர் உறுதிப் படுவதைக் காணலாம்.

4.2.1.2.4. புதியது

அ) பதிற்றுப்பத்து

பதிற்றுப்பத்து முதலில் தொகுக்கப்பெற்றது என்பதற்கு இன்னும் இரண்டு காரணங்கள் காட்டலாம்.

1. சங்கப்பாடல்கள் வாய்மொழிப்பாடல்கள் வழி பிறந்தது என்றும், பாணர் பாடல்கள் என்றும் முன் இயலில் குறிப்பிடப் பட்டது அல்லவா! பாணர்கள் அரசர்களின் மரபுவழி (genealogy) குறித்துப் பாடுவது வழக்கம் (கைலாசபதி 1968:126). அதற்கு ஆதரவாக அரசு உதவியுடன் ஒரு புலவர் தொகுக்க முன் வந்திருக்க வேண்டும்.

2. சேர நாட்டில் தொல்காப்பியர் பிறந்து வாழ்ந்திருக்க வேண்டும் என்ற கருத்தை வையாபுரிப் பிள்ளை (1949:20) சில ஆதாரங்களோடு விளக்கியுள்ளார். தொகையாக்கம் இலக்கியக் கல்விக்கு உதவி செய்வது. அதுவே இலக்கண உருவாக்கத்துக்கு அடிப்படை. எனவே, தொகையாக்கத்துக்குச் சேரநாடு வழி காட்டியது, அந்த நாடு இலக்கியக் கல்வியில் கொண்ட ஊக்கத்தின் வெளிப்பாடாகக் கொள்ளலாம்.மேலும் பதிற்றுப் பத்தே தொகுப்பதற்கு எளிமையானது. எனவே, பதிற்றுப்பத்து முதலில் தொகுக்கப்பட்டிருக்க வேண்டும் என்று உறுதியாக நம்ப வேண்டியிருக்கிறது.

அகத்தியலிங்கம் கூறியுள்ளபடி பதிற்றுப் பத்துக்குப் பிறகு சேர நாட்டில் சேரமன்னர் ஆதரவில் ஐங்குறுநூறு தொகுக்க பட்டிருக்க வேண்டும் என்பதும் பொருத்தமாகவேபடுகிறது.

பதிற்றுப்பத்துக்கும் ஐங்குறுநூறுக்கும் உள்ள ஒரு ஒற்றுமை சுட்டிக்காட்டத்தகுந்தது. நாட்டுப்பாடல் அடிப்படையில் ஒரு

துறை பற்றிய பத்துப் பாடல்கள் கொண்டவை; ஒவ்வொரு திணையும் பத்துப்பத்துப் துறைகளாக அமைந்தவை; திணை துறை அடிப்படையில் தொகுப்பதற்கு எளிமையானவை ஐங்குறுநூறு. அதாவது பாடப்பட்ட அரசனை ஒட்டிச் சுலபமாகப் பதிற்றுப்பத்தைத் தொகுக்க முடிந்தது போல, ஐங்குறுநூறு திணை – துறையை ஒட்டி எளிதாகத் தொகுக்கப் பட்டிருக்கலாம்.

ஆ) புறநானூறு

ஐங்குறுநூற்றைத் தொகுத்த பின்னரே புறநானூறு தொகுக்கப்பட்டது என்பதை வையாபுரிப் பிள்ளை கருத்தை அகத்தியலிங்கம் (1983:96) ஒத்துக் கொள்கிறார். ஆனால், இருவரும் குறுந்தொகை முதலிய அக இலக்கியம் தொகுக்கப்பட்ட பின்னரே புறநானூறு தொகுக்கப்பட்டிருக்க வேண்டும் என்று கருதுகிறார்கள். என்றாலும் இங்கு புறநானூறு தொகுப்பு பற்றி ஒரு உண்மை கவனிக்கத் தகுந்தது. கடவுள் வாழ்த்துக்குப் பிறகு சேரர் பற்றிய பாடலே முதலில் தொகுக்கப்பட்டிருபதாலும் மூவேந்தர்களைப் பற்றிய பாடல்களில் சேரர்கள் பற்றிய பாடல்கள் முதலில் அமைந்திருப்பதாலும் சேர நாட்டில் தொகுக்கப்பட்டிருக்கலாம் என்பார் வையாபுரிப்பிள்ளை 1956:55). புறநானூற்றில் மூவேந்தர்களைப் பற்றிய முதல் பதினைந்து பாடல்களில் சேரர் பற்றிய பாடல்கள் (2,5,8,11,14)முதலாவதாகவும் பாண்டியரைப்பற்றியவை இரண்டாவதாகவும் (3,6,9,12,15) சோழரைப் பற்றியவை (4,7,10,13,16) மூன்றாவதாகவும் வைக்கப்பட்டுள்ளது இந்த உண்மையை விளக்கும். மகட்பாற் காஞ்சிப்பாடல்களின் வைப்பு முறை கொண்டு மூவேந்தர் தமிழக அரசியலில் செல்வாக்கு பெற்ற காலம் என்பதை முன்னரே குறிப்பிடப்பட்டதும் இங்கு நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும். அப்படியானால் முன்னரே தொகுப்புக் கலை தெரிந்த சேரநாட்டில் சேரர்கள் ஆதரவில் புறநானூறு,ஐங்குறு நூறுக்குப் பிறகுத் தொகுக்கப்பட்டிருக்கலாம். ஆதனால் தான் பாண்டிய மன்னர்கள் அகம் பற்றிய பாடல்களைத் தொகுக்கும் முயற்சியில் பின்னரே ஈடுபட்டிருக்க வேண்டும்.

இ) குறுந்தொகை முதலியவை

நற்றிணையைத் தொகுப்பித்தவன் பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதி என்பதாலும், அகநானூற்றைத் தொகுத்தவன் மதுரை உப்பூரிக்கிழார் மகனார் உருத்திர சன்மரும் தொகுப்பித்தவன் பாண்டியன் உக்கிரப் பெருவழுதி என்பதாலும் இந்த இரண்டு நூல்களும் பாண்டிய நாட்டில் பாண்டியர்கள் ஆதரவில் தொகுக்கப்பட்டன என்பது தெளிவு. குறுந்தொகையைத் தொகுத்தவன் பூரிக்கோ; தொகுப்பித்த வன் யார் என்று தெரியவில்லை. ஆயினும் வையாபுரிப் பிள்ளை (1952:71) இந்தப் பூரிக்கோ, மதுரை உப்பூரிக்கிழான் என்பவரோடு குடிபெயரினால் தொடர்பு உடையவர் என்று கருதி பூரிக்கோவும் மதுரை நகரினர் என்று கொண்டு குறுந் தொகையும் மதுரையில் தொகுக்கப்பட்டது என்பார். இத னால் குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு ஆகிய மூன்றும் பாண்டிய நாட்டில் பாண்டிய மன்னர்களின் ஆதரவில் தொகுக் கப் பெற்றிருக்கலாம் என்று கொள்வதில் தவறு இல்லை என்றே நினைக்க வேண்டியிருக்கிறது.

சேர நாட்டில் அரசியல் உணர்வோடு ஆரம்பிக்கப்பட்ட தொகையாக்கப் பணி ஐங்குறு நூற்றைத் தொகுத்ததன் மூலம் அங்கேயே இலக்கிய உணர்வும் உள்ளடக்கியதாய் அமைந்தது. ஆனால் அதிலும் அரசியல் உணர்வு கலந்திருப்பது முன்னே சுட்டப்பட்டது. இதுவே பாண்டிய நாட்டுக்கும் பரவியிருக்க வேண்டும். பாண்டிய நாட்டில் அக இலக்கியங்கள் தொகுக்கப் பட்டாலும் அக இலக்கியத்துக்குள்ளும் புறம் பற்றிய செய்தி கள் உள்ளடக்கியிருப்பதால் (கைலாசபதி 1968:31) அங்கும் இலக்கிய உணர்வும் அரசியல் உணர்வும் கலந்தே செயல் பட்டன என்று கொள்ளலாம்.

சேர நாட்டில் தொகுக்கப்பட்ட நூல்கள் புறம், அகம் என்ற வகையைச் சேர்ந்து ஒன்றுக் கொன்று தொடர்பு இல்லாமல் இருப்பதால் பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு, புற நானூறு என்று வரிசைப்படுத்திப் பார்க்க வாய்ப்பு இருக்கிறது.

ஆனால் பாண்டிய நாட்டில் தொகுத்த மூன்று நூல்களும் பொருளால் ஒற்றுமைப்பட்டு அடியால் மட்டும் வேறுபட்டு இருப்பதால் அவைகளின் தொகுப்பு வரிசையை ஊகிப்பது கடினமாக இருக்கிறது. அதனால்தான் இது பற்றிய கருத்தில் ஒற்றுமை காண முடியவில்லை. குறைந்த அடிகள் உடைய பாடல்களின் தொகுப்பில் ஆரம்பித்து அதிக அடிகள் உடைய பாடல்களின் தொகுப்பில் முடிகிறது என்பதால் ஏறுமுகமாகத் தொகுக்கப்பட்டது என்ற வையாபுரிப்பிள்ளை கருத்தை நாம் பொதுமைப்படுத்தலாம். அதிக அடி-குறைந்த அடி - நடு பட்டது என்ற முறையில் தொகுக்கப்பட்டது என்று சுந்தர சண்முகனார் கூறுவதால் ஏறி-இறங்கி-ஏறுகிறமுகம் என்று சுந்தரசண்முகனார் கருத்தையும் இறங்குமுகம் என்று அகத்தியலிங்கம் கருத்தையும், பொதுமைப்படுத்தலாம். இப் படிப்பட்ட தொகுப்புப்பணி கூட்டு முயற்சியாக நடைபெற்றி ருக்க வேண்டும் என்றே ஊகிக்க வேண்டியிருக்கிறது.

இன்னொரு நோக்கிலும் தொகையாக்க வளர்ச்சியை விளக்கலாம். தொகையாக்கம் ஒரு வித களப்பணி. அந்த முறை யில் பார்க்கும் போது பதிற்றுப்பத்து ஒரு நாட்டில் (சேரநாடு), ஒரு இடத்தில் (அரசவை) இருந்த பாடல்களின் தொகுப்பு. ஐங்குறு நூற்றில் உள்ள ஐந்து புலவர்களில் மூவர் சேர நாட்டி னர். எனவே, அவைகளை எளிதாகத் தொகுத்திருக்க வேண் டும். ஆனால் அக இலக்கிய உணர்வோடு ஏனைய இரண்டு திணைக்குரிய பாடல்களைத் தமிழகத்தின் பிற பகுதிகளில் தேடி கண்டு பிடித்திருக்க வேண்டும். எனவே, உண்மையான களப்பணி ஐங்குறு நூற்றுத் தொகுப்பில் துவங்கியது எனலாம். புறநானூற்றைப் பொறுத்த வரையில் சேர நாட்டில் கிடைத்த பாடல்கள் குறைவாகவே இருக்க வேண்டும். எனவே, பாடல் களைத் தேடி, அகம்/புறம் என்ற இலக்கிய உணர்வோடு தொகுப்பு முறையில் அரசியல் உணர்வு புலப்படும்படி தொகை யாக்கம் செய்திருக்க வேண்டும். இந்த நிலையில் களப்பணியின் எல்லை விரிவடைந்து கொண்டு போவதும் புலனாகிறது.

பாண்டிய நாட்டில் உருவான மூன்று தொகை நூல்களுக் கும் களப்பணி முழு அளவில் தேவைப்பட்டிருக்கும். எப்படியா

யினும் தொகையாக்கம் அரசியல் உணர்வும் இலக்கிய உணர்வும் கலந்தது என்பதில் ஐயம் இல்லை.

## 4.3. தொகையாக்கமும் இலக்கியக் கோட்பாடும்

தொகை நூல்களை அகம், புறம் என்று பெரும் பிரிவாகப் பிரிக்கலாம். அது முழு இலக்கிய உணர்வே ஆகும். இந்தத் தொகை நூல்களைப் பொறுத்த வரையில் இன்னொரு வகையிலும் முழு இலக்கிய உணர்வு அதாவது அக/புற இலக்கியக் கோட்பாடு அடங்கியிருக்கிறது என்பதும் சுட்டிக்காட்டத் தகுந்தது.

### 4.3.1. அகம்/புறம்

சில பாடல்களை அக இலக்கியத்தில் சேர்ப்பதா அல்லது புறஇலக்கியத்தில் சேர்ப்பதா என்ற கேள்வி தொகுத்தவருக்குத் தோன்றியிருக்க வேண்டும். ஏனெனில் அக இலக்கியமும் புற இலக்கியமும் பாடியவர்கள் 77 பேர் (சஞ்சீவி, 1973:208). அதாவது இன்று நமக்குக் கிடைக்கும் நூல்களில் ஒரு புலவருடைய பாடல்கள் இரண்டு வகையான தொகை நூல்களிலும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. ஆனால் தொகுத்தவர் ஏதோ ஒரு கோட்பாட்டின் அடிப்படையில் பிரித்துத் தொகுத்திருக்க வேண்டும்.

உதாரணமாக, புறநானூற்றில் உள்ள 83 – 85 ஆகிய மூன்று பாடல்களும் நக் கண்ணையார் பாடியவை. அகப்பாடல்களாக- அதாவது, கைக்கிளைப் பாடல்களாகக் கருதத்தகுந்தவை. கைக்கிளையே புறத்திணையின் கூறாகக் கருதி புறநானூற்றில் சேர்த்திருக்க வேண்டும். இப்பாடல்களைப் புறநானூற்றுள் தொகுத்த காரணம் தலைவன் பெயர் தெரிந்தவை என்பார்கள். ஆனால் அங்ஙனம் தலைவன், தலைவி பெயர் தெரிந்த பாடல்கள் (உ.ம். குறுந்தொகை 31, 130) பல அகத்திணையில் சேர்க்கப்பட்டுள்ளன என்று உதாரணங்கள் காட்டியுள்ளார் செயராமன் (1977:42). எனவே, அது புறநானூற்று தொகுப்பு ஆசிரியரின் இலக்கியக் கோட்பாட்டைப் புலப்படுத்துகிறது. புறம். 86–ஆம் பாட்டும் ஒரு வகையில் கைக்கிளைப்

பாட்டே. ஆனால் அதற்கு வாகைத்திணை என்று பிற்குறிப்பு எழுதப் பட்டிருக்கிறது. அதாவது புறமாகக் கருதப்பட்டிருக் கிறது. எனவே, தொகுப்பாசிரியர்கள் அகம், புறம் என்று பாகுபடுத்தியதில் அவர்களின் இலக்கிய உணர்வு (அதாவது இலக்கியக் கோட்பாடு) புதைந்திருக்கிறது.

ஐங்குறு நூற்றில் திணைவரிசை ஓரளவு அரசியல் நோக்கு உடையது என்று மேலே விளக்கப்பட்டது. அகநானூற்றில் திணைவைப்பு கணித முறைப்படி அமைக்கக்காரணம் என்ன? போன்ற கேள்விகளும் சிந்திக்கத் தகுந்தவையே.

### 4.3.2 அகம்: எழுதிணை/ஐந்திணை

இங்கு இன்னொரு உண்மையும் சுட்டிக் காட்டத் தகுந்தது. ஐங்குறுநூறும் அகநானூறும் அகத்திணை என்பது ஐந்து திணை களே உடையது என்றகருத்தையும் புலப்படுத்துகின்றன. ஏனென்றால் ஒருவர் பாடிய பாடல்கள் ஒன்றுக்கு மேற்பட்ட தொகை நூல்களில் காணப்படுகின்றன. தொல்காப்பியர் அகம் ஏழு திணைகளை உடையது என்ற கருத்து உடையவர். ஆனால் மாணிக்கம் (1962:73, அ.கு.உ) கருத்துப்படி அகநானூற்றுப் பாடல் 135 பெருந்திணையாகக் கொள்ளத் தகுந்தது பாலைத் திணைப்பாடலாகத் தொகுப்பாசிரியரால் கருதப்பட்டிருக்கிறது. அப்படியே குறுந்தொகை பாடல் 31-ஆம் பாடல் பெருந்திணை யையும் 78-ஆம் பாடல் கைக்கிளையையும் சார்ந்தது என்று அவர் கருதுகிறார். குறுந்தொகையில் துறை மட்டுமே உள்ளது. 31-ஆம் பாட்டுக்கு 'நொதுமலர் வரைவுழித் தோழிக்குத் தலை மகள் அறத்தொடு நின்றது' என்ற பிற்குறிப்பும் 78- இல் 'பாங்கன் தலைமகற்குச் சொல்லியது' என்பதும் காணப்படு கின்றன. எனவே, தொகுத்தவர்கள் அகத்திணை என்பது ஐந் திணை என்ற கோட்பாடு உடையவர்கள் என்பதை இவை காட்டுகின்றன (ஜான்மார், 1958: 334, 339 பார்க்கவும்). எனவே அகநானூற்றில் நிச்சயமாகத் தொகுப்பு ஆசிரியரும், குறுந்தொகை தொகுப்பாசிரியரும்; குறிப்பாளரும் கைக்கிளை, பெருந்திணை என்ற இரண்டும் அகத்திணைக்கு உரியவை என்று கருதவில்லை என்பது தெளிவாகிறது. இதன் உள்கிடக்கை

என்ன? தொகுத்தவர் தொல்காப்பியத்தைப் புறக்கணித்தாரா, அல்லதுதொல்காப்பியர் தொகுப்பின் திணை அடிப்படையை பிற்-குறிப்பை எழுதியவர் புறக்கணித்தாரா என்ற கேள்வி யாகவும் இதை நினைத்துப் பார்க்கலாம் இந்தக் கேள்விக் குரிய விடையைக் கடைசியில் பார்ப்போம் எப்படியானா லும் தொகுப்புக்குள் இலக்கியக் கோட்பாடும் புதைந்துள்ளது என்பது குறிப்பிடத்தகுந்தது.

### 4.3.3. புறம்: எழுதிணை/ஏழுக்கு மேற்பட்டவை

தொல்காப்பியர் அகத்திணையை ஏழாகப் பாகுபடுத்தி யது போலவே புறத்திணையையும் ஏழாக (வெட்சி, வஞ்சி உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண்) பாகுபடுத்தி யுள்ளார். ஆனால், புறநானூற்றுப் பிற்குறிப்பு வெட்சி, கரந்தை வஞ்சி, நொச்சி, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண், கைக் கிளை, பெருந்திணை, பொதுவியல் என்று பதினோரு திணை களைக் குறிப்பிடுகிறது (இராசம் இராமமூர்த்தி 1977:54). ஒன் பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த புறப்பொருள் வெண்பா மாலை உழிஞைத்திணையைச் சேர்த்துப் பன்னிரண்டாகக் குறிப்பிட்டுள்ளது.

புறநானூற்றுப் பிற்குறிப்பு உழிஞைத் திணையைப் புறக் கணித்துவிட்டது. ஆனாலும் உழிஞைத் திணைக்குரிய துறை களாகத் தொல்காப்பியர் கூறிய இருபது துறைகளுள், ஐந்து துறைகளுக்குரியதாக புறநானூற்றுப் பாடல்கள் அமைந்துள் ளன என்று இராசம் இராமமூர்த்தி (ஷெ) குறிப்பிட்டுஉதாரண மும் காட்டியுள்ளார். புறநானூற்று பிற்குறிப்பில் உள்ளவாகை (புறம். 42,37,77,284) வஞ்சி (36) நொச்சி (109) ஆகிய திணைப் பாடல்கள் உழிஞைத் திணைக்கு உரிய பாடல்களாகக் கருத லாம் என்பார் அவர். எனவே, இங்கும் தொகையாக்கத்தில் புறத்திணைப் பாகுபாடு பற்றிய இலக்கியக் கோட்பாடு நோக் கில் கருத்து வேறுபாடு இருப்பது தெளிவாகிறது.

### 4.4. தொகை நூல்களின் அமைப்பு

ஒவ்வொரு தொகை நூலும் கடவுள் வாழ்த்து, பாடல்கள், பிற்குறிப்பு, உரை என்ற நான்கு கூறுகளை அதிக பட்சமாகக்

கொண்டது (சுவலபில் 1974: 11). ஏனெனில் உரை சில நூல் களுக்கு இல்லை.

மேலும் பாடல்களை வகைப்படுத்திய முறையும் தொகை யாக்கம் பற்றிய சில கருத்துகளைப் புலப்படுத்துகின்றன. எனவே இவைகளை ஒவ்வொன்றாகப் பார்போம்.

**4.4.1. கடவுள் வாழ்த்து**

நாம் மேலே குறிப்பிட்ட ஆறு தொகை நூல்களுள் பதிற்றுப்பத்துக்குக் கடவுள் வாழ்த்து கிடையாது. அது ஒருக் கால் முதல் பத்து கிடைக்காததால் இல்லையோ? அல்லது ஒவ் வொரு அரசனைப் பற்றிய பத்துப்பாடல் என்பதால் கடவுள் வாழ்த்தே சேர்க்கப்படவில்லையோ என்பது அறிந்து கொள்ள முடியவில்லை.

கடவுள் வாழ்த்து கிடைக்கும் ஐந்து நூல்களுக்கும் பாரதம் பாடிய பெருந்தேவனாரே கடவுள் வாழ்த்துப் பாடியுள்ளார். அவைகளில் மூன்று சிவபெருமான் பற்றியும் ஒன்றொன்று திருமால், முருகனைப் பற்றியும் உள்ளன.

புறநானூறு மட்டும் கடவுள் வாழ்த்துப் பாடலையும் சேர்த்து நானூறு பாட்ல்களைக் கொண்டுள்ளது. ஏனைய நான்கு நூல்களிலும் (அகம்., குறுந்., நற்., ஐங்.) நூலில் குறிப் பிட்ட எண்ணிக்கைக்கு மேலே கூடுதலான பாடல்களாகக் கட வுள் வாழ்த்துப்பாடல்கள் அமைந்துள்ளன.

1. ஒரே புலவர் பாடியிருப்பதும்; 2. பாரதம் பாடிய பெருந்தேவனார் என்பவர் இயற்றியதாகக் காணப்படும் பார தத்தில் தெள்ளாறு எறிந்த நந்திவர்மன் போர் வெற்றியைக் குறிப்பதும்; கடவுள் வாழ்த்துப் பாடல் பொருள், நூலின் உள்ளடக்கத்துக்கு-பொருளுக்கு மாறுபட்டு இருப்பதும் காரண மாக பல்லவர் காலத்தில் பாடப்பட்டு தொகை நூல்களில் சேர்க்கப்பட்டிருக்கலாம் என்பார் ஜான்மார் (1958:70,தொ.). சங்க இலக்கியங்களில் சமயக் குறிப்புகள் இருந்தாலும் அடிப் படையில் அவை சமயச் சார்பற்ற நூல்களே. சங்க இலக்கிய மொழியில் கூறவேண்டுமானால் நூலுக்குள் கடவுள் 'கருப்'

பொருளாக - இருக்கக் கடவுள் வாழ்த்துப் பாடல்களில் உரிப் பொருளாக-முழுமுதற் பொருளாகக் காணப்படுகிறார். எனவே, கடவுள் வாழ்த்து தொகையாக்கத்தில் கடைசியாகச் சேர்க்கப் பட்டது என்பது ஜான்மார் கருத்து. ஆனாலும் புறநானூற்றில் மட்டுமாவது கடவுள் வாழ்த்தைச் சேர்த்தே நானூறு பாடல் கள் இருப்பது அந்தக் கருத்தை ஏற்கத் தடையாக இருக்கிறது. சங்கப்பாடல்கள் இயற்றப் பட்ட காலம் வேறு; தொகுக்கப் பட்ட காலம் வேறு. தொகையைப்பற்றி முதன் முதலில் இறையனார் களவியல் உரைதான் குறிப்பிடுகிறது. அதாவது கி.பி.9-ஆம் நூற்றாண்டுக்கு முன் தொகை முழுமைஅடைந்து விட்டது. தொகுக்கபபட்ட காலத்தின் சூழலை இந்தக் கடவுள் வாழ்த்துகள் புலப்படுத்துவதாகவே தோன்றுகிறது. ஏனெனில் சங்ககாலத்தின் இறுதியிலே பரிபாடல் தோன்றி அதில் கட வுள் உரிப்பொருளாக-பாடுபொருளாக அமைந்துவிட்டார். எனவே, தொகையாக்கத்தின் காலச் சூழலைப் பிரதிபலிப்ப தாகவே கடவுள் வாழ்த்துப் பாடல்கள் தோன்றுகின்றன.

### 4.4.2. பிற் குறிப்பு

பிற் குறிப்புகளை இரண்டுவகைப்படுத்தலாம். ஒன்று பாடியோர் - பாடப்பட்டோர் பற்றிய குறிப்பு. இந்த இரண் டும் புறத்தொகைகளுக்கே உரியது. இதுவே, நாட்டு அரசியல் வரலாற்றுக்கு ஆதாரமானது. அகப்பாடலில் இரண்டு வித குறிப்பு உண்டு. ஒன்று பாடினோர் பெயர் பற்றிய குறிப்பு. இந்தக் குறிப்பு இலக்கிய வரலாற்றுக்கு உதவுவது. இரண்டு, திணை - முறை பற்றிய குறிப்பு. இது இலக்கியச் சுவைக்கும் இலக்கிய ஆராய்ச்சிக்கும்-இதன் மூலம் இலக்கண ஆராய்ச்சிக் கும் துணையாக இருப்பது. இதனால் பிற் குறிப்பின் முக்கியத் துவம் விளங்கும். எனவே, பிற் குறிப்பு பற்றிய வரலாறு ஆராய்ச்சிக்கு உரியது (நீதிவாணன் 1982). இது பற்றியகருத்து தீவிரமாக விவாதிக்கப்படவேண்டும்.

அதே சமயத்தில் குறுந்தொகையிலும் அகநானூற்றிலும் கட வுள் வாழ்த்துப் பாடல் இல்லாமல் முதலில் இருக்கிற பாடல் களில் சமயச் சார்பு காணப்படுகின்றன. குறுந்தொகை கடவுள்

வாழ்த்தை அடுத்த பாடலில் முருகன் (சேஎய்) குறிப்பிட்டுள் ளதைப் போலவே அகநானூற்று முதல்பாலைப் பாடலில் 3வது அடியில் 'முருகன்' குறிக்கப்பட்டுள்ளதைப் பார்த்தால் பாடல் வைப்புமுறைக்கும் கடவுள் பற்றிய குறிப்புக்கும் தொடர்பு படுத்தமுடியுமே என்ற சந்தேகம் எழாமல் இல்லை.

**4.2.1. பிற் குறிப்பு நிலை**

உ.வே.சா. தன்னுடைய பதிப்புகளில் கடைபிடித்த நேர் மையும் தனக்குக் கிடைத்த பிரதிகளின் தன்மை பற்றிய குறிப் பும் பின் வந்த பதிப்பாளர்களால் பின்பற்றப்படவே இல்லை. எனவே, பிற நூல்களில் பிற் குறிப்பின் உண்மையை நிர்ணயிப் பது கடினமாக இருக்கிறது. உதாரணமாக கலித்தொகையின் எல்லாப் பாடல்களும் ஒரே ஆசிரியரால் எழுதப்பட்டதா? அல்லது ஒவ்வொரு திணைப் பாடலும் ஒவ்வொரு ஆசிரியரால் எழுதப்பட்டதா என்ற கேள்விக்குரிய விடை இலக்கிய வரலாற் றிலும் தமிழ் மொழி வரலாற்றிலும் உள்ள பல சிக்கலுக்குப் பதிலாக அமையும். கலித்தொகையை முதன் முதலில் பதிப் பித்த தாமோதரன் பிள்ளை ஒரே ஆசிரியர் என்றே குறிப்பிட் டுள்ளார். வையாபுரிப் பிள்ளை (1952:81) தான் பார்த்த கையெழுத்து பிரதியிலும் பல புலவர்கள் பாடியது என்ற குறிப்பு இல்லை என்று குறிப்பிட்டுள்ளார். ஆனால், இந்த செய்தி பரவலாக உணரப்படவில்லை. உதாரணமாக, சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணையளித்த சஞ்சீவி (1973:11) இது பற்றிக் குறிப்பிடவே இல்லை.

உ.வே.சா. பதிப்பித்த நூல்களில் பிற்குறிப்பு பற்றிய குறிப்பு கள் காணப்படுகின்றன. உதாரணமாக, புறநானூற்றில் உரை யில்லாத சுவடிகளில் பிற் குறிப்பு இல்லாமல் இருப்பதையும் உரையில்லாத பதிற்றுப்பத்து பிரதிகளில் பிற்குறிப்பு இருப்பதை யும் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார்.

புறநானூற்றுச் சுவடிபற்றிய குறிப்பு (1935:கசு,தொ):

> உரையில்லாத மூலங்கள் எழுத்தும், சொல்லும் மிகுந் தும் குறைந்தும் பிறழ்ந்தும், திரிந்தும் பலவாறு வேறு பட்டிருந்த தன்றி, இவற்றுள் சில பாடல்களின் பின்

திணை எழுதப்படாமலும், சிலவற்றின் பின் துறை எழுதப்படாமலும் சிலவற்றின் பின் இரண்டும் எழுதப் படாமலும், சிலவற்றின் பின் பாடினோர் பெயர் சிதைந்தும், சிலவற்றின் பின் பாடப்பட்டோர் பெயர் சிதைந்தும், சில பாடல்கள் இரண்டிடத்து எழுதப் பட்டு இரண்டு எண்களை ஏற்றும், வேறு வேறிடத்தில் இருத்தற்குரிய இரண்டு பாடல்கள் ஒருங்கு எழுதப் பட்டு ஓரெண்ணை ஏற்றும், சில முதற்பாகம் குறைந் தும், சில இடைப்பாகம் குறைந்தும் சில கடைப்பாகம் குறைந்தும், சில முற்றும் இன்றியும் ஒரு பாடலின் அடிகளுள் ஒன்றும் பலவும் வேறு பாடல்களின் அடிக ளோடு கலந்தும் ஓரடியே ஒரு பாட்டும் சிலவிடத்து வரப்பெற்றும் பொருள் உண்மை காணாத வண்ணம் இன்னும் பலவகைப்பட மாறியும் கையெழுத்துப் பிரதிகளில் இருந்தன.

இங்கு மூலம் மட்டும் உள்ள பிரதியில் சில பாடல்களுக்குத் திணை-துறை குறிப்பிடப்படவில்லை என்பது முக்கியமானது. ஆனால், பதிற்றுப் பத்தில் (1941:vii)

> ஒவ்வொரு செய்யுளின் பின்னும் அமைந்துள்ள துறை, வண்ணம், தூக்கு, பெயர் என்பன உரையில்லாத மூலப்பிரதிகளில் எல்லாம் இருத்தலின் அவை உரை யாசிரியரால் எழுதப்பட்டன அல்ல என்பதும் நூலா சிரியர்களோ, தொகுத்தாராலோ எழுதப்பட்டன என் பதும் பதிகங்கள் உரைப்பிரதிகளில் மாத்திரம் காணப் படுதலின் அவற்றை இயற்றினோர் நூலாசிரியரோ தொகுத்தாரோ அல்லர் என்பது தெரிகின்றன

என்று கூறுவதால் பிற் குறிப்பு பழமையானது என்பதும் பதிகம் அவ்வளவு பழமை உடையது அல்ல என்பதும் வெளிப் படுகிறது. அதாவது பதிகம் பிற்காலத்தில் தான் எழுதப்பட்டி ருக்க வேண்டும். பதிகம் கூறும் செய்திக்கு அதற்குரிய பத்துப் பாட்டுச் செய்திக்கும் சில முரண்கள் காணப்படுகின்றன (ஜான் மார் 1958:264); பதிகம் இயற்றப்பட்ட காலத்தில் தான் வாழ்ந்த காலத்து வழங்கிய செவி வழி வந்த செய்திகளையும் பதிக ஆசிரியர் சேர்த்துக் கொண்டிருக்க வேண்டும் என்பார் ஜான்மார்.

இந்த இடத்தில் நீதிவாணன் (1982) பிற் குறிப்பைப்பற்றி நாட்டு வரலாற்று நோக்கில் கூறும் கருத்துகள் சிந்திக்கத்

தருந்தவை. புறநானூற்றுப் பாடல்களில் 123 பாடல்களுக்கு அரசர் அல்லது குறுநில மன்னர் பெயரே குறிப்பிடப் பட்டிருக்கிறது. அவைகளிலும் 95 பாடல்களில் நேரடியாகவும் 28 பாடல்களில் மறை முகமாகவும் உள்ளே குறிப்புகள் உள்ளன. அதாவது 'வளவ' என்று மட்டும் பாட்டில் குறிப்பு இருப்பதை 7 வது பாட்டில் சோழன் கரிகால் பெருவளத்தானையும் 35 ஆம் பாட்டில் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனையும் 60 ஆம் பாட்டில் சோழன் குராப்பள்ளி துஞ்சிய பெருந்திருமாவளவனையும் சுட்டுவதாக பிற் குறிப்பு கூறுகிறது. பிற் குறிப்பு ஆசிரியர் ஒருவரானால் அவருக்கு எப்படி சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் பற்றிய துல்லியமான விவரங்கள் தெரிந்தன. வாய்மொழிச் செய்தியாக வந்தவற்றிலிருந்து தெரிந்து கொண்டார் என்றால் வாய்மொழி இலக்கியம் எழுத்துரு பெற்ற பிறகு தொடர்ந்து வந்திருக்க வேண்டும்; மேலும் வாய்மொழிச் செய்திகள் இடத்துக்கு இடம் வேறுபடும் பொழுது எப்படி உண்மை இதுவென பிற் குறிப்பாளர் நிர்ணயித்தார்? போன்ற பல ஐயங்களை அவர் எழுப்பியுள்ளார். எனவே, வரலாற்றுக்குப் பிற்குறிப்பு பயன்படுத்தும்போது பிற்குறிப்பின் வரலாற்று உண்மையும் (எப்பொழுது எப்படி - யாரால் எழுதப்பட்டன போன்றவை) ஆராய வேண்டும்.

இன்னும் ஒரு சிலராவது சுவடி தேடும் முயற்சியிலும் ஈடுபட வேண்டும்.

4.4..2. இலக்கிய உணர்வு

பிற்குறிப்புகள் இலக்கியச் சுவைக்கும் இலக்கிய ஆராய்ச்சிக்கும் உதவுபவை (உ.ம். வரத ராசன் 1972: 33; மீனாட்சி சுந்தரனார் 1981:31–8) என்றாலும் அந்த நோக்கிலும் பிரச்சனை இல்லாமல் இல்லை.

நச்சினார்க்கினியர் உரையாசிரியர் என்ற முறையில் புறநானூற்று பிற் குறிப்புகளை ஏற்றுக் கொள்ளவில்லை என்று கூறியது பரவலாகத் தெரிந்ததே.

> தத்தம் புதுநூல் வழிகளால் புறநானூற்றிற்குத் துறை கூறினாரேனும் அகத்தியமும் தொல்காப்பியமும் தொகைகளுக்கு நூலாகலின் அவர் சூத்திரப் பொருளாகக்கூறவேண்டும் என்று உணர்க (புறத்.35).

என்ற அவருடைய உரை வாசகத்திலிருந்து பிற்குறிப்பாளரின் இலக்கியக் கோட்பாடு தொல்காப்பியரின் கோட்பாட்டிலிருந்து மாறுபட்டது என்றும், பிற்குறிப்பு இலக்கியக் கோட்பாட்டு நிலையில் திருத்தம் செய்ய இடம் இருக்கிறது என்றும் அவர் கருதுகிறார் என்பது தெளிவாகிறது. இங்கும் தொல்காப்பியத்தைப் பிற்குறிப்பாளர் புறக்கணித்தாரா? அல்லது பிற்குறிப்பைத் தொல்காப்பியர் புறக்கணித்தாரா என்ற கேள்வி எழத்தான் செய்கிறது. இதற்குத் தொல்காப்பியம் சங்க இலக்கியத்துக்கு முந்தியதா? பிந்தியதா என்று நாம் செய்யும் முடிவைப் பொறுத்தே பதில் அமையும்.

எப்படியாயினும் இங்கு முக்கியமான ஒரு உண்மை வற்புறுத்தப்படவேண்டும். தொகையாக்கம், பிற்குறிப்பு ஆகிய இரண்டுமே இலக்கண உருவாக்கத்துக்கு அடிப்படை. எனவே, இரண்டிலும் அறிஞர் உலகம் தீவிரமாகக் கவனம் செலுத்த வேண்டும்.

## 4.5. நோக்கமும் காலமும்

சாமிநாதையர் குறுந்தொகை முன்னுரையில் (1937:அ) கூறியவை இங்குச் சிறப்பாக எடுத்துக்காட்டத் தகுந்தவை.

> பலவகை நூல்களும் செய்யுட்களும் கால நிலையினால் தமிழ்நாட்டாராற் புறக்கணிக்கப்பட்டோ வேறுவகை -யினால் மறைந்தோ அருகின போலும். பிறகு கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் இருந்த புலவர்களும் அரசர்களும் தமிழாராய்ச்சியில் ஊக்கங்கொண்டு பழந்தமிழ்ச் செய்யுட்களைத் தொகுக்கத் தொடங்கினர். அங்ஙனம் தொகுத்தனவே முற்கூறிய (குறுந்தொகை, நற்றிணை அகநானூறு) மூன்றுவகை நூற்றொகுதிகளாதல் வேண்டும்

என்ற அவர் வாசகத்தில் i) பாடல்கள் இயற்றப்பட்ட காலத்துக்கும் தொகுக்கப்பட்ட காலத்துக்கும் உள்ள கால வேறுபாடு (காலநிலை)

ii) பழைய மரபு அழிந்து புதிய மரபு தோன்றியது. அதாவது மரபு வீழ்ச்சியும், மரபு பாதுகாப்பும் (தமிழாராய்ச்சியில் ஊக்கம்)

iii) தொகுக்கப்பட்ட காலம்

ஆகிய மூன்று செய்திகள் குறிப்பிடப்பட்டுள்ளன. இந்தக் கருத்துகள் பின் வந்தவர்களாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளன. (உ-ம்: சுந்தரசண்முகனார், 1972:19, வரதராசனார், 1972:28.)

சுவலபில் (1974:11) பாணர் மரபு மறைந்த பிறகே தொகுக்கப்பட்டிருக்க வேண்டும் என்பார்.[2] சிவத்தம்பி(1986:33) தங்களுக்குச் சமீபகாலத்தில் நடைபெற்ற இலக்கியத் திறனை ஒருமுகப்படுத்தவும் அரசு வாரிசு தொடர்பு அறமால் இருப்பதற்கும் என்று குறிப்பிட்டுத் தொகையாக்கம் இலக்கிய வரலாற்றில் ஏற்பட்ட ஆர்வத்தால் உண்டானது என்பார்.[3]

தொகையாக்கமும் சமூக, அரசியல், பின்னனி உடையது. வையாபுரிப் பிள்ளை (1956:49) தொகையாக்கம் ஏற்பட்ட சூழலை

> தமிழகத்தில் புதிய உத்வேகம் எழும்பியது. அரசர்களும் குறுநில மன்னர்களும் பழைய பாடல்களைத் தொகுத்து வரிசைப்படுத்தி கைக்கு அடக்கமாகவும் செம்மையான தொகையாகவும் அமைப்பது கடமையாகக் கருதினார்கள்

என்று விளக்கியுள்ளார். எனவே, தொகையாக்கம் அரசியல், சமூக, இலக்கிய பின்னணிகளை உடையது என்பது தெளிவாகிறது. ஆனால் இலக்கியக் கோட்பாட்டையும் இலக்கிய ஆராய்ச்சியையும் கூட பின்புலமாகக் கொண்டது. அதன் மிகப் பெரிய பலன் இலக்கண உருவாக்கமே என்பது குறிப்பிடத் தகுந்தது.

## 4.6. தொகையாக்கமும் மொழி வளர்ச்சியும்

தொகையாக்கத்தின், மிகப்பெரிய பலன், நிலைத்த பலன் இலக்கியம் காப்பாற்றப்பட்டதும் இலக்கணம் உருவாக்கப்பட்டதுமே. இவையே தொகைக்கு நிலையான வாழ்வைத் தந்தது.

அதுவே தமிழர்களின் மொழி விஞ்ஞானத்தின் புலமைக்கு அடிப் படையாய் அமைந்துள்ளது. ஆனால் வளர்ச்சிப்படிகளையும் இலக்கிய வரலாற்றையும் இணைத்துப் பார்க்கும்போது குழப் பமே ஏற்படுகிறது. இதற்குப் பல இலக்கிய வரலாற்று ஆசிரி யர்கள் இந்தத் தொகை நூலுக்கு முந்தியது தொல்காப்பியம் என்று கூறுவது மட்டுமே காரணம் அல்ல; கிடைக்கிற தொகை நூல்களுக்கும் இலக்கணத்துக்கும் உள்ள உறவு பற்றிச் சரியாக ஆராயாததும் காரணம் ஆகும்.

மேலே அகத்துக்கும் புறத்துக்கும் உரிய திணைகள் பற்றிய கோட்பாடு, அகத்துக்கு உரிய திணை பற்றிய கோட்பாடு ஆகியவற்றில் தொல்காப்பியத்துக்கும் சங்க இலக்கியத்துக்கும் உள்ள முரண்கள் சுட்டிக்காட்டப்பட்டன (4.3). தொகை நூல்கள் அல்லது தொகுத்தது பிந்தியது என்றால் தொல்காப் பிய இலக்கணம் புறக்கணிக்கப்பட்டது என்று ஆகும். இலக்கி யக் கல்வி வரலாற்றில் சில நூல்கள் ஒரு காலத்தில் மிகச் சிறப்பாகப் போற்றப்படுவதற்கும் இன்னொரு காலத்தில் புறக்கணிக்கப் படுவதற்கும் பல உதாரணங்கள் உண்டு. எனவே, அதுபற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. ஆனால் தொல் காப்பிய இலக்கணம் எப்படி உருவானது என்ற முக்கிய கேள்வி தொகையாக்கத்தை ஒட்டியே அமைந்துள்ளது என் பதை மறந்து விடக்கூடாது.

தொல்காப்பியம் சங்க இலக்கியத்தின் ஒரு குறிப்பிட்ட விழுக்காடு இலக்கணம் என்றால் இந்த அடிப்படையில் எப்படி இலக்கணம் உருவாகியிருக்கிறது என்று பார்க்க வேண்டாமா?

தொகை நூல்களைத் தொல்காப்பியர் அப்படியே ஏற்றுக் கொண்டு இலக்கணம் செய்ய வில்லை என்பது மேலே காட் டிய முரண்கள் தெளிவுபடுத்தும். இன்று நாம் ஒரே புலவர்கள் பாடிய பாடல்களைத் தொகுத்துப் பார்ப்பது போலவும்; ஒரே திணையைச் சார்ந்த பாடல்களைத் தொகுத்துப் பார்ப்பது போலவும்; தொல்காப்பியர் வேறு விதமாகவே தொகைநூல் களைத் தொகுத்து வைத்துக் கொண்டே இலக்கணம் எழுதி யிருக்க வேண்டும். அப்படியே ஒவ்வொரு பாடலுக்கும் உரிய

திணை, துறை, களன் போன்றவற்றையும் குறித்து வைத்துக் கொண்டே புறத்திணை, களவியல், கற்பியல் போன்ற இயல் களை ஆக்கியிருக்க வேண்டும். ஏனெனில் அந்த'இயல்கள் பெரும் பாலும் தரவுகள் அடிப்படையில் அமைந்த இயல்கள். தொல் காப்பியர் தொகை நூல்கள் உள்ளபடியே காட்டும் கோட்பாட்டி லிருந்து பெரிய அளவில் மாறுபட்டுக் காணப்படுகிறார். அது இலக்கண ஆசிரியரின் விசாலமான பார்வை, பொதுமைப்படுத் தும் பண்பு, இலக்கியக் கோட்பாடு ஆகியவற்றைப் பொறுத்தது. அகத்திணையியல், மெய்ப்பாட்டியியல், செய்யுளியல் ஆகியவை கோட்பாட்டு அளவில் உயர்ந்தவை. அதற்குத் தொகை நூல் கள் நேரடியாக உதவி செய்வது குறைவு. இலக்கியம் பற்றிய அவருடைய கோட்பாடே இங்கு முக்கியம். எனவே, இலக்கண ஆராய்ச்சியில் ஆழம் மிக மிக, தரவுகளுக்கு முக்கியத்துவம் குறைந்துவிடும். எனவே, தொகையாக்கம் முழு இலக்கண உரு வாக்கத்துக்கும் நேரடியாக உதவாது. எப்படியானாலும் இலக்கண உருவாக்கத்தில் தொகையாக்க அடிப்படையைப் புறக்கணிக்க முடியாது.

இங்கு வையாபுரிப் பிள்ளையின் ஒரு கருத்துச் (1956:5) சுட்டிக்காட்டப்பட வேண்டும். தொகை நூல்களில் - உதா ரணமாகக் குறுந்தொகையில் உயர்திணை (பாடல் 22), நெய்தற் பரப்பு (114), மடல் ஊர்தல் (17) போன்ற இலக்கண இலக்கிய மரபுத் தொடர்கள் கையாளப்பட்டிருப்ப தால் தொகைகள் இலக்கண அடிப்படையில் உருவாகியிருக்க வேண்டும் என்று கருதுகிறார். எனவே, தொகையாக்கம் (உண்மையில் இலக்கிய உருவாக்கம்) இலக்கணம் உருவான பின்னரே அல்லது இலக்கண மரபு உருவான பின்னரே தான் ஏற்பட்டிருக்கவேண்டும் என்று கருதுகிறார். இது சங்க இலக்கி யத்துக்கு முந்தியது தொல்காப்பியம் என்ற பழைய கருத்தின் எச்ச சொச்சமே ஆகும்.

### 4.7. தொகையாக்க உணர்வு

முதன் முதலில் ஞானசம்பந்தர் (கி.பி. 7–ஆம் நூற்.) திருப் பாசுரம் என்னும் தேவாரப் பதிகத்தில் (11 ஆம் பாட்டு)

அற்றன்றி அந்தண் மதுரைத்தொகை ஆக்கினானும்
பெற்றொன்று உயர்ந்த பெருமான் பெருமானுமன்றே

என்று மதுரையில் தொகையாக்கம் நடைபெற்ற செய்தியைக் குறிப்பிட்டுள்ளார். இதைச்சேக்கிழாரும் பெரியபுராணத்தில் சுட்டி 'கூடல் மாநகரத்துச் சங்கம் வைத்தவன்' என்று பேசியுள்ளார். ஆனால், இறையனார் களவியல் உரையில் (9 – ஆம் நூற்.) நேரடியாக எட்டுத் தொகைநூல் தனித்தனியாகப் பட்டியலிட்டுக் காட்டப்பட்டுள்ளன.

> நெடுந்தொகை நானூறும் குறுந்தொகை நானூறும் நற்றிணை நானூறும் புறநானூறும் ஐங்குறுநூறும் பதிற்றுப் பத்தும் நூற்றைம்பது கலியும் எழுபது பரிபாடலும் கூத்தும் வரியும் பேரிசையும் என்று இத் தொடக்கத்தன. அவர்க்கு நூல் அகத்தியமும் தொல்காப்பியமும் என்ப

என்பது இறையனார் களவியல் உரை வாசகம். களவியல் உரையில் குறிஞ்சிப் பாட்டின் மறுபெயரான 'பெருங் குறிஞ்சி' (ப.42 கழகப்பதிப்பு, 1976) என்ற தொடர் குறிக்கப் படுவதும் பட்டினப்பாலையின் இறுதி வரிகளைப் பாண்டிக் கோவை 175, 176ஆம் பாடல்கள் எதிரொலிப்பதையும் சுட்டிக்காட்டி, சுந்தரம் (1978 :103) 'பத்துப்பாட்டு பற்றி வேறு எந்த செய்தியும் களவியல் உரையில் இல்லை' என்று கூறி, 'பத்துப்பாட்டு தொகுக்கப்படாமலும், அதிக வழக்கில் இல்லாமலும் இருந்திருக்கலாம்; முதலில் எட்டுத்தொகை தொகுப்பே முடிந்திருக்க வேண்டும் என்பது உறுதியாகிறது' என்பார்.

இளம்பூரணர் (11 ஆம் நூற்.) 'சான்றோர் செய்யுட் கோவை' என்று பொதுவாகவும் (அகத்.5) 'பத்துப்பாட்டு' என்று சிறப்பாகவும் (செய்.150) குறிப்பிட்டுள்ளார். எனவே, 11 ஆம் நூற்றாண்டுக்கு முன்னர் பத்துப்பாட்டு தொகுக்கப் பட்டது என்பது தெளிவாகிறது.

பேராசிரியர் (13 ஆம் நூற்.) 'பாட்டும் தொகையும்'என்று (செய்.50,80) குறிப்பிடுவது எட்டுத் தொகையும் பத்துப்பாட்டுமே. பத்துப்பாட்டு என்பதால் எட்டுத்தொகை என்று அழைக்கப்பட்டிருக்கலாம்.

நச்சினார்க்கினியர் (14 ஆம் நூற்.) 'தொகைகளிலும் கீழ்க் கணக்கு நூல்களிலும் இம்முறை மயங்கி வரக் கோத்தார்' என்று (அகத். 5; புறம். 26 உம் பார்க்கவும்) கூறுவதால் எட் டுத் தொகை நூல்களோடு கீழ்க்கணக்கு நூல்களும் சங்க இலக் கியத்தில் அடங்கும் என்ற உணர்வு இருந்தது என்பது புலனா கிறது.

மயிலைநாதரும் (கி.பி. 15 ஆம் நூற்.) ஐம்பெருங்காப்பி யம், எண் பெருந்தொகை, பத்துப்பாட்டு, பதினெண் கீழ்க் கணக்கு என்னும் இவ்விலக்கியங்கள் என்று குறிப்பிடுவதால் (நன்.387) சங்க இலக்கியம் என்பதன் பட்டியல் விரிவடைவ தைக் காணலாம்.

பன்னிருபடலத்துள் சங்க இலக்கியங்கள் மேற்கணக்கு, கீழ்க்கணக்கு என்று வகைப்படுத்தி அவைகளுக்கு இலக்கணம் கூறப்பட்டுள்ளது.

அகவலும் கலிப்பாவும் பரிபாடலும்
பதிற்றந் தாதி பதிற்றைம்பது ஈறாக
மிகுத்துடன் தொகுப்பன மேற்கணக்கு

என்பதே அந்தச் சூத்திரம். இங்கு பத்துப்பாட்டு நேரடியாகக் குறிக்கப்படவில்லை என்பது அறியத் தகுந்தது. ஆனாலும் பின் னால் பத்துப்பாட்டு என்பதை இலக்கிய வகையாகக் குறிப்ப தால் அவர் பத்துப்பாட்டைப் பார்த்து எழுதியதாக இருக்க முடியுமா என்ற சந்தேகம் எழுகிறது. என்றாலும் தமிழ் இலக் கிய வரலாற்று ஆசிரியர்கள் பதினெண்கீழ்க்கணக்கு, பதினெண் மேற் கணக்கு என்றும் குறிப்பிடும் வழக்கம் நீடித்து வருகிறது என்பது கா.சு. பிள்ளை (1930:200) 'எட்டுத்தொகை, பத்துப் பாட்டு, முத்தொள்ளாயிரம், சிலப்பதிகாரம், மணிமேகலை, பதினெண் கீழ்க்கணக்கு ஆகியவை சங்க நூல்கள்' என்று கொள் வதால் அறியலாம். இராசமாணிக்கனார் (1963:261) தொல் காப்பியம், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, குறள், சிலப்பதி காரம், மணிமேகலை ஆகியவற்றைச் சங்ககால இலக்கி யமாகக் கொண்டுள்ளார். 'இப்பொழுது சங்க இலக்கியங்கள் எனும் பெயரில் வழங்கப்படும் மேற்கணக்கு எனப்படும் பதி

னெட்டு நூல்களும், முத்தொள்ளாயிரம் முதலிய சில நூல்களும் வழங்கப்பட்டு வருகின்றன' என்பது சுந்தரசண்முகனாரின் வாசகம் (1972:195). இப்படி காலந்தோறும் சங்க இலக்கியம் என்பதற்குரிய நூல்கள் அதிகமாகிக் கொண்டே போவதை உணரலாம். ஆனால் இன்று வரலாற்று ஆராய்ச்சி பல துறை ஆய்வாக-இலக்கியம், இலக்கணம் கல்வெட்டு, பிறநாட்டுக் குறிப்புகள் என்று பல துறையிலிருந்து கிடைக்கும் ஒப்பிட்டு ஆயும் ஆராய்ச்சியாக உள்ளதால் பெரும்பாலானஇலக்கிய வரலாற்று ஆசிரியர்கள் சங்கஇலக்கியம் என்பது எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகிய இரண்டையுமே ஏற்றுக் கொள்கிறார்கள் (உதாரணம், வரதராசன் (1972:28) தமிழண்ணல் (1980:70). இருந்தாலும் மொழியியலாளரும் சமுதாய நோக்கில் இலக்கியத்தை ஆராய்பவர்களும் எட்டுத்தொகையில் கலித்தொகையையும், பரிபாடலையும், பத்துப்பாட்டில் திருமுருகாற்றுப்படையும் பிற்காலத்தாகக் கருதுகிறார்கள் (உ.ம். வித்தியானந்தன் 1954:21; கைலாசபதி 1968:; மீனாட்சி சுந்தரன், 1965 அ).

எனவே, சங்க இலக்கியம் என்பது நூல்களின் எண்ணிக்கை முற்காலத்தில் வளர்ந்து வர இன்று குறுகி வருவது போலத் தோன்றுகிறது. ஆனாலும் இன்று எட்டுத்தொகை, பத்துப் பாட்டு, என்பது ஒரு குழுவினர் கருத்தாகவும் கலி, பரி நீங்கிய எட்டுத்தொகை, முருகாற்றுப்படை நீங்கிய பத்துப்பாட்டு என்பது இன்னொரு குழுவினர் கருத்தாகவும் ஒரே காலகட்டத்திலேயே வழங்கி வருகிறது. இவைகளில் ஒரு குழு கருத்தைக் ஏற்றுக்கொண்டு மற்றது பொருந்தாது என்பதற்கு வலுவான காரணங்களையும் கண்டுபிடிக்க முயலவேண்டும்.

# 5. இலக்கண உருவாக்கம்

## 5.0. முன்னுரை

ஒரு மொழியின் இலக்கணம் எப்பொழுது எப்படி உருப் பெறுகிறது என்பதையே இலக்கண உருவாக்கம் என்று இங்கு குறிப்பிடப்படுகிறது. ஒரு மொழியில் இலக்கண உருவாக்கம் மொழிவளர்ச்சியில் மட்டுமல்லாமல், சமுதாய வளர்ச்சியிலும் ஒரு மைல் கல்லாகக் கொள்ளத் தகுதிவாய்ந்தது. ஏனென்றால் மொழிபற்றிய அறிவியல் சிந்தனையின் விளைவே இலக்கணம். மேலும் அது ஒரு புதியதுறை வழக்கைப், புதிய துறையில் பயன்படும் வழிமுறையைக் காட்டுவது; அதாவது பயன்பாடு கூடிவிட்டது என்பதை உணர்த்துவது; மொழிபேசும் மக்களுக்கு மொழியைப் பயன்படுத்துவதில் வழிகாட்டியாய் அமைவது: மொழிச் சமூகத்தாரின் அறிவியல் உணர்வின் ஒரு வெளிப்பாடாக அமைவது: மொழி உணர்வையும் புலப்படுத்த வல்லது; எனவே, ஒருமொழியில் எழுந்த முதல் இலக்கணம் இன்னும் ஒருபடி சிறப்பு வாய்ந்தது எனலாம்.

இலக்கணம் உருவாக்கம் பற்றிய பொதுச் சிந்தனைகள் தமிழிலும் காணப்படுகின்றன. மொழியியலார் மொழியியல் வரலாற்றை உலகளாவிய நிலையில் ஆராய்ந்தபோது உலக மொழிகளில் இலககணம் எப்பொழுது, எப்படித்தோன்றின என்று ஆராய்ந்து சில கருத்துகளைத் தெரிவித்துள்ளார்கள். எனவே, இலக்கண உருவாக்கம் பற்றி பொதுவான கருத்துகளைப் பார்ப்பது தமிழில் தொல்காப்பியம் உருவான விதம் பற்றி அறிந்துகொள்ள உதவும்.

## 5.1. பொதுச்சிந்தனைகள்

தமிழில் பொதுவாக இலக்கிய - இலக்கண உறவு - பற்றிக் கூறப்படும் கருத்தும், தொல்காப்பியப் பாயிரத்தின் கருத்தும் தமிழ்ச்சிந்தனையாகவும்; மொழியியல் வரலாற்று நூல்களில் உலகளாவிய அளவில் காணப்படும் கருத்து மொழியியல் சிந்தனையாகவும் விளக்கப்படுகின்றன.

### 5.1.1. தமிழ் நூல்கள்

இலக்கிய, இலக்கண உறவு பற்றிய பிற்கால அகத்தியர் கருத்து தொல்காப்பியப் பாயிரக் கருத்தை விடக் காலத்தால் பிந்தியதாக இருந்தாலும், உண்மையைத் தெளிவாகக் குறிப்பிடுவதால், முதலில் விளக்கப்படுகிறது.

இலக்கியத்தை அடிப்படையாகக் கொண்டே இலக்கணம் உருவாகும் என்பதை

எள்ளிலிருந்து எண்ணெய் எடுப்பது போல
இலக்கியத்தினின்றும் எடுபடும் இலக்கணம்

என்று பேரகத்தியமும், 'இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்பல்' என்று நன்னூலும் (140) விளக்கியுள்ளன. அதாவது இலக்கணம் இலக்கியத்தை-எழுத்து மொழியை அடிப்படையாகக் கொண்டது என்று மூலம்பற்றி மட்டுமே இவை குறிக்கின்றன. பனம்பாரனார் பாயிரம் தொல்காப்பியத்துக்காக எழுதப்பட்டாலும் இலக்கண உருவாக்கம் பற்றிய பல பொதுக் கருத்துகளைக் கொண்டுள்ளது என்பது இங்கு சிறப்பாகக் குறிப்பிடத்தகுந்தது.

தமிழ்கூறு நல்லுலகத்து
வழக்கும் செய்யுளும் ஆயிருமுதலின்
எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி
... .........
முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணி
புலந் தொகுத்தோன்

என்ற அடிகளின் மூலம், 1) இலக்கணம் பேச்சு மொழியையும் எழுத்து மொழியையும் அடிப்படையாகக் கொண்டது. இங்கு பேச்சு மொழிக்கு (வழக்குக்கு முதலிடமும், இலக்கிய

மொழிக்கு (செய்யுளுக்கு) இரண்டாம் இடமும் கொடுத்தது பேச்சே இலக்கிய மொழிக்கும் அடிப்படையானது என்று கருத இடமுண்டு. 2) தனக்கு முன்னால் எழுதப்பட்ட நூல்களைப் படித்து எழுதப்படுவது. (இதில் பிறமொழி நூல்களும் அடங் கும் என்பது போல 'ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியம்' என்று பின்னால் இருக்கும் தொடர்மூலம் வடமொழி நூலறி வும் குறிப்பிடுவது). 3) முறைப்பட எண்ணி எழுதப்படுவது- நூலின் அமைப்பு முறையைச் சிந்தித்து அமைப்பது. 4) புலம் தொகுப்பது. 5) 'தமிழ் கூறு நல்லுலகத்து வழக்கும் செய் யுளும்' என்றதால் இலக்கணம் ஒரு மொழிக்கே உரியது; எனவே, எல்லா மொழிக்கும் பொதுவான இலக்கணம் என் பது கிடையாது. எனவே, இலக்கண உருவாக்க நடைபெறும் செயல்நிகழ்வுகள் இங்கு விரிவாக விளக்கப்பட்டுள்ளன. அதா வது பேரகத்தியமும் நன்னூலும் இலக்கணத்துக்குரிய தரவு களில், ஒருபகுதியை (இலக்கியத்தை) மட்டும் குறிப்பிட, பனம்பாரனாரின் பாயிரம் முழுத்தரவையும் (வழக்கும், செய் யுளும் குறிப்பிட்டு) இலக்கணத்தை உருவாக்க நூலாசிரியன் மேற்கொள்ள வேண்டிய நெறிமுறைகளையும் நுணுக்கமாக விவரித்துள்ளது. இந்த நோக்கில் யாரும் தொல்காப்பியத்தைச் சரியாக ஆராயவில்லை. 'முந்து நூல்கள்' கிடைக்காததால் தொல்காப்பியர் அவைகளுக்குப் பட்ட கடனையும் அவருடைய தனித் தன்மையையும் ஆராய முடியவில்லை என்று மட்டும் அமைதி கொள்ளலாம். என்றாலும் தொல்காப்பியத்தில் வந் துள்ள, என்ப(எழுத்து.1), என்மனார் (எழுத்து.33:2), புலமை யார் (எழுத்து. 369.2), குறி அறிந்தோர் (அகம். 50:2) நல் லிசைப் புலவர் (செய்யுள்.1:15) வாய்மொழிப் புலவர் (செய்யுள்.71:2) யாப்பறிபுலவர் (செய்யுள். 74:3), தொன் னெறிப் புலவர் (செய். 230:3) நுணங்கு மொழிப் புலவர் (மரபு. 100) போன்ற தொடர்களின் சரியான விளக்கம்காண யாரும் முன்வரவில்லை. மேலும், முறைப்பட எண்ணி புலம் தொகுத்த முறையும் விரிவாக ஆராயப்படவேயில்லை. இயல் அமைப்பு, இயலுக்குள்ள சூத்திர அமைப்பு ஆகியவைப்பற்றி சில ஆராய்ச்சிகள் நடைபெற்றிருப்பது உண்மைதான்; ஆனால் அதன்மூலம் தொல்காப்பியரின் நூலமைப்புமுறை, அறிவு நுட்

பம் முதலியன வெளிக்கொணரப்படவில்லையென்றே நினைக்க வேண்டியிருக்கிறது. அதாவது தமிழ் இலக்கணநூலுள் காணப் படும் இலக்கண உருவாக்கக்கோட்பாடுகள் இன்றும் சரியாகத் தெளிவாக்கப்படவில்லை. இதற்கு முக்கியக்காரணம், இலக் கண நோக்கிலிருந்து இலக்கியத்தை ஆராயும் முயற்சியே பெரும்பான்மையாக மேற்கொள்ளப்பட்டு, இலக்கியத்தை அடிப்படையாகக் கொண்டு இலக்கணம் எவ்வாறு உருவாக்கப் பட்டிருக்கிறது என்ற முறையில் ஆராயாததுதான். அதனால் தான் இலக்கணத்தின்மூலம் வெளிப்படும் ஆசிரியரின் இலக்கிய-இலக்கணக் கோட்பாடு, அவர் கையாளும் உத்தி,அவர்காட்டும் மொழியுணர்வு ஆகியவை இன்னும் சரியாக வெளிப்படவே யில்லை.

இலக்கிய வரலாற்று அடிப்படையில் பிரபந்த இலக்கிய வகைகளுக்கும் அவைகளின் இலக்கணத்திற்குமுள்ள உறவுபற்றி மு.அருணாசலம் (1979) எழுதியகட்டுரை குறிப்பிடத்தகுந்தது. அவர் கருத்துகளையொட்டி இலக்கணத்துக்கும் இலக்கியத்துக் கும் உள்ள உறவுகளை நான்கு வகையாகப் பாகுபடுத்தலாம். அவையாவன: முதல்வகை, இலக்கியம் தோன்றியதற்கு இலக் கணம்; இது உலகப்பொதுமையானது. இரண்டாவது வகை, இலக்கியம் இல்லாமல் இலக்கணம் எழுதுவது. ‘பின்வரும் புல வர்கள் வேறு எந்த எந்த நெறியில் இலக்கியம் செய்யலாம் என்பதற்கு வழிகாட்டுவதற்காக இலக்கணம் கூறப்பட்டிருக் கிறது’ என்பார்அருணாசலம்(ப.70). அங்கும் அந்த இலக்கணம் அமைப்பதற்குமுந்தைய இலக்கிய நூல்களில் ஏதாவது ஆணி வேர் உண்டா?அல்லது பிறமொழி நூல்களைத் தழுவிச் சொன்னாரா? என்றெல்லாம் காரணம் கண்டுபிடிக்க வேண் டும். ஏனென்றால் முழுவதும் கற்பனையாக இலக்கணம் எழுத முடியாது. பிற்காலத்தில் இலக்கியம் எழுந்து இலக்கணத்தை நியாயப்படுத்திவிடும். இதற்குப் பிள்ளைத்தமிழ் உதாரணம் ஆகும்.

மூன்றாவது வகை, இலக்கியம் தோன்றியும் இலக்கணம் எழாதது. இது இலக்கண ஆசிரியனின் இலக்கியம் பற்றிய

உணர்வைக் காட்டுவதாகக் கொள்ளவேண்டும். அதாவது இலக்கண ஆசிரியன் சிறந்தவகையாகக் கொள்ளவில்லை என்றோ அல்லது தன்காலம் வரை எழுந்த இலச்கியங்களின் அடிப்படையில் இலச்கணத்தை எழுதாமல் முந்தைய இலக்கணத்தை அதாவது அந்த இலக்கியவகை தோன்றாததற்கு முன்னர் எழுதிய இலக்கணத்தைத் தழுவி எழுதப்பட்ட இலக்கணமா என்று ஆராயவேண்டும். நான்காவது வகை, இலக்கணம் எழுந்தும் எந்த காலத்திலும் இலக்கியம் எழுதாதது. இலக்கியஆசிரியர்கள், வெறும் இலக்கணத்தைப் பின் பற்றி இலக்கியம் படைப் பதில்லை என்றோ அல்லது சிறந்தஇலக்கிய வகையாகக் கருதவில்லை என்றோ இந்தவகையைக் கொள்ளலாமா? என்று ஆராயவேண்டும். எப்படியானாலும் இலக்கியத்துக்கும் இலக்கணத்துக்குமுள்ள உறவு ஒரு அடிப்படையில் மட்டும் அமைந்தது அல்ல என்பது இதனால் தெளிவாகிறது.

5.2. மொழியியல் நூல்கள்

மொழியியல் வரலாறு இருபதாம் நூற்றாண்டில் தனி உள்துறையாக மலர்ந்துள்ளது. அதனால் காலவரிசைப்படியும் கருத்துவரிசைப்படியும் ஆராய்ந்து வருவதோடு சமீபகாலமாகச் சமூக மொழியியல் நோக்கில் ஆராயும் ஆய்வும் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. வரலாற்று நிகழ்வுகளைத் துல்லியமாகப் புரிந்து கொள்வதற்குச் சமூக மொழியியல் நோக்கு உதவும் என்று கருதப்படுகிறது (Hymes, 1974:21)[1].

இதுவரை மொழியியல் வரலாற்றில் தமிழ்மொழிதவிர மூன்றுமொழிச் சமூகங்கள் இலக்கண ஆய்வில் ஈடுபட்டு அவர்களுடைய மொழிவரலாற்றில் முற்பட்ட காலப்பகுதியிலேயே இலக்கணம் எழுதியுள்ளதற்கான சான்றுகள் கிடைத்துள்ளன. அவைகளுள் சுமேரிய மொழிபற்றிய இலக்கண ஆராய்ச்சி கி.மு. 1600 ஆண்டுவாக்கிலே ஏற்பட்டுவிட்டது. அதுவே மிகப்பழமையானது என்று எழுபதுகளிலேயேதான் தெரியவந்துள்ளது. வடமொழி கி.மு.500-ஐ ஒட்டியும் கிரேக்கமொழி கி.மு. 200ஐ ஒட்டியும் இலக்கணம் பெற்றன. இந்த மூன்று மொழியிலும் நடைபெற்ற இலக்கண ஆய்வின் சமூகச் சூழல்

களில் கரணப்படும் ஒற்றுமைகளை ஹைம்ஸ் (Hymes, 1974) பின்வருமாறு எடுத்துக்காட்டியுள்ளார்.

1. மறைந்த அல்லது மாறிவரும் மொழியில் எழுதப்பட்ட இலக்கியங்களைக் காப்பது.

அ) பழைய பாபிலோனிய காலத்தில் அக்கேடிய மொழி பேச்சு மொழியாகப் பரவியதால் பேச்சு மொழியாக இருந்த சுமேரியமொழி மறையும் நிலையில் அதன் இலக்கியத்தைப் பாதுகாக்க இலக்கண ஆய்வு துவங்கியது.

ஆ) வடமொழியில் வேதமொழி (வேதம் எழுதப்பட்ட மொழி) மறைந்து வருவதால் வேதமொழியைப் படித்துப் புரிந்துகொண்டு சமயச் சடங்குகளைச் செம்மையாகச் செய்ய இலக்கண ஆராய்ச்சி ஆரம்பிக்கப்பட்டது.

இ) கிரேக்க மொழியிலும் ஹோமரின் காப்பிய மொழி மறைந்து விட்டதால் அதைப் படித்துப் புரிந்துகொள்ளமொழி ஆராய்ச்சி தொடங்கப்பட்டது.

2) இலக்கண ஆய்வில் பரிமாணமுறை காணப்படுவது.

அ) சுமேரிய மொழியில் பழைய பாபிலோனிய காலத்தில் சொல்லடுக்கு (Paradigms) ஆய்வும், புதிய பாபிலோனிய இலக்கணக் கூறுகளை ஆராயும் ஆய்வும் கால முறைப்படிக் காணப்படுகின்றன.

ஆ) வடமொழி, கிரேக்கம் ஆகியவற்றிலும் இந்தப் பரிமாணம் உள்ளது. கிரேக்க மொழியில் செம்பதிப்பு, அகராதி, இலக்கணம் என்ற முறையிலும் வடமொழியில் ஒலியியல் (சிக்ஷா) சொற்பிறப்பியல், அகராதியியல்(நிருக்தா) இலக்கணம் (வ்யகாரணா) என்றமுறையிலும் இலக்கண ஆராய்ச்சி வளர்ச்சி பெற்றது.

3) இலக்கண ஆய்வும் அந்தமொழிச் சமூகத்தில் நடைபெறும் பிறதுறை ஆய்வுகளோடு தொடர்பு உடையது.

கிரேக்கர்கள் மொழி ஆய்வை - தத்துவத்தோடு அதாவது தாங்கள் வாழும் உலகத்தின் தன்மைகளையும் சமூக அமைப்

பினையும் ஆராயும் அறிவு விசாரணையோடு தொடர்புடைய தாகக் கருதினார்கள். இதனால் ஹைம்ஸ் (Hymes, 1974:6) மொழியமைப்பை விளக்கும் விதம் தருக்கம், தத்துவம், இலக்கியம், சமயம் ஆகியவற்றிலும் குறிப்பாக மொழியைப் பயன்படுத்தும் பிறதுறைகளில் உள்ள ஆர்வத்தை ஒட்டியது என்பார்.[2]

4) எழுத்தாக்கத்துக்குப் பிறகு இலக்கண உருவாக்கம்.
அ) பாபிலோனியா, சீனம் ஆகிய இரண்டு நாட்டிலும் எழுத்தாக்கம் ஏற்பட்ட பிறகே இலக்கண ஆராய்ச்சி துவங்கியது.

ஆ) கிரேக்க மொழியில் மேடைப்பேச்சு உதவி செய்யும் வகையில் இலக்கணம் உதவினாலும் எழுத்தாக்கம் ஏற்பட்டபிறகே மொழி ஆய்வு ஆரம்பித்தது.

இ) வடமொழியில் வேதங்களை ஒப்புவிக்க உதவும் வகையில் இலக்கண ஆராய்ச்சி ஏற்பட்டாலும் அங்கும் எழுத்தாக்கம் நடைபெற்றுவிட்டது. அதாவது, சுமேரிய, சீன மொழிகளில் எழுத்தாக்கத்தின் பயனாக, எழுத்து மொழி கற்க உதவியாய் இலக்கண உருவாக்கமும் நடைபெற்றன. வடமொழி, கிரேக்க மொழி ஆகிய இரண்டிலும் வாய்மொழி (பேச்சுமொழி) ஆகியவற்றுக்குத் துணையாக இலக்கண உருவாக்கமும் ஏற்பட்டாலும் இலக்கணம் உருவானது எழுத்தாக்கம் ஏற்பட்ட பிறகுதான்.

பொதுவாக, இலக்கண ஆசிரியனும் தான்வாழும் காலத்துச் சூழலாலும் சமூகச் சூழலாலும் பாதிக்கப்படுபவன்தான். அதனால்தான் இலக்கண ஆசிரியன் சமூக, பண்பாட்டு ஆகிய சூழலைத்தாண்டி வாழ்பவனாகக் கருதக் கூடாது என்பார் தேஷ்பாண்டே (Deshpande, 1979:xii). அவர்களது இலக்கணக் கோட்பாடுகூட சமூக, பொருளாதார, பண்பாட்டு, அரசியல் மாற்றத்தால் பாதிக்கப்படும் என்பார்.[3]

இந்தக் கோட்பாடு அடிப்படையில் தமிழில் இலக்கண உருவாக்க நிகழ்வுகளைப் பார்க்க வேண்டும். அதற்குமுன்பாக தமிழிலக்கிய வரலாற்றில் முதல் இலக்கண நூல் எது என்ப

தில் கருத்து வேறுபாடு காணப்படுவதால் (5.2) அதை முதலில் விவாதித்துப் பின்னர் அந்தநூலின் மூலபாடம் (5.3) பற்றியும் நூலமைப்பு முறை (5. 4) பற்றியும் பார்த்து, அடுத்து தரவு களும் இலக்கணமும், (5.5), முந்துநூலும் இலக்கணமும் (5.6) ஆகியவற்றையும் விளக்கிய பிறகே, சமூகப் பண்பாட்டுச் சூழ லும் (5.7) இலக்கண உருவாக்கமும் (5.7) விளக்கப்படும்.

## 5.2. முதல் இலக்கண நூல்

தமிழின் முதல் இலக்கணநூல் எது என்ற கேள்விக்கு இடைக்காலம் ஒரு பதிலையும், தற்காலம் ஒரு பதிலையும் தருகின்றன. அதற்கு மொழி உணர்வும் துல்லிய வரலாற்று உணர்வும் காரணங்களாகும்.

இறையனார் களவியலுரை காலத்திலிருந்து (சுமார் கி.பி.9 -ஆம் நூற்றாண்டு) இந்தநூற்றாண்டின் முதல் கால்பகுதி வரை அகத்தியமே தமிழின் முதல் இலக்கண நூல் என்ற கருத்து நிலவிவந்தது. தற்காலத்தில் தொல்காப்பியமே முதல் இலக்கணநூல் என்ற கருத்து நிலவிவருகிறது. எனவே, முதலில் இதன் வன்மை, மென்மைகளைத் தெரிந்துகொள்வோம்.

### 5.2.1. அகத்தியம்

இறையனார் களவியல் உரை தலைச் சங்கம், இடைச் சங்கம், கடைச்சங்கம் என்று மூன்று சங்கங்கள் பாண்டிய மன்னர்களால் நிறுவப்பட்டன என்று கூறி ஒவ்வொரு சங்க மும் நிலைபெற்றிருந்த இடம், காலஅளவு, அதிலிருந்த புலவர் களின் எண்ணிக்கை போன்ற இன்னோரன்ன செய்திகளைக் கொடுத்துள்ளது; முதல் சங்கத்துக்கு இலக்கணம் அகத்தியம் என் றும் இடைச்சங்கத்துக்கும் கடைச்சங்கத்துக்கும் இலக்கணம் அகத்தியமும் தொல்காப்பியமும் என்றும் குறிப்பிட்டுள் ளது. எனவே, தமிழில் முதல் இலக்கண நூல் அகத்தியம் என்ற கருத்து, இந்த நூற்றாண்டின் முதல் காலபகுதிவரை நிலவி வந்தது; இதன் காரணமும் உண்மையும் என்ன?

களவியல் உரை செய்தியில் காணப்படும் நம்பமுடியாத பல விவரங்கள் எல்லோருடைய கருத்தையும் சிந்திக்க வைத்தன. மேலும் அச்சு இயந்திரம் வந்து நூல்கள் அச்சிடப்பட்ட பின்னரே தமிழ் நூல்களின் முழுப்பரப்பும் அறிஞர்களின் நேரடிப் பார்வைக்குத் தெரியவந்தது. அப்பொழுதுதான் களவியல் உரையின் நிறைகுறை தெளிவாகியது.

மூன்று சங்க காலத்திலும் இயற்றப்பட்டதாக இறையனார் களவியல் குறிக்கும் நூல்களில் தொல்காப்பியம் எட்டுத்தொகை ஆகியவை மட்டுமே இன்று கிடைக்கின்றன. அவர் குறிப்பிடாத பத்துப் பாட்டும் சங்க காலத்தைச் சேர்ந்ததே. அது அதிகபட்சம் அவருக்குப் பிறகு இரண்டு மூன்று நூற்றாண்டுகள் கழித்துத் தமிழ் அறிஞர்களுக்குக் கிடைத்தது. எனவே, களவியல் உரையாசிரியர் மிகைப்படுத்திக் கூறியுள்ளார்; ஏன் கிடைக்காத அகத்தியத்தை முதல் இலக்கண நூலாகக் குறிப்பிட்டார் என்றும் அறிஞர்கள் இன்று நினைத்துப் பார்த்துள்ளார்கள்.

வரலாறு என்பதே இடைக்காலத்தில் புராணமாக்குவது; புராணமயப்படுத்துவது என்று கருதப்பட்டது. அதாவது நிகழ்ச்சிகளுக்குத் தெய்வத்தன்மை கற்பிப்பது.

'தமிழின் தொன்மையையும் அதன் தெய்வத்தன்மையையும் வற்புறுத்துவதற்கு எழுந்த கற்பிதக் கதைகள்' என்பார் வையாபுரிப் பிள்ளை (இலக்கியச் சிந்தனை: ப:36, மூலம் கேசவன்1979:102).இதற்கு மூலகர்த்தாக்கள் சைவப் பெருமக்களே. அவர்களுடைய சமணசமய எதிர்ப்பும் இப்படிப்பட்ட கதை உருவாகக் காரணம் என்பார்கள் சமூக நோக்கில் இலக்கியக் கருத்துக்களை ஆராய்பவர்கள். (உ-ம். கேசவன். 1975;95-147; சிவத்தம்பி, 1986;35). எப்படியானாலும் அகத்தியம் முதல் இலக்கண நூல் என்ற கருத்து இடைக்காலத்தில் சமூக – பண்பாட்டுத் தேவையை ஒட்டி கற்பிக்கப்பட்ட கதை. இன்றைய நிலையில் முதல் இலக்கண நூலென்று கருதவேண்டியது தொல்காப்பியமே.

### 5.2.2. தொல்காப்பியம்

தமிழிலக்கிய வரலாற்றில் இன்று கிடைக்கும் நூல்களுள் தொல்காப்பியம் முதல் இலக்கண நூல் என்ற கருத்து எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்படுகிறது. ஆனாலும் பெரும்பாலான தமிழிலக்கிய வரலாற்று ஆசிரியர்களும், தமிழ் இலக்கிய அறிஞர்களும் (இராசமாணிக்கனார் 1963; வரதராசன் 1972) நாட்டு வரலாற்று அறிஞர்களும் (கே.கே. பிள்ளை, 1969:119, இராமச்சந்திரன் 1977:22) மொழியியல் அறிஞர்களும் (மீனாட்சிசுந்தரன், 1965 அ:5; அகத்தியலிங்கம் 1983:55) தொல்காப்பியம் முதலிலக்கண; நூல் மட்டுமல்ல முதல் தமிழ்நூல் அதாவது இன்றுள்ள சங்க இலக்கியங்களுக்கு எல்லாம் முந்தியது என்று கூறி சில ஆதாரங்களையும் எடுத்துக்காட்டியுள்ளார்கள். சமூகநோக்கில் இலக்கியத்தை ஆராய்பவர்களும் (கைலாசபதி, 1968;சிவத்தம்பி,1987) ஒரு சில தமிழ் அறிஞர்களும் (சிவராச பிள்ளை, 1932:263, வையாபுரிப் பிள்ளை, 1949) வெளிநாட்டுத் தமிழ் அறிஞர்களும் (சுவலபில் 1973:442) தொல்காப்பியம் முதல் இலக்கண நூலே தவிர முதல் தமிழ்நூல் அல்ல; அதாவது சங்க இலக்கியத்துக்குப் பிந்தியது என்று சில காரணங்களால் கருதுகிறார்கள். இன்னும் ஒரிருவர் தொல்காப்பியத்தின் எழுத்தும் சொல்லும் முதல்நூல் - சங்க இலக்கியத்துக்கு முந்தியது என்றும், பொருளதிகாரம் முதல் இலக்கணநூல் சங்க இலக்கியத்துக்குப் பிந்தியது என்றும் கூறியுள்ளார்கள். இந்தக் கருத்துக்கு மறுப்பு தெரிவிக்கப்பட்டு முதல்நூலே என்று சிலர் நிறுவியுள்ளார்கள். என்றாலும், வரலாற்று நோக்கில் தொல்காப்பியம் பற்றி மூன்று கருத்துகள் நிலவுவதாகப் பொதுமைப் படுத்தலாம்.

i) தொல்காப்பியம் - முதல்நூல் (முதல் இலக்கணநூல் - சங்க இலக்கியத்துக்கு முந்தியது)

ii) தொல்காப்பியம் - முதல் இலக்கணநூல் (சங்க இலக்கியத்துக்குப் பிந்தியது)

iii) தொல்காப்பியம்- முதல்நூல் - (எழுத்தும் சொல்
பகுதி லும் முதல்நூல்;
பொருள்-முதல்
இலக்கண நூல்)

இந்தக் கருத்துகளின் வன்மை மென்மைகளை ஒவ்வொன்றாகப் பார்ப்போம்.

**5.2.2.1.** முதல் நூல்

இதற்கு மூலகர்த்தா இறையனார் களவியல் உரையே. இருந்தாலும், இந்த நூற்றாண்டில் அறிவு பூர்வமாகவே இன்று கிடைக்கும் சங்க இலக்கியத்துக்கு முந்தியது என்று அறிஞர்கள் நிறுவியுள்ளார்கள். சங்க இலக்கியத்தையும் தொல்காப்பியத்தையும் ஒப்பிட்டு இதை முதலில் நிறுவியது யாரென்று தெரியவில்லை.

'இப்பொழுதுள்ள தமிழ் நூல்களில் முதலாகிய முழுநூல் தொல்காப்பியம் என்னும் இலக்கணமேயாம்' என்று கா.சு பிள்ளை (1930:56) கூறும்போது இன்றைய தரவு அடிப்படையில் செய்யப்பட்ட முடிவு என்பதை உணர்ந்து கொள்ளலாம். தொல்காப்பியம் இடைச்சங்க நூலென்றும் சங்க இலக்கியம் கடைச்சங்க நூலென்றும் கருதியதால் தொல்காப்பியம் சங்க இலக்கியத்துக்கு முற்பட்டது என்று அவர் அறிவுபூர்வமாக நிறுவ முன்வரவில்லை. அதாவது இலக்கிய வரலாறே தொல்காப்பியப் பழமையைப் புலப்படுத்துவதால் சங்க இலக்கியத்துக்கு முந்தியது என்பதில் சந்தேகம் எழவில்லை.

1932-இல் சிவராஜபிள்ளை தொல்காப்பியம் பிற்காலத்தது என்று கூறியதால் அதை மறுத்து நிறுவும் கடமை வெங்கடராசலு ரெட்டியாருக்கு 1933-இல் ஏற்பட்டிருக்க வேண்டும். அவர் மொழியமைப்பில் காணப்படும் மாறுபாடுகளை இலக்கிய நூல்களின் காலத்தை நிர்ணயிக்க உதவும் நல்ல கருவியாக முதன்முதலில் பயன்படுத்தியிருக்கிறார் என்று நினைக்க வேண்டியிருக்கிறது.

பரணரைப் பற்றி விரிவாக ஆராய்ந்த வேங்கடராசலு ரெட்டியார் (1933) தொல்காப்பிய இலக்கண நெறிகளுக்குப் பரணர் பாடல்கள் மாறுபட்டு வந்துள்ள கூறுகளை எடுத்துக் காட்டி,

> ஆசிரியர் தொல்காப்பியர், பரணர் முதலிய புலவர் தம் காலத்திற்குப் பிற்பட்டவராயிருப்பின் அவர் புலவர் பலராலும் புகழ்ப்பட்ட கபிலர், பரணர் முதலிய பெரும்புலவர் செய்யுட்களில் பயின்று வந்துள்ளவற்றிற்கும் மாறாக இலக்கணம் செய்வாரல்லர்; அவ்வாறு செய்யின், 'வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின்' ஆராய்ந்து இலக்கணம் செய்தார் என்பது அமைவுறுதல் யாங்ஙனம்? இவற்றானும் பிறவற்றானும் ஆசிரியர் தொல்காப்பியனார் பரணர் முதலியோர் காலத்திற்குப் பெரிதும் முற்பட்டவர் என்பது தேற்றம்

என்று கூறியுள்ளார் (ப.173).

இந்த முறையில் வெள்ளைவாரணனும் (1957:89–95) பல உதாரணங்களைக் கூறி,

> இதுகாறும் எடுத்துக்காட்டியவற்றால் ஆசிரியர் இயற்றிய இயற்றமிழ் இலக்கண நூலாகிய தொல்காப்பியம் சங்கச் செய்யுள்களுக்கும் திருக்குறளுக்கும் நெடுங்காலத்துக்கு முன்னரே இயற்றப்பெற்ற தொன்மை உடையது என்பது இனிது புலனாதல் காணலாம்

என்பார். இதையொட்டி இரண்டு கேள்விகள் எழுகின்றன. 1. சங்க இலக்கியத்து முந்தியது என்றால் தொல்காப்பிய இலக்கணத்துக்கு ஆதாரமான இலக்கியம் எது? எங்கே? 2 வரலாற்று மொழியியல் நோக்கில்தொல்காப்பியம், சங்க இலக்கியம் ஆகியவற்றின் மொழியமைப்பு வேறுபாடுகள் கால வேறுபாட்டால் ஏற்பட்ட மாற்றமாகக் கருதமுடியுமா? அல்லது இலக்கியக் கிளைமொழி-நிலைமொழியில் ஏற்பட்ட மாற்றமாகவோ; கிளை மொழிகளில் (திசைச் சொற்களில்) ஏற்பட்ட மாற்றமாகவோ கொள்ளலாமா?

தொல்காப்பிய ஆராய்ச்சியில் முதல் கேள்வி மட்டுமே எழுப்பப்பட்டு விடைகாணும் முயற்சி மேற்கொள்ளப்பட்

டிருக்கிறது. தமிழ்மொழி வரலாறு, மொழியியல்கோட்பாட்டு நோக்கில் விரிவாக ஆராயாததால் இரண்டாவது கேள்வி இதுவரை எழுப்பப்படவில்லை; என்றாலும் இந்தக் கேள்வியைப் புறக்கணிக்க முடியாது.

நமக்கு முக்கியமாக வேண்டியது இலக்கண உருவாக்கத்துக்குத் தேவையான இலக்கிய ஆதாரமாகும். அதே சமயத்தில் சங்க இலக்கியத்துக்கு முந்தியது என்று வாதிடுவோர்களில் சிலர்(உ-ம். வெள்ளை வாரணன், 1957:16.124; இலக்குவனார், 1963; கந்தசாமி, 1977) தொல்காப்பியத்தில் இடைச்செருகல் உண்டு என்றும் வாதிட்டுள்ளார்கள். இது பற்றி பின்னர் விவரமாக ஆராயப்படும் (5.3).

முந்திய இயலில் தொகையாக்கத்தின்போது நிச்சயமாகத் தொகைநூல்களில் உள்ள பாடல்களுக்கு அதிகமான பாடல்கள் இருந்திருக்க வேண்டுமென்று புலப்படுத்தப்பட்டது. இந்தக் கருத்துக்குத் தொல்காப்பியம் உறுதுணையாக இருக்கிறது என்பது சுட்டிக்காட்டத்தகுந்தது. எழுத்ததிகாரத்திலும் சொல்லதிகாரத்திலும் கூறிய சில இலக்கணத்துக்குரிய இலக்கியம் கிடைக்கவில்லை. (விரவுப் பெயர் பற்றியது - பார்க்க, சண்முகம், 1984:222 தொ.) அதைப்போலவே நடைமுறைச்செய்திகளாக உள்ள புறத்திணை, களவியல், கற்பியல், ஆகியவற்றில் கூறப்பட்ட இலக்கணத்துக்கு இலக்கியம் கிடைக்கவில்லை. என்றாலும், எல்லாவற்றையும் அவர் வெறும் இலக்கண உருவாக்க நெறியால், சொந்த சிந்தனை அடிப்படையில் அமைத்திருக்க முடியாது.

அதே சமயத்தில் பலநூல்கள் இருந்து அழிந்துவிட்டன என்றுகொண்டு, தொல்காப்பியம் சங்க இலக்கியத்துக்கு முந்தயது என்றால் தொல்காப்பிய இலக்கணம் உருவானவிதம் பற்றிய ஆய்வையும் அதன்மூலம் இலக்கணக்கோட்பாடு, இலக்கண உருவாக்கநெறி போன்றவற்றையும் உணர்ந்துகொள்ள முடியாமல்போய் விடுகிறது. இலக்கியத்தை அடிப்படையாகக் கொண்டு இலக்கணத்தை ஆராயும்போதே, இலக்கியத்தைப் பொதுமைப்படுத்திப் பெற்ற உண்மைகள் என்ன? பிற மொழி

யிலிருந்து பெற்ற கருத்து என்ன? பிறமொழிக் கருத்தை வாங்கித் தன்னுடைய இலக்கிய மரபு, சமூக பண்பாட்டுச் சூழலுக்கு ஏற்ப செய்தமாற்றம், திருத்தம் முதலியன என்ன? போன்ற பல உண்மைகள் புலனாகும்.

மறைந்துபோன நூல்கள் பற்றிய முழு ஆதாரங்களும் வேங்கடசாமி (1959) செய்தது போல தொகுக்கப்பட வேண்டும். அவர் நூலில் குறிப்பிட்ட 'தகடூர் யாத்திரை' என்ற ஒரு நூலே சங்கத்தோடு தொடர்புடைய நூலாகத் தோன்றுகிறது. ஆனால், அதன் மொழிநடையில் இடைக் காலத் தமிழின் சாயலைக் காணமுடிகிறது (1959:165) என்று அவரே கூறியுள்ளார். மறைந்துபோன பரிபாடல்கள், பதிற்றுப்பத்தின் இரண்டு பத்துகள்போல சங்க காலத்தோடு தொடர்புடைய நூல்களின் பெயர் பற்றிய (இறையனார் களவியலுரை குறிப்பிடுவதைத் தவிர) குறிப்பு ஆராயப்பட வேண்டும். அதுவரையில் தொல்காப்பியத்தைச் சரியாகப் புரிந்துகொள்ள, இப்பொழுது கிடைக்கும் இலக்கிய நூல்களின் அடிப்படையில் இலக்கண உருவாக்கத்தை ஆராய்வதே மேலே குறிப்பிட்ட முறையில் உள்ள சில உண்மைகளைப் புலப்படுத்தவல்லது.

### 5.2.2.2. முதல் இலக்கண நூல்

சிவராஜ பிள்ளை (1932) தொல்காப்பியம் புறநானூற்றுக்கு முந்தியது என்பதை மொழியமைப்பில் இலக்கணக் கூறுகளையொட்டி முதலில் (ப.45) குறிப்பிட்டுள்ளார்.[4] ஆனால் தொல்காப்பியர் காலம் என்ற தனிப்பகுதியில் (ப.258 - 65) புறநானூறு, அகநானூறு போன்ற நூல்களுக்குப் பிற்பட்டது என்ற கருத்தை வலியுறுத்தியுள்ளார். நாட்டுவரலாறு, அரசியல் நிலை, பண்பாட்டு வரலாறு ஆகியவற்றின் அடிப்படையில் தமிழக வரலாற்றின் இருண்டகாலம் என்று கருதப்படுகிறகாலகட்டத்தில் - அதாவது பக்தி இலக்கிய காலத்துக்கு முன்னர் எழுந்திருக்கவேண்டும் (ப.258) என்றும்,[5] பரிபாடல் எழுந்த காலத்தை ஒட்டியது என்றும் (ப.263)[6] குறிப்பிட்டுள்ளார். எனவே, தொல்காப்பியம் சங்க இலக்கியத்துக்குப் பிந்தியது என்பதைச் சிவராஜபிள்ளையின் கருத்தாகக் கொள்ளலாம்.

> மொழிவரலாற்றில் பிற்காலத்தியது எனக் கருதவேண்டிய ஒன்று; பிற்காலத்தில் வளர்ந்த ஒன்று சங்க நாளில் அருகிய வழக்காக அமைந்திருக்கத் தொல்காப்பியர் அதற்கு விதியுள்ளமையும் (உள்ளபடியே) இங்குக் கருதத்தக்கது (ப.24)

என்று அருணாசலம் (1975) குறிப்பிட்டு உதாரணம் காட்டியதோடு,

> முற்பட்ட கால நிலைகளை எவ்வளவுதான் எதிரொலித்தாலும் ஒருவர் நூலில் பிற்பட்ட கால நிலைக்குத் தெளிவான சான்றுகள் கிடைக்குமேயானால் அவரைப் பிற்பட்ட காலத்தவராகக் கருத முடியுமே தவிர, பெரும்பான்மைபற்றி பலஎடுத்துக்காட்டுகள் முற்பட்ட காலநிலைகளை எதிரொலிப்பதால் முற்பட்ட காலத்தவர் என்று கூறிவிட முடியாது.

என்ற வரலாற்று உண்மை ஒன்றைத் தெளிவுபடுத்தி (ப.25. தொ).

> இன்று நம் கையிலிருக்கும் தொல்காப்பிய நூல் முழுவதையும் ஒரே ஆசிரியரின்படைப்பு என்று கொண்டு பார்த்தால் அவர் சங்க இலக்கியங்கள் தோன்றிய காலத்துக்குப் பிற்பட்டவர் என்ற கருத்தே உறுதியடைகிறது (ப.26)

(அருணாசலம் 1975) என்று கூறியுள்ளார்.

5.2.2.3. பகுதி முதல் நூல்-பகுதி முதல் இலக்கணநூல்

செல்வநாயகம் (1969) தொல்காப்பியம் எழுத்ததிகாரமும் சொல்லதிகாரமும் சங்க இலக்கியத்துக்குக் காலத்தால் முந்தியது என்றும், பொருளதிகாரம் சங்க இலக்கியத்துக்குக் காலத்தால் பிந்தியது என்றும் முதன்முதலில் குறிப்பிட்டார். பொதுவாகத் தொல்காப்பியப் பொருளதிகாரம் காலத்தால் பிந்தியது என்று (உ-ம்.மானுவெல், 1969) இலக்கிய ஆராய்ச்சி நோக்கில் சிலர் விளக்கியுள்ளார்கள். இந்தக் கருத்து பின்னால் வேறுபலராலும் (உ-ம். சுவலபில், 1973:137, 1974:9, சுந்தரம், 1979) ஆதரிக்கப்பட்டுள்ளது. மீனாட்சிசுந்தரனாரும் (1974) ஒன்றுக்கு மேற்பட்ட தொல்காப்பியர் இருந்திருக்க வேண்டும் என்ற கருத்துடையவரே.

இந்த நிலையில் தொல்காப்பியம் முழுமையும் ஒரே ஆசிரியரால் எழுதப்பட்டிருக்க வேண்டும் என்ற எதிர்வாதமும்

ஆய்வுலகில் காணப்படுகிறது. (உ - ம். கந்தசாமி, 1977; பால சுப்பிரமணியன், 1983) அப்படியானால் தான் தொல்காப்பியம் முதல்நூல் அல்லது முதல் இலக்கணநூல் என்பது உறுதிப் படும். மறுப்புக்கருத்து பழையதை உறுதி செய்வதாகவே அமைந்துள்ளது. இருந்தாலும் இங்கு முக்கியமாகத் தொல் காப்பிய மூலபாடமே பிரச்சினைக்கு உள்ளாக்கப்பட்டிருப் பதாகவும் எடுத்துக்கொள்ளலாம். அதனால், முதலில் தொல் காப்பியரின் மூலபாடத்தை நிர்ணயம் செய்ய அங்குள்ள பிரச் சினைகளைப் பொதுவாகவும், தொல்காப்பிய மூன்று அதி காரங்களும் ஒரே ஆசிரியரால் எழுதப்பட்டது என்பதை நிரு பிக்கும் வகையில் சிறப்பாகவும் பார்ப்போம்.

## 5.3. மூலபாடம்

எந்த நூலுக்கும் மூலபாடமே முக்கியமானது. ஏனென் றால், அதுவே நூலாசிரியர் பயன்படுத்திய பாடத்தை வரை யறுப்பதற்கு உதவுகிறது. மேலும், அது ஆசிரியரின் மூலக் கருத்தையும் சரியாக அறிந்து கொள்ளப் பயன்படுகிறது.

பழைய நூல்களுக்கு மூலபாடம் நிர்ணயிப்பதைப் பாட நிர்ணயம் செய்வது என்றும், அப்படிப் பதிப்பித்த பதிப்பைச் செம்பதிப்பு என்றும் தமிழில் பொதுவாக வழங்குகிறோம். பாட ஆராய்ச்சி என்று கூறத்தகுந்த டெக்ஸ்டுவல் கிரிட்டிசிஸம் (Textual criticism), மேலைநாடுகளில் தனித்துறையாகவே கருதப்படுகிறது. பழைய பதிப்பாசிரியர்களான சி.வை. தாமோ தரம் பிள்ளை, உ.வே. சாமிநாதஐயர் போன்றவர்கள் தங் கள் பதிப்புகளில் பாட ஆராய்ச்சிக்கு முக்கியத்துவம் கொடுத்து நூல்களைப் பதிப்பித்தார்கள். ஆனாலும், தனியே சிறப்பாகப் பாட ஆராய்ச்சிதுறை தமிழில் வளரவில்லை. அதனால்தான் தொல்காப்பியத்துக்கு ஒரு செம்பதிப்பு இன்னும் அமைய வில்லை இந்த நிலையில் மூலபாட ஆராய்ச்சி இலக்கண உரு வாக்கத்துக்கு அடிப்படையானது; அது கால ஆராய்ச்சிக்கும் துணையானது என்ற உண்மை மறக்கக் கூடியதல்ல.

உ.வே.சா. போன்று பதிப்புப் பணியில் ஈடுபாடு காட்டாத வர்கள் தொல்காப்பியத்தைப் பதிப்பித்ததால், தொல்காப்பியச்

சுவடிகள் பற்றிய இன்றைய தொல்காப்பியப் பதிப்புகளி லிருந்து ஒரு உண்மையையும் அறிந்துகொள்ள முடியவில்லை. அதனால் தொல்காப்பிய மூலம் தனியே சுவடிகளில் கிடைக் கிறதா என்ற உண்மை தெரியவில்லை. உரைகளுடன் கூடிய தொல்காப்பியம் சுவடிகளில் கிடைத்ததால் மூலபாடத்தை உரையாசிரியர்கள் வழியாகவே பெறவேண்டியவர்களாகி விட்டோம். இளம்பூரணர் போன்ற முதல் உரையாசிரியருக்கு மூலம் கிடைத்திருக்க வேண்டும். ஆனால் அவர் அதை செம்பாடமாகக் கருதத் தயங்குவது அவருடைய உரையால் அறிய முடிகிறது.

### 5.3.1. இடை விழ்ச்சி

அகத்திணை இயலில் தலைமகன் பிரிவின்போது பேசுவதற் குரியவர்கள் பலரிலும், நற்றாய் (பெற்ற தாய்), செவிலி (வளர்த்த தாய்), தோழி, தலைமகன் ஆகியவர்களைக் கூறி விட்டு (அகத்.39-44) அடுத்து மீதியுள்ளவர்களும் பிரிவின்போது பேசலாம் என்பதை உணர்த்த 'எஞ்சியோர்க்கும் எஞ்சுதல் இலவே' என்று ஒரு சூத்திரம் (அகத்.45) காணப்படுகிறது. இதைப்பார்த்த இளம்பூரணருக்கு முக்கிய பாத்திரமான தலைவி பேசுவது பற்றி தொல்காப்பியத்தில் தனியே ஒரு சூத்திரம் இல்லையே என்ற சந்தேகம் ஏற்பட்டது. எனவே, இந்தச் சூத்திர உரை விளக்கத்தில்

> 1) பாங்கர் முதலாயினாரை இச்சூத்திரதாற் கூறுப. தலைமகள் கூற்றுத் தனித்துக் கூறல் வேண்டும், இவரோடு ஒரு நிகரன்மையின் எனின், ஒக்கும். 2) தலைமகள் கூற்று உணர்த்திய சூத்திரம், காலப் பழமையாற் பெயர்த்து எழுதுவார் விழ எழுதினார் போலும்

(விளக்கத்துக்காக எண் கொடுக்கப்பட்டுள்ளது)

என்றுகூறுவதிலிருந்து இரண்டு செய்திகள் புலனாகின்றன. அவை ரொவன: 1) சிறப்பாக அகத்திணை இயல் அமைப்பு பற்றியும் யபாதுவாக நூலமைப்புப் பற்றியும் இளம்பூரணர்கருத்து-அதா வது பிரிவில் கூற்றுக்குரியவர்களைத் தொடர்ந்து விளக்குவது·

2) அவர் காலத்தில் படியெடுத்த முறையால் ஏற்பட்ட குறை-அதாவது பிரதியைச் சரியாகப் புரிந்துகொள்ளாமல் எழுதியது. படியெடுத்தவர்கள் தொல்காப்பியம் பழைய நூல் ஆனதால் அதைப் புரிந்துகொள்ளாமல் இந்தச் சூத்திரமே தலைமகள், பாங்கன் ஆகியோரும் கூற்றுக்கு உரியவர்கள் என்று விளக்கு வதாகக் கொண்டு, தலைமகள் கூற்றுக்குரிய சூத்திரத்தை நீக்கிவிட்டார்களோ? என்பதால் அவர் தனக்குக் கிடைத்த மூலத்தைச் செம்பாடமாக மதிக்கவில்லை என்பது தெரிகிறது. ஆனால் அடுத்த வரியிலேயே

> ஆசிரியர் இச்சூத்திரத்தானும் பொருள்கொள்ள வைத் தமையின் தலைமகள் கூற்று வருமாறு

என்று விளக்குவதால், மூலபாட ஆய்வில் மேலும் இறங்காமல் உள்ளதைக் கொண்டு சமாதானம் அடைந்துவிட்டதை உணரமுடிகிறது. அதாவது இளம்பூரணருக்கு எழுந்தது வெறும் சந்தேகமே என்றாகிவிட்டது. அதனால்தான் நச்சி னார்க்கினியர் (42 உரை) 'எஞ்சியோர்க்கும்' என்பதற்கு 'முன்னர் கூறாது நின்ற செவிலிக்கும், தலைவிக்கும், ஆயத் தோர்க்கும் அயலோர்க்கும்' என்று பொழிப்புரை எழுதி மூல பாடம் பற்றிய பிரச்சினையைக் கிளப்பாமல் போய்விட்டார். எப்படியானாலும் 'விழ எழுதினார்' என்பதைப் பாட ஆராய்ச் சியில் 'இடை வீழ்ச்சி' (மாணிக்கம், 1984:9) என்று பொதுமைப் படுத்தலாம். இந்தக் கருத்து வேறு சில சூத்திரங்களுக்கும் பொருந்துவதாக பாலகிருட்டினன் (1988:20) குறிப்பிட்டுள் ளார். தொல்காப்பியர் அகத்தியருக்குத் தலைமாணாக்கர் என்ற கொள்கையை ஒட்டி உரையாசிரியர்களைப் பற்றி வெள்ளைவாரணன் (1957:45).

> இக்கொள்கை (தொல்காப்பியர் தலைமாணாக்கர் என்பது) வன்மை மென்மைகளை ஆராய்தல் மரபு வழுவாம் என்று அஞ்சி அக்காலத்தில் வாழ்ந்த உரை யாசிரியர் பலரும் அவ்வாராய்ச்சி பற்றிய தம் முடிவினை வெளிப்படுத்த விரும்பவில்லை.

என்று கூறியது மூலபாட ஆராய்ச்சிக்கு மட்டும் இல்லாமல் தொல்காப்பிய ஆராய்ச்சிக்கும் பொருந்தும். இன்றும் அந்த அச்சம் பலவேறு வகையில் நீடித்து வருகிறது.

### 5.3.2. இடைப் பிறழ்ச்சியும் பாடபேதமும்

இன்னொரு பிரச்சினை: சூத்திரங்கள் எந்த இயலுக்கு உரியது என்பது. அதாவது சில சூத்திரங்கள் அமைய வேண்டிய இயல் என்ன என்ற கேள்வியே அது. இங்கும் உரையாசிரியர் நூலாக்கத் திட்டம் பற்றிய சிந்தனையாலேயே இந்தப் பிரச்சினை புலப்படுகிறது. இதனை வைப்புப் பிறழ்ச்சி (ப.91), வைப்பு மாற்றம் (ப.26)என்று பொதுமைப்படுத்துவார் மாணிக்கம் (1984). இதை இடைப் பிறழ்ச்சி என்று கூறுவது இன்னும் பொருத்தமாக இருக்கும்.

'எல்லே விளக்கம்' என்று இளம்பூரணர் கொண்ட பாடத்தைச் சேனாவரையர் 'எல்லே இலக்கம்(இடை. 21)என்று பாடம் கொண்டுள்ளார். இது பாடபேதம் ஆகும். ஆனால் சேனாவரையர் இந்தப் பாடபேதத்தைப் பற்றி ஒன்றும் குறிப்பிடாமல் சென்றுவிட்டார். ஆனாலும் 'எல்' என்ற சொல் உரிச்சொல் என்று மனதில் பட்டிருக்கிறது. எனவே,

> எல்லென்பது உரிச்சொல் நீர்மைத்தாயினும் ஆசிரியர் அடைச்சொல்லாக ஓதினமையான் இடைச்சொல் லென்று கோடும்

என்று எழுதியிருப்பது வெள்ளைவாரணன் கூறிய அச்சத்துக்கு இன்னொரு எடுத்துக்காட்டு. அதே சமயத்தில் இந்த உரையால் பாடபேதம், இடைப்பிறழ்ச்சி என்ற இரண்டு மூலபாட பிரச்சினைகள் இருப்பது நமக்குத் தெளிவாகின்றன. உண்மையில் இந்த இரண்டையும் இங்குப் பிரச்சனையாக எடுத்துக் கொண்டிருந்தால் சுவடி தேடும் ஆராய்ச்சி அன்றே இன்னும் புதிய வேகத்தோடு துவங்கியிருக்கும். ஆராய்ச்சித் துடிப்புகள் முளையிலே கிள்ளி எறியப்பட்ட நிலை இங்கும் காணப்படுகிறது. ஆனால், நேமிநாதர் தனி இலக்கண ஆசிரியர் என்ற முறையில்'எல்லும் விளக்கம்'(நேமி60.3)என்றுபாடம் கொண்டு உரியியலில் சேர்த்துள்ளதைப் பார்க்கும் போதுதான் உரையாசிரியருக்கு உள்ள கட்டுப்பாடும் தடுமாற்றமும் புலனாகின்றன. (விளக்கத்துக்கு, சண்முகம், 1987:107, பார்க்கவும்).

பிறர் உரையில் எச்சவியலில் காணப்படும் முற்றுவினை பற்றிய சூத்திரம், வினையியலில் இருப்பதுதான் பொருத்தம் என்று தன்னுடைய அறிவுக்குத் தோன்றியதால் இடைப் பிறழ்ச்சி செய்து, அதற்கு விளக்கமும் தெய்வச்சிலையார் எழுதி யுள்ளார். இது ஆராய்ச்சியாளன் கடமையான தன்னுடைய அறிவுக்குச்சரி என்று பட்டதை ஏற்றுக்கொள்ளும் அறிவுவலிமை யின் தன்னம்பிக்கையைக் காட்டுகிறது. முதல் சூத்திர உரை விளக்கத்தில் தன்னுடைய செயலுக்கான அல்லது மாற்றத்துக் கான விளக்கத்தை மறைமுகமாக முதலில் குறிப்பிட்டு, உள்ள நிலையைச் சுட்டிக்காட்டி, அதற்கு ஏதாவது காரணம் இருக் கிறதா என்று நினைத்துப் பார்த்து, அதற்குச் சரியான காரணம் தெரியாததால் தன்னுடைய சிந்தனையே சரி என்று முடிவு செய்து 'இடைப்பிறழ்ச்சி' செய்துள்ளார் தெய்வச்சிலையார். எனவே, அவருடைய முன் சூத்திரத்தின் உரைவிளக்கத்தைப் பார்ப்போம்:

> 1) அஃதேல், வினைச்சொற்கள்-முற்றும், பெயரெச்ச மும், வினையெச்சமும் என மூவகைப்படும். 2அ) அவற் றுட் பெயரெச்சம் வினையெச்சம் என்பன இத்தன்மைய என்று எடுத்தோதி, முற்றுச் சொல்லாவது இத் தன்மையது என்று ஓதிற்றிலர். ஆ) அதற்கு இலக்கணம் யாங்குப் பெறுதும் எனின், எச்சவியலுட் பெறுதும். 3) வினைக்கு இன்றிமையாத முற்றினை ஒழிபியல் கூறு கின்றுழிக் கூறிய அதனாற் பெற்றதென்னை எனின் அஃது எமக்குப் புலனாயிற்றன்று. 4) அஃதேல், வினை யிலக்கணம் அறிந்தேனாகுங்கால் முற்றிலக்கணமும் அறிதல் வேண்டும் அன்றே. அதனை ஆண்டுக் கூறிய வாறு ஈண்டுரைத்தல் வேண்டும் எனின், உரைக்கு மாறு.

(கருத்துத் தெளிவுக்கு எண் கொடுக்கப்பட்டுள்ளது.)

தன்னுடைய சிந்தனையில் எழுந்த இலக்கணக் கோட் பாட்டை (வினைச்சொற்கள், முற்று, பெயரெச்சம், வினையெச் சம் என்று மூன்றுவகைப்படும்) 1 வது கருத்து மூலமும், இலக்கணம் விளக்கவேண்டிய முறையை (பெயரெச்சத்துக்கும் வினையெச்சத்துக்கும் பிறகு வினைமுற்று பற்றிய இலக்கணம் இருக்க வேண்டும்) 2அ.கருத்து மூலமும், அந்த முறை தொல் காப்பியத்துள் இருக்கிற நிலையை 2 ஆ. கருத்து மூலமும் கூறி யுள்ளார். 3வது கருத்தின் மூலம் தன்னுடைய சிந்தனைக்கும்

தொல்காப்பியத்தில் இன்று காணப்படும் நிலைக்கும் உள்ள முரணுக்கான காரணத்தை நினைத்துப் பார்த்து விடையொன்றும் அறிந்துகொள்ள முடியாத தன்னுடைய நிலையை ஒளிக்காமல் குறிப்பிட்டுவிட்டு, 4வது கருத்தின்மூலம் தன்னுடைய சிந்தனையின் அடிப்படையிலேயே சூத்திரங்களை மாற்றி வைத்ததையும் சுட்டிவிட்டார். ஆனால் மூன்று சூத்திரத்துக்குப் பிறகு,

> இவை மூன்று சூத்திரமும் ஈண்டைத் தொடர்புபட்டுக் கிடந்த இதனை, உரையெழுதுவோர், 'பிரிநிலை வினை'யென்னுஞ் சூத்திரத்துட் (எச்ச – 31) சொல்லப் பட்ட பெயரெச்ச வினையெச்சம் என்பவற்றை ஈண்டு ஓதப்பட்ட பெயரெச்ச, வினையெச்சமாகக் கருதி, ஆண்டுச் சேரவைத்தார் என்பாரும் உளர்.

என்று எழுதுவதால் பிறர் கருத்தையும் குறிப்பிட்டு, அதே சமயத்தில் தன் கருத்துக்கு ஒத்து வரவில்லை என்பதை 'என்பாரும் உளர்' என்று மறைமுகமாகக் குறிப்பிட்டு விட்டார். மாற்றான் கருத்தை மதிப்பது வேறு, ஏற்றுக் கொள்வது என்பது இன்னொன்று. தெய்வச்சிலையார் தன்னுடைய சிந்தனையில் தெளிவும் நம்பிக்கையும் இருந்ததால் இடைப்பிறழ்ச்சி செய்தார் என்பதை மறந்துவிடக்கூடாது. தன்னுடைய சிந்தனைக்கு அடிப்படை வேறு, பிறருடைய சிந்தனைக்கு அடிப்படை வேறு. எனவே, இங்கு இரண்டும் சந்திக்கவேயில்லை.

### 5.3.3. ஒன்றாக்கல்/பலவாக்கல்

பல உரைகளை ஒப்பிட்டுப் பார்க்கும்போதே ஒரு சூத்திரமாக ஒரு உரையாசிரியரால் கருதப்படுவது இன்னொரு உரையாசிரியரால் இரண்டு சூத்திரமாகக் கொள்ளப்பட்டது புலப்படுகிறது. இதுவே இங்கு ஒன்றாக்கல்/பலவாக்கல் என்று அழைக்கப்படுகிறது (மாணிக்கம், 1984:26). ஒரு சில இடங்களில் உரையாசிரியர்களே இந்த உண்மையைச் சுட்டிக்காட்டி இது சரியா, தவறா என்று விவாதித்துள்ளார்கள்.

> ஒன்று வினை மருங்கின் ஒன்றித் தோன்றும்
> வினை வேறுபடூஉம் பலபொருள் ஒரு சொல்
> நினையுங்காலை கிளந்தாங்கு இயலும்

என்ற மூன்று அடிகளில் முதல் அடி தனிச்சூத்திரமாகவும், அடுத்த இரண்டு அடிகள் இன்னொரு சூத்திரமாகவும் இளம்பூரணர் உரையில் இருக்க, அந்த மூன்று அடிகளுமே ஒரு சூத்திரமாகச் சேனாவரையர் உரையில் அமைந்திருக்கக் காணலாம். இதுவே பலவாக்கல்/ஒன்றாக்கல் என்று குறிப்பிடப்படுகிறது. அதாவது இளம்பூரணர் பாடம் பலவாக்கல்; சேனாவரையர் பாடம் ஒன்றாக்கல்.

இந்த உண்மையைச் சேனாவரையரே தன்னுடைய உரை விளக்கத்தில் எடுத்துக்காட்டி உரை பொருந்தாது என்று கூறுவதால் இந்த மூலபாடம் பொருந்தாது என்று நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

> ஒன்றுவினை மருங்கின் ஒன்றில் தோன்றும் என ஒரு
> சூத்திரமாக உரையாசிரியர் பிரித்தாரால் எனின்

என்று சேனாவரையர் குறிப்பிட்டு... 'அது போலியுரை என்க' என்று கூறுவதால் இரண்டு உண்மை புலனாகின்றன. 1) மூலபாட ஆய்வில் சுவடி ஆய்வு இடம் பெறாமல் தருக்க ரீதியான ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. 2) உரையாசிரியர்கள் கவனமெல்லாம் மூலபாட ஆய்வில் செல்லாது, அந்த மூலபாட மாறுபட்டால் உரை பொருந்துமா பொருந்தாதா என்ற முறையில் செல்வது. எனவேதான் தமிழாய்வில் பாடவாராய்ச்சி உரிய இடத்தைப் பெறமுடியவில்லை. சேனாவரையர் குறிப்பிடும் மற்றொரு உதாரணம் சூ.83. இதிலிருந்து இளம்பூரணரே இந்த உண்மையை அறிந்திருந்தார் என்பதும் புலனாகிறது. ஆனால் இன்றைய இளம்பூரணர் உரையில் அவை இரண்டு சூத்திரமாகக் காணப்படுகிறதே அதுபற்றிய சேனாவரையர் கூறும்குறிப்பு ஒன்றும் இல்லை. இதனால் உரையாசிரியர்கள் தங்களுக்குத் தெரிந்த பாடங்களைக் குறிப்பிடாமல், தாங்கள் கொண்ட பாடங்களைப் பற்றிக் குறிப்பிட்டுச் சென்றதால் மூலபாட ஆய்வு தீவிரமாக்கப்படவில்லை என்பதையும் அறியமுடிகிறது.

### 5.3.4 இடைச் செருகல்

இருபதாம் நூற்றாண்டில் இடைச்செருகல் என்ற ஒரு புதிய கருத்தும் உருவாகியுள்ளது. மரபியலில் காணப்படும்

வருணவகை பற்றிய சூத்திரங்கள் (71-85) இடைச்செருகலாக விளக்கப்படும் என்று சோமசுந்தரபாரதியார் (1942:67) அகத் திணை இயல் உரையில் கூறுவதால் இடைச்செருகல் பற்றிய கருத்து நாற்பதுகளிலேயே துவங்கிவிட்டது எனலாம். வெள்ளைவாரணன் (1957:16, பகுதி 2.பக்.299) இடைச் செரு கல் பற்றி விரிவாகவேபேசியுள்ளார் இதற்குத் தொல்காப்பியர் கால தமிழ்ச் சமூக அமைப்பு, நூலாக்கத் திட்டம் என்று இரண்டு தருக்கரீதியான காரணங்களைக் காட்டியுள்ளார்.

> மக்களை நிலத்தாற் பிரித்துரைப்பதன்றி நிறத்தாற் (வருணத்தால்) பிரித்துப் பேசுதல் பழந்தமிழ் மரபன்றாம். அயலாரால் இந்நாட்டிற் பிற்றைநாளில் புகுத் தப்பட்ட நால்வகைச் சாதிப்பிரிவு, தொன்மைவாய்ந்த தொல்காப்பிய மரபியலிலும் பிற்காலத்தவரால் நுழைத்துரைக்கப்பட்டுள்ளது. (முதல் பகுதி ப.16)

என்பது அவரது வாசகம். தொல்காப்பிய நூலுக்குள் இரண்டு வகை சமூக அமைப்பு காணப்படுகிறது; அவைகளில் ஒன்று பிற்காலத்து; எனவே அதைக்கூறும் சூத்திரங்கள் பிற்காலத்தாரால் இடையே செருகியிருக்கவேண்டும் என்ற கருத்து இங்கு கூறப்பட்டுள்ளது. இதே கருத்தை இன்னொரு நோக்கிலும் விளக்கியுள்ளார்.

இளமை, ஆண்மை, பெண்மை முதலியவை காரணமாக வழங்கும் பெயர்களை மரபியல் முதல் எழுபது சூத்திரங்களில் விளக்கி அடுத்து பதினைந்து சூத்திரங்கள் (71-85) அந்தணர், அரசர், வைசிகர், வேளாளர் ஆகிய நான்கு வருணங்களை விளக்குவதால்

> சிறிதும் தொடர்பற்ற நிலையில் பின்வந்தவர் ஒருவரால் நுழைக்கப்பட்ட இடைச்செருகல் ஆகலாம். இவை தொல்காப்பியனரால் இயற்றப்பட்டன அல்ல என்பது சிறிது பயிற்சி உடையார்க்கும் தெளிவாகும். இவ் வாறே இவ்வியலில் சேர்க்கப்பட்டனவாக ஐயுறுதற் குரியனவுஞ் சிலவுள. அவை எங்ஙனமாயினும் இங் கெடுத்துக் காட்டிய சூத்திரங்கள் (மரபு. 71-85) தொல்காப்பியர் கூறியன அல்ல என்பதே அறிஞர் பலரும் ஒருமித்துக் கூறும் முடிபாகும்.

என்பதே அவர் வாசகம் (ப.16). இதற்கு விளக்கம் தேவையில்லை.

மரபியலில் ஓரறிவுயிர், ஈரறிவுயிர் என்று உயிர்களைப் பாகுபடுத்துவது (சூ.27-33) சமணச் செல்வாக்கால் என்பது பலருடைய கருத்து (உ-ம். வையாபுரிப்பிள்ளை, 1949:33). கந்தசாமி (1977:40) இந்தக் கருத்தை ஒத்துக்கொண்டாலும் மூல சமண நூல்களைச் சுட்டிக்காட்டி தொல்காப்பியத்தில் இந்த நூற்பாக்கள் கி.பி. முதல் நூற்றாண்டை ஒட்டி இணைக்கப்பட்டிருக்கவேண்டும் என்பார்.

இப்படி எந்தெந்த நூற்பாக்கள் ஏன் இடைச்செருகலாகக் கருதப்படுகின்றன. அவை இல்லாமல் மூல நூல் எப்படி இருக்கும்? இடைச்செருகலுக்காகக் கூறும் காரணங்களின் வன்மை மென்மை என்ன? என்று தொல்காப்பிய அறிஞர்கள் ஆராய முன்வர வேண்டும்.

### 5.3.5. இயல் இடைச்செருகல்

ஜான்மார் (1958) பொருளதிகாரத்தில் சில இயல்களையே வேறு காரணத்துக்காக இடைச்செருகல் என்று கூறுவதால் அந்தக் கருத்தும் இங்கு குறிப்பிடத்தகுந்தது.

ஜான்மார் (ப.15) பொருளதிகார அமைப்பை விளக்கிவிட்டு பொருளதிகாரத்தில் முதல் இரண்டு இயல்களான 'அகத்திணையும் புறத்திணையும்' தமிழ் இலக்கியத்துக்கே உரிய பல சிறப்புப் பண்புகளை உள்ளடக்கியது என்றும், மூன்று முதல் ஐந்து வரை இயல்கள் முன்னர் சொன்ன கருத்தின் விரிவாக அமைந்தாலும் அவைகளிலுள்ள பல செய்திகள் வடமொழி நூல்களில் காணப்படுகின்றன என்றும், 6, 7 வது இயல்கள் வடமொழி மரபில் அமைந்த நாடக மரபு, உவமை கருத்துகளைக் கூறுவதால், பின்னால் சேர்க்கப்பட்டதாகவோ இடைச்செருகலாகவோ இருக்கலாம் என்றும் கூறியுள்ளார். பின்னர் (ப.53 தொ.) 'களவியல் சூத்திரங்கள் குறிப்பாக 4,9 ஆகிய இரண்டும் பரதநாட்டிய சாத்திரக் கருத்துகளை ஒத்துள்ளன என்றும், அகத்திணைக்கும் களவியலுக்கும் கருத்து முரண்

காணப்படுகிறது என்றும், ஒன்பதாம் சூத்திரத்தின் கருத்து வாத்சயாயனரின் காமசூத்திர கருத்தோடும் தொடர்பு உடையது' என்றும் குறிப்பிட்டுவிட்டு இறுதியாக (ப.55)

> தொல்காப்பிய பொருளதிகாரம் ஒருவருக்கு மேற்பட்டவரால் இயற்றப்பட்டதற்கான அறிகுறி உள்ளது: அந்தப் பலரும் ஒரே காலத்தில் வாழ்ந்தவராக இருக்கலாம் அல்லது அந்தப் பகுதிகள் வேறுவேறு காலத்தில் சேர்க்கப்பட்டதாகவோ இருக்கலாம். மூன்று முதல் ஐந்து இயல்கள் அகத்திணை கருத்துகளோடும் நாட்டிய சாஸ்திரம், காமசூத்திரம் போன்ற நூல்களின் கருத்துகளை இணைத்துக்காட்டும் முயற்சியாக இடைச்செருகலாகச் சேர்க்கப்பட்டிருக்க வேண்டும். அகத்திணை விரிவாக பின் மூன்று இயல்களில் வருணிக்கப்பட்டதுபோல புறத்திணை விரிவாக பின்னர் விளக்காமல் போனது ஆச்சரியமாக இருக்கிறது. உவமை இயலும், மெய்ப்பாட்டு இயலும் இடைச்செருகலாகக் கருதலாம்[7].

என்று குறிப்பிட்டுள்ளார். இங்கு மூன்று செய்திகள் எடுத்துக் காட்டத் தகுந்தவை. 1) ஜான்மாரின் நூல் 1985-ல்தான் வெளியிடப்பட்டது என்பதால் அவருடன் மேலைநாட்டில் ஆராய்ச்சி செய்த அறிஞர்கள் சிலருக்கே தெரியும். 2) அகத்திணையியலுக்கும் களவியல், கற்பியல்களுக்கும் கருத்து முரண் இருக்கிறது. அந்த இயல்களில் தமிழ் கருத்துகளை வடமொழி கருத்துகளோடு இணைத்துப் பார்க்கும் முயற்சி மேற்கொள்ளப்பட்டிருக்கிறது என்று முதன்முதலில் கூறியுள்ளார். ஆனாலும் தனியே செயராமன் (1977) கருத்து முரண் இருப்பதைக்கண்டு அதற்கு விளக்கம் கூறியிருப்பது பின்னர் (அடுத்தபிரிவில்) விளக்கப்படும். 3) இங்கு நமக்கு வேண்டியது பொருளதிகாரத்தில் சில இயல்கள் இடைச்செருகலாக இருக்கலாம் என்ற உண்மையும், நூல் அமைப்புத் திட்டத்தில் முரண் என்ற தருக்கரீதியிலான சிந்தனை அடிப்படையுமே. காலம் செல்லச் செல்ல இடைச்செருகல்களின் அளவு கூடுதலாக ஆகிவிட்டது என்பதையும் கவனிக்கவேண்டும்.

தொல்காப்பியத்தில் கருத்து முரண், மொழிமுரண் போன்றவை உள்ளன என்ற கருத்து அறுபதுகளில் வலுப்பெற்

றது. 'தொல்காப்பிய சூத்திரங்களுக்குள் முரண் காணப்படு கிறது; இந்த முரண் தொல்காப்பியத்தில் சில குறை இருக் கிறது என்று கருதிப் பின் வந்தவர்களால் சில சூத்திரங்களை இடையே செருகியிருக்க வேண்டும்; அல்லது தொல்காப்பியம் என்பது தனிப்பட்ட ஆசிரியரால் எழுதப்படாமல் ஒரு குழுவின ரால் அவ்வப்போது எழுதிச் சேர்த்த நூலாக இருக்க வேண் டும்.' என்று மீனாட்சிசுந்தரன் (1965 அ:51 தொ.)[8] குறிப்பிட்டு விட்டுச் சில உதாரணங்களையும் தந்துள்ளார். அவர் 1974-லும் இந்தக் கருத்தை (ப. 3 தொ.) வலியுறுத்தியுள்ளார். ஹார்ட் டும் (1975:10,79) தொல்காப்பியத்தில் சில இயல்கள் இடைச் செருகலாக இருக்கலாம் என்று கூறியுள்ளார்.[9]

### 5.3.6. கடைச் செருகல்

இந்த நிலையில் 1966-இல் உலகத் தமிழ் மாநாட்டில் படிக்கப் பட்ட இரண்டு கட்டுரைகள் 'இடைச்செருகல் பிரச்சனையைக் கடைச் செருகலாகக் கருதவேண்டும்; அதாவது எழுத்தும் சொல்லும் ஒருவராலும், பொருளதிகாரம் இன்னொருவரக லும் எழுதப்பட்டிருக்க வேண்டும்' என்ற கருத்தை வெளியிட் டுள்ளன. இந்தக்கருத்தை ஆராய்வதற்கு முன்னால் இதன் அடிப்படை என்ன? எதனால் இந்த எண்ணம் தோன்றியது என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும்.

தொல்காப்பியக்கால ஆராய்ச்சியில் தொல்காப்பியம் சங்க இலக்கியத்துக்கு முந்தியதா அல்லது பிந்தியதா என்ற விவாதத் தில் தொல்காப்பியத்துக்கும் சங்க இலக்கியத்துக்கும் உள்ள மொழி அமைப்பு நிலை, இலக்கிய வளர்ச்சி, யாப்பு ஆகியவற் றில் உள்ள சில வேறுபாடுகள் பலராலும் எடுத்துக்காட்ட பட்டு முந்தியது என்று வலியுறுத்தப்பட்டு வந்தது. பிந்தியது என்பவர்கள் பொருளதிகாரம் உருவாக, இலக்கிய அடிப்படை வேண்டும்; இலக்கிய நிலையில் தொல்காப்பியம் பிற்கால வளர்ச்சியைக் காட்டுகிறது என்று மட்டுமே கூறினார்கள். இந்த நிலையில் எழுத்ததிகார, சொல்லதிகார கருத்துகள் சங்க இலக்கியத்திலிருந்து மாறுபட்டுக் காணப்படுவதால் அவைகளின் பழமையை ஒத்துக்கொண்டு பொருளதிகாரம் மட்டும் பிற் காலத்தில் எழுந்திருக்க வேண்டும் என்று கூறியுள்ளார் செல்வ

நாயகம் (1969:42 தொ). அவர் கருத்தைத் தொல்காப்பியம் சங்க இலக்கியத்துக்கு முந்தியதா பிந்தியதா என்ற இரண்டு வேறுபட்ட கருத்தையும் இணைக்கும் முயற்சி என்றே கருத வேண்டியிருக்கிறது.

எப்படியாயினும் மூலபாட ஆய்வில் ஒரு அதிகாரம் அதுவும் கடைசி அதிகாரமே மூலநூலோடு சேர்ந்தது இல்லை என்ற கருத்து ஆய்வு உலகில் தோன்றிவிட்டது. இந்தக் கருத்து பிரச்சனையாக எடுத்துக்கொள்ளப்பட்டு விவாதிக்கப்பட்டுள்ளது தமிழ் ஆய்வுலகின் உயிர்த்துடிப்பைக் காட்டுகிறது.

மூலபாட ஆராய்ச்சியில் 'கடைச் செருகல்' ஒரு பிரச்சனையாகக் கொள்ளத்தகுந்தது என்பது சிலப்பதிகார வஞ்சிக் காண்டம் இளங்கோ அடிகள் இயற்றியதா என்ற ஆய்விலும் வெளிப்படுகிறது.

தொல்காப்பியம் ஒருவருக்கு மேற்பட்ட ஆசிரியர்களால் இயற்றப்பட்டிருக்க வேண்டும் என்ற மீனாட்சி சுந்தரனாரின் (1965 ஆ, 1974) கருத்தைக் கந்தசாமி (1977) மறுத்து, தொல்காப்பியத்தில் காணப்படும் முரணுக்கு இடைச் செருகல் ஒரு காரணம் என்று குறிப்பிட்டதோடு மூன்று அதிகாரங்களும் ஒருவரால் எழுதப்பட்டிருக்க வேண்டும் என்பதற்கு அவைகளுக்கிடையே காணப்படும் நூற்பா அமைப்பும் சொற்பயிற்சியும் ஓசை ஒழுங்கும் ஒத்திருப்பதையும் சில உதாரணங்கள் மூலம் விளக்கியுள்ளார் (ப. 22). பாலசுப்பிரமணியனும் (1983) தொல்காப்பிய மூன்று அதிகாரங்களுக்கு இடையே மொழி அமைப்பு, பொருள் ஆகியவற்றில் ஒற்றுமை இருப்பதை உதாரணங்களுடன் விளக்கி மூன்று அதிகாரங்களையும் ஒரு ஆசிரியரே எழுதியிருக்கவேண்டும் என்று வாதிட்டுள்ளார். மேலும், அவர் தொல்காப்பியத்துக்குள் காணப்படும் முரண்கள் மூன்று அதிகாரங்களிலும் காணப்படுவதையும் சுட்டிக்காட்டியுள்ளார்.

கடைச்செருகல் இல்லை; கடைசி அதிகாரமும் மூலபாடத்தைச் சேர்ந்ததே என்று மரபு வழியாகக் கூறாமல் அறிவு பூர்வமாகவும் தருக்க ரீதியாகவும் நிலைநாட்ட முயல்வது

இலக்கண இலக்கிய கோட்பாடுகள் பற்றிய பல தெளிவுகளைத் தரவல்லது என்பது வற்புறுத்தத் தகுந்த உண்மையாகும்.

### 5.3.7. மூன்று அதிகாரங்கள்

இனி, தொல்காப்பிய மூன்று அதிகாரங்களும் ஒரு ஆசிரியரால் எழுதப்பட்டிருக்க வேண்டும் என்பதற்கான ஆதாரங்களைப் பார்ப்போம்.

**சொல் ஒற்றுமை**

| | எழுத்து | சொல் | பொருள் |
|---|---|---|---|
| அலங்கடை | 1.2 | 61.4. | 197.1 |
| சிவணும் | 46.1 | 104.2 | 284.1 |
| மானம் | 47.2 | 107.2 | 44.14 |
| வரையார் | 213.1 | 232.2 | 453.1 |
| வேண்டும் | 34.1 | 33.2 | 279.1 |

முதலிய பல சொல் வழக்கு பெரும் பாலும் நூல் முழுமையும் ஆசிரியரின் முத்திரைச் சொற்கள் போலக் காணப்படுகின்றன என்பார் கந்தசாமி (1977:22).

**தொடர் ஒற்றுமை**

i) அ) எஞ்சிய எல்லாம் எஞ்சுதல் இலவே (எழு.77)

ஆ) எஞ்சியோர்க்கு எஞ்சுதல் இலவே (பொ.45)

ii) அ) அரில்தப நாடி (எழு.102)

ஆ) அரில்தபத் தெரியின் (பொ. 294)

iii) அ) ஞாங்கர் கிளந்த மெல்லெழுத்து மிகுமே (எழு.225)

ஆ) ஞாங்கர் கிளந்த மூன்று பொருளாக (பொ. 13)

'இத்தகைய ஒப்புமைகள் தொல்காப்பியம் ஒருவரால் இயற்றப் பெற்றது என்னும் உண்மைக்கு ஆதாரம் ஆகும்' என்றும் கந்தசாமி (ப.24) கூறுவார்.

மேலும்

செயப்படு பொருளைச் செய்ததுபோல
தொழிற்படக் கிளத்தலும் வழக்கியல் மரபே
(வினை.49)

உண்டற்குரிய அல்லாப் பொருளை
உண்டன போலக் கூறலும் மரபே (பொருள்.18)

என்ற வாக்கிய அமைப்பு ஒற்றுமை இரண்டு அதிகாரங்களுக்கு இடையே காணப்படுவதும் குறிப்பிடத்தகுந்தது.

பாலசுப்பிரமணியன் (1983) தொல்காப்பிய மொழி அமைப்பில் மூன்று அதிகாரங்களுக்கும் இடையே இரண்டு விதமான ஒற்றுமைகளைச் சுட்டிக்காட்டியுள்ளார். ஒன்று: உடன்பாட்டு நிலையிலானது. அதாவது தொல்காப்பியத்தில் கூறிய விதிகள்–ஒரே வித மொழிக்கூறுகள் மூன்று அதிகாரங்களிலும் பின்பற்றப்பட்டிருப்பது. இன்னொன்று: எதிர்மறையிலானது. அதுதான் தொல்காப்பிய விதிக்கு மாறாகத் தொல்காப்பியத்திலேயே காணப்படுவது. மேலும் அவர் அந்த ஒற்றுமைகளை மொழி அமைப்புநிலை, பொருள்நிலை என இரண்டாகப் பிரித்துள்ளார்.

**இலக்கணக் கூறு**

1) சொல்லுக்கு முதலில் வரும் எழுத்துகள் பற்றித் தொல்காப்பிய விதி, தொல்காப்பிய மொழியில் மூன்று அதிகாரங்களிலும் கடைபிடிக்கப்படுகிறது.

2) மகர ஈற்றுப் பெயர்ச்சொற்கள் வேற்றுமை உருபு ஏற்கும் போது அத்துச் சாரியை பெற்றும் பெறாமலும் வரும் என்பது தொல்காப்பிய விதி (புணரி 30). ஆனால் தொல்காப்பிய மொழியில் சாரியை பெறாமல் வந்திருப்பது பெரும்பான்மை; பெற்று வந்திருப்பது சிறுபான்மை. ஆயினும் சிறுபான்மை வழக்கு மூன்று அதிகாரங்களிலும் உள்ளது.

| | |
|---|---|
| இடத்தொடு | சொல். 220.1 |
| நிறத்தொடு | பொருள். 42.8 |
| நெஞ்சமொடு | பொருள். 43.5 |
| ஆக்கமொடு | சொல் 88.2 |

3) ஆன் என்ற வேற்றுமை உருபு இறுதியில் – அகரச் சாரியைப் பெற்று வரும் (சொல். 108).

| | | |
|---|---|---|
| வழக்கத்தான | எழு. | 257.2 |
| இறுதியான | சொல். | 101.2 |
| அவள் வயினான | பொரு. | 106.4 |

ஆனால் சங்க இலக்கியங்களில் ஏகாரச் சாரியை பெரும் பான்மையும் உள்ளது.

4) எதிர்மறைச் சொல்லான – அலம் என்பது கடை என்ற ஏழாம் வேற்றுமை ஏற்று வருவது தொல்காப்பியத்தில் மட்டுமே காணப்படுகிறது.

| | | |
|---|---|---|
| மூன்றலங்கடை | எழு. | 1.2 |
| பெயரலங்கடை | சொல். | 194.1 |
| அவையலங்கடை | பொருள். | 231.4 |

5) அடிப்படைச் சொற்கள் மூன்று அதிகாரங்களிலும் பொதுவாகக் காணப்படுவது தொல்காப்பிய அகராதியால் உறுதியாகிறது.

6) உயர்திணைப் பெயர்கள் செயப்படு பொருளாக வரும்போது இரண்டாம் வேற்றுமை உருபைக் கட்டாயம் ஏற்று வரவேண்டும் என்பது தொல்காப்பியர் விதி (எழுத்து. 157) ஆனால் தொல்காப்பியத்தில் வேறு சில காரணங்களுக்காக மூன்று அதிகாரங்களிலும் உருபு ஏற்காமல்' குறை அவட் சார்த்தி' என்றும் (பொ. 99.14) 'பல்லோர் அறியுஞ் சொல்' என்றும் (சொல் 2.2) வந்துள்ளன என்று பாலசுப்பிரமணியன் (ப.435) விளக்கியுள்ளார்.

7) வியங்கோள் தன்மையிலும் முன்னிலையிலும் வராது என்பது தொல்காப்பிய விதி (சொல்.221). ஆனால் தொல் காப்பிய மொழியில் தன்மையிலும் முன்னிலையிலும் மூன்று அதிகாரங்களிலும் வந்துள்ளது.

| | | |
|---|---|---|
| தன்மை: | ஆகியர் | பொருள்.77.8 |
| முன்னிலை: | ஓம்பல் | சொல்.13.1 |
| | செல்க | பொருள்.145.7 |
| பன்மை: | எழூஉதல் | எழு.6.2 |

மகர ஈற்றுப் பெயர்ச் சொற்கள் மூன்றாம் வேற்றுமை ஏற்று வரும் போது சாரியை உறழ்ச்சியாக வரலாம் என்று தொல்காப்பியர் கூறியுள்ளார். ஆனால் நான்காம் வேற்றுமைக்கு முன்னும் சாரியை உறழ்ந்து வந்துள்ளது. அதில் சாரியைபெற்று வருவதே பெரும்பான்மை(சண்முகம்,1971:202): மிகச் சிறுபான்மை பெறாமல் வருவதுதான். இது ஒரு முரண். ஆனால் அது எழுத்ததிகாரத்திலும் பொருளதிகாரத்திலும் காணப்படுகிறது.

| | |
|---|---|
| குற்றியலுகரக்கு | எழு.168.1. |
| வேழக்கு (வேழம்+கு) | பொருள்.579.1. |
| ஆசிரியக்கு (ஆசிரியம்+கு) | பொருள்.359.1 |

(வரலாற்று விளக்கத்துக்கு 6.2.3 பார்க்கவும்)

8) பொருளதிகாரத்தில், எழுத்ததிகாரத்திலும் சொல்லதிகாரத்திலும் கூறிய செய்திகள் மாட்டேறாகவும் குறுக்கீடாகவும் (Cross reference) கூறப்படுவதால் மூன்று அதிகாரங்களும் ஒரே ஆசிரியரால் எழுதப்பட்டிருக்க வேண்டும் என்பதற்கு பொருள்நிலையில் ஆதாரம் ஆகும்.

1) செய்யுளியலில் மாத்திரை, எழுத்து என்ற இரண்டு உறுப்புகளைக் குறிப்பிட்டு அவைகள் முன்னால் கூறப்பட்டவை.

மாத்திரை வகையும் எழுத்தியல் வகையும்
மேற்கிளந்தனவே

என்பது (செய்யுள்.2) எழுத்ததிகாரத்தில் 3 சூத்திரங்களைக் (3-5) குறிப்பது.

ii) அளபெடையைச் செய்யுளியலில் கூறியது (16,7) எழுத்ததிகாரம் ஆறாம் சூத்திரத்தைக் கருத்தில் கொண்டது.

iii) செய்யுளியலில் (சூ.17) ஒற்றளபெடை பற்றியது இங்கு பேசப்படுவதற்குக் காரணம் எழுத்ததிகாரத்தில் உயிரளபெடை பற்றி மட்டும் பேசுவதுதான். எனவே தொல் காப்பியர் செய்யுளியலை எழுதும்போது எழுத்ததிகாரத்தில் கூறியதை மனதில் கொண்டு அதை இணைத்தும், வேண்டிய புதிய கருத்துகளுக்குத் தனி சூத்திரம் அமைத்தும், செய்வதால் ஒருவரே திட்டமிட்டு மூன்று அதிகாரத்தையும் எழுதியிருக்க வேண்டும் என்பது உறுதிப்படுகிறது.

iv) 'எழுத்தோரன்ன' என்றும் 'சார்ந்து வரு மரபின் மூன் றலங்கடையே' என்றும் எழுத்ததிகாரத்தில் கூறியவைகளை அசை நோக்கில் விளக்குவது (செய்யுள் 4,6,7) இரண்டு அதி காரத்துக்கு இடையே தொடர்பைப் புலப்படுத்தி ஒரு ஆசிரியர் செய்த பணி என்பதைக் காட்டும்.

v) சொல்லதிகாரத்தின் இறைச்சி(681), திணை(682) என்று கூறுவது பொருளதிகாரத்தை மனதில் கொண்டது.

சில புதிய செய்திகள்:

vi) சொல்லதிகாரச் செய்யுள் ஈட்டச் சொற்களாகக் கூறியவற்றைச் செய்யுள் உறுப்பாக 'மரபு' என்ற ஒன்றைக் குறிப்பிட்டு அது 'நாற்சொல் இயலான் யாப்பு வழிப்பட்டது'. என்று மாட்டெறிந்து (செய்.76)கூறியுள்ளது.

vii) சொல்லதிகாரத்தில் ஆற்றுப்படை இலக்கிய வகை யின் மொழி அமைப்பு கூறி, (எச்சம்.66) புறத்திணையில் ஆற் றுப்படை இலக்கிய அமைப்பு (புறம்.30,3-61) விளக்குவது.

viii) இடையியலில் 'ஒப்பில் வழியால் பொருள் செய்குந' என்று ஒரு வகையைக் கூறியதற்கு (இடை 2.8) விளக்கமாக உவம இயலில் உவம உருபுகளை விளக்குவது.

ix) பெயரியலில் 'முன்னம்' என்று குறிப்பிட்டு (பெயர்.39) அதன் விளக்கத்தைச் செய்யுளியலில் (199 கூறுவது.

x) செய்யுளுக்கு உரிய உறுப்பாகக் 'காலம்' என்று குறிப் பிட்டு அதை விளக்கும்போது 'இறப்பே நிகழ்வே எதிரது என் றும் திறத்தியல்' என்று தனியே கூறினாலும் (செய்யுள்.194)

சொல்லதிகாரத்தில் கூறிய காலமும் இதுவும் ஒன்றுதான். இங்கு மீண்டும் விளக்கமாகக் கூறியது இலக்கண உருவாக்கத்தில் ஏற்பட்ட ஒரு சிறுகுறையே ஆகும்.

xi) செய்யுளியலில் 'வண்ணம்' பற்றிய சூத்திரங்களில் வல்லிசை வண்ணம், மெல்லிசை வண்ணம், இயைபு வண்ணம், அளபெடை வண்ணம், நெடுஞ்சீர் வண்ணம், குறுஞ்சீர் வண்ணம் ஆகியவை (செய்யுள் 208 – 15) எழுத்ததிகாரத்தை மனதில் கொண்டு கூறியவை.

xii) பொருளியலில்

அன்னை என்னை என்றலும் உளவே
தொன்னெறி முறைமை சொல்லினும் எழுத்தினும்
தோன்றாமரபின என்மனார் புலவர்.

என்று(பொருளியல்.50) ஏனைய இரண்டு அதிகாரங்களும் குறிப்பிடப் பட்டுள்ளன. மேலும் சொற்களின் 'பயிற்சி (பிரயோகம்) சம்பந்தமாக 1,5,21,24,42,44,48,50 என்ற பொருளியல் சூத்திரங்கள் சொல்லதிகாரத்தைப் பின்நோக்கி அமைந்தன.

xiii) மரபியல் பெரும்பான்மை சொற்களின் பொருள் பற்றிய பயன்பாட்டுக் கட்டுப்பாட்டை விளக்குவதால் சொல்லதிகார நோக்கு உடையது.

ஆகவே மூன்று அதிகாரங்களையும் ஒரு ஆசிரியரே திட்டமிட்டு செய்தது என்பது புறநிலைக்காரணங்கள் ஆகும்.

இதற்கும் மேலாகத் தொல்காப்பியரே 'எழுத்தும் சொல்லும் பொருளதிகாரம் நோக்கியவை' என்ற கருத்தை அந்த இரண்டு அதிகாரங்களிலும் நேரடியாகக் குறிப்பிட்டுள்ளார் என்பதற்கு நான்கு ஆதாரங்கள் உள்ளன.

அ) இரண்டு அதிகாரங்களிலும் வழக்கு, செய்யுள் என்று வேறுபடுத்தியும் விதந்தும் பேசுவது. இதனால் பாயிரமும் 'வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின்' என்று பொதுமைப் படுத்திக் குறிப்பிட்டுள்ளது.

எழுத்ததிகாரம்.

செய்யுள் இறுதி. மொழி. 18
நீடவருதல் செய்யுளுள் உரித்தே. உயிர். 6
செய்யுள் கண்ணிய தொடர்மொழி. 11
செய்யுளுள் உரித்தே. உயிர். 32.2
செய்யுள் மருங்கின் உரித்தே. உயிர். 56.3
செய்யுள் மருங்கு. உயிர். 86.1
செய்யுள் மருங்கு. புள்ளி. 10.10
செய்யுள் தொடர் வயின். குற்றி. 75.5
செய்யுளுள் திரிநவும். குற்றி. 77

சொல்லதிகாரம்

வழக்காறு/செய்யுளாறு. கிளவி.18
செய்யுளுள் உரித்தே ,, 39
செய்யுள்ளே வே.ம. 25
செய்யுளுள் பெய. 42.1
செய்யுள்ளே வினை. 14.2

செய்யுள் ஈட்டச்சொல். எச்ச. 1.
செய்யுள் மருங்கினும் வழக்கியல் மருங்கினும். எச்ச.67.

எனவே, மொழி என்பது பேச்சுமொழி வழக்கை மட்டும் கொண்டது என்று கருதாமல் செய்யுள் வழக்கும் சேர்ந்தது என்று எண்ணக் காரணம் செய்யுள் வழக்கின் சிறப்பை உணர்ந்ததுதான். இதைச் சொல்லதிகாரத்தில் இரண்டு இடத்தில் புலப்படுத்தியிருக்கிறார்.

ஆ) உரியியலில் வெளிப்படவராத சொற்களுக்குப் பொருள் கூறியதே இலக்கியத்தைப் படிக்கும்போது வரும் அருகிய சொற்களின் பொருளைத் தெரிந்து கொள்வதற்குத்தான் என்றே நினைக்க வேண்டியிருக்கிறது (முழுவிளக்கத்துக்கு, சண்முகம் 1986: 115 – 49 பார்க்கவும்). இல்லாவிட்டால் மொழியின் சொல்லமைப்பை விளக்கும் போது வெளிப்பட வராத சொற்

களுக்குப் பொருள் கூறும் பணியில் இறங்கியிருக்கத் தேவை யில் லை.

இ) எச்சவியலில் பொருள்கோளை 'மொழிபுணர் இயல்பு' என்று தொடரியல் பிரச்சனையாகக் குறிப்பிட்டிருந்தாலும் நிரனிறை, சுண்ணம், அடிமறி, மொழிமாற்று என்ற நான்கு வகையும் செய்யுளுக்கே உரியது என்பது தெளிவு.

ஈ) இதற்கு ஏற்ப இலக்கண உருவாக்கத்தில் சொல்லதி காரத்திலும் பொருளதிகாரத்திலும் ஒரு ஒற்றுமை இருக்கும் படி அமைக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தகுந்தது.

i) சொல்லதிகார முதற் சூத்திரத்திலேயே திணை பாகு பாட்டை எல்லாச் சொல்லுக்கும் பொருந்தும் இலக்கணம் கூறியது போல ('ஆயிரு திணையின் இசைக்குமன சொல்லே' என்ற கடைசி அடி) விளக்கி விட்டுச் சொல்லின் பொது இலக் கணத்தைப் பெயரியலில் கூறியது.

ii) விளிமரபைத் திணை அடிப்படையில் விளக்கியது.

iii) வினையியலையும் திணை-பால் அடிப்படையில் விளக் கியதால் வினைப்பகுதி, கால விகுதி ஆகியவை 'விளக்கப்பட வில்லை என்ற குறை நேர்ந்து விட்டது.

ஆகவேதான் சொல்லதிகாரத்தை மொழியியல் நோக்கில் ஆராயும் போது திணை-பால் என்ற இலக்கணக் கூறுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்தது என்ற கருத்து புலனாகியது (சண் முகம், 1984:136), அதற்கு மாற்றுமுறையில் இரண்டு காரணங் கள் அங்கு கூறப்பட்டன: 1) வடமொழி-தமிழ்மொழி அமைப்பு வேறுபாடுகளில் முக்கியமானது என்று கருதியது. 2) தமிழ் மொழி அமைப்பில் வினைமுற்றில் திணை - பால் விகுதி' எழுவாய்-பயனிலைக்கும் இயைபு (Concord) உண்டாக்கியதால் அதை முக்கிய மொழி அமைப்பு பண்பாக நினைத்தது. (அண்ணாமலை முன்னுரை, சண்முகம் 1984 பக்கம் vi)

பொருளதிகாரத்தின் முதல் சூத்திரம் 'கைக்கிளை முத லாகப் பெருந்திணை இறுவாய், முற்படக் கிளந்த எழுதிணை

என்ப' என்பது திணை அடிப்படையில் அமைந்ததைத் தெளி வாகக் காட்டுகிறது. மேலும் முதல் இரண்டு இயல்களும் திணை யின் பெயரால் அகத்திணையியல் புறத்திணையியல் என்று அமைந்திருப்பதும் திணைபற்றி தொல்காப்பியச் சிந்தனை எவ்வளவு ஆழமானது என்பதைப் புலப்படுத்துகிறது. இந்த நோக்கில் சொல்லதிகாரத்தைப் பார்க்கும் போது அதில் திணைக்கு முக்கியத்துவம் கொடுத்து முதலில் தொல்காப்பியர் கூறியதற்கு இரண்டு அதிகாரங்களுக்கு இடையே ஒருவித ஒற்றுமை ஏற்படுத்தும் எண்ணம் காரணமாக இருக்கலாமோ என்று நினைக்கத் தோன்றுகிறது.

## 5.4 நூல்அமைப்பு

நூல் எப்படி அமைக்கப்பட்டிருக்கிறது என்பதைப் பொது வாகக் கவனிக்க வேண்டும். ஏனெனில், இதுவும் இலக்கண உருவாக்கத்தின் ஒரு கூறே.

### 5.4.1. அதிகாரம் - இயல்

தமிழ் இலக்கிய - இலக்கண நூல்களை மூன்று பெரும் பிரி வாகப் பிரிக்கும் முறை காணப்படுகிறது. திருக்குறளும் சிலப்பதி காரமும் சங்கம் மருவிய நூல்களாக இருந்தாலும் மூன்று பால் கள், மூன்று காண்டங்கள் என்று அமைத்ததற்கு ஏதோ ஒரு அடிப்படை இருக்க வேண்டும். அதற்கு முன்னோடியாகத்தான் தொல்காப்பியர் மூன்று அதிகாரமாக தன்னுடைய நூலை அமைத்திருக்க வேண்டும். 'பொருள்' என்பது தொல்காப் பியத்தில் பரந்த பொருளில்-அர்த்தத்தில் கையாளப்பட்டாலும் 'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே' (பெயர்-1) என்ற சூத்திரத்தின் மூலம் எழுத்து, சொல், பொருள் என்று பேச்சு மொழி அமைப்புக் கூறையும் இலக்கிய மொழியின் அமைப்புக் கூறையும் ஒருங்கிணைத்து அமைத்த நுட்பம் பெரியது.

அப்படியே ஒவ்வொரு அதிகாரத்தையும் ஒன்பது ஒன்பது இயல்களாக அமைத்ததும் திட்டமிட்ட செயலே ஆகும் அதனால்தான் இயல் இடைச் செருகல் என்பதோ, கடைச் செருகல் என்பதோ பொருந்தாது என்று நினைக்கவேண்டியி

ருக்கிறது. எனவே, எழுத்து, சொல், பொருள் என்ற மூன்று அதிகாரத்தையும் ஒவ்வொரு அதிகாரத்தின் ஒன்பது இயலையும் ஒரு ஆசிரியரே திட்டமிட்டுச் செய்தது என்று கருதுவதே சிறப்பானது.

### 5.4.2. அதிகாரங்களுக்குள் ஒற்றுமையும் வேற்றுமையும்

தொல்காப்பியத்தைப் பொறுத்த வரையில் எழுத்து, சொல், பொருள் ஆகிய மூன்று அதிகாரங்களும் தொல்காப்பியரால் திட்டமிட்டுச் செய்யப்பட்டிருந்தாலும், ஒவ்வொரு அதிகாரமும் தனித்தனி போக்கு உடையது என்ற உண்மையும்; எழுத்தும் சொல்லும் விவாதிக்கப்படும் பொருளால் (அதாவது மொழி அமைப்பு என்ற பொருளால்) மிகுந்த ஒற்றுமை உடையது என்பதும் அறிந்து கொள்ள வேண்டிய செய்திகளாகும்.எழுத்ததிகரமும்சொல்லதிகாரமும் நெருங்கிய ஒற்றுமையும், பொருளதிகாரம் வேற்றுமையும் தனித்தன்மையும் உடையன என்பது கலைச்சொற்களின் பயிற்சியாலும் வெளிப்படுகிறது. இங்கு இரண்டு விதமாகக் கலைச் சொல் பயிற்சி காணப்படுகிறது. ஒன்று: ஒரே சொல் ஒரே பொருளில் எழுத்ததிகாரத்திலும் சொல்லதிகாரத்திலும் மற்றொரு பொருளில் பொருளதிகாரத்திலும் கையாளப்படுவது. உ.ம்

| சொல் | எழுத்ததிகாரம் & சொல்லதிகாரம் | பொருளதிகாரம். |
|---|---|---|
| i. திணை | சொல்பாகுபாடு (உயர் திணை, அஃறிணை ) | ஒழுக்கப்பாகு பாடு (அகம்/புறம்) |
| ii. முதல் | சொல்லுக்கு முதலில் வரும் எழுத்து | இலக்கியத்துக்கு முதலாக இருப்பது (நிலம்/ பொழுது ஆகிய இரண்டும் முதல்) |

| | | |
|---|---|---|
| iii. உரி | சொல்வகையில் ஒன்று (உரிச்சொல்) | பாடற்பொருளில் ஒன்று (உரிப் பொருள்) |
| iv. புணர்தல் | சொற்களின் சேர்க்கை (புணர்ச்சி) | ஆண்-பெண் சேர்க்கை, குறிஞ்சி (உரிப்பொருளில் ஒன்று) (அகம் 16.1 |

இரண்டு: அ) எழுத்திலும் சொல்லிலும் பொதுப் பொருளாக இருப்பது பொருளதிகாரத்தில் கலைச் சொல்லாக உள்ளது.

| | | |
|---|---|---|
| i. வண்ணம் | நிறம் | செய்யுள் உறுப்பு |
| ii. மரபு | மரபு (பொதுப்பொருள்) | ,, |
| iii. வழக்கு | பேச்சு வழக்கு | ,, |

ஆ) எழுத்ததிகாரத்திலும் சொல்லதிகாரத்திலும் கலைச் சொல்லாக இருப்பது பொருளதிகாரத்தில் பொதுச் சொல் லாக உள்ளது.

| | | | |
|---|---|---|---|
| i. | பெயர் | சொல்வகை | ஆணின் பெயர் அகம் 22.1. |
| ii. | வினை | ,, | தொழில் அகம் 22.1. |
| iii. | உயிர் | எழுத்துவகை | மனிதனின் உயிர். பொருள்-6 |
| iv. | மெய் | ,, | ,, களவு 11 - 1. |
| v. | பிறப்பு | எழுத்துப்பிறப்பு | தோற்றம் உவமம்.25 3 |

இந்த வேற்றுமைகள் அதிகாரப்பொருள் வேற்றுமையால் ஏற் பட்டதாகக் கருத வேண்டுமே தவிர வேறுவேறு ஆசிரியர் களால் எழுதப்பட்டதன் விளைவு என்று கொள்ளக் கூடாது.

இப்படியே இயல்களுக்குள் ஒற்றுமையும் வேற்றுமையும் இருப்பதும் குறிப்பிடத்தகுந்தவை. சொல்லதிகாரத்தில் பெயரியலும், வினையியலும் அங்கு விளக்கப்படும் பொருளால் (இரண்டு இயல்களும் திணை அடிப்படையில் விளக்கப்பட்டுள் ளன) ஒற்றுமை உடையன. அதே சமயத்தில் எழுத்ததிகாரத்தில் உயிர் மயங்கியல், புள்ளிமயங்கியல் ஆகிய இரண்டு இயல்களும் விளக்கும் முறையால் ஒற்றுமை ஏற்பட வாய்ப்பு இருந்தும் வேறு சில காரணத்துக்காக வேறுவிதமாக அமைக்கப் பட்டுள்ளன. உயிர் மயங்கியலில் அல்வழிப் புணர்ச்சி, வேற்றுமைப் புணர்ச்சி என்ற முறையிலும் புள்ளி மயங்கியலில் வேற்றுமைப் புணர்ச்சி அல்வழிப்புணர்ச்சி என்ற முறையிலும் அமைக்கப்பட்டுள்ளன. எனவே, ஒற்றுமையும் வேற்றுமையும் விளக்கப்படும் பொருள் அதன் சூழல் அடிப்படையில் அமைவனவே.

**5.4.3. இயல்களுக்குள் ஒற்றுமையும் வேற்றுமையும்**

அடுத்து ஒவ்வொரு அதிகாரத்திலும் இயல்கள் அமைக்கப் பட்ட விதத்தில் உள்ள ஒற்றுமையையும் வேற்றுமையையும் பார்ப்போம்.

எழுத்ததிகாரத்தில் நுன்மரபு, மொழிமரபு, பிறப்பியல் ஆகிய மூன்று இயல்களும் தனிச் சொற்களின் இலக்கணத்தை ஒவ்வொரு நோக்கில் விளக்குகின்றன. புணரியல் முதலாகிய ஆறு இயல்கள் இரண்டு தனிச்சொற்களின் சேர்க்கையைப் புணர்ச்சியை – விளக்குகின்றன. இங்கும் புணரியல் என்ற புணர்ச்சி பற்றிய முதலாவது இயல் பொதுவான கருத்துகளையும் மீதியுள்ள இயல்கள் புணர்ச்சி பற்றி சிறப்பான கருத்துகளையும் விவரிக்கின்றன. அங்கும் தொகை மரபும், உருபியலும் ஓரளவு பொதுவான கருத்துகளைக் கூறுவதாகவும், கடைசி மூன்று இயல்கள் ஈற்றெழுத்துகள் அடிப்படையில் புணர்ச்சி மாற்றங்களை விளக்குவதால் சிறப்பான கருத்துகளைக் கூறுவதாகவும் கொள்ளலாம். இந்தவகையில் எழுத்ததிகார இயல்கள் பொது – சிறப்பு – பொது-சிறப்பு என்ற அடிப்படையில் அமைந்ததாகக் கொள்ளலாம்.

சொல்லதிகாரத்தில் கிளவியாக்கம், வேற்றுமையியல், வேற்றுமை மயங்கியல் ஆகிய முதல் மூன்று இயல்களைப் பொது இயல்களாகவும்; விளிமரபு, பெயரியல், வினையியல் இடையியல், உரியியல் ஆகிய இயல்களைச் சிறப்பு இயல்களாக வும்; கடைசி இயலான எச்சவியலைப் பொதுவியலாகவும் கருதலாம் (விளக்கத்துக்கு, சண்முகம், 1984: 39. தொ. பார்க்கவும்) எனவே, சொல்லதிகாரம் பொது-சிறப்பு – பொது என்ற முறையில் அமைந்துள்ளது.

பொருளதிகாரத்தில் அகத்திணை பொதுவானது, அடுத்த நான்கு இயல்களான புறத்திணை இயல், களவியல், கற்பியல் பொருளியல் ஆகியவை சிறப்பு இயல்கள்; கடைசி நான்கு இயல்களும் (மெய்ப்பாடு, உவமம், செய்யுள், மரபு) பொது வானவை. எனவே, இந்த அதிகாரமும் பொது-சிறப்பு-பொது என்று அமைந்ததாகக் கொள்ளவேண்டும்.

இந்த நிலையில், மூன்று அதிகாரங்களின் இயல்கள் அமைந் திருக்கும் முறையிலும் ஒரு ஒற்றுமை உள்ளது என்பது தெளி வாகிறது.

இன்னொரு முறையிலும் இயல் அமைப்பு முறையில் ஒற்றுமை இருப்பதும் அறியத் தகுந்தது. ஒவ்வொரு அதிகாரத் திலும் முன் இயல்களில் சொன்ன கருத்துகளைப் பின் ஒரு இயலில் சுருக்கிக் கூறும் முறை காணப்படுகிறது.

எழுத்ததிகாரத்தில் நான்காவது இயலான புணரியலில் நூன்மரபு, மொழிமரபுகளில் சொன்ன கருத்துகள் சுருக்கிச் சொல்லப்பட்டுள்ளன.

மூன்று தலையிட்ட முப்பதிற்று எழுத்தின்
இரண்டு தலையிட்ட முதலாகு இருபஃது
அறுநான்கு ஈறொடு நெறிநின்று இயலும்

என்ற அடிகளில் (புணர்: 1.) முதல் அடியின் கருத்து நூன் மரபிலும், அடுத்து இரண்டு அடிகளின் கருத்துகள் மொழி மரபிலும் சொன்னதின் சுருக்கமாகும்.

சொல்லதிகாரத்தில் நான்காவது இயலான பெயரியலில் முதல் ஐந்து கருத்துகள் முன்னர் சொன்ன கருத்துகளின் தழு வல் என்று கருத முடியாவிட்டாலும் பெயர், வினை என்று கிளவியாக்கத்திலும் பெயர் பற்றி வேற்றுமை இயலிலும் கூறிய தைத் தழுவி பொதுவகையில் சொல்லின் இலக்கணமும் சொல்வகைப்பாடும் விளக்கப்படுவதாகக் கொள்ளலாம்.

பொருளதிகாரத்தில் எட்டாவது இயலான செய்யுளியல் முதல் சூத்திரத்தில் அந்த அதிகாரத்தில் முன்னர் விளக்கப்பட்ட திணை (அகம், புறம்), கைக் கோள் (களவு, கற்பு), கூற்று, மெய்ப்பாடு ஆகியவையும், முதல் இரண்டு அதிகாரங்களில் சொல்லப்பட்ட எழுத்து, மாத்திரை, அளவு (எழுத்ததிகாரம்) காலம், மரபு (சொல்லதிகாரம்) ஆகியவையும் திரும்பவும் குறிப்பிடப்பட்டுள்ளன. எனவே, அதிகாரத்தின் இயல்களுக்கு இடையேயும் அதிகாரங்களுக்கு இடையேயும் சங்கிலிப் பிணைப்பு போல ஒரு தொடர்பு காணப்படுவது நூலாக்கத் திட்டத்தின் நுட்பத்தைக் காட்டும்.

### 5.4.4 இயல்கள் அமைப்பு

எழுத்ததிகார, சொல்லதிகார, இயல் அமைப்புகளில் அதிக கருத்துவேறுபாடு இல்லை. ஆனால், தொல்காப்பியம் முழுமை யும் ஒரு ஆசிரியரால் எழுதப்பட்டது என்று கருதுபவர்களிடை யேயும் பொருளதிகார இயல் அமைப்பு பற்றி கருத்து வேறு பாடு காணப்படுகிறது. எனவே, பொருளதிகார இயல்களின் அமைப்பு பற்றிய சில கருத்துகளைப் பார்ப்போம்.

பொதுவாக முதல் இயலான அகத்திணை இயலுக்கும் மூன்று, நான்கு, ஐந்தாம் இயல்களான களவியல்-கற்பியல்-பொருளியலுக்கும் முரண் இருக்கிறது, தொடர்பு இல்லை என்ற ஒரு கருத்து காணப்படுகிறது.

களவு-கற்பியல்கள் இடைச் செருகலாகுமோ என்று ஜான் மார் கருதுவது மேலே விளக்கப்பட்டது. உண்மையில் மூட்டைப் பூச்சிக்குப் பயந்து வீட்டைக் கொளுத்தும் கதைதான் இது.

ஏனெனில் அகத்திணை நோக்கு வேறு, களவியல் நோக்குவேறு என்பது பின்னர் விளக்கப்படும். அகத்திணை இயலில் ஏழு திணைப்பிரிவுகளும் அவற்றின் பின்புல வருணனைகளும் விளக்கப்படுவதாகவும், களவியல், கற்பியல் ஆகியவற்றில் அகப்பொருள் செய்திகள் வேறொரு வகுப்பில் விளக்கப்படுவ தாகவும் செயராமன் (1977:74) குறிப்பிட்டு

> அகத்திணை இயலிலும் களவு, கற்பு ஆகிய இயல்களி லும் கூறப்படும் செய்திகளுக்கு இடையே தொடர்போ, தொடர்ச்சியோ, இயைபோ, இணைப்போ காண முடியவில்லை. அவை இரண்டும் அகப்பொருளைப் பற்றியன என்பதொன்றே பொதுவாக அமைந்துள் ளது. எனவே களவு கற்பு இயல் செய்திகளுக்கு முன் னுரையாகவோ, பொதுவாகவோ அகத்திணை இய லைக் கொள்ளல் இயலாது (ப.75).

என்று கடுமையாக விமர்சித்துள்ளார். அதே சமயத்தில் அகத் திணை இயலை நுணுக்கமாகப் பார்த்தபோது இலக்கியப் பாடுபொருளில் ஏற்பட்ட வளர்ச்சி, அதனால் இலக்கண உரு வாக்கத்தில் தோன்றிய வளர்ச்சி என்ற முறையில் இலக்கியப் பாடு பொருளிலும் இலக்கணத்தை வருணிக்கும் முறையிலும் வேறுபாட்டை உணர்ந்திருக்கிறார்.

முதல், கரு, உரிப்பொருள்களில் முதலும், உரிப்பொருளை யும் விளக்கிவிட்டு (1-16), கொண்டுதலைக் கழியினும்' (சூ.17) என்ற சூத்திரத்தின் மூலம் உடன்போக்கினையும் பாலை அடக்கிக் கூறுகிறார். எனவே செயராமன் (1977:77)

> உடன்போக்குத்தொடக்ககாலத்தில் இலக்கியப் பெற்றி அடையாமல் இருந்திருக்க வேண்டும். தொல்காப்பியர் காலத்தில் தான் இலக்கியப் பெற்றி அடைந்தது. எனவே பாலைத்திணையுள் உடன்போக்கை அடக் கிக் கூறிவிட்டார். உடன்போக்காகச் செல்லும்வழி சுர மாகஇருப்பதும் பாலைத்திணைக்குள் கூறுவது பொருத் தமாகப்படுகிறது.

என்பார். மேலும், கருப்பொருள் விளக்கத்துக்குப் பிறகு பிரிவு பற்றி சூத்திரங்கள் (27 - 77) அகத்திணையில் உள்ளன. இப்படி அகத்திணையில் பிரிவு பற்றிக் கூறுவதற்குக் காரண

மும் அது முன்னர் அமைந்திராமல் தொல்காப்பியக் காலத்தில் ஏற்பட்ட புதிய பகுப்பு ஆகும் என்பார் (ப.78) அவர். தொடர்ந்து களவு, கற்பு என்னும் இரண்டு கைக்கோளும் தொல்காப்பியருக்கு முன் பெருவழக்காக இருந்திருக்கவேண்டும் என்றும் ஐந்திணை பகுப்பு தொல்காப்பியர் புதிதாகச் செய்திருக்க வேண்டும் என்றும் அவர் கருதுகிறார். அதற்குக் காரணம் இயற்கையை இலக்கியத்தில் பின்னணியாக்கி நாடகப் பாங்குபட புனைந்திருக்கும் முயற்சி' என்றும் அவர் விளக்கியுள்ளார். செயராமன் கருத்தைச் சுருக்கமாக உடன்போக்கு, பிரிவு ஆகியவை 'இலக்கியப் பெற்றி அடைந்ததால்' தொல்காப்பியர் களவு, கற்பு என்ற கைக்கோள்முறையை மாற்றி ஐந்திணை பாகுபாட்டை இலக்கணத்தில் புகுத்தினார் எனலாம்.

இலக்கிய நோக்கில் இன்னொரு உண்மையும் புலப்படுகிறது. சங்க இலக்கியங்களில் பாலைத்திணைப் பாடல்களே அதிக எண்ணிக்கையில் காணப்படுகின்றன. பாலைப் பாடல்கள் கிட்டத்தட்ட 35 சதவிகிதமும், குறிஞ்சிப் பாடல்கள் 26 சதவிகிதமும் காணப்படுகின்றன. ஏனையவை இன்னும் குறைவானவை. தொகை நூல்கள் ஆனாலும் பாலைப் பாடல்கள் அதிகம் கிடைத்த காரணத்தினாலேயே அவைகளைத் தொகைக்குள் சேர்த்திருக்க வேண்டும். இலக்கியப் பாடுபொருளாகப் பாலை சிறப்பாகக் கருதப் பட்டதால் இலக்கண ஆசிரியனும் பாலைக்கு முக்கியத்துவம் கொடுத்து அகத்திணையில் சேர்த்திருக்க வேண்டும்.

தொல்காப்பியர் திணை அடிப்படையில் பொருளதிகாரத்தை அமைத்ததற்கு இன்னொரு காரணமும் இருக்கலாம் என்று நினைக்கவேண்டியிருக்கிறது. அதாவது களவு – கற்பு என்பது அகவாழ்க்கையின் பாகுபாடு. முதலில் அவைகளை விளக்கினால் புறத்திணை கருத்துகள்ள விளக்க முடியாது. திணை அடிப்படையில் விளக்கினால் அகத்திணையை முதலிலும் புறத்திணையைப் பிறகும் விவரித்துவிட்டு, மீண்டும் அகத்திணையை விரிவாக வருணித்தால் தவறு இருக்காது.

அகத்திணை இயலும் 'களவியல் முதலான அகத்திணை பற்றிய இயல்களும் வேறுவேறு நோக்கு கொண்டவையாய்

இருப்பதால், இரண்டுக்கும் கருத்து ஒற்றுமை காணப்படவில்லை என்பது வலியுறுத்தத் தகுந்தது. எனவே, இயல்கள் இடைச் செருகல்கள் என்பதோ, இயல்களுக்குள்ளே தொடர்பு இல்லை என்பதோ பொருந்தாது.

எனவே, இப்பொழுது கிடைக்கும் மூல பாடத்தையும் நூலமைப்பையும் ஏற்று அதை ஒரு ஆசிரியரே செய்தார் என்று கொண்டு தொல்காப்பிய ஆய்வில் ஈடுபட வேண்டும். அப்பொழுது மேலும் பல புதிய உண்மைகள் புலனாகும்.

## 5.5. தரவும் இலக்கணமும்

தரவுகளை- இலக்கியத்தை அடிப்படையாகக் கொண்டதே இலக்கணம்: அந்தத்தரவுகள், மொழியிலேயே மொழி இலக்கியத்திலேயே இருக்கிறது என்றாலும், இலக்கண ஆசிரியன் அவைகளிடையேயுள்ள சிறப்பான தரவுகளைத் தேர்ந்தெடுத்து, அவைகளைத் தன் சிந்தனை வழி பொதுமைப்படுத்தி, அந்தப் பொதுமைகளை வகைப்படுத்தி, ஒரு முழு உருவம் கொடுக்கிற வேலைதான் இலக்கணம். வெறும் தரவுகள் மட்டும் இருந்தால் இலக்கணம் எழுதிவிட முடியாது. அந்தப்பொருள் பற்றிய அறிவு, சிந்தனை ஆகிய இரண்டின் அடிப்படையிலேயே இலக்கணம் உருவாகும்.

### 5.5.1. தொல்காப்பியர் கோட்பாடு

ஒரு நல்ல இலக்கண ஆசிரியன் அல்லது ஆராய்ச்சியாளன் தன்னுடைய ஆய்வுப் பொருள் பற்றி முழு உணர்வு உடையவனாக இருந்தால் தன்னுடைய ஆய்வுப் பொருளின் பரப்பையும், தன்னுடைய அறிவையும் ஆற்றலையும் ஒப்பிடுகிற போது அவனுக்குத் தன்னடக்கம் ஏற்பட்டு விடும். தொல்காப்பியரும் உரிச்சொல் பற்றி கூறிய கருத்து உண்மையில் இலக்கண ஆய்வு பற்றிய அவருடைய பொது மனநிலையைப் பிரதிபலிப்பதாகவே உள்ளது எனலாம்.

பன்முறையானும் பரந்தன வரூஉம்
உரிச்சொல் எல்லாம் பொருட்குறை கூட்ட
இயன்ற மருங்கின் இனைத்தென அறியும்

வரம்பு தமக்கு இன்மையின் வழி நனிகடைப்பிடித்து
ஓம்படை ஆணையிற் கிளந்த வற்றியலான்
பாங்குற உணர்தல்

என்ற அடிகள் (உரி.100) ஐந்து உண்மைகளை வெளிப்படுத்து கின்றன. அவையாவன:1) 'பன்முறையானும் பரந்தன வருஉம்' என்பது தரவுகளின் ஆய்வுப் பொருளின் பெருமை - மிகுதி; 2) 'பொருட்குறை கூட்ட இயன்ற மருங்கின் இனைத்தென அறிதல்' என்பது இலக்கண ஆய்வுக் கடமை - பொருளை அறிவியல் ரீதியாக அறிந்து கொள்ள வேண்டியது; 3) 'அறியும் வரம்பு தனக்கு இன்மை' என்பது அப்படிப்பட்ட அறிவு ,இல்லாதது தன்னுடைய இயலாமை - தன்னடக்கம்; 4)'வழி நனி கடைபிடித்து கிளந்த' என்பது, தான் ஆய்வுமுறையை மேற்கொண்டு கண்டுபிடித்துக் கூறியவை; 5) 'கிளந்த வற்றியலான் பாங்குற உணர்தல்' என்பது தான் கூறிய முறையைப் பின்பற்றி படிப் போரும் அந்த இலக்கணத்தை ஒழுங்காக அறிந்து கொள்ளுவது. ஆராய்ச்சிப் பொருளின் பரப்பு, அதேசமயத்தில் அதை அறிந்து கொள்ள வேண்டிய மானிடத் துடிப்பு, ஆனாலும் மனித ஆற்றலின் கட்டுப்பாடு, அதையும் மீறி விஞ்ஞான ரீதியாக அணுகிப் பொருளின் பண்பை அறிந்து கூறுவது, கூறியவற்றைப் பிறரும் விஞ்ஞான ரீதியாக உணர்வது என்று கூறும் போது தொல் காப்பியரின் ஆராய்ச்சி அணுகுமுறையின் ஆழ அகலங்களை உணர்ந்து கொள்ளலாம். ஆராய்ச்சிப் பொருளின் பரப்பை (முதல் உண்மை) 'அன்னபிறவும்' (வேற்றுமை, 20, பெயர் - 12; வினை, 17 விளி;37.3), 'அன்னவை யெல்லாம்', (குற்றிய 76.10) என்று கூறியதோடு, படிப்பவரின் கடமையையும் (ஐந்தாவது உண்மை) சேர்த்து இன்னொரு இடததில்

கிளந்த அல்ல வேறுபிற தோன்றினும்
கிளந்த வற்று இயலான் உணர்ந்தனர் கொளலே

என்று கூறுவதால், கடினமானது இலக்கணம் இயற்றுவது மட்டுமல்ல; படித்துப் புரிந்துகொண்டு அந்தப் பொருளைச் சரியாக உணர்ந்து கொள்வதும் கடினமானதே என்பதைத் தொல்காப்பியர் உணர்ந்திருந்தார் என்ற உண்மையை இந்தச் சூத்திரம் காட்டுகிறது.

எனவே, தொல்காப்பியத்தைப் புரிந்து கொள்ளவும் சில வரன்முறைகளைப் பின்பற்ற வேண்டும். ஆனால், தமிழ் ஆய்வு உலகில் தொல்காப்பியர் எல்லாம் உணர்ந்தவராகப் பாராட்டிப் போற்றும் வீரவழிபாட்டுத் தன்மை மிகுந்து காணப்படுவதால், தொல்காப்பியர் எப்படியெல்லாம் தொல்காப்பியத்தை உருவாக்கியிருக்க வேண்டும் என்பதைப் பற்றி யாரும் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை.

இந்த அடிப்படையில் தொல்காப்பியத்துக்குத் தரவுகளாக அமைந்த இலக்கியம் எது? என்று அறிந்தால்தான் இலக்கண உருவாக்கம் பற்றி அறிந்துகொள்ள முடியும்.

தமிழ் ஆராய்ச்சி உலகில் இறையானார் களவியல் உரையை அறிவுபூர்வமாக நம்பாதவர்கள் கூட சங்க இலக்கியம் தொல்காப்பியம் வருணிக்கும் மொழி அமைப்பிலிருந்து சில கூறுகளில் மட்டுமே மாறுபட்டுக் காணப்படுகிறது என்ற ஒரு காரணத்துக்காகச் சங்க இலக்கியத்துக்குத் தொல்காப்பியம் முந்தியது என்று கருதி இலக்கண உருவாக்க முறை பற்றிய ஆராய்ச்சியை மேற்கொள்ளாமல் விட்டுவிட்டார்கள். அப்படியே தொல்காப்பியம் சங்க இலக்கியத்துக்குப் பிந்தியது என்று கருதியவர்களும் அதற்கு ஆதாரமான சில கூறுகளை எடுத்துக் காட்டியதோடு திருப்திபட்டுக் கொண்டார்கள்.

இலக்கண உருவாக்கம் ஒரு அறிவியல் பணி; அதில் தனி மனிதனால் முழுவெற்றி காண முடியாது; மேலும், 'வாழ்வு சிறிது வளர்கலை பெரிது' என்பது போல மேலே குறிப்பிட்ட கருத்துகளை மனதில் கொண்டு தொல்காப்பியத்தைப் பார்க்க யாரும் முன் வரவில்லை.

## 5.5.2 தொல்காப்பியம்: இலக்கணமும் இலக்கியமும்

தொல்காப்பிய இலக்கணத்துக்கும் தொல்காப்பிய மொழிக்கும் இடையே சில வேறுபாடு களை உரையாசிரியர்கள் கண்டபோது நூலாக்கக் குறை என்று கூறாமல் சமாதனமாகச் சில கூறிச் சென்று விட்டார்கள்.

உதாரணமாகத் தொல்காப்பியர் புணர்ச்சியில் வரும் சாரியைகளைத் தொகுத்துக் கூறும் போது, அவரே நூலில் கையாண்ட சாரியைகளையும் சாரியை என்று விதந்து கூறிய வற்றையும் உரையாசிரியர்கள் கவனித்துத் தொல்காப்பியச் சூத்திரம் அமைப்பு முறையால் (மிகைச் சொல்) அமைந்தது என்று எடுத்துக்கூறி நூலாக்கத்தில் குறை உள்ளது என்று கூறாமல் விட்டுவிட்டார்கள்.

> பிறவும் என்றதனால் தம், நும், எம், கெழு,
> ஏ,ஐ, ஞான்று என்பனவும் கொள்க

என்று இளம்பூரணர் கூற,

> பிறவாவன: தம்,நும்,நம்,உம், ஞான்று, கெழு, ஏ,ஐ, என்பனவாம். இவற்றுள் ஞான்று ஒழிந்தன எடுத் தோதுவர் ஆசிரியர்.

என்று (புணரி. 17) நச்சினார்க்கினியர் கூறும்போது நூலுக் குள் (தொல்காப்பிய இலக்கணத்துக்கும்) தொல்காப்பியர் மொழிக்கும், (தொல்காப்பிய இலக்கியத்துக்கும்) முரண்பாடு இருக்கிறது என்பது தெளிவாகிறது. இதை இலக்கண உரு வாக்க முறையில் குன்றக் கூறல் என்று கூறவேண்டும் இப்படி வேறுசில சூத்திரங்களும் உண்டு.

வினையெச்ச வாய்பாடுகளைத் தொகுத்துக் கூறும்போது தொல்காப்பியர் எழுத்ததிகாரத்தில் 'செய்யா என்னும் வினை யெஞ்சு கிளவியும்' என்று அவரே குறிப்பிட்ட வாய்பாட்டை (உயிர்.20) வினையியல் சூத்திரத்தில் (29) சேர்த்துக்கூறவில்லை. அதைச்சேனாவரையர் 'அஃது (செய்யூ என்பது) ஆகார மாயும் வரும்' என்று கூறிச்செல்ல, தெய்வச்சிலையாரோ 'செய்யா என்னும் வினையெஞ்சு கிளவியும் என எழுத்ததிகாரத்து ஓதுதலின் அவ்வாய்பாடும் இப் பொருட்டாகி வருதலின் அதுவும் கொள்க' என்று குறிப்பிட்டு விமர்சிக்காமல் போய் விட்டார். இதுவும் தொல்காப்பிய இலக்கணம் குன்றக் கூற லாய் அமைக்கப் பட்டதாகவே கருத இடம் தருகிறது.

முன்னிலையிலும் தன்மையிலும் வராது என்ற தொல்காப் பிய இலக்கணத்துக்கு மாறாக (வினை. 27), சிறுபான்மை தன்மையிலும் முன்னிலையிலும் வரும் என்று உரையாசிரியர்

கள் கூற, இன்றைய அறிஞர்கள் தொல்காப்பியத்திலேயே 'இன்னது பிழைப்பின் இதுவாகியர்' (புறம்.19.8) என்ற சான்றைக் காட்டி, இலக்கணத்துக்கும் நூலுக்கும் அல்லது அவர் கையாண்ட மொழிக்கும் முரண் இருக்கிறது என்று எடுத்துக் காட்டுவார்கள் (உ.ம். அருணாசலம், 1975:20).

அப்படியே தொல்காப்பியர் கையாண்ட மொழியில் அவர் கூறும் மெய்மயக்கங்கள் எல்லாம் வரவில்லை. சங்க இலக்கியத்திலும் வரவில்லை; இதை இலக்கண உருவாக்கநோக்கில் மிகை படக் கூறல் என்று பொதுமைப் படுத்தலாம்.

இந்தக் குறைகள் ஏன் ஏற்பட்டன? இவைகளின் உள்கிடை என்ன என்று தமிழ் அறிஞர்கள் கவலைப் படவே இல்லை. தொல்காப்பியம் ஒன்றுக்கு மேற்பட்ட ஆசிரியரால் எழுதப் பட்டிருக்க வேண்டும் என்பதற்குச் சான்றாகவும் இடைச் செருகலாகவும் கொள்ளலாம் என்றும் சிலர் வாதிட்டுள்ளார்கள். அதன் வன்மை மென்மை முன்னரே விவாதிக்கப்பட்டுவிட்டது.

### 5.5.3. சங்க இலக்கியமும் தொல்காப்பியமும்

சங்க இலக்கியத்தைத் தொல்காப்பிய இலக்கண நோக்கிலிருந்து பார்க்கும்போது காணப்படும் மாறுபட்ட வழக்குகளையும் உரையாசிரியர்கள் சில இடங்களில் இழிவழக்கு, ஆரியச் சிதைவு என்றும் பல இடங்களில் எந்தவித விமர்சனம் இல்லாமலும் எடுத்துக்காட்டியதோடு சென்றுவிட்டார்கள். அவைகள் மொழிமாற்றத்தால் ஏற்பட்டன என்றும் தொல்காப்பியம் சங்க இலக்கியத்துக்கு முந்தியது என்றும் தற்கால அறிஞர்கள் பலரும் விளக்கியுள்ளார்கள் (வேங்கடராசுலு ரெட்டியார், 1933:173. வெள்ளைவாரணனார் 1955:90-4, இராசமாணிக்கனார் 1963:70-5,வரதராசன் 1972:64).அதே சமயத்தில் இன்னும் சிலர் சில சங்க இலக்கிய வழக்குகளுக்குத் தொல்காப்பியத்தில் இலக்கணம் இருக்கிறது என்று காட்டி, தொல்காப்பியம் சங்க இலக்கியத்துக்குப் பிந்தியது என்றும் வாதாடியுள்ளார்கள் (உ-ம் வையாபுரிப் பிள்ளை 1949) எப்படி

யானாலும் தற்காலத்தில் வரலாற்று நோக்கு ஆராய்ச்சியே மிருந்து காணப்டுபகிறது. ஆனால் ஒரு மொழிச்சமூகத்தில் இலக்கணம் எழுவதற்குச் சாதகமான சமூகப்பண்பாட்டுச் சூழ்நிலை என்ன? அந்த இலக்கணம் எப்படி தரவுகளின் அடிப் படையில் உருவாக்கப்பட்டது? என்பவைபற்றிய ஆராய்ச்சி தீவிரமாகப் படவில்லை.

தொல்காப்பியரின் இலக்கணக் கோட்பாடுகளை ஆராய்ந்த போது இலக்கண உருவாக்கம் பற்றிச் சில உண்மைகள் புலனாகியது ஆங்காங்கே (சண்முகம்: 1980, 1984, 1986) எடுத் துக்காட்டப்பட்டன. தொல்காப்பியர் பல உத்திகளைக் கையாண்டு இலக்கணத்தை உருவாக்கியுள்ளதும் புலனாயின அந்த முறையில் குன்றக்கூறல் என்ற முரண் நூலுக்குள்ளேயே இருப்பது இலக்கண உருவாக்கத் திட்டத்தில்– இலக்கண உருவாக்கத்தில் ஏற்பட்ட குறை என்றும் மிகைபடக் கூறுதல் என்பது விளக்க நிறைவு என்ற உத்தியாகும் என்றும் விளக்க வாய்ப்பு இருக்கிறது. முரணாகத் தெரியும் சில (முறைப்பெயர்களைப் பெயரியலில் விரவுப்பெயராகவும், விளிமரபில் உயர்திணைப் பெயர்களோடு சேர்த்தும் கூறியது) அந்தந்த இயலின் இலக்கணக் கோட்பாட்டை ஒட்டியது (விளக்கத்துக்கு, சண்முகம், 1986:109 – 12) என்றும் தெரிய வந்துள்ளது. அதே சமயத்தில் இலக்கியத்தையும் இலக்கணத் தையும் ஒப்பிட்டு பார்க்கும்போது அருணாசலம் கூறிய வர லாற்று உண்மை(5.3.2.2)யை மறந்துவிடக்கூடாது ஆனால், இலக்கண உருவாக்க நோக்கில் பார்க்கும்போது எந்த இலக்கி யத்தைத் தரவாகக் கொண்டு இலக்கணம் எழுதினார் என்று கருதுகிறாமோ, அந்த இலக்கியத்தில் காணப்படும் பிற செய்தி களைப் புறக்கணித்தார் என்று மட்டும் சொல்வதால் எந்தவித பயனும் இல்லை. அதனால் முடிவான பதிலும் கூற முடியாது என்று ஆகிவிடும். அதற்கு மாறாக, இலக்கண உருவாக்கத்தில் ஏற்பட்ட குறை என்றோ வேறுகாரணம் இருக்கும் என்றோ ஒரு காரணம் கண்டுபிடிக்க வேண்டும். அப்பொழுதுதான் ஆசிரியர் சில இலக்கிய வழக்குகளைப் புறக்கணித்தார் என்று ஒத்துக்கொள்ளமுடியும்.

அமைப்பழகு

மொழியியல் நோக்கில் பார்க்கும்போது இலக்கிய உத்திகளில் ஒன்றான அமைப்பழகை (Neatness of Pattern) யும் நிலைமொழி-கிளைமொழி அல்லது இயற்சொல்-திசைச்சொல் என்ற கொள்கையையும் பயன்படுத்திச் சில சங்க இலக்கிய வழக்குகளைப் புறக்கணித்திருக்கலாம் என்று நினைக்க இடம் இருக்கிறது.

தொல்காப்பியர் கூறாத எழுத்துகள் சொல்லுக்கு முதலில் வந்துள்ளதால் சங்க இலக்கியத்துக்கு முந்தியது தொல்காப்பியம் என்ற கருத்து பரவலாகக் காணப்படுகிறது. ஆனால் அங்கு அமைந்துள்ள ஒரு பொதுமையையும் சில மாற்றங்களையும் யாரும் கவனிக்கவில்லை. ச, ஞ, ய, ஆகிய மூன்றும் இடை அண்ண ஒலிகள், அவை சொல்லுக்கு முதலில் அகர உயிருடன் வரும்போது எகரமாக மாறுவது சில சொற்களில் உள்ளது கவனிக்கத்தகுந்தது.

சகரத்தைப் பொறுத்த வரையில் இந்த மாற்றத்தை வினைச் சொற்களில் மட்டுமே காணமுடிகிறது. தா, வா, வே, நோ ஆகிய வினையடிச்சொற்கள் இறந்தகால விகுதி ஏற்கும் போது இணையான குறிலாக மாறிவிடுகின்றன.

| | | |
|---|---|---|
| தா | — | தந்து |
| வா | — | வந்து |
| வே | — | வெந்து |
| நோ | — | நொந்து |

ஆனால் 'சா' என்னும் வினைச்சொல் மட்டும் **சத்து** என்று மாறாமல் **செத்து** என்று மாறியதற்குக் காரணம் சகர மெய்யை அகரஉயிர்க்கு முன்னால் அந்தக்கால மொழி ஏற்றுக் கொள்ளவில்லை என்பதுதான். ஆனால், மலையாளம் உள்ளிட்ட பிற திராவிட மொழிச்சொற்களில் **சத்து** என்று காணப்படும் பொழுது தமிழில் **செத்து** என்று மாறியுள்ளது இடையண்ண ஒலிகளோடு அகர உயிர் வராத ஒழுங்கமைப்பின் ஆற்றலைக் காட்டுவதாக உணர்ந்து கொள்ள வேண்டும் (வேங்கடராசுலு ரெட்டியார் 1933:207 அ.கு 1).

> சகர அகர (ச), சகர எகரமாக (செ) ஒலித்தலின் செய் ஆயிற்றுள்ளது. சகரம் இவ்வாறு ஒலிக்கப்பட்டமையினானே செந்தமிழில் சகர முதன் மொழியே இலதாயிற்று என அறிக. சத்து (மலையாளம், கன்னடம்) சச்சி (தெலுங்கு) என ஏனைய திராவிட மொழிகளில் சகர முதன்மொழியாகவே வழங்குதல் நோக்கத்தக்கது

என்று கூறியுள்ளார். இங்கு இதை ஒலி மாற்றமாகக் கருதாமல், ஒலியன் பகிர்வு (Distribution) கட்டுப்பாடாகக்கொள்ள வேண்டும் என்பார் இன்றைய மொழியியலார்.

இந்த ஒலியன் கட்டுப்பாடும், அதனால் ஏற்படும் மாற்றமும் யகரத்தைப் பொறுத்த வரையில் பிற தென் திராவிட மொழிகளிலும் காணப்படுவது குறிப்பிடத்தகுந்தது. அதனால் தான் நாம் – நம்; தான் – தன்: தாம் - தம்: நீ(ன்) - நின் என்று வேற்றுமை ஏற்கும்போது மட்டும் மூவிடப் பெயர்கள் நெடில் குறிலாகக் குறுக, யான், யாம் என்ற இரண்டு சொற்களும் அதே முறைப்படி *யன், *யம் என்று ஆகாமல் என், எம் என்று ஆகியது, *யென்,*யெம் என்று ஆகி யகர மெய் கெட்டதால் ஏற்பட்ட மாற்றம் ஆகும் என்பார் வரலாற்று மொழியியலார் (Burrow 1949). இங்கும்இடையண்ண யகரமெய் அகர உயிரோடு சொல்லுக்குமுதலில் வருவது அமைப்புக் கட்டுப்பாட்டு ஆற்றலால் தவிர்க்கப்பட்டது எனலாம்.

ஞகரத்தைப் பொறுத்த வரையில் ஞகரமெய் அகர உயிரோடு மட்டும் அல்லாமல் பிற உயிரோடு வரும் போதும் நகரமாக மாறியதால், ஞகரம் சொல்லுக்கு முதலில் வராமல் தடுக்கப்பட்டுவிட்டது.

நரம்பு < ஞரம்பு
நளி < ஞளி
நரல் < ஞரல் (பதிற்றுப்: 30.6)
நால் < ஞால்
நாண் < ஞாண்

என்றாலும் சில கிளைமொழிகளில் பழைய ஞகரம் பாதுகாக்கப்பட்டதாலேயே கிளைமொழி வழக்காகச் சங்க இலக்கியத்

தில் ஞரல், ஞமலி போன்ற சொற்கள் வழங்கி இருக்க வேண்டும்.[10] என்று பர்ரோ ஒப்பிலக்கண நோக்கில் முன்னரே (1943:132) இந்த உண்மையை எடுத்துக்காட்டியுள்ளார். எனவே, சங்க இலக்கியத்தின் நிலைமொழி அல்லது சங்க இலக்கியம் கையாண்ட இயற்சொல்வேறு; அப்போது வழங்கிய கிளை மொழிகள்-திசைச் சொற்கள் பல. தொல்காப்பியர் ச,ஞ, ய முதலிய மெய்கள் அகரத்தோடு வராது என்று கூறிய தற்குக் காரணம் அமைப்பு அழகு எனலாம். மேலும், இலக்கியக் கிளைமொழி (இயற்சொற்கள்) பிறகிளைமொழி (திசைச் சொற்கள்) மாறுபாடும் இதை வலியுறுத்துவது போல அமைந்துள்ளன.

மீண்டும் சங்க இலக்கியத்தில் காணப்படும் சகரத்தை முதலாக உடைய சொற்களைப் பார்ப்போம். சிலம்பு, மேகலை, குறள் ஆகிய பின் சங்க நூல்களைச் சேர்த்தாலும். 61 சொற்கள் மட்டுமே காணப்படுகின்றன. (சண்முகம், 1971 – அ)அவைகளில் ஆறுமட்டுமே தாய்மொழிச் சொற்கள், அதாவது திராவிட மொழிக்குடும்பத்துக்கு உரியவை.ஏனையவை பிறமொழிச் சொற்கள். ஆனாலும் திராவிட மொழிச் சொற்களின் அகராதிப்படி தமிழில் மட்டும் 75 சொற்கள் பதிவு செய்யப்பட்டுள்ளன. அவைகளில் சகரமொழிச் சொற்கள் செகரத்தோடும் (சண்பகம் ᔕ செண்பகம்) சகரமெய் கெட்டும் உயிரெழுத்தோடும் (சான்றோார் ᔕ ஆன்றோர்) 60 சொற்கள் உள்ளன. எனவே, சகரம் சொல்லுக்கு முதலில் வராது என்று தொல்காப்பியர் கூறியதற்குக் காரணம் அது பிற ஒலியனாக உறழ்ந்து வந்திருப்பது தான். மேலும், சங்க இலக்கியத்தை உற்றுப்பார்க்கும் போது சகரத்தை முதலாக உடைய சொற்கள் வேறு சொற்களோடு பொருள் ஒத்து இருப்பதால் அவை நிலைமொழியாகப் பயின்று சகரத்தை முதலாக உடையசொற்கள் திசைச் சொற்களாகப் பயிலப்பட்டிருக்க வேண்டும் என்று கருத வேண்டியிருக்கிறது.

| | |
|---|---|
| சக்கை | கோது |
| சட்டை | மெய்ப்பை |
| சம்மட்டி | மத்திகை |

| | |
|---|---|
| சந்து/சந்தம் | சாந்தம் |
| சரக்கு | பண்டம் |

எனவேதான் தொல்காப்பியர் சகரச் சொற்களைத் திசைச் சொற்களாகக்கருதி அவை சொல்லுக்கு முதலில் வராது என்று கூறினாரோ என்று நினைக்க வேண்டியிருக்கிறது. இப்படித் திராவிட மொழி ஒப்பிலக்கண நோக்கில் பார்க்கும்போது புதிய வெளிச்சம் கிடைக்கலாம்.

அகநானூற்றில் (104) வரும் நால்கு என்ற வடிவத்தை வெள்ளைவாரணன் (1957:93) நான்கு என்பதன் திரிந்த வடிவம் என்றுகொண்டு அந்தத் திரிபு தொல்காப்பியத்தில் சொல்லப்படவில்லை என்று விளக்கியுள்ளார். ஆனால் கன்னடம் (நாலுகு, நாக்கு) தெலுங்கு (நாலுகு) பர்ஜி (நாலுக்), கூயி (நாலகி) ஆகிய தென்திராவிட, நடுதிராவிட மொழிகளில் வழங்கிவரும் வடிவங்களைக் கொண்டு *நால்கு என்பதே தொல்திராவிட வடிவம் என்பார் திராவிடமொழி ஒப்பியலார் (சண்முகம் 1971 ஆ: 152). நான்கு என்ற மெல்லினம் பெற்ற வடிவம் தமிழ், மலையாளம், கோட்டா, தோடா ஆகிய நான்கு மொழிகளில் மட்டும் இருப்பதால். அது பிற்கால வடிவமாகவும், அடுக்கு ஓரினமாதல் (Paradigmatic assimilation) முறைப்படி அதாவது மூன்று என்று முன்னும் ஐந்து என்று பின்னும் வரும் சொற்கள் மெல்லினம் பெற்றிருப்பதினாலேயே நால்கு என்பது நான்கு என்று திரிந்திருக்கலாம் என்பார் ஒப்பிலக்கண மொழியியலார். எனவே, நால்கு என்ற சங்க இலக்கிய வடிவம் வரலாற்று நிலையில் பழைய வடிவம். ஏதோ ஒரு கிளைமொழி வழக்காய் அது பாதுகாக்கப்பட்டிருக்கிறது. அது அந்த அகநானூற்றுப் புலவனுக்குத் தெரிந்ததால் இலக்கியத்திலும் பயன்படுத்தியிருக்க வேண்டும். மேலும், சங்க காலத்தில் நிலைமொழி வழக்கோடு சில கிளைமொழிகளின் தொல் வடிவங்கள் பாதுகாக்கப்பட்டுப் பயன் படுத்தப்பட்டிருக்க வேண்டும். (சங்ககால நிலைமொழி கிளைமொழி வழக்குகள் பற்றி அடுத்த இயலில் விரிவாக விளக்கப்படும்.) எனவே, தொல்காப்பிய வழக்கிலிருந்து மாறுபட்டவடிவங்கள் எல்லாம் திரிந்த வடிவங்கள் என்று கொள்ளக்கூடாது. இதனால், சங்க

இலக்கிய வழக்கு எல்லாம் தொல்காப்பியப் பழமையை நிரு பிக்கப்பயன்படுபவை அல்ல என்பதை அறியலாம்.

இந்த நிலையில் 1) தொல்காப்பிய இலக்கணம் கூறும் செய்தி, 2) தொல்காப்பியர் கையாண்ட வழக்கு, 3) சங்க இலக்கிய வழக்கு ஆகிய மூன்றின் அடிப்படையில் ஆய்தத்தின் வரலாறு பற்றி பாலசுப்பிரமணியன் (1976) விளக்கியுள்ளது மொழியியல் வரலாற்று நோக்கில் வழக்குகளை ஆராயும் போது இலக்கியச் சான்று ஆதாரங்களின் நேரடி உண்மையி லிருந்து மாறுபட்ட உண்மை புலனாவதையும், அவைகளில் நிலைமொழி மாற்றம், இலக்கண உருவாக்கக் கோட்பாடுகள் ஆகியவை அடங்கியுள்ளதையும் புலப்படுத்துகிறது. அவர் கருத்துப்படி

முதல் நிலை : சங்க இலக்கிய வழக்கு
இரண்டாம் நிலை: அ) தொல்காப்பியஇலக்கண வழக்கு
ஆ) தொல்காப்பியர் கையாண்ட வழக்கு

பாலசுப்பிரமணியன் இதன் அடிப்படையில் சங்க இலக் கியத்துக்குப் பிந்தியது தொல்காப்பியம் என்று கூறவில்லை. ஏனெனில் தமிழ் இலக்கிய வரலாற்று ஆசிரியர்கள் எல்லோ ரும் தொல்காப்பியம் சங்க இலக்கியத்துக்கு முந்தியது என்று கூறியுள்ளார்கள். அதே சமயத்தில் வரலாற்று நோக்கில் ஆய் தத்தின் வளர்ச்சி இந்த முறைப்படியே இருக்கவேண்டும் என்று கருதுகிறார். எனவே, தொல்காப்பிய வழக்குகளிலிருந்து சங்க இலக்கிய வழக்கு மாறுபட்டது என்பதை மட்டும் கொண்டு காலம் பற்றிய முடிவு செய்வது மொழி வரலாற்று அடிப்படை யில் சுலபமாக ஏற்றுக்கொள்ள முடியாது என்பது தெளிவா கிறது.

### 5.5.4. புறநானூறும் புறத்திணையும்

பொருளதிகாரத்தில் புறத்திணை இயல் பெரும்பான்மை யும் இலக்கியத் தரவுகளை அப்படியே இலக்கணமாக்கியதா கக் கொள்ளலாம் என்பார் கு.வெ. பாலசுப்பிரமணியன் (1986: 21).

> புறத்திணையில் பாடாண் திணை ஒன்றிலேயே ஓரளவு புனைவுக்கு வாய்ப்பிருக்கிறது. ஏனைய பெரும்பாலும் உள்ளது மொழிதலே

என்பது அவரது வாசகம்.

தொல்காப்பியப் புறத்திணையில் 158 துறைகள் உள்ளன. புறநானூற்று பிற்குறிப்பாளர் குறிப்பிட்ட 67 துறைகளில் 42 துறைகளே தொல்காப்பியத்தில் குறிக்கப்பட்டுள்ளன. ஆகவே, தொல்காப்பியர் கூறாத துறைகள் 25 புதியனவாக உள்ளன. அப்படியே தொல்காப்பியர் கூறிய துறைகளுள் 116 துறைகளுக்குப் புறநானூற்றில் சான்றுகள் இல்லை. (இராசம் இராமமூர்த்தி, 1977:56). எனவே, இங்கும் தொகையிலக்கியம் என்ற முறையில் தொல்காப்பியருக்குக் கிடைத்த பாடல்கள் தொகுப்பாசிரியருக்குக் கிடைக்கவில்லை என்றோ; தொகுப்பாசிரியருக்குக் கிடைத்த பாடல்கள் தொல்காப்பியருக்குக் கிடைக்கவில்லை என்றோ கூறிக்கொண்டிருப்பதால் எந்தவிதப் பயனும் ஏற்படப் போவதில்லை. மேலும், இலக்கண உருவாக்கம் என்பது கிடைத்த தரவுகளைப் பொதுமைப்படுத்திப் பட்டியல் போட்டுக் காட்டும் வேலை மட்டுமல்ல; இலக்கிய இலக்கண க்கோட்பாடு, அன்றைய சமூகப் பண்பாட்டுத் தேவைகள் ஆகியவற்றின் அடிப்படையில் செயல்படுவது என்ற அடிப்படையில் புறத்திணை ஒவ்வொன்றிலும் தொல்காப்பியர் கூறும் துறைகள் என்னென்ன? புறநானூறு, பதிற்றுப்பத்து ஆகிய புறத்திணை இலக்கியங்கள் கூறும் துறைகள் என்னென்ன? இலக்கியத்தில் காணாத துறைகள் எந்தக் காரணத்தினால் இலக்கணத்தில் இடம் பெற்றன என்பதை ஊகித்துக் கண்டுபிடிக்க முயலவேண்டும்.

வெறும் தரவுகளைப் பொறுத்தவரையில் இலக்கண உருவாக்க முறை நம்மைச் சிந்திக்க வைத்துவிட்டது. புறத்திணையை அகத்திணையோடு இணைக்கும் முயற்சி அறிவு வழிப்பட்டது. அக இலக்கியத்துக்கும் புற இலக்கியத்துக்கும் அறிவுத் திறனால் பாலம் கட்டிய முயற்சிஅது. இது இலக்கண ஆசிரியன் சிந்தனையில் எழுந்ததா? அல்லது இதற்கும் ஏதாவது இலக்கியச் சான்று இருக்கிறதா என்று தேடிப்பார்க்க வேண்டும். இராசம் இராமமூர்த்தி (1977) இந்த நோக்கில் சில குறிப்புகளைத் தேடித் தந்துள்ளார்.

பத்துப்பாட்டில் பெரும்பாணாற்றுப் படையில் வெட்சித் துறையாகிய ஆநிரை கவர்தலைக் குறிஞ்சிக் காட்சியாக விவரிக்கப்பட்டுள்ளதையும், பாலைக்குப் புறன் எனப்பட்ட வாகைத் திணையில் அமைந்த பாடல்கள் சில வற்றில் 'பறந் தலை' (அதாவது பாலை)யில் நடந்ததாகக் குறிக்கப்படுவதை யும் அவர் எடுத்துக் காட்டியுள்ளார்.

புறநானூற்றில் காணப்படும் வல்லாண் முல்லைப் பாடல் களுக்கும், அகத்திணை முல்லைத் திணை பாடல்களுக்கும் பொருளால், வருணனையால் ஒற்றுமை பல உள்ளன என்று செயராமன் (1977:48) பல உதாரணங்களை எடுத்துக்காட்டி, 'வல்லாண் முல்லை' முல்லைப் பாடல்களோடு அமைப்பால் ஒன்றுபட்டு ஒரே சூழலில் எழுந்தன (ப.49) என்று குறிப்பிட் டுள்ளார். எனவே 'முல்லைதானே வஞ்சியது புறனே' என்ற கருத்துக்கு இலக்கிய ஆதாரம் உண்டு எனக் கொள்ளலாம்.

புறத்திணை–அகத்திணை தொடர்பு பற்றிப் பொதுவாகப் பேசும் போது செயராமன் (1975:37)

> வஞ்சித்திணையும் முல்லைத்திணையும் இணைந்திருப் பது போல பிற திணைகள் இணைந்திருப்பதாகத் தெரியவில்லை; எனினும் உரையாசிரியர்கள் அவை களிடையே உள்ள பொருத்தங்களை வலிந்து கூறிப் பொருத்திக் காட்டுவர்

என்று கூறினாலும் பாடாண் திணைக்கும் அதனோடு தொடர்பு உடைய கைக்கிளைக்கும் பத்து ஒற்றுமைக் கூறுகளை எடுத்துக் காட்டியுள்ளார் (ப.39). எப்படியானாலும் எல்லாப் புறத்திணை களுக்கும் இணையான அகத்திணைகளுக்கு இலக்கியச் சான்று இல்லை என்பது தெளிவாகிறது. அப்படியானால் தெளிவாக, தெரிந்த திணை உறவு அடிப்படையில் இலக்கியம் இல்லாத பிற திணைகளுக்கும் ஒற்றுமை இருக்கும்படி சிந்தித்துத் தானே இலக்கணம் உருவாக்கினார் என்று கொள்வதில் தவறு இல்லை. எனவே, (ஏழு புறத்திணை; அகத்திணை ஏழு; அகத் திணையின் புறம் புறத்திணை) அமைப்பு அழகுக்காக – தொல் காப்பியரால் சிந்தித்து வெளிப்படுத்தப்பட்ட கருத்துகள் என்று

கொண்டால் இலக்கண உருவாக்கம் என்பதை அறிவியல் பணியாகக் கருதும் நிலை ஏற்படும்.

புறத்திணையைப் பொறுத்தவரையிலும் இலக்கியச் சான்றுகள் இலக்கணம் ஆக்கப் படாததற்கும் சான்றுகள் உண்டு.

போர் நிகழ்ச்சிகளின் போது வெட்சி, கரந்தை முதலிய பூக்கள் அணிந்து செல்வதற்குப் புறநானூற்றுப் பாடல்களில் (50,100,261,347 முதலியன) சான்று உண்டு. பூக்கோட்காஞ்சி என்ற துறையைப் பிற்குறிப்பாளர் குறிப்பிடுகிறார் (புறம்:341). போர்க் காலத்தில் போர்ப்பூ வணிவதைப் பற்றி இலக்கியம் இருந்தும் தொல்காப்பியர் இலக்கணம்செய்யவில்லை. (இராசம் இராமமூர்த்தி 1977:57) எனவே, இலக்கண ஆசிரியன் சில இலக்கியச் செய்திகளைப் புறக்கணித்ததற்குக் காரணமும் ஆராய வேண்டிய அவசியம் ஏற்பட்டு விடுகிறது.

தரவு நோக்கில் இலக்கணத்தைப் பார்க்கும் போது குன்றக் கூறல் (இலக்கியச் சான்றுகளைப் புறக்கணித்தல்), மிகைபடக் கூறல் (இலக்கியச் சான்றுகள் இல்லாத போதும் இலக்கணம் செய்தல்) ஆகிய இரண்டையும் பார்க்கலாம். இவை இலக்கண ஆசிரியரின் இலக்கண உருவாக்கக் கோட்பாடு, சமூகக் கோட்பாடு, இலக்கிய நோக்கு ஆகியவற்றைப் புலப்படுத்துவதாகக் கொள்ள வேண்டும். அப்படியானால் சங்க இலக்கியத்தைத் தரவாகக் கொண்டது தொல்காப்பியம் என்று கருதுவதில் தவறில்லை என்று ஆகும். இந்தக் கருத்துக்குச் சமூகப் பண்பாட்டுச் சூழல் ஆதரவாக இருக்கிறது. ஆனால், தொல்காப்பியப் பொருளதிகார இயல்களை இலக்கியத்தோடு ஒப்பிட்டு ஆராய்ந்து இலக்கணக் கோட்பாடு பற்றியும் இலக்கணம் உருவாக்கம் பற்றியும் தெரிந்துகொள்ள வேண்டும். அப்பொழுது தான் மெய்ப்பாட்டியல், உவம இயல் போன்றவற்றிற்குத் தமிழ் இலக்கிய வேர்களும் புலப்படும்; தொல்காப்பியரின் அறிவின் சிந்தனையின் ஆழ அகலம் புரியும்; மொழி பெயர்ப்பாக இருக்கலாமோ என்ற சந்தேகமே எழும்பாது போய் விடும்.

## 5.6. முந்துநூல்களும் இலக்கண உருவாக்கமும்

தொல்காப்பிய உருவாக்கத்துக்கு முந்துநூல்கள் - தமிழ், வடமொழி நூல்கள் துணையாக-அடிவேராக இருந்த செய்தியைப் பனம்பாரனார் குறிப்பிட்டது முன்னரே எடுத்துக்காட்டப்பட்டது. எனவே, தரவு அடிப்படையில் இலக்கண உருவாக்கத்தைப் பார்த்தது போல முந்துநூல்களையொட்டி இலக்கண உருவாக்கத்தையறிவது தொல்காப்பியரின் நூல் கல்வியின் ஆழத்தையும், தமிழ் நாட்டு இலக்கண வரலாற்றையும் அறிந்து கொள்ள உதவும்.

### 5.6.1. தமிழ் நூல்கள்

துரதிர்ஷ்ட வசமாகத் தொல்காப்பிர் பயன்படுத்திய நூல்களைப்பற்றிய நேரடிக் குறிப்புகள் தொல்காப்பியத்தில் இல்லை; தொல்காப்பியம் தவிர அதற்கு முந்திய வேறு இலக்கண நூல்களும் நமக்குக் கிடைக்கவில்லை; ஆனாலும் இசைநூல், யாப்புநூல், கூத்துநூல் ஆகியவைகளைப்பற்றியும், ‚தொடை உணர்ந்தோர்;, ‘வாய்மொழிப்புலவர்’‘மொழி புலவர்’ யாப்பறிபுலவர்’; ‘நல்லிசைப்புலவர், ‘குறிப்பறிந்தோர்; ‘தொன்னெறிப்புலவர். என்று பலவகைப்பட்ட அறிஞர் பெருமக்களையும், அவர் பொதுவாகக் குறிப்பிட்டுள்ளார் (விளக்கத்துக்கு இராசமாணிக்கனார். 1963;68.தொ. பார்க்கவும்). எனவே, முந்தைய இலக்கண மரபும், பிறதுறை நூல் மரபும் தொல்காப்பியருக்கு உறுதுணையாக இருந்திருக்கவேண்டும் மென்று கருதுவதில் தவறில்லை. அப்படியே சில கருத்துகளை, ‘மொழிப,’ ‘என்மனார் புலவர்’ என்று கூறும்போது முற்கால, தற்கால அறிஞர்களுக்குத் தொல்காப்பியர் பட்ட கடன் புலனாகிறது.

முந்துநூலின் கருத்துகள் என்னென்ன? அவைகளில் தொல்காப்பியர் ஏற்றுக்கொண்டவை என்னென்ன? புதிய கருத்துகள் என்னென்ன என்று பாகுபடுத்திப் பார்க்கமுடிந்தால் தொல்காப்பிய உருவாக்கக் கோட்பாட்டை முழுவதும் உணர்ந்தவர்கள் ஆவோம். இந்த நிலையில் தொல்காப்பியர் நேரடியாகக் குறிப்பிட்ட முந்துநூல் கருத்திலிருந்து மாறுபட்ட ஒரு கருத்து இலக்கண உருவாக்கத்துக்கு உதவியதைப் பார்ப்போம்.

'வேற்றுமை தாமே ஏழெனமொழிப' என்று முதலில் (வேற்றுமை. 1) கூறியது முந்துநூல் கருத்து; அடுத்த சூத்திரத்தில் 'விளிகொள்வதன் கண் விளியொடு எட்டே' என்பதுஅவருடைய கருத்து. (இங்கு கூட, தொல்காப்பியர் காலத்திலேயே இரண்டுவிதக் கருத்தும் நிலவியிருக்க, அவரொருகருத்தைப்பின் பற்றியிருக்கலாம் என்றாலும் இரண்டாவது கருத்துக்கு அவர் அதிக அழுத்தம் கொடுத்துள்ளார் என்பதை மறுக்க முடியாது). எனவே, இங்கு வேற்றுமை எண்ணிக்கையில் மட்டும் அவர் மாறுபடுகிறார் என்பது கருத்தல்ல; மொழியின் இலக்கணக் கூறுகளையொட்டி வகைப்படுத்தும் முறையில் இரண்டு மாறுபட்ட கோட்பாடுகள் புதைந்துள்ளன. ஒட்டுகள் இருந்தால் மட்டுமே தனிவகையாகக் கருதவேண்டும் என்ற சொல்லிலக்கண கோட்பாட்டு அடிப்படையில் முதல் ஏழு வேற்றுமையும், ஒட்டு இல்லாவிட்டாலும் பெயர்ச் சொல்லின் பொருளை வேற்றுமை செய்வதால் விளி வேற்றுமையும் அங்கீகரிக்கப்பட்டுள்ளன.

இலக்கண உருவாக்க முறையில் விளிமரபை தனி இயலாக வைத்து, திணை அடிப்படையில் பெயர்களை வகுத்து ஒவ்வொரு திணையையும் ஈற்றெழுத்துகள் அடிப்படையில் பெயர்ச் சொற்களில் ஏற்படும் மாற்றத்தை விளக்கியதன் மூலம், அடுத்துள்ள பெயரியலுக்கு முன்னோடியாக அமைத்து இயல்களிடையே உறவு ஏற்படுத்திய நுட்பமும் கவனிக்கத் தகுந்தது. இப்படிக்கூறிய முறையிலும் முறைப் பெயர்களை வருணிக்கும் இடத்தை ஒட்டி அமைந்த இன்னொரு நுட்பம் முன்னரே (சண்முகம், 1986:109 தொ.) எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. எனவே, எண்ணிக்கையில் ஏற்படும் மாற்றம் வேறுபல கருத்து மாற்றங்களைப் புலப்படுத்துவதாய் அமைந்துள்ளது. இவையெல்லாம் இலக்கண உருவாக்கத்தில் புதைந்துள்ள நுட்பங்கள் என்று கொள்ளலாம்.

### 5.6.2. வடநூல்கள்

தொல்காப்பியர் எந்தெந்த வடநூல்களை எப்படியெப் படித் தழுவி இலக்கணம் உருவாக்கினார் என்பதை அறிவதும்

முந்துநூலறிவில் அடங்கும். எழுத்ததிகாரம், சொல்லதிகாரத்தைப் பொறுத்த வரையில் பிராதிசாக்கியம், யாஸ்கரின் நிருக்தா, பாணினிசிட்சை, பாணினி இலக்கணம் என்பவை பின்பற்றப்பட்டுள்ளதாகச் சுப்பிரமணிய சாஸ்திரி (1934) குறிப்பிட்டுள்ளார். பாணினியின் இலக்கணமுறையிலிருந்து மாறுபட்ட 'ஐந்திரம்'என்ற வடநூலையே தொல்காப்பியனார் பின்பற்றினார் என்ற கருத்து பாயிரத்திலேயே உண்டு. ஆனாலும் ஐந்திரம் என்ற நூல் இன்று நமக்குக் கிடைக்காததால் இரண்டையும் ஒப்பிட்டு உருவாக்கம் பற்றி அறிந்து கொள்ள முடியவில்லை.

பொருளதிகாரத்தைப் பார்க்கும்போது பரதரின் நாட்டிய சாஸ்திரம், வாத்யாசனரின் காம சூத்திரம் ஆகிய நூல்களையும் படித்திருக்க வேண்டும் என்று பலராலும் எடுத்துக் கூறப்பட்டுள்ளது. (உ-ம். வேங்கடராசுலு ரெட்டியார், 1933: 157) சைன நூல் கருத்துகளும் உள்ளன என்று வையாபுரிப்பிள்ளை (1949:28 தொ.) எடுத்துக் காட்டியுள்ளார்.

'மறையோர் தேஎத்து மன்றல் எட்டு' என்பது கௌதமரும் போதாயனரும் வரையறை செய்த கல்ப சூத்திரங்களின் தழுவல் என்றும் (கந்தசாமி, 1977:29); வாகைத் திணையில் கூறிய 'நாலிரு வழக்கின் தாபதப் பக்கம்'(பொருள். 74.) பதஞ்சலியோக சூத்திரத்தில் காணப்படும் கருத்து என்றும் (ப.33); உயிரினங்களின் பாகுபாடு, திகம்பரப் பெரியார் – குந்தகுந்தாச்சாரியார் எழுதிய பஞ்சாஸ்தி காயம் என்ற நூலிலும் சுவேதம்பர பெரியார், உமாசுவாமி எழுதிய தத்துவார்த்த சூத்திரத்திலும் காணப்படுகின்றன (ப.40) என்றும் சுட்டிக் காட்டி தொல்காப்பியர் 'வடமொழி நூல்களை நுணுகிப்பயின்றவர்' என்றும் கந்தசாமி (1977:14) குறிப்பிட்டுள்ளார்.

பொதுவாக, வடநூல் கருத்துகளோடு தொல்காப்பியக் கருத்துகளின் ஒற்றுமை, வேற்றுமை ஆகியவற்றை மட்டும் எடுத்துக்காட்டுவது ஆரம்பநிலை ஆராய்ச்சியே ஆகும். இரண்டிற்கும் காரணங்கள் என்னென்ன? அவை அப்படி இலக்கண உருவாக்கத்துக்கு உதவின என்று ஆராய்வதே முக்கியம்.

கருத்து ஒற்றுமைக்குரிய காரணங்களில் ஒன்று, கந்தசாமி குறிப்பிட்டது போலத் தொல்காப்பியர் வடமொழி படித்து, அதைத் தழுவிக் கொண்டது. அப்படியானால், சங்க காலத் தமிழறிஞர்கள் வடமொழி படிக்க வேண்டிய சூழல் என்ன வென்று ஆராயவேண்டும். அடுத்த இயலில் வடமொழி இலக்கியங்கள் காட்டும் குறிப்புகள் சுட்டிக்காட்டப்பட்டு, அதன் மொழியியல் அடிப்படை விளக்கப்படும்.

கருத்து வேற்றுமைக்குக் கராணம் கருத்து மாறுபாடு மட்டுந்தானா? அந்தக் கருத்து மாறுபாட்டுக்கும் பின்னனி ஏதாவது உண்டா? தமிழிலக்கிய மூலம் எதாவது உண்டா? என்று பல கேள்விகளைக் கேட்டு விடைதேடினால்தான் தொல்காப்பிய உருவாக்கம் மட்டுமல்லாமல் அதன் தனித்தன்மையும் தமிழின் தனித்தன்மையும் புலப்படும். அப்பொழுதுதான் உலகளாவிய நிலையில் தொல்காப்பியத்துக்குப் பெருமை ஏற்படமுடியும்.

சுப்பிரமணிய சாஸ்திரி(1934), தொல்காப்பியம் வடமொழி நூல்களுக்குக் கடன்பட்டிருந்தாலும் அழகான இலக்கணம் எழுதியுள்ளதாகவும் (ப.3)[11] தமிழ் மொழி அமைப்புக்குக் குந்தகம் ஏற்படாமல் இலக்கணம் செய்துள்ளதாகவும் (ப.231)[12] குறிப்பிட்டதன் சரியான விளக்கம் இன்னும் அறிந்து கொள்ளப் படவில்லை. இதற்குக் காரணம் தொல்காப்பிய எழுத்ததிகார-சொல்லதிகாரங்கள் இன்னும் வருணனை நிலையில்கூடச் சரியாகப் புரிந்துகொள்ளப் படாததுதான் – அதாவது அவருடைய இலக்கணக் கோட்பாடுகள் இன்னும் தெளிவுபடுத்தப்படவில்லை.

தொல்காப்பிய எழுத்துகளின் பிறப்பு பற்றிய முதல் சூத்திரம் (எழுத்து.83) பாணினிய சிட்சையின் மொழி பெயர்ப்பு என்று சுப்பிரமணிய சாஸ்திரி (1934: 6) கூறியதை அவருடைய ஒலியியல் அறிவால் முருகையன் (1973)மறுத்து இரண்டுக்கு முள்ள வேறுபாட்டைப் புலப்படுத்தியுள்ளார்.

இதுபோல், ரிக்வேத பிராதிசாக்கியத்தையும் தொல்காப்பியத்தையும் விரிவாக ஆராய்ந்த ராஜம் (1981) தொல்

காப்பியப் பிறப்பியல் கருத்துகளும் புணரியல் பற்றிய பொதுக் கோட்பாடும் வடமொழி இலக்கண நூல்களோடு மாறுபட்டன என்று குறிப்பிட்டுள்ளார்.[13]

தொல்காப்பியர் கூறும் கருத்துகள் வடமொழி நூல்களில் காணப்பட்டாலும் அவருடைய அணுகுமுறையும் நடைமுறையும் தொல்காப்பியம் எந்தவொரு வடமொழி நூலையும் முழுமையாகப் பின்பற்றிச் செய்யப்படவில்லை என்றும் தெளிவுபடுத்தியுள்ளார் அவர். எனவே, தொல்காப்பியர் வடமொழிக் கருத்துகளை வாங்கிக்கொண்டு தமிழ்மொழி அமைப்புக்கும் தன்னுடைய நூலாக்க அமைப்புத் திட்டத்துக்கும் ஏற்ப இலக்கணத்தை உருவாக்கியுள்ளார் என்று கருத வேண்டும்.

சொல்லதிகாரத்தில் சொல்வகைப்பாடு (Parts of Speech) முக்கியமானது. இங்கும் வடமொழி கருத்துகளோடு தொல்காப்பியக் கருத்துகளின் ஒற்றுமையும் வேற்றுமையும் சுப்பிரமணிய சாஸ்திரி (1934:104) சுட்டிக்காட்டியுள்ளார். இடைச்சொல் கோட்பாடு, உரிச்சொல் கோட்பாடு பற்றி இப்பொழுது தெரிந்த கருத்துகளையும் (இடைச் சொல்கோட்பாடு, சண்முகம், 1989; உரிச்சொல் கோட்பாடு, சண்முகம், 1986) உரியியல் அமைப்பு பற்றித் தெரிந்த கருத்துகளையும் பார்க்கும்போது தொல்காப்பியரின் இலக்கண உருவாக்கம் வடமொழி கருத்திலிருந்து மாறுபட்டது; எவ்வளவு ஆழமானது என்பதை அறிந்துகொள்ளலாம்.

பொருளதிகார மெய்ப்பாட்டியலுக்கும் பரதரின் நாட்டிய சாஸ்திரத்துக்கும் கருத்து ஒற்றுமை - வேற்றுமை மேலே சுட்டிக்காட்டப்பட்டது. பரதர் நாடகத்துக்குரிய தெனக் கூறிய மெய்ப்பாடுகளைத் தொல்காப்பியர் இலக்கியத்துக்கு - குறிப்பாக அக இலக்கியத்துக்கு உரியதாகக் கூறியதையும் தொல்காப்பியர் இலக்கிய மரபுகளுக்கும் நாடகமேடை; நாடக (Theatrical/dramatic) வழக்குகளுக்கும் உறவு இருப்பதையும் சிவத்தம்பி (1981:118) சுட்டிக் காட்டியுள்ளது; இலக்கிய, இலக்கண மரபிலும் உருவாக்கத்திலும் இன்னொரு பரிமாணத்தைப் புலப்படுத்துவதாகக் கொள்ளலாம். இலக்கியபாடு

பொருள் மரபு, வாழ்க்கை மரபிலிருந்தும்[12] கலைநுட்ப, தொழில் நுட்பமரபு கூத்து நாடகம் ஆகியவற்றிலிருந்து பெறப்பட்டதாக தமிழண்ணல் (1976:78) கூறுவதும், இந்தக் கருத்தை வலியுறுத்தும். எனவே, இலக்கியக் கலைக்குச் செயல் முறைக்கலையான (Performing arts) நாடகத்தோடு தொடர்பு இருப்பதைத் தொல்காப்பியர் புலப்படுத்துகிறரா என்று எண்ணிப்பார்க்கலாம். மேலும் எழுத்து இலக்கியம் பாணர்கள், கூத்தர்கள் ஆகியவர்களின் வாய்மொழிப்பாடல்களோடு தொடர்புடையது என்ற கருத்தையும் உறுதி செய்வதாகவும் இந்தக் கருத்து அமையும். எனவே, முந்துநூல் கருத்துகளும் வடநூல்கள் கருத்துகளும், பிற ஆசிரியரின் இலக்கிய, இலக்கணக் கோட்பாடுகளும் இலக்கண உருவாக்கத்துக்குத் துணை புரிந்திருந்தாலும் அவருடைய தனித்தன்மை ஆங்காங்கே பளிச்சிடுகின்றன.

## 5.7. சமூக, பண்பாட்டு, மொழிச்சூழல்

எந்த ஒரு இலக்கணமும் முன்னரே குறிப்பிட்டபடி அதன் காலச்சூழலை அதாவது சமூக, பொருளாதார, பண்பாட்டு. அரசியல் சூழலைப் பிரதிபலிப்பதாகவே அமையும். இங்கு இலக்கிய நூல்கள் காட்டும் இலக்கிய வகை மாற்றம், இலக்கியப்பாடு பொருள் மாற்றம், மொழி உணர்வு ஆகியவைகளே இலக்கண உருவாக்கக் காலச் சூழலாக விளக்கப்படுகின்றன. இலக்கிய வகை மாற்றம் என்பது இரண்டு வகையில் விளக்கப் படுகிறது. ஒன்று; பரிணாம வளர்ச்சியாகக் கலித்தொகையும் பரிபாடலும் வளர்ந்தது. இன்னொன்று; அடுத்த காலகட்டத்தில் பழமை பாராட்டு முகமாக ஏற்பட்ட இலக்கியவகை வளர்ச்சி அதாவது பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் உள்ள அக, புறத்திணை நூல்கள். மொழி உணர்வு என்பது பழைய இலக்கியம் பற்றிய உணர்வையும், மொழிமாற்றம் பற்றிய உணர்வையும் குறிப்பதாகக் கொள்ளப்பட்டிருக்கிறது. இவை எல்லாமே சமூக மாற்றத்தின் விளைவு.

### 5.7.1. இலக்கிய வகை வளர்சசி

எட்டுத்தொகை நூல்களில் கலித்தொகையும் பரிபாடலும்

பின்சங்க காலத்தது என்று முன்னரே குறிப்பிடப்பட்டது. இந்தக் கருத்து முதன் முதலில் மொழியியல் அறிஞர்களால் மொழி அமைப்பு நோக்கில், கலித்தொகை, பரிபாடல் மொழி அமைப்புகள் பிற எட்டுத்தொகை நூல்களிலிருந்து மாறு பட்டுக் காணப்படுவதோடு அவை வரலாற்று மாற்றமாகக் கருதத் தகுந்த கூறுகளையும் கொண்டிருக்கின்றன என்று காட்டப்பட்டது (விவரத்துக்கு சண்முகம் 1971 அ). இந்தக் கருத்து எல்.வி. ராமஸ்வாமி ஐயரால் (1937, 1938) முப்பது களில் கூறப்பட்டுத் தமிழ் அறிஞர்களான வையாபுரிப்பிள்ளை (1956) மீனாட்சி சுந்தரனார் (1965அ). அகத்தியலிங்கம் (1983: 118 – 33) ஆகியவர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. பரி பாடல் காலத்தால் பிற்பட்டது அல்ல என்று கருதும் சாரங்க பாணியும் (1972: 251) பரிபாடல் சொற்களில் காணப்படும் பொருள் மாற்றங்களைப் பின் வருமாறு எடுத்துக்காட்டியுள் ளார்.

| | பரிபாடல் பொருள் | ஏனய இலக்கிய பொருள் |
|---|---|---|
| விரும்புதல் | குந்துதல் | அமர்தல் |
| கிழவன் | முதிர்ந்த ஆடவர் | தலைவன் |
| சேரி | தாழ்ந்த வகுப்பினர் வாழும் இடம் | வாழும் இடம் |

மேலும்' இப்பொருள் வேறுபாடுகள் எல்லாம் சமூக மாறுதலின் விளைவே ஆகும்' என்பார் அவர்.

இலக்கிய அறிஞர்கள் இரண்டு நூலும் இலக்கிய வகை யாப்பு முதலியவற்றால் ஏனைய எட்டுத்தொகை நூல்களி லிருந்தும் மாறுபட்டிருப்பதை அறிந்திருந்தாலும், அந்த மாற் றத்தின் உள்கிடையைக் கவனிக்காததால் இலக்கிய வளர்ச்சி என்று அவர்கள் கருதவில்லை.

அதே சமயத்தில் சில இலக்கிய அறிஞர்கள் அந்த இரண்டு நூல்களுக்கிடையேயும் சில பொதுப் பண்புகள் இருக்கின்றன என்றும், இலக்கிய வகையால் மாறுபடுகின்றன என்றும் ஒத்துக்

கொள்கிற போது இலக்கிய வளர்ச்சியை மறைமுகமாக ஏற்றுக் கொள்வதை உணரலாம்.

இராசமாணிக்கனார் (1963:191) ஐங்குறுநூறு, குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு ஆகிய நான்கு நூல்களுக்கும் கலித்தொகைக்கும் யாப்பு, பாடுபொருள், நடை, பாடப்பட்டோர், மொழிநடை ஆகியவற்றில் காணப்படும் வித்தியாசங்களைச் சுட்டிக்காட்டியுள்ளார்.

அப்படியே பரிபாடல் பாவகையிலும், செய்யுள் நடையிலும் வருணனையிலும் எண்ணத்திலும் முறைவைப்பிலும் பிறவற்றிலும் மாறுபட்டுள்ளது (ப.208) என்று குறிப்பிட்டு.

> பிற்பட்ட சொல்லுருவங்களையும் வழக்குகளையும், புராணக் கதைகளையும் மிகுதியாகக் கொண்ட கலித்தொகை, பரிபாடல், சிலப்பதிகாரம், மணிமேகலை கி.பி. இரண்டாம், மூன்றாம் நூற்றாண்டுகளில் செய்யப் பெற்றிருக்கலாம் என்பதும் பொருத்தமாகும்

(ப. 218) என்பார் அவர்.

> இரண்டும் (கலித்தொகையும் பரிபாடலும்) அமைப்பாலும் ஒரு சில உறுப்புக்களாலும் ஒப்புமை உடைய பாக்கள் ஆகும். இரண்டும் இசைத்தன்மை மிக்கன, ஆடலுடன் கூடியன; உரையாடல் கொண்டன. உலகவழக்கைத் தழுவியன; நடப்பியல் சார்ந்தன; புராண மரபு கலந்தன.

என்று தமிழண்ணல் (1980:85) பொதுவாகக் குறிப்பிட்டுவிட்டு,

> கலித்தொகை பாடல்கள் உணர்ச்சிக்கொந்தளிப்பன; உள்ளத்தைத் தொடுவன எனலாம். சங்க இலக்கியத்திலிருந்து நீதி இலக்கியம் கிளைத்தது என்பதற்கு இது (கலி. 133) போன்ற பகுதிகள் சான்று.

என்று கலித்தொகை பற்றி (ப.83) விளக்கியுள்ளார்.

> இந்நூலின் (பரிபாடலின்) அமைப்பும், கிடைக்கின்ற குறிப்புகளும் வையை ஆறு பற்றிய பரிபாடல்கள் வீரயுகத்திற்குப் பின்னரும் அறநெறிக் காலத்திற்கு முன்னரும் தோன்றின என்று முடிவு கூறத் துணை செய்கின்றன. இத்தகைய நிலை மாறுபட்ட காலத்தில் தோன்றியதால்தான் அறநெறிப் பாடல்களைப் போன்று வைகை பற்றிய பரிபாடல்களின் பாடல்கள் ஒழுக்க நெறி இல்லாத வாழ்வை இகழ்ந்து பேச

> வில்லை. கள் உண்ணுதல், பரத்தமை ஆகியவற்றை எதிர்த்து அறநெறிப்பாடல்களைப் போன்று, பரி பாடல் கவிதைகள் போர்க்குரல் எழுப்பவும் இல்லை (ப.63)....
> வீரயுகச் சமுதாயத்திலிருந்தும் முற்றிலும் வேறுபட்ட, வளர்ச்சிபெற்ற சமுதாயமாகப் பரிபாடல் காட்டும் தமிழ்ச் சமுதாயம் அமைகின்றது (ப.65)

என்பார் ஜான் சாமுவேல் (1986:6).

எனவே, கலித்தொகையும் பரிபாடலும் இலக்கிய வளர்ச்சியை மட்டுமல்லாமல், அதற்கு அடித்தளமான சமு தாய வளர்ச்சியையும் புலப்படுத்துகின்றன.

**5.7.2. இலக்கியப் பொருள் வளர்ச்சி**

இந்த நிலையில் வீரயுக இலக்கியப் பிரதிநிதியாகக் காணப் படும் புறநானூற்றையும் இலக்கணமாகக் கருதப்படும் தொல் காப்பியத்தையும் இந்த நோக்கில் பார்ப்போம். அங்கும் அறத் தின் குரல் கொஞ்சம் கூடுதலாகவே காணப்படுகிறது.

> அறனும் பொருளும் இன்பமும் மூன்றும்
> ஆற்றும் பெரும நின் செல்வம் (28.15)

என்னும் புறநானூற்று அடிகளில் அறத்தின் முக்கியத்துவத்தை ஓரளவு உணரலாம். இன்னொரு புறப்பாடலில் (31.1 – 2) அறத்தின் தலைமை தெளிவாக விளக்கப்பட்டுள்ளது.

> சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும்
> அறத்துவழிப் படூஉம் தோற்றம் போல

என்ற அடிகள் அந்த உண்மையை வலியுறுத்தும்.

'அறம் குறித்தன்று பொருள் ஆகுதலின்' என்ற இன் னொரு பாடலின் அடியும் (புறம் 362.10) தமிழ்ச் சமூகத்தில் அறம், பொருள், இன்பம் என்ற உறுதிப்பொருள் இலக்கியத் தில் செல்வாக்கு பெற்று வருவதைக் காட்டுவதாகக் கொள்ள லாம். இதைக் கந்தசாமி (1977:37), புறநானூற்றில் கூடுத லான அழுத்தம் பெற்று இக்கொள்கை (உறுதிப் பொருள்) பேசப்பெறுகிறது என்பார்.

'புறநானூற்றுப் பாடலின் திணைப் பாகுபாடும் இந்தக் கருத்துக்கு அரண் செய்வதாகவே உள்ளது. 'புறநானூற்றில் வெட்சிப் பாடல்கள் - 5; கரந்தை - 12; வஞ்சி - 13; நொச்சி -6; தும்பை - 24 என்பன போர்த்திணைக்கு உரிய பாடல் களாம். காஞ்சி-31 இவை நிலையாமையையும் வீரத்தையும் கலந்து பாடுவன. வாகை-81 இவை உள்ளிட்ட பிற செய்தி களைப் பாடுவன. எஞ்சிய 227 பாடல்கள் கொடை பற்றியும் பிறசெய்திகளைப்பாடுவன... நானூறு பாடல் களில் எண்பத்தாறு பாடல்களே போர் பற்றிய துறைகளாக இருக்கலாம்' என்று செயராமன் (1975:311,312) புள்ளி விவரம் கொடுத்துள்ளார். மேலும் அவர்

> வெட்சித் திணை வீரநிலைக் காலத்துக்கு உரியது....
> ...பாடாண் திணைப் பாடல்கள் வீர நிலைக் காலத் துக்கு உரியவை அல்ல. வீர நிலைக் காலத்துக்குப் பிற் பட்ட காலத்துக்கு உரியவை ஆகும் (ப.331).

என்றும் குறிப்பிட்டுள்ளார். இதனுடைய உள்கிடை என்ன? செயராமன் தொல்காப்பியர் சங்க இலக்கியத்துக்கு முந்திய காலத்தவர் என்ற கருத்து உடையவர். ஆனால் தொல் காப்பியத்தில் கூறப்படும் உறுதிப்பொருள் பற்றிய கருத்து களையும் புறத்திணைகளின் பொருள்களையும் கவனித் தால் மாறுபட்ட முடிவுக்கே வரவேண்டியவர்களாக இருக் கிறோம். ஏனென்றால் இந்த மாறுபாட்டுக்குப் பின்புலமாக இலக்கியப் பொருள் மாற்றம், இலக்கியவகை மாற்றம், சமூக மாற்றம் ஆகியவை அடங்கியுள்ளன.

தொல்காப்பிய களவியல் முதல் சூத்திரத்தில்

> இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
> அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்
> காமக்கூட்டம்

என்ற களவுக்கு விளக்கம் தரும்போது மூன்று மாறுபட்ட கருத்துகள் இணைக்கப்படுவதைக் காணலாம். 1) இன்பம், பொருள், அறன் ஆகிய உறுதிப்பொருள் பற்றிய கருத்து என்பது தெளிவு. இங்கு இயல் தலைப்புக்கு ஏற்பமுறை மாற்றிக் கொடுக்கப்பட்டிருக்கிறதே தவிர உறுதிப்பொருள்

இந்த வரிசையில் அமைந்தது என்ற கருத்து அல்ல. ஏனென்றால் செய்யுளியலில் 'அறமுதலாகிய மும்முதற்பொருள்' (102) என்று கூறுவதாலும், பொருளியலில் 'அறக்கழுவுடையன பொருட்பயம் படவரின்' (சூ.22) என்றும் கற்பியலில் 'அறம் புரி சுற்றம்' என்றும் கூறுவதாலும், உறுதிப்பொருளில் அறத்துக்கே முதலிடம் என்பது புலனாகும். 2) அன்பொடு புணர்ந்த ஐந் திணை' என்பது திணை அடிப்படையைச் சுட்டுவது. இதுவே களவியலை அகத்திணை இயலோடு இணைப்பது. 3) 'காமக் கட்டம்' என்பது களவு. இது களவு, கற்பு என்ற இரண்டு கைக்கோளில் ஒன்று. இங்கு நாம் முக்கியமாகக் கவனிக்க வேண்டியது திணை, கைக்கோள் என்ற அக இலக்கிய மரபுகளோடு உறுதிப் பொருளும் இணைத்ததுதான். இதுவே அற இலக்கியம் பிற்காலத்தில் சிறப்பிடம் பெறப்போவதற்குச் சூசகமான குறிப்பு. இது இலக்கிய மாற்றத்தின் பரிணாம வளர்ச்சியைக் காட்டுவது போலவும் அமைந்துள்ளது என்று கருதலாம் என்றாலும் அறம் இங்கு துணையாக மட்டுமே உள்ளது.

இலக்கியப் பொருள் பற்றி அறிந்துகொள்ளவும் புறத்திணை இயலே பயன்படுகிறது. ஏழு புறத்திணைகளில் வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை ஆகிய நான்கு திணைகளே நேரடியாகப் போரோடு தொடர்பு உடையவை. 'புறத்திணையியலில் தும்பைத் திணைவரை போர் குறித்த செய்திகளே அமைய வாகைத்திணையில் மறத்துறை அல்லாத அறத்துறைக்குரிய வெற்றி வீறுகளும் பேசப்படுகின்றன' என்பார் கு.வெ. பாலசுப்பிரமணியன் (1986:47). காஞ்சித்திணை நிலையாமை பற்றி பேசுகிறது. பாடாண் திணை 'விருப்பத்துக்குரிய தலைவரையும், தெய்வத்தையும் புனைந்து போற்றுவதற்கு வாய்ப்பு அளிப்பதாக உள்ளது' என்று கூறி புறத்திணை காட்டும் சமூக வாழ்க்கையைப் பற்றிச் சுருக்கமாக

> வீரநிலைக் காலத்திலிருந்து மாறிவந்த ஒரு சமூக வளர்ச்சியினையும், தெய்வநெறிக் கொள்கைகள், சமய உருவாக்கத்துக்கு அடிப்படையான சடங்குகள், நம்பிக்கைகள்ஆகியன வீரநிலைக்கால முருட்டுத் (உள்ளபடியே - முரட்டு) தன்மையினை இளக்கியுள்ளமையையும் தொல்காப்பியப் புறத்திணை இயல்காட்டுவதாகக் கூறியுள்ளார் (ப.13) பாலசுப்பிரமணியன்.

எனவே, கலித்தொகை, பரிபாடல், புறநானூறு ஆகிய இலக்கியங்களில் காணப்படும் வளர்ச்சியையும் தொல்காப்பியம் அங்கீகரித்து இலக்கணமாக்கியுள்ளதாகக் கருதலாம்.

### 5.7.3 பழமை பாராட்டல்

கலித்தொகையும் பரிபாடலும் சமூக மாற்றம், இலக்கியப் பாடுபொருளில் மாற்றம் ஆகிய இரண்டின் விளைவாக பழமை பாராட்டும் உணர்வையும் புலப்படுத்துகின்றன. அது இரண்டு வகையில் காணப்படுகிறது. ஒன்று நாட்டுணர்வு; இன்னொன்று இலக்கிய உணர்வு. அதாவது பழைய இலக்கியம் பற்றிய உணர்வு. இதை மொழி உணர்வாகவும் கொள்ளலாம்.

#### 5.7.3.1. நாட்டுணர்வு

தமிழ்நாட்டின் ஒரு பகுதியைக் கடல் கொண்டதாகவும் அதை ஈடுசெய்ய சேர, சோழ மன்னர்களின் நாட்டைப் போரிட்டுப் பாண்டிய மன்னன் கைப்பற்றியதாகவும் கலித்தொகையே, (104-1-4) முதலில் குறிப்பிடுகிறது. சங்க காலத்து மூவேந்தர்களும் ஒருவர் நாட்டை இன்னொருவர் கைப்பற்றுவதற்கு நாட்டைக் கடல் கொள்ளுதல் என்ற புதிய காரணம் ஒன்றை இது கற்பிக்கிறது. கடல் கொண்டது பழைய வரலாற்று நிகழ்ச்சியாகவும் இருக்கலாம். மேலும் மன்னர்களின் பெயரும் இங்கு குறிப்பிடப்பட வில்லை. என்றாலும் மண்ணுக்கு மதிப்பு கொடுப்பதை- நாட்டுணர்வைக் காட்டுவதாகக் கொள்ளலாம்.

இந்தச் செய்திக்குக் 'கண்ணும் காதும்' வைத்து இந்திய நாட்டு வரலாற்றோடு இணைத்துப் பிற்காலத்தில் இளங்கோவடிகள் (11.17-22. 'அடியில்தன்னளவு...') விளக்கியுள்ளதைக் கண்டால் காலம் செல்லச் செல்ல முன்னோர்களின் நாட்டுப் பற்று மிகுத்துப் பேசப் படுவது தெளிவாகிறது. தென்னாட்டு அரசனுக்கும் வடநாட்டு அரசர்களுக்கும் இடையே போர் நடை பெற்றதாக இளங்கோ குறிப்பிட்டுள்ளார்.

#### 5.7.3.2. இலக்கிய உணர்வு

தொல்காப்பியர் இலக்கிய வகையையும் நாட்டுத் தலை

வர்களையும் இணைத்துக் காட்டி தேசிய உணர்ச்சியைப் புலப் படுத்துவது ஏழாவது இயலில் விளக்கப்படும்.

கலித்தொகையும் பரிபாடலும் பழைய இலக்கியக் கல்வி ஆய்வு பற்றிக் குறிப்பிடுவது இலக்கிய உணர்வும் மொழி உணர்வும் ஆகும். மேலும் எழுத்து இலக்கியம் ஏற்பட்டுவிட்ட தற்கும் இது ஆதாரமாக அமைகிறது.

இலக்கியம் ஒரு காலத்தில் வாய்மொழிப் பாடல்களாக மட்டும் இருந்து பின்னரே எழுத்துரு பெற்று இலக்கிய உரு வாக்கம் பெற்றிருக்க வேண்டும் என்று முந்திய இயலில் விளக்கப் பட்டது.

நிலன்நாவில் திரிதரூஉம் நீள்மாடக் கூடலார்
புலன் நாவில் பிறந்தசொல் புதிதுண்ணும் பொழு
தன்றோ.

என்ற கலித்தொகையும் (பாலை - 35:17,18) புதிய இலக்கியம் வாய்மொழியாகவும் இயற்றப் பட்டது என்பதற்குச் சாட்சி ஆகும். ஆனால், புதிய இலக்கியம் படைப்பதற்குப் பழைய இலக்கிய அறிவு பயன்படுவதை

... ... ... ... வல்லவர்
செதுமொழி சீத்த செவி செறுவாக
முதுமொழி நீராப் புலனா உழவர்
புதுமொழி கூட்டுண்ணும் புரிசை சூழ் புனலூர

என்ற கலித்தொகை அடிகள் (68;2-5) புதிய இலக்கியத்துக்குப் பழைய இலக்கியம் நீர் என்று கூறுகிறது. இது இலக்கியக் கல்வி ஏற்பட்டு விட்டதையும் இலக்கிய மாற்றம் ஏற்பட்டுவிட்டதை யும் புலப்படுத்துவதாகக் கொள்ளலாம். இலக்கிய வகையிலும் மாற்றம் ஏற்பட்டதால் இலக்கியப் பாரம்பரிய உணர்வு ஏற் பட்டிருக்க வேண்டும் என்றும் ஊகிக்கலாம்.

5.7.3.3 கருத்து மோதல்

பரிபாடலில் மொழி உணர்வின் இன்னொரு வகை காணப் படுகிறது. ஏனைய தொகை நூல்களில் வடமொழியாளர்-

தமிழர் கருத்து மோதல் சுட்டப்படவே இல்லை. தமிழ் இலக்கிய ஆய்வும் குறிப்பிடப்படவில்லை.

... ... ... ... அந்தணாளிர்
நான்மறை குறித்தன்நன்று அருள் ஆகாமையின்
அறம் குறித்தன்று பொருள் ஆகுதலின்

என்ற புறநானூறு (362;8 - 10) போர்வீரம் அறநூல்களில் குறிக்கப்பட வில்லை என்று கூறப்பட்டிருக்கிறதே தவிர கருத்து மாறுபாடு சுட்டப்பட வில்லை. குறிஞ்சிப் பாட்டின் பிற்குறிப்பு ஆரிய அரசன் பிரகதத்தனுக்குத் தமிழ் அறிவுறுத்துவதற்காகப் பாடப்பட்டதாக உள்ளது. ஆனால் பரிபாடலில்தான் வடமொழி அறிஞர்களுக்குப் பொருளதிகாரகருத்தைச் சுருக்கிக் கூறி அதன் பண்பைச் சிறப்பித்துப் பேசுவதைக் காண முடிகிறது.

நான்மறை விரித்து நல்லிசை விளக்கும்
வாய்மொழிப் புலவீர்! கேண்மின் சிறந்தது
... ... ... ... ... ... ... ...
தள்ளாப் பொருள் இயல்பின் தண்டமிழாய வந்திலர்
கொள்ளார் இக்குன்று பயன்

(நான்கு வேதங்களையும் படித்து விளக்கிப் புகழ் பெற்றவர்களே! சிறந்தவற்றைக் கேளுங்கள். காமத்தில் சிறந்தது காதலுடைய காமமே; அன்பு ஒன்றுபட்டு புணரும் புணர்ச்சியே; கற்பு ஒழுக்கம் ஊடலை விடச் சிறந்தது...மகளிர்கள் தம் தலைவரோடு மாறுபட்டு ஊடமாட்டார்கள். இப்படிப்பட்ட குறைவில்லாத பொருள் இலக்கணத்தை உடைய தமிழை ஆராயாத தலைவர் களவொழுக்கத்தை மேற்கொள்ள மாட்டார்)

என்ற அடிகள் (பரி.9.12-16; 23 - 26) இரண்டு உண்மைகளைப் புலப்படுத்துகின்றன. 1) அக இலக்கியத்தின் சாரத்தைக் குறிப்பது; 2) பழைய இலக்கியப் பெருமைகளைப் பாராட்டுவதோடு தமிழ் இலக்கிய ஆய்வைத் தமிழ் ஆய்வாகக் குறிப்பிடுவது.

இன்று பரக்கப் பேசப்படும் 'தமிழ் ஆய்வு' என்பதன் வேர்ச் சொல்லாக 'தமிழ் ஆய்' என்பது முதன்முதலாக இங்குக் கையாளப்பட்டிருப்பது கவனிக்கத் தகுந்தது.கலித்தொகை, பழைய இலக்கியக் கல்வி புதிய இலக்கியம் படைப்பதற்குப் பயன்பட்ட செய்தியைக் குறிப்பிட, பரிபாடல் தமிழ் ஆய்வு என்பது தமிழ் இலக்கிய ஆய்வு-அதுவும் அக இலக்கிய ஆய்வு என்று கூறி அதன்மூலம் தமிழ்மொழியின் பெருமையைப் பிற மொழி அறிஞர்களுக்கு எடுத்துக் காட்டுவதைச் சுட்டுகிறது. இந்தநிலையில் இலக்கிய ஆய்வு ஒரு சமூகத்தில் எப்பொழுது தோன்றும்? இலக்கிய ஆய்வின் பலன் என்ன? என்ற பொதுக் கேள்விகள் எழுகின்றன.

இலக்கிய வளர்ச்சி - பாடுபொருளில் மாற்றம், யாப்பு மாற்றம் அதனால் இலக்கியவகை மாற்றம், இவைகளுக்கெல்லாம் பின்புலமாகச் சமூகமாற்றம் ஏற்படும்போது இலக்கிய ஆராய்ச்சி தோன்றும். அந்த ஆராய்ச்சி இன்னொரு மொழிச் சமூகத்தோடு தொடர்பு ஏற்படும்போது இன்னும் தீவிரம் அடையும். அந்த ஆராய்ச்சியின் ஒரு பலனாக, அந்த இலக்கியக் கல்விக்கு உறுதுணையாக இலக்கணம் உருவாகும். எனவே, மேலே குறிப்பிட்ட இலக்கிய மாற்றம், இலக்கிய ஆய்வு ஆகியவையே தொல்காப்பிய உருவாக்கத்துக்கு உந்து சக்தியாக இருந்திருக்க வேண்டும்.

பழைய இலக்கியக் கல்வி புதிய இலக்கியம் படைக்கப் பயன்படும் என்பதிலும் ஒன்றுக்கு மேற்பட்ட வகை உண்டு. உண்மையிலே புதிய இலக்கியம் படைப்பது ஒருவகை. கம்பன் பழைய இலக்கியக் கல்வியினால் மட்டும் அல்லாமல் தன்னுடைய இலக்கிய ஆற்றலாலும் இராமாயணம் என்று புதிய இலக்கியம் படைத்தான். அப்படி அல்லாமல் பழைய இலக்கியத்தைப் படித்து அந்த இலக்கியப் பொருளையே தான் வாழும் காலத்து பெருவழக்காக இருக்கிற யாப்பில், தன்கால மொழியில் பாடுவது இன்னொரு வகை. இந்த நூற்றாண்டில் கண்ணதாசன் இந்த வகையில் பல பாடல்களைப் பாடியுள்ளார். அதைப் போலவே சங்க மருவிய காலத்து இலக்கியம் என்று கருதப்படு

கிற பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் அக, புற இலக்கிய நூல்கள் இருப்பது சங்க இலக்கியம் பின்வந்த புலவர்களால் படிக்கப் பட்டதன் ஒருவகை விளைவு என்று கருதலாம்.

### 5.7.3.4. பழையபொருளில் புதிய இலக்கியம்

பதினென் கீழ்க்கணக்கு நூல்கள் இலக்கியப் பாடு பொருள் வளர்ச்சியைக் காட்டும் விதமாய் 18 நூல்களில் 11 நூல்கள் அற இலக்கியம், 6 அக இலக்கியம் (ஐந்திணை ஐம்பது, திணை மாலை ஐம்பது, ஐந்திணை எழுபது, திணைமாலை நூற்றைம் பது, கைந்நிலை), ஒன்று புற இலக்கியம் (கார் நாற்பது) இருக் கின்றன. அப்படியானால் அவைகளின் உள்கிடை என்ன?

பதினெண்கீழ்க்கணக்குநூல்கள் சங்க இலக்கிய யாப்பிலி ருந்து வேறுபட்டன. சங்க இலக்கியம் பெரும்பான்மையும் நேரிசை ஆசிரியப்பாவாலும் பதினெண்கீழ்க் கணக்கு வெண்பா வாலும் அமைந்தவை.

> தமிழ் இலக்கிய வரலாற்றில் யாப்பு வடிவங்கட்குத் தனித்ததோர் ஆட்சி உண்டு; கால அடிப்படையிலும் இலக்கிய வகை அடிப்படையிலும் இந்த ஆட்சி நிலை பெற்றுவந்துளது. ஆசிரியம் – திணை இலக்கியம். வெண்பா–நீதி இலக்கியம். கட்டளைக் கலித்துறை- கோவை இலக்கியம்...இவ்வாறு பெரும்பான்மை பற்றி பொருளுக்கேற்ற இலக்கிய வடிவங்களை வகைப்படுத் திக் கூறலாம். ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு வடி வம் மேலோங்கி இருந்திருக்கிறது.

என்ற தமிழண்ணலின் வாசகம் (1975:115) இங்கு நினைவு கூரத் தகுந்தது. எனவே,மேலே குறிப்பிட்ட ஐந்திணை ஐம்பது போன்ற அக, புற இலக்கியங்கள் அப்பொழுது அந்தக் காலத் தில் பரவலாக இருந்த வெண்பாயாப்பில் (சங்கம்மருவிய காலத் தில்) இயற்றப்பட்டது என்பது தெளிவாகிறது. அப்படியானால் சங்க இலக்கிய கருத்துகளைப் புதிய யாப்பில் பாடவேண்டிய அவசியம் என்ன?

இலக்கிய மரபும் இலக்கிய வகையும் மாறுகிறபொழுது பழைய இலக்கிய கருத்துகளைத் தங்கள் காலத்தில் பெரும் பான்மையாக வழங்கும் வடிவத்தில் அந்தக் கால நடையில் எழுதுவது இன்றுஉலகம் எங்கும் காணப்படும் இலக்கிய முயற்சி

களில் ஒன்று. எனவே, காலமும், மரபும், யாப்பும், மொழியும் மாறிவிட்டநிலையில், பழமைபோற்றும் வகையில் இந்த அகப் புற இலக்கியங்கள் தோன்றி யிருக்க வேண்டும் என்று கருது வதற்கு இடம் தருகிறது. ஆனால், சங்க காலத்தை ஒட்டியே இந்த முயற்சி மேற்கொள்ளப்பட்டுவிட்டது என்பதுதான் ஆச்சரியமாக இருக்கிறது. மேலும், பரிபாடல் அகத்திணை இலக்கியத்தைத் தமிழ் என்று குறிப்பிட்டது போல இவை களும் அக இலக்கியங்களைத் 'தமிழ்' என்றே குறிப்பிடுகின் றன. அத்தோடு மொழி உணர்வு பற்றியும் அவை மறை முகமாகக் குறிப்பிடுகின்றன.

ஐந்திணை ஐம்பதும் ஆர்வத்தின் ஓதாதார்
செந்தமிழ் சேராதவர்

என்பது ஐந்திணை ஐம்பதின் பாயிரம் (3.4). இங்கு பரிபாட லின் செல்வாக்குத் தெளிவாகத் தெரிகிறது. ஒரு இலக்கிய வகையை மொழியின் பெயரால் குறிப்பிடுவதற்கும் வற்புறுத்து வதற்கும் காரணம் என்ன? இலக்கியத்திலும் மொழியிலும் புதுமையைத் தேடிச் செல்லும் மக்களின் கவனத்தைப் பழைய இலக்கியங்களில் ஈர்ப்பதற்குக் கையாளப்படும் ஒரு வழி என்றே கருதவேண்டியிருக்கிறது. ஐந்திணை ஐம்பதின் பாயிரம் உடன்பாட்டு நிலையில் இந்தக் கருத்தை விளக்குவ தாகக் கொள்ளலாம். திணைமாலை நூற்றம்பதின் பாயிரம் அந்த இலக்கிய வகைக்கு எதிர்ப்பு இருந்ததைச் சமாளிக்கும் பொருட்டு எழுதப்பட்டதாகக் குறிப்பிடுகிறது.

முனிந்தார் முனிவு ஒழியச் செய்யுட்கண் முத்து
கனிந்தார் களவியற் கொள்கைக்கு-அணிந்தார்
இணைமாலை ஈடிலா இன்தமிழால் யாத்த
திணைமாலை கைவரத் தேர்ந்து

என்பதே அதன் பாயிரம். இங்கு ஒரு சிலர் அற இலக்கியத் தின் மேல் மோகங்கொண்டு பழைய அக இலக்கியத்தைப் பழித்துக் கூறியிருக்கவேண்டும். எனவே, 'முனிந்தார் முனிவு ஒழிய' (கோபப்பட்டவர்களின் கோபம் நீங்க) என்று கூறியது ஒரு இலக்கியப் புலவன் என்ற முறையில் புதுமை மோகத்

தால் பழமையைப் புறக்கணிக்கும் முயற்சிக்கு உறுதுணையாக இல்லாமல் அதை முறியடிக்கவே செயல்பட்டுள்ளான் என்பதைக் காட்டுகிறது. 'புதிய கொள்கையின் ஆர்வத்தால் எழுந்த மறுப்புக்கு ஏதோ ஒரு வகையில் எதிர்ப்பு தெரிவிப்பதாகவும் இந்த அகத்திணை இலக்கிய நூல்கள் பழைய மரபை நிலை நிறுத்தவும் பழைய மரபைப் புரிந்துகொள்ளவும் உதவும் வகையில் அமைந்துள்ளன என்பார் சுவலபில்[16]. (Zvelebil, 1974: 118).

**5.7.3.5. இலக்கணம்**

இந்த நிலையில் பார்க்கும் போது தொல்காப்பியப் பொருளதிகாரம் அக, புறத்திணை இலக்கிய மரபுகள் மறைந்து வரும் நிலையில் அந்த இலக்கியங்களைப் படிக்கத் துணை செய்வதற்காக இயற்றப்பட்ட இலக்கணம் என்று கருதலாம் போலத் தோன்றுகிறது. இதற்குத் தொல்காப்பியத்துக்குள் ஏதாவது சான்று இருக்கிறதா என்று பார்க்கலாம்.

முன்னரே குறிப்பிட்டபடி தொல்காப்பிய உரியியலில் 120 அரிய சொற்களுக்குப் பொருள் கூறியுள்ளார். அப்படி பொருள் கூறும் போது 'பயிலாதவற்றைப் பயின்றவற்றைச் சார்த்தி' என்றுப் குறிப்பிட்டு புழக்கத்தில் இல்லாத சொற்களுக்குப் புழக்கத்தில் இருக்கும் சொற்கள் மூலம் பொருள் கூறியுள்ளதாகவும் விளக்கியுள்ளார். எனவே, அரிய சொற்களுக்குத் தெரிந்த சொல்மூலம் பொருள் கூறுவது என்பது இலக்கியத்தைப் படிக்கத்துணை செய்வதற்குத்தான் என்று ஆகிவிடுகிறது. எனவேதான் எழுத்ததிகாரத்திலும் செய்யுள் பற்றிய பல குறிப்புகளைச் சேர்த்துப் பேசியுள்ளார். இவைகளின் மூலமே எழுத்ததிகாரமும் சொல்லதிகாரமும் பொருளதிகாரத்திற்குத் துணை நிற்பதாக அமைக்கப்பட்டது என்று எண்ணத்தோன்றுகிறது. கலித்தொகையில் குறிப்பிட்டபடி 'முதுமொழி நீராப்' பயன்பட, பரிபாடலில் குறிப்பிட்டபடி 'தமிழ் ஆய்வு' நடைபெற்றபோது தொல்காப்பியம் இயற்றப்பட்டிருக்கலாம்.

அதே சமயத்தில் பரிபாடலில் குறிப்பிட்டபடி தொல்காப்பியத்தில் தமிழ் மொழி வடமொழி ஒற்றுமையும் வேற்றுமையும் வடமொழியின் தனித்தன்மையும் எடுத்துக்காட்டியுள்ளதும் மொழிஉணர்வின் ஒரு கூறைப் பிரதிபலிப்பதாகக் கொள்ளலாம் (விளக்கத்துக்கு ஏழாவது இயல் பார்க்வும்).

பொதுவாக வடமொழி-தமிழ் கருத்து மோதலில் தொல்காப்பியர் இறங்கவில்லை. மாறாக விஞ்ஞானிக்குரிய நேர்மையைக் கடைப்பிடித்து, அன்றைய தமிழ்ச் சமுதாய நிலையைப் படம் பிடித்துக்காட்டியுள்ளது ஏழாவது இயலில் விளக்கப்படும். இங்கு இலக்கண உருவாக்கத்தைப் பொறுத்தவரையில் தமிழ் மொழியில், தமிழ் இலக்கிய மரபில் ஏற்பட்ட மாற்றங்களை உணர்ந்து, அவற்றை ஒட்டி, பழைய இலக்கிய மரபுகளைப் பாதுகாக்கும் முறையில் அவர்கால மொழிச் சூழலை ஒட்டி, வடமொழி-தமிழ் வேறுபாடுகளைச் சுட்டி, இலக்கணம் இயற்றியதன் மூலம் தன் மொழிச் சமூகத்துக்குத் தொல்காப்பியர் பெருமை சேர்த்துவிட்டார் எனலாம்.

தொல்காப்பியத்தைப் பார்க்கும்போது அவர் காலத்தில் பலவித நூலாக்க முயற்சிகள் நடைபெற்றதும், பலதுறை அறிஞர்கள் இருந்திருக்கிறார்கள் என்ற உண்மையும் புலனாகின்றன. இவை முன்னரே விளக்கப்பட்டுள்ளன. இந்த நிலையில், தொல்காப்பியம் என்ற மொழி அறிவியல் (மொழியியல்) -இலக்கிய அறிவியல் (இலக்கிய வியல்) எழுந்தது என்பது இயல்பாக ஏற்றுக்கொள்ளக் கூடியதே. அதாவது தமிழ்ச் சமூகத்தில் பரிபாடல் கோடிட்டுக் காட்டியது போல தமிழ் ஆராய்ச்சி முளைத்து பெரிய மரமாக வளர்ந்து விட்டதையே தொல்காப்பியம் நேரடியாகவும் குறிப்பாகவும் காட்டுகிறது.

### 5.7.4. சமணச் சார்பு

இங்கு இன்னொரு கருத்தையும் சுட்டிக் காட்டவேண்டும். தொல்காப்பியர் சமணர் என்ற கருத்தும் பரவலாகக் காணப்படுகிறது. இங்கு அறவாணன் (1974) கூறும் கருத்துகள் அறியத் தகுந்தவை.பன்னிரண்டு காரணங்களை எடுத்துக் காட்டி அவை

> தொல்காப்பியரைச் சைனர் என்று உய்த்துணர வைக்கின்றன; ஆனால் உறுதிப்படுத்திவிட வில்லை. காரணங்கள் பின் வருமாறு (ப. 147)

என்று ஏழு காரணங்களைக் குறிப்பிட்டு,

> இவையெல்லாம் தொல்காப்பியரின் வைதீகச் சார்பினை எடுத்துரைக்க வல்லன; எனினும் பன்னூறு ஆண்டுகளுக்கு முன்னர் எழுதப்பட்ட முதனூலில் சைனச் சார்பான கருத்துகள் இடம் பெற்றுள்ளன என்பதை முற்றும் மறுத்தற்கு இல்லை; மறுத்தற்கு இயலாது. (ப.148)... கி.மு. சில நூற்றாண்டுகளுக்கு முற்பட்ட தொல்காப்பியர் காலத்திலேயே அரும் பெரும் நூலில் இடம் பெறுகிற அளவிற்குச் சைனக்கோட்பாடுகள் செல்வாக்குப் பெற்றிருந்தன என்பதைத் தொல்காப்பியம் படம் பிடித்து வைத்திருக்கிறது என்ற அளவில் தொல்காப்பியம் சைனத்தோடு நெருக்கம் உடையது என்று கொள்ளலாம் (ப.149)

என்று கடைசியாக முடிப்பார் அவர்.

அற இலக்கியத்துக்கும், சமணருக்கும் உள்ள நெருங்கிய தொடர்பும் தொல்காப்பியத்தை மொழி அறமும் இலக்கிய அறமும் கூறிய நூலாக ஒரு நோக்கில் கருதலாம் என்ற பார்வையும் தொல்காப்பியருக்கும் சமணத்துக்கும் ஏதோ ஒரு வகையில் தொடர்பு இருந்திருக்க வேண்டும் என்பதைப் புலப்படுத்துகிறது. மேலும் தொல்காப்பியர் இலக்கியத்தை செய்யுளை உறுப்புகளாகப் பலவகை உறுப்புகளின் சேர்க்கை (Organic theory) கருதுவதற்குச் சமண சமயக்கோட்பாடே காரணம் என்று கைலாசபதி (1968:123) கருதுகிறார். எனவே, இலக்கண உருவாக்கத்துக்கு அந்தத்தொடர்புதான் காரணமாக இருந்திருக்குமோ என்ற எண்ணம்எழத்தான் செய்கிறது. இந்த சந்தேகம் தீர தமிழ் ஆராய்ச்சி பல நோக்கில் விரிவாகவும் தீவிரமாகவும் செய்யப்பட வேண்டும்.

---

# 6. சங்ககால மொழிநிலையும் உணர்வும்

## 6.0. முன்னுரை

சங்க கால மொழிவளர்ச்சி பற்றிய இன்றைய அறிஞர்களின் மொழி உணர்வு, மொழிவளர்ச்சி நிலைகள் பற்றி முந்தைய இயல்களில் ஆங்காங்கே சுட்டிக்காட்டப்பட்டன இனி, சங்ககால மக்களின் மொழி உணர்வு எப்படி இலக்கியங்களில் வெளிப் பட்டிருக்கிறது என்று பார்ப்போம்.

சங்ககால மக்களின் மொழி உணர்வைப் பொதுவாகக் கிளைமொழி (திசைச் சொற்கள்), நிலைமொழி (இயற்சொற் கள்), பிற மொழிகள் ஆகிய தலைப்புகளில் பார்க்கலாம். கிளை மொழி, நிலைமொழி பற்றிய அன்றைய மதிப்பீடாக ஒன்றும் கிடைக்கவில்லை. கிருஷ்ணன் (1984) தமிழோடு வரும் அடையை அடிப்படையாகக் கொண்டு சில மொழி உணர்வுகளைச் சுட்டிக் காட்டியுள்ளார். ஆனால், சங்ககால மொழிச் சூழலைப் பற்றி சரியாக ஆராயாததால் மொழி உணர்வை மிகைப்படுத்திக் கூறியுள்ளார் என்றே நினைக்கவேண்டியிருக்கிறது. எனவே, மொழி உணர்வு பற்றி தெரிந்து கொள்ளுமுன் மொழிநிலை, கிளைமொழிநிலை, நிலைமொழி நிலை, பிற மொழிநிலை ஆகியவற்றையும், பிற மொழித்தாக்கத்தால் ஏற்பட்ட மொழி மாற்றம் பற்றியும், அவைகள் மூலம் புலப்படும் மொழி உணர்வு களையும் அறிந்து கொள்ள முயலுவோம்.

## 6.1. தமிழ் காட்டும் உணர்வு

முதலில் 'தமிழ்' என்ற சொல்லின் பொருள் அடியாகவும் அதை ஒட்டிப் பிறந்த சொற்கள் அடியாகவும் புலப்படும் உணர்வு குறிப்பிடத்தகுந்தது.

கிருஷ்ணன் (1984:77) 'தமிழ்' என்ற சொல் மொழி, நாடு, மக்கள் என்ற மூன்று பொருளில் சங்க இலக்கியத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளதை எடுத்துக்காட்டியுள்ளார்.

மொழி: 'தமிழ் கெழு கூடல்' – புறம். 58:73
'நற்றமிழ் முழுதறிதல்' – புறம். 50:10
நாடு: 'தண்டமிழ்க் கிழவர்' – புறம். 35:3
'தண்டமிழ்ப் பொதுவெனப் பொறாஅன்'–புறம். 51:5
'தமிழ் கெழு மூவர்' அகம். 31:14
மக்கள்: 'தமிழ் தலைமயங்கிய தலையாலங்கானம்'-(புறம் 19:2
(சிறப்பாகப் படை) 'கொண்டி மிகைபடத் தண்டமிழ் செறித்து' பதிற்.63:9

ஆனால் இலக்கிய வழக்குகளை ஊன்றிக் கவனித்தால் பகு பதமாகவும் (தமிழகம் – புறம்: 168:18) தொடர் மொழியா கவும் (தண்டமிழ் வரைப்பகம்–புறம். 198:12: தமிழ் நாட்டகம் – பரி.திர.8) நாட்டைக் குறிப்பதற்கும் மக்களைக் குறிப்பதற் கும் (தண்டமிழ்க்குடிகள்-பரி.திர.1) தமிழடியாகப் பிறந்த சொற்கள் கையாளப் பட்டிருப்பதும், இடைக்காலத்தில் மக்களைக் குறிக்க இன்னொரு பகுபதச் சொல் (தமிழன் – அப்பர் தேவாரம்) பயன்படுத்தப் பட்டிருப்பதையும் காண லாம். இதனுடைய உள்கிடை என்ன?

பரிபாடலில் (9.25), தமிழ் என்பது தமிழ் இலக்கியத்தை யும்-குறிப்பாக அக இலக்கியத்தையும் குறிப்பதற்குக் கையாளப்பட்டுள்ளதை 'மொழி' என்ற பொருளின் வளர்ச்சி யாகக் கொள்ளலாம்.

இங்கு பலபொருள் ஒரு மொழியாக இருந்த சொல்லை, 'மொழி' என்னும் பொருளை மட்டும் குறிக்கத் தக்கவைத்துக் கொண்டு பிற இரண்டு பொருளையும் சுட்ட ஆக்கச் சொற் களோ அல்லது தொகைச் சொற்களோ உண்டாக்கப்பட்டிருக் கின்றன என்பது தெளிவாகிறது. இதன் பொருள் என்ன?

தென்னகத்துப் பிறமொழிகளைப் பொறுத்த வரையில் மொழியையும் நாட்டையும் குறிக்க, முதலில் பயன்பட்ட சொல்லை நாட்டைக் குறிக்கவும், வேறுதனிச் சொற்களை மொழியைக் குறிக்கவும் ஆக்கிக் கொண்டதைக் காணமுடி கிறது.'ஆந்திரா' என்பது மொழியையும் நாட்டையும் குறித்தது பின்னர், நாட்டுக்கே ஆகி, மொழியைக் குறிக்கத் தெலுங்கு என்ற சொல் அமைத்துக் கொள்ளப்பட்டது; 'கருநாடகம்' என்ற சொல் முதலில் நாட்டையும் மொழியையும் குறித்தது பின்னால் நாட்டைக் குறிக்கும் சொல்லாக மாறி மொழியைக் குறிக்கும் சொல்லாகக் 'கன்னடம்' அமைந்தது. அப்படியே 'கேரளம்' என்ற சொல் நாட்டையும் மொழியையும் குறித் துப் பின் நாட்டுக்கு மட்டும் ஆகி, மொழிக்கு 'மலையாளம்' என்ற தனிச்சொல் பிற்காலத்தில் உண்டானது.

இங்கெல்லாம் பொதுச் சொல்லை நாட்டைக் குறிக்கத்தக்க வைத்துக் கொண்டு, மொழியைக் குறிக்கப் புதிய சொல் உண்டாக்கிக் கொள்ளப்பட்டிருக்கிறது. ஆனால், தமிழில் பொதுச் சொல்லை மொழியைக் குறிக்கத் தக்கவைத்துக் கொண்டு, நாட்டையும், மக்களையும் குறிக்க ஆக்கச் சொற் கள்/ தொகைச்சொற்கள் உண்டாக்கிக் கொள்ளப்பட்டிருக் கின்றன.

புதியசொல் புதிய பொருளை உணர்த்தவே பயன்படும் என்ற உண்மையை ஒட்டிப் பார்க்கும் போது தமிழகத்தில் நாட்டுணர்வும் மக்கள் உணர்வும் பிற்காலத்திலேயே ஏற்பட, பிறமொழிகளில் மொழி உணர்வு பிற்காலத்தில் ஏற்பட்டிருக்க வேண்டும் என்றாகிறது.

கிருஷ்ணன் (1984:95, 'ஒரு நாட்டினத்தை/ நாட்டை அறிமுகப்படுத்துவதற்கு மொழியையே சிறப்புக் குறியீடாகப் பழந்தமிழர் கொண்டிருந்தனர் என்பது புலனாகிறது' என்று விளக்கியுள்ளதாலும் இக்கருத்து உறுதியாகிறது.அப்படியானால் இந்தவகை மொழிவழிப்பட்ட உணர்ச்சி சங்க காலத்துக்குள் காலத்தால் கொஞ்சம் பிற்பட்டது என்றே நினைக்கவேண்டி யிருக்கிறது.

பின், சங்ககாலத்தில் 'தமிழ்' என்பது இலக்கியத்தையும் – குறிப்பாக அக இலக்கியத்தையும் குறித்தது என்பது முன் இயலில் விளக்கப்பட்டது. வேதம், வேதத்தோடு சமயச்சடங்குகள் போன்று ஆரியவாழ்க்கையை எதிர்த்துத் தமிழையும், தமிழிலக்கியத்தையும் சிறப்பித்துக் கூறும் முயற்சியின் விளைவோ இது என்று கருதவேண்டியிருக்கிறது. அதேசமயத்தில் தங்களின் தனித்தன்மையைக் குறிக்க மொழிப்பெயரைப் பயன்படுத்தியதும் கவனிக்கத் தகுந்தது.

## 6.2. கிளைமொழிகள்

சங்க இலக்கிய மொழி அமைப்பில் உறழ்ச்சி ஓரளவு அதிகமாகவே காணப்படுகிறது (சண்முகம்,1971இ). உலகு-உலகம் இன்பு - இன்பம்; ஆன்றோர்-சான்றோர்; நிலை இ - நிலைத்து போன்று மொழிஅமைப்பின் பலநிலைகளிலும் அந்த உறழ்ச்சியைப் பார்க்கலாம். அந்த உறழ்ச்சியின் தன்மை பற்றி விரிவாக ஆராயப்படவேண்டும். மேலும், அந்த உறழ்ச்சிகளைப் புலவர்களின் வட்டாரம் - சமூகம் பற்றித் தெரியும் செய்திகளை இணைத்து வட்டாரவழக்கு, சமூகவழக்கு ஆகியவைகளை உய்த்துணர முடியுமா என்றும் பார்க்க வேண்டும். அந்த நிலையில் இங்கு முயற்சி மேற்கொள்ளப்படவில்லை. மாறாக, சங்க இலக்கியங்களில் காணப்படும் பெரும்பான்மை, சிறுபான்மை வழக்குகளை (இவையும் உள்ளுணர்வின் அடிப்படையில் செய்யப்படுகிறதே அன்றிமுழுவதும் புள்ளியியல் அடிப்படையில் செய்யப்படவில்லை) ஒப்பிலக்கண நோக்கோடும், வரலாற்று நோக்கோடும் ஆராய்கிறபோது சில உண்மைகள் புலப்படத்தான் செய்கின்றன. இந்த அடிப்படையில் 1. பேச்சு வழக்கு, 2. பெரும்பான்மையான வழக்கு- நிலைமொழி வழக்கு (இயற்சொற்கள்), 3. சிறுபான்மை வழக்கு, தொன்மை வழக்கு, 4. பிற்கால வழக்குகளுக்குத்தோற்றுவாயாக அமைந்த வழக்கு என்று நான்கு வகையாகப் பிரிக்கலாம்.

### 6.2.1. பேச்சு வழக்கு

வரலாற்று நோக்கில் பார்க்கும்போது சங்க இலக்கிய

வழக்காக இல்லாமல் அதே சமயத்தில் பிற்கால இலக்கியங்களில் பயிலப்பட்டு இருந்து பழமையானவைகளாகக் கருதத் தகுந்தவைகளே இலக்கிய வழக்கில் ஏறவில்லை என்பதற்காகப் பேச்சுவழக்கு என்று இங்குக் குறிப்பிடப்படுகின்றன. இவை சங்ககாலப் பேச்சுமொழி வழக்கு முழுமையும் இலக்கியம் பிரதிபலிக்கவில்லை என்பதைப் புலப்படுத்துகின்றன.

ஒரு மொழிக்குடும்பத்திலுள்ள இனச் சொற்களைத் (Cognates) தொகுக்கும்போது ஒரு மொழியின் மிகப்பழைங் சொல் வடிவங்களையே தொகுத்தாலும், மாறுபட்ட வடிவங்கள் பிற்காலத்தில் இருந்தால் அவைகளையும் சுட்டிக் காட்டி வார்கள். அதே சமயத்தில் ஒப்புநோக்கில் பார்த்தே மூலவடிவத்தை-தொல்வடிவத்தை (proto-form) நிர்ணயிப்பார்கள். அப்பொழுது சில இடங்களில் பிற்கால வடிவம் பழையவடிவமாக இருப்பதை உணர்ந்த பிறகே ஒப்பிலக்கண ஆராய்ச்சியாளர்கள் கிளைமொழி ஆராய்ச்சியில் ஈடுபட்டார்கள். இந்த நோக்கில் சங்க இலக்கிய வழக்குகளில் மாறுபட்டு, அதே சமயத்தில் பிற்கால வடிவங்களோடு ஒத்திருக்கின்ற பழைய வடிவங்களையே சங்கத் தமிழில் பேச்சுவழக்குகளாக இங்குக் காட்டப்படுகின்றன.

1. சொல்லின் நடுவில் இரண்டு உயிர்களுக்கிடையே யகர மெய் (-ய்) சங்க காலத்தில் காணப்பட தொல்திராவிடத்திலும், இடைக்காலத்திலும் இன்றைய பேச்சு வழக்கிலும் சகர மெய் (-ச்)வழங்குவதால், சங்க காலத்திலும் பேச்சு வழக்கில் -ச்- என்பது வழங்கியிருக்க வேண்டும். எனவே, சங்க இலக்கிய மொழியில் பேச்சுவழக்கில் யகரமும் சகரமும் என இரண்டுவகை வழக்குகள் இருந்தனவாகக் கொள்ள வேண்டும்.

| தொல் வடிவம் | சங்கத் தமிழ் | இடைக்காலத் தமிழ்/இன்றைய பேச்சு வழக்கு | DEDR | பிறதிராவிட மொழி வழக்கு |
|---|---|---|---|---|
| *உசிர் | உயிர் | உசிர் | 647 | உசிர் |
| *மசிர் | மயிர் | மசிர் | 4707 | மசிர்/மகிர் |
| *பெசர் | பெயர் | பேர் | 441D | பெசர் |

2. முன்னிலைப்பன்மை

முன்னிலைப் பன்மை வடிவமாகத் தொல்காப்பியர் **நீயிர்** என்று கூறுவதற்கு ஏற்ப சங்க இலக்கியங்களிலும் **நீயிர்** அதன் திரிந்த வடிவமாகிய **நீர்** ஆகிய இரண்டுமே காணப்படுகின்றன. தேவாரத்தில் நீங்கள் (*நீம்+கள்) என்ற இரட்டைப் பன்மை வடிவம் காணப்படுவதும் நன்னூலார் *நீவிர் (நீம்+இர்) என்ற வடிவத்தைக் குறிப்பிடுவதும் சங்க காலத்தில் *நீம் என்ற வடிவம் பேச்சுவழக்காக வழங்கியிருக்க வேண்டும் என்று ஊகிக்க இடமளிக்கிறது. தொல் திராவிடத்திலும் *நீம் என்ற வடிவமே பன்மைக்கு உரியதாக இருந்ததும் (சண்முகம்; 1975; 189) சங்க காலத்தில் **நீம்** என்பது பேச்சு வழக்காக இருந்திருக்க வேண்டும் என்றகருத்தை உறுதிசெய்யப் பயன்படுகிறது. ஏனென்றால் பழைய வழக்கு ஒரு காலத்தில் வழங்கிமறைந்த பிறகு பிற்பட்ட காலத்தில் வழங்கியிருக்கவே முடியாது. சங்க காலத்தில் பேச்சு வழக்காகமட்டும் இருந்தது இடைக் காலத்தில் இலக்கிய வழக்காக மாறிவிட்டது என்று கூறினால் தான் வரலாற்று முறைப்படி சரியாக இருக்கும்.

| | | | | |
|---|---|---|---|---|
| *நீம் | நீயிர்/ | நீங்கள் | | |
| | நீர்/ | *நீம்+கள் | 3688 | நீம் |

3. சங்க காலத்தில் பெயர்ச்சொற்களில் **-வன்** என்பது ஆண் பால் உணர்த்தும் ஒட்டாகப் பயன்படுத்தப்பட்டது. முதுவன் (முதுவர் என்று குறளில் 715.1 இருப்பதால் அதற்கு இணை யான ஆண்பால்படைத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது) சிறுவன் போன்ற சொற்களில் இந்த விகுதியைக் காணலாம். ஆனால் பெரியாழ்வார் திருமொழியில் கிறுக்கன் என்ற சொல் பயிலப் பட்டுள்ளது (இன்று கிறுக்கு என்ற அடிச்சொல் பயன்படுத்தப் படுவதால் கிறுக்கு+அன் என்று வருணனை நிலையில் விளக் கலாம் என்றாலும் வரலாற்று நிலையில் கிறு+க்கன் என்றே கொள்ளவேண்டும்). மலையாளம் உள்ளிட்டபிற திராவிடங் களில் **-க்கன்** என்ற ஒட்டு காணப்படுவதால் தொல் திரா விடத்தில் **க்கன்** என்ற ஒரு ஒட்டும் ஆண்பாலுக்குரியதாகக் கருதப்படுகிறது (சண்முகம், 1971ஆ; 109). எனவே, அந்த ஒட்டு

சங்க காலத்தில் மறைந்து இடைக்காலத்தில் தோன்றியது என்று கொள்வது வரலாற்று நெறிக்கு மாறுபடுவதால், சங்க காலத்திலேயே பேச்சு வழக்கில் வழங்கியிருக்கவேண்டும் என்று கொள்ள வேண்டும்.

4. சொற்களஞ்சியத்தைப் பொறுத்த வரையில் சகரத்தை முதலாக உடைய சொற்கள் தொல் திராவிடத்தில் வழங்கியிருக்க வேண்டும் என்று ஊகிக்க முடிகிறது. ஆனால், சங்க இலக்கியத்தில் 61 சொற்களே கையாளப்பட்டுள்ளன. (சண்முகம் 1971 அ:34) மேலும், பல சொற்கள் இடைக்கால இலக்கியங்களில் பயின்றுவந்துள்ளன. சகரத்தை முதலாக உடைய சொற்களுக்குப் பதிலாக வேறு சொற்கள் சங்க இலக்கிய வழக்கில் இருந்திருப்பதால், திசைச் சொற்களாகப் பேச்சு வழக்கில் மட்டும் வழங்கிவந்திருக்க வேண்டும். (எ-டு. சரக்கு—பண்டம், சங்கு — வளை, சக்கை — பலா, சக்கை — கோது.)

இப்படிப் பேச்சு வழக்காக ஒரு கிளைமொழி சங்க காலத்தில் இருந்திருக்கவேண்டும் என்று வரலாற்று மொழியியல் புலப்படுத்துகிறது.

### 6.2.2. நிலை மொழி வழக்கு

சங்க இலக்கியங்களில் காணப்படும் வழக்குகளை ஊன்றிக் கவனித்தால், பெரும்பான்மை வழக்கு, சிறுபான்மை வழக்கு என்று பிரித்துப் பார்க்க முடியும். உதாரணமாக நியதிப் பொருளைக் குறிப்பதற்குச் செயின் என்ற வாய்பாட்டு வினை எச்சமே பெரும்பான்மை. செய்தால் என்ற வாய்பாடு சிறுபான்மையே. எனவே, பெரும்பான்மை வழக்கு சங்ககால நிலைமொழி வழக்கு இயற்சொற்கள் என்று கருதுவதே பொருத்தமாக இருக்கும்.

சிறுபான்மை வழக்கை வரலாற்று நோக்கில் பார்க்கும் போது இரண்டுவகைகளாகப் பிரிக்கலாம். ஒன்று: பிற்காலத்தில் இலக்கிய வழக்கிலிருந்தும் பேச்சு வழக்கிலிருந்தும் மறைந்தவை. இன்னொன்று பிற்காலத்தில் பெரும்பான்மையான

வழக்குகளாக மாறியவை. உதாரணமாக **ஒன்பது** என்ற எண்ணுப் பெயரைக் குறிக்கத் **தொண்டு** என்பது (தொல் செய்.97)சிறுபான்மையான வழக்காக இருந்து இடைக்காலத்தில் மறைந்து விட்டது. ஆகவே, ஒன்பது என்பது சங்ககால நிலை மொழி வழக்கு என்றும் தொண்டு என்பது சங்க காலத்துக்கு முந்திய வழக்கு – அதாவது தொல்வழக்கு என்றும் கொள்ள வேண்டும். அதே சமயத்தில் சங்க இலக்கியத்தில் இன்னொரு வகையான சிறுபான்மை வழக்கும் காணப்படுகிறது. யாகாரத்தை முதலாக உடைய யாறு, யாடு, யாமை போன்ற சொற்கள் சங்க இலக்கியங்களில் பெரும்பான்மை வழக்காகவும். அவைகளே ஆகாரம் பெற்று முறையே ஆறு, ஆடு, ஆமை என்று வழங்கிச் சிறுபான்மையாகவும் காணப்படுகின்றன. ஆனால், ஆகாரத்தை முதலாக உடைய சொற்களே இடைக்காலத்தில் பெரும்பான்மையாகக் காணப்படுகின்றன. எனவே, இடைக் கால நிலை மொழிக்கு ஆதாரமான ஒரு கிளைமொழி-தொல் இடைக்காலக் கிளைமொழி (Proto-Middle Tamil) ஒன்றும் சங்க காலத் திசைச் சொற்களாக வழங்கியிருக்க வேண்டும் என்று கொள்ளலாம். எனவே, சிறுபான்மை வழக்குகளை 1) தொல்வழக்கு, 2) தொல் இடைக்காலத் தமிழ் வழக்கு என்று இரண்டு வகைப்படுகிறது என்பது புலனாகிறது.

### 6.2.3. தொல் வழக்கு

1) மேலே குறிப்பிட்ட தொண்டு என்ற சொல் ஒன்பதைக் குறிப்பதற்குப் பயன்படுவது; தமிழில் தொண்ணூறு, தொள்ளாயிரம் என்ற சொற்களில் தொள் – என்ற அடிச்சொல் காணப்படுவதாலும், அந்த அடிச்சொல் பிற திராவிட மொழிகளிலும் நூறு, ஆயிரம் ஆகியவற்றோடு சேர்ந்து காணப்படுவதாலும் அந்த அடிச்சொல்லே தொல்திராவிடத்திலும் இருந்திருக்க வேண்டும் என்று கருதவேண்டியுள்ளது. ஆனால், தனிச்சொல்லாகத் தமிழில் மட்டுமே காணப்படுகிறது. எனவே, அருகிய வழக்கு என்பதிலும் தொல் வழக்கு என்பதிலும் சந்தேகமே இல்லை.

2) நான்கு என்ற எண்ணுப்பெயர் நால்கு என்ற வடிவத்தோடு அகநானூற்றில் (104:6) ஒரு தடவையும் பத்துப்பாட்டில்

(4.489) ஒரு தடவையும் வந்துள்ளதால் சிறுபான்மை வழக்காக் கொள்ளவேண்டும். இந்த வடிவம் பிற்கால இலக்கியத்தில் காணப்படாததாலும் கன்னடம், தெலுங்கு, கொண்டா, கூயி, கதபா, குறுக் ஆகிய பிற திராவிட மொழிகளில் காணப்படுவதாலும் (DEDR.3655) தொல்வழக்காகவே கொள்ளவேண்டும்.

3) மகர ஈற்று அஃறிணைப் பெயர்ச் சொற்கள் வேற்றுமை உருபுகளுக்கு முன்னால்-(அ)த்துச் சாரியை ஏற்று வருவது கட்டாயம் என்றும் மூன்றாம் வேற்றுமையில் மட்டும் உறழ்ச்சியாக வரும் என்றும் மேலே குறிப்பிடப்பட்டது. ஆனால், சங்க இலக்கியங்களில் நான்காம் வேற்றுமை உருபுக்கு முன்னரும் அந்த உறழ்ச்சி காணப்படுவதும், அது சிறுபான்மையாக இருப்பதும் குறிப்பிடத் தகுந்தது. இந்த வழக்கு இடைக்காலத்தில் மறைந்து விட்டது. அதே சமயத்தில் குடகு, கன்னடம், துளு ஆகிய மொழிகளில் நான்காம் வேற்றுமை உருபுக்கு முன்னால் சாரியை இல்லாமல் இருப்பதே பெருவழக்காக உள்ளது. எனவே, சாரியை இல்லாததே தொல்திராவிட வழக்காக இருக்கலாம் என்று கருதப்படுகிறது (சண்முகம் 1971 ஆ:245).

| | | |
|---|---|---|
| குற்றியலுகரம் | — குற்றியலுகரக்கு | — தொல்.177 |
| ஆசிரியம் | — ஆசிரியக்கு | — தொல். 1309 |
| வையம் | — வையக்கு | — குறள். 751 |
| குலம் | — குலக்கு | — சிலம்பு. 26:107 |

அதே சமயத்தில் புலம்-புலத்திற்கு (கலி.78:19) தவம்-தவத்துக்கு (புறம்:358:3) உள்ளம் - உள்ளத்துக்கு (குறுந்:58) போன்று சாரியை ஏற்றவடிவங்கள் பெரும்பான்மையாக சங்ககாலத்திலும் இடைக்காலத்திலும் பயின்று வருவதால் சாரியை இல்லாத வடிவங்களும் தொல்வடிவங்களாகவே கருதப்படவேண்டும்.

**6.2.4. தொல் இடைக்கால வழக்கு**

வடமொழியில் இந்த முறையைப் பின்பற்றித் தொல் இடைக்கால வழக்கு, பழைய வடமொழியிலேயே இருந்திருக்க வேண்டும் என்பதை எமனோவ் (Emeneau, 1966) விளக்கியுள்ளார். இது பொதுநிலையில் தமிழுக்கும் பொருந்தும்.

1) சங்க இலக்கியத்தில் யா-வில் தொடங்கும் சொற்களை விட ஆ - வில் தொடங்குவன குறைவாகக்காணப்படுகின்றன.

| | | |
|---|---|---|
| யாறு | ஆறு | நெடுநல்: 30 பரி: 9:50 |
| | ஆற்று | குறுந்: 24.3 |
| யாமை | ஆமை | பட்டி. 64 புறம். 387:1 |
| யாடு | ஆடு | நற். 266 நெடுநல். 160 |
| யாண்டு | ஆண்டு | சிலம்பு. 1: 24 மணி. 17:39 |
| யானை | ஆனை | மணி. 20:35 |

இடைக்காலத்தில் ஆகாரத்தை முதலாக உடைய சொற்களே மிகுதி. மேலும் பல புதிய சொற்களும் யகர மெய்யை இழந்து (யார் > ஆர். அப்பர் 5-45-1) காணப்படுகிறது. எனவே யாகாரத்தை நிலைமொழிக் கூறாகவும் ஆகாரத்தைத் தொல் இடைக்கால மொழிக்கூறாகவும் கொள்ளவேண்டும் என்பது தெளிவாகும். இடைக்கால இலக்கண நூலான நேமிநாதமும் 'யாமுதற்பேர் ஆமுதலாம்' (நேமி.60.3) என்று விதிசெய்துள்ளதும் இந்தக் கருத்தை வலியுறுத்தும்.

2) செயின், செய என்ற வினையெச்ச வாய்பாடுகள் வல்வினைகளில் (Strong Verbs)- அதாவது சென்னைப் பல்கலைக் கழகப் பேரகராதி குறிப்பிட்டுள்ள 9,10,11,12 எண்ணுள்ள பிரிவுகளில் வரும் வினைகளில் பகரமெய் (கற்ப, கேட்ப, பார்ப்ப, கற்பின், கேட்பின், பார்ப்பின்) காணப்படுவது பெரும்பான்மை, ககரம் வருவது (கற்க, கற்கின், சிறுபான்மை வழக்கு. ஆனால், இடைக்கால இலக்கியங்களில் நிலைமை தலைகீழாக மாற்றம் பெற்றுவிட்டது. பகரமெய் வருவது சிறுபான்மையாகவும் ககர மெய் வருவது பெரும்பான்மையாகவும் காணப்படுகிறது. எனவே, சங்க காலத்தில் பகரமெய் வருவதை நிலைமொழி வழக்காகவும், ககர மெய் வருவதைத் தொல் இடைக்கால வழக்காகவும் கொள்ளத் தோன்றுகிறது.

| | |
|---|---|
| கேட்ப(14) | கேட்க(4) |
| பொருநர்.133 | அகம். 110:2 புறம். 67:11 |
| நடப்ப(29) | நடக்க (1) |
| மதுரை.189 | நற்: 384:8 |
| கொடுப்ப(10) | கொடுக்க(2) |
| தொல். பொருள். 140.3 | ஐங்கு.6:6 |
| புறம். 292:4 | |

| | |
|---|---|
| கேட்பின் (35)<br>குறுந். 94:4 | கேட்கின் (4)<br>ஐங்கு. 81:5 |
| இருப்பின் (4)<br>குறுந்: 102: 2 | — |
| கொடுப்பின் (3)<br>தொல். களவு. 112:38 | — |
| மறைப்பின் (2)<br>தொல். பொருள். 109:16 | — |
| பிறப்பின் (3)<br>புறம். 74:1 கள: 9:13 | — |

3) நிபந்தனை எச்சமாகச் 'செயின்' வாய்பாடு சங்க இலக்கியத்தில் மிகுதியாகவும் 'செய்தால்' வாய்பாடு குறைவாகவும், அதே சமயத்தில் இடைக்கால இலக்கியங்களில் 'செய்தால்' வாய்பாடு அதிகமாகவும் வந்துள்ளதால் சங்க காலத்துச் 'செயின்' வாய்பாடு வழக்கை நிலைமொழி வழக்காகவும் செய்தால் வாய்பாடு வழக்கைத் தொல் இடைக்கால வழக்காகவும் கொள்ள வேண்டியிருக்கிறது.

| | |
|---|---|
| காணின்(29)<br>நற். 253:1; | கண்டால் (1)<br>புறம்.390:25 |
| புணரின் (7)<br>தொல். எழுத்து. 382:1 | புணர்த்தால்<br>சிலம்பு.7:2;2 |
| பெறின் (44)<br>மதுரை. 197; குறுந். 29:7 | பெற்றால் (1)<br>குறள் 331:1 |
| செயின் (3)<br>நற். 247:6; குறுந். 309:1 | செய்தால்<br>சிலம்பு. 11:107 |
| காட்டின் (1)<br>தொல். பொருள். (112:39) | — |
| குறுகின் (4)<br>புறம். 128:6 | — |
| புலம்பின்(4)<br>நற். 299:5 | — |
| — — | மடித்தால்<br>பரி. 20:44 |

4) செய்து என்பதன் எதிர்மறை வினையெச்சமாகச் செய்யாது என்ற வாய்பாடே சங்க இலக்கியத்தால் பெரு வழக்காகவும் செய்யாமை/செய்யாமல் வாய்பாடு சிறுபான்மையாகவும் உள்ளன. எனவேதான் முன்னதைச் சங்ககால நிலைவழக்காகவும் பின்னதைத் தொல்இடைக்கால வழக்காகவும் கொள்ளலாம். ஏனென்றால் பின்னதே இடைக்காலத்தில் பெருவழக்காக உள்ளது.

வழாஅது(6)
முருகு,117,புறம். 25:2

வழாஅல் (2)
தொல். சொல் 13:1
மலை. 215

வழாமை (2)
தொல்பொருள். 63:5

காணாது (22)
நற்.43:10; குறுந். 151:2

காணாமல் (1)
கலி.39:41

காணாமை (6)
கலி.108:59; பரி.1:54

நாணாது(1)
கலி. 115:2

நாணாமல் (1)
பரி.20:74

எஞ்சாது (8)
தொல்.பொருள். 112:13

எஞ்சாமை (2)
புறம்:90:4

செய்யாது(10)
மதுரை. 490; கலி.69;2

செய்யாமல்(2)
குறள்:101:1

அறியாது (48)
தொல்.பொருள்.656:19;

—

செல்லாது (36)
நற்.47:2; ஐங்கு.321:1

செல்லாமை (1)
தொல்.பொருள். 183:1

—

தெருளாமல் (1)
கலி.38:17

தெருளாமை (1)
அகம்.379:2

—

தொய்படாமல் (1)
மலைபடு.365.

5) மகர ஈற்று அஃறிணைப் பெயர்கள் வேற்றுமை உருபு களுக்கு முன்னர் -(அ)த்துச் சாரியை ஏற்றுவரும். ஆனால் தொல்காப்பியர் மூன்றாம் வேற்றுமை உருபான-ஒடு-விற்கு முன் சாரியை பெற்றும் பெறாமலும் வரலாம் என்று குறிப்பிட் டுள்ளார் (எழுத்து.132). சங்க இலக்கிய வழக்குகளை ஆராய்ந் தால் சாரியை பெறாமல் நெஞ்சமொடு, உலகமொடு என்ற வழக்குகளே பெரும்பான்மை என்பதும் அறத்தொடு, நிலத் தொடு என்று சாரியை பெற்ற வடிவங்கள் சிறுபான்மை என்ப தும் புலானாகிறது (சண்முகம், 1971 ஆ). ஆனால் இடைக்காலத் தமிழில் சாரியை ஏற்ற வடிவங்களே பெரும்பான்மையாகக் காணப்படுவதால் மூன்றாம் வேற்றுமைக்கு முன்னால் சாரியை ஏற்காத வடிவம் பெரும்பான்மை-நிலைவழக்கு என்றும் சாரியை ஏற்ற வடிவங்கள் சிறுபான்மை தொல் இடைக்கால வழக்கு என்றும் கொள்ளலாம்.

இதுவரை மொழி அமைப்பில் காணப்படும் உறழ்ச்சிகளை வரலாற்று நோக்கில் பார்த்து நிலைமொழி அல்லாத சில கிளைமொழிகள் இருக்கலாம் என்று பார்த்தோம். உண்மை யில் தொல்வழக்கைத் தனிகிளை மொழியாகக் கொள்ள லாமா என்பது கோட்பாட்டு நிலையில் யோசிக்க வேண்டிய ஒன்று. ஏனென்றால் எல்லாக் கிளைமொழிகளும் ஒன்றிரண்டு கூறுகளில் தொல்வழக்கைத் தக்க வைத்துக் கொண்டிருக்கும் என்பதையும் வரலாற்று மொழியியல் புலப்படுத்தியுள்ளது. வட்டார அடிப்படையிலும் சமூக அடிப்படையிலும் அவைகளை இனம்காண முடிந்தால்தான் தனிக்கிளை மொழியாக அங்கீ கரிக்க முடியும்.

மூன்றாவது இயலில் சங்கப் புலவர்களின் வட்டாரம், சமூ கம் பற்றிய சில செய்திகள் குறிப்பிடப்பட்டன. ஆனால், அவை முழுமையாக அறியமுடியாததால் அவர்களின் பாடல்கள் மூலம் இரண்டையும் அறிந்து கொள்ளும் முயற்சி தமிழ்மொழி ஆராய்ச்சியில் மேற் கொள்ளப்படவில்லை. பிற மொழிச் சொற்களைக் கையாண்டுள்ளதன் மூலம் சமூகக்கிளை மொழி பற்றிய ஒன்றிரண்டு செய்திகள் அடுத்த இயலில் விளக்கப்படும்.

சங்க இலக்கியத்தில் நிலைமொழி வழக்கின் வட்டார அடிப்படையை அறிந்து கொள்ளும்படியாகக் குறிப்புகள் இருப்பதைப் பலரும் எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

### 6.2.5. நிலைவழக்கும் வட்டார அடிப்படையும்

சங்க இலக்கியங்களில் தமிழ்மொழி மதுரையோடு 'தமிழ் நிலைபெற்ற தாங்கரு மரபின், மகிழ் நனை மறுகின் மதுரையும் வறிதே' (சிறுபாண். 66-7) என்றும்,

'தமிழ்கெழு கூடல்' (புறம்:58:13) என்றும்,

'தமிழ் வையை' (பரி:6:63) என்றும் இணைத்துப் பேசப் பட்டுள்ளது.

இதற்கு முக்கிய காரணம் மதுரைத்தமிழ் அல்லது பாண்டி நாட்டுத் தமிழ் நிலைமொழியாக-இயற்சொல்லாகக் கருதப்பட்டது என்று தன்கால நோக்கிலிருந்து கூறலாம். இதற்கு ஆதாரமாக மூன்று செய்திகள் உள்ளன. 1) தொண்டை, சோழ, சேர நாடுகளைச் சேர்ந்த புலவர்களின் எண்ணிக்கையை விட பாணடிய நாட்டுப் புலவர்களின் எண்ணிக்கை அதிகம் (3.5), 2) பாண்டி நாட்டுப்புலவர் 90 பேர்களுள்ளும் மதுரை நகரைச் சேர்ந்த புலவர்கள் மட்டும் 37 பேர், 3) நன்னூல் உரையாசிரியர்கள், தற்காலத் தமிழ் அறிஞர்கள் ஆகியோர் பாண்டிய நாட்டுத் தமிழையே இயற்சொல்லாகக் கருதுவது (சண்முகம்: 1984: 70)

இதற்குக் கிருஷ்ணன் (1984:84) வரலாற்றுக் காரணம் ஒன்றும் குறிப்பிட்டுள்ளார். வடக்கிருந்து வந்த ஆரியர்களின், சமண, பவுத்தர்களின் பண்பாட்டு மையம் தொடக்க காலத்தில் மதுரையையும் அதன் சுற்றுப்புறங்களையும் சார்ந்ததாக இருக்கலாம் என்ற வேலுப்பிள்ளை (1969:5) கருத்தை ஒட்டி, இத்தகைய புதியவர்களின் வரவால் அப்பகுதியைச் சார்ந்த புலவர்கள், மக்கள், மன்னர் முதலியோருக்குத் தமிழ் உணர்வு ஏற்பட்டிருக்கலாம் என்பார். இதற்கு ஆதாரமாக, மொழிப்பற்று பிறமொழித்தொடர்பு ஏற்படும்போதே ஏற்படும் என்ற மொழியியலார் (Weinreich,1953:100)[1] கருத்தும் குறிப்பிடத் தகுந்தது.

## 6.3. பிறமொழிகள்

சங்க இலக்கியங்களில் தமிழர்கள் பிறமொழி பேசும் நாடு களுக்குச் சென்று வந்தார்கள் என்ற குறிப்பும், தமிழ்நாட்டில் பிறமொழிபேசும் மக்கள் வாழ்ந்து வந்தார்கள் என்ற குறிப்பும் காணப்படுவதால் சங்ககாலத் தமிழகம் பன்மொழி பற்றிய அறி வுடைய நாடாகவே இருந்துவந்தது என்பது தெளிவாகிறது. அதற்கேற்பச் சங்க இலக்கியங்களில் பிறமொழிச் சொற்கள் காணப்படுகின்றன என்பதும் எல்லோரும் ஒத்துக் கொள்ளும் உண்மையாகும். அந்த நிலையில் என்னென்ன மொழிகள் தமிழ கத்தில் வழங்கியது? எப்படிப்பட்ட மக்கள் தமிழகத்தில் வாழ்ந் தார்கள்? என்று ஓரளவு விரிவாக அறிந்துகொள்வது மொழி யுணர்வின் தன்மை பற்றியும் பிறமொழித் தாக்கத்தால் ஏற் பட்ட மொழிவளர்ச்சி பற்றியும் புரிந்து கொள்ள வழிவகுக்கும். அந்த முறையில் மொழிவளர்ச்சி பற்றிய சில பரவலான உண்மைகளே இங்கு எடுத்துக்காட்டப்படுகின்றன.

### 6.3.1. தமிழர் நோக்கில் பிறமொழிநாடு

முதலில் தமிழர்கள் பிறமொழி பேசும் நாடாக எதைக் கருதினார்கள்; பிறமொழி நாட்டைப்பற்றி என்ன கருதினார் கள் என்று பார்ப்போம்.

பிறமொழிகள் வழங்கும் நிலப்பகுதியை மலைக்கப்பால் உள்ள நாடுகள் (அகம்.215.1,2), வேங்கட மலையைத் தாண்டிய பகுதி (அகம்.211); வடுகர் நாட்டுக்கு அப்பாற்பட்ட பகுதி (அகம்.127) என்றும், போகும் வழி பாலைவனம் போன்றது (ஐங்கு,321) அஞ்சத் தகுந்தது; கொடியவர்கள் வாழ்வது (அகம். 67.6,7) என்றும் சங்க இலக்கியங்கள் குறிப்பிட்டுள்ளன. இங்கு பிறமொழி பேசும் நாடுபற்றியும் அச்ச உணர்வே காணப்படு கிறது. என்றாலும் பிறநாட்டாரை வேறுபடுத்த மொழியை அடிப்படையாகக் கொண்டதும் குறிப்பிடத்தகுந்தது.

வடுகர் நாட்டைத் தாண்டியது என்னும் போது தமிழ கத்தைத் தாண்டி வடுகநாடு, அதைத்தாண்டியே பிறமொழி நாடு என்ற கருத்தும் புலப்படுகிறது. வடுகர்களைப் பற்றியும் அந்தக்காலத் தமிழர் நல்லஎண்ணம் கொண்டிருக்கவில்லை.

வம்ப வடுகர் (அகம்.375-7) (புதிதாகத் தோன்றிய வடுகர்) என்றும் 'கல்லா நீள்மொழிக் கதநாய் வடுகர்' (அகம்.107-11) (படிக்காத, வஞ்சினம் கூறும் கோபம் மிகுந்த நாயை உடைய வடுகர்) என்றும் கூறுவதிலிருந்து வரதரசன் (1954) ஒரு மொழி யாளர் பிறமொழியாளர்களை மதிப்பதில்லை என்றும் அப் படியே வடமொழி தவிர மீதியுள்ள மொழிகளைத் தமிழர்கள் மதிக்கவில்லை என்றும் தெரிவதாகக் குறிப்பிட்டுள்ளார்.

> ஒவ்வொரு மொழியாரும் மற்றமொழியாரைக் குறை வாகவும், மற்றமொழியை நாகரிகம் இல்லாததாகவும் கருதி வந்தனர் என்ற உண்மை தமிழ் மக்களுக்கும் பொருந்தும் (ப.294)
>
> இலக்கியவளம் உடைய மொழியே சிறந்தமொழி என் றும், இலக்கியம் இன்றிப் பேச்சுவழக்கு மட்டும் பெற்ற மொழி இழிவானது என்றும் கருதப்படடு வந்தது. பழங்காலத்துத் தமிழறிஞர் தம் மொழியைத் தென் மொழி என்றும் அதற்கு இணையானது வடமொழி என்றும் கருதிப் பிராகிருதம். முதலிய வடநாட்டுப் பேச்சுமொழிகளைப் புறக்கணித்த காரணம் இதுவே. வேங்கடத்திற்கு அப்பால் பேச்சுவழக்கில் இருந்த (வடுகர் மொழியாகிய) தெலுங்கைப் பற்றியும் அவ் வாறே மேற்கே வழங்கிய கன்னடத்தைப் பற்றியும் கவலை கொள்ளாத காரணம் இதுவே (ப. 297).

என்பது அவரது (1954) வாசகம்.

உண்மையில் வெகுதூரத்தில் இருந்த கங்கை. இமயமலை பாடலிபுத்திரம் ஆகியவற்றைப் பற்றி நேரடியாகக் குறிப்பிட்ட தமிழ்ப்புலவர்கள் அண்டை நாட்டையும் மக்களையும் செல்லும் வழியையும் நேரடியாகக் குறிப்பிடாததோடு, அனுதாபத் தோடும் சொல்லிச் செல்லவில்லை என்னும் வரதராசன் கருத் தை ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டியிருக்கிறது. அதே சமயத் தில் பிறமொழி பேசும் மக்கள் கலந்து மகிழ்ச்சியாக வாழும் காவிரிப்பூம்பட்டினம் என்று பட்டினப்பாலையில் குறிப்பிடப் படுவது அண்டைநாட்டு மொழியல்லாத பிற தேசத்து மொழி யினரையே என்று கருதவேண்டியிருக்கிறது.

> மொழிபல பெருகிய பழிதீர் தேஎத்து
> புலம்பெயர் மாக்கள் கலந்தினிதுரையும்
> முட்டாச் சிறப்பின் பட்டினம்

என்பதே அந்தப் பட்டினப்பாலை அடிகள் (216-18) குற்ற மற்ற நாட்டுப் பிறமொழி பேசும் மக்கள் இன்னொரு நாட்டி லிருந்து குடிவந்து மகிழ்ச்சியாகக் கூடிக் குலாவி வாழும் காவிரிப்பூம்பட்டினம் என்பதை சுட்டுவதுடன் மேலும் அதே பட்டினப்பாலை பிற பிரதேசத்திலிருந்து வியாபாரத்திற்காக வந்த பொருள்களையும் பட்டியல் போட்டுக் காட்டியுள்ளது (185-92). தமிழ் நாட்டுப் பொருள்களும் கடல் மூலம் தமிழகம் வந்த பொருள்களும் ஈழம், காழகம் (பர்மா)போன்ற நாட்டுப் பொருள்களும் வணிகத்துக்காகக் கொண்டுவந்து குவிக்கப்பட்டி ருப்பதை காட்டுகின்றன. அப்படியே மதுரை நகரிலும், மலை, நிலம்,கடல் ஆகியவற்றிலிருந்து மணி,முத்து, பொன் முதலியன கொண்டுவந்து விற்கப்பட்டன என்று மதுரைக்காஞ்சி அடி களும் (504 – 6) மதுரைக்குப் பலநாட்டுப் பொருள்களும் கொண்டுவரப்பட்ட செய்தியைக் குறிப்பிடுகின்றன. அப்படி யானால் பிறமொழியாளர்களாக யார் யார் சங்க இலக்கியத் தில் குறிக்கப்பெற்றுள்ளார்கள்? அவர்களின் சமூக மதிப்பென்ன என்றெல்லாம் பார்க்க வேண்டும்.

### 6.3.2. பிறமொழிகளும் பிறமொழியினரும்

வடமொழி, வடமொழியாளர், யவனர் ஆகியவை பற்றியே சங்க இலக்கியத்தில் குறிப்புகள் காணப்படுகின்றன. வடமொழி, பேசும் பல சமூக மக்கள் ஆகியோரைப் பற்றிய குறிப்புகள் இருப்பது போல யவன மொழிபற்றிய குறிப்பு இல்லாமல் யவனமொழியாளர் பற்றியே குறிப்பு உண்டு என்பதும் சுட்டிக்காட்டத் தகுந்தது.

வடமொழி, வடசொல் ஆகியவை சமஸ்கிருதத்தை மட்டும் அல்லாமல் அதனோடு இன உறவுடைய பாலி, பிராகிருத மொழிகளையும் சுட்டுவதாகக் கொள்ள வேண்டும் என்று அன வரத விநாயகம் பிள்ளை(1919:94) கூறியுள்ளார். காலவரிசைப் படி பார்க்கும்போது வடமொழி கற்ற அல்லது பேசிய வைதிக ஆரியர்களுக்கு முன்னாலேயே பாலி, பிராகிருதம் பேசிய சமணர்களும், பவுத்தர்களும் தமிழகத்தில் குடியேறியிருக்க

வேண்டும் என்பார் கே. கே. பிள்ளை (1966:160,161). மேலும் தமிழகம் வந்த பிராமணர்கள் வேதம் வல்லவராயினும் வழக்கு மொழியாகிய பிராகிருதம் பேசியிருக்க வேண்டும் என்றும் இவர்களது பெண்கள் பிராகிருதம் பேசியிருக்க வேண்டும் என்றும் நாகசாமி (1973:198) கூறுவார்.

யவனர்கள் என்பது இந்தியநாட்டைத் தாண்டிய நாடுகளான கிரேக்க நாட்டைச் சார்ந்த ஐயோனியன் (Ionian) என்ற பிரிவினரையும் பின்னர் ரோமர்களையும் பிறகு எல்லா வெளிநாட்டினரையும் குறிப்பிட்டிருக்க வேண்டும் என்பார் கே.கே.பிள்ளை (1966: 253). எனவே, சங்ககாலத் தமிழர்கள் இந்திய ஐரோப்பிய மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த இந்திய –ஆரிய உட்பிரிவைச் (Indo Aryan Subgroup) சேர்ந்த சமஸ்கிருதமும், பாலி, பிராகிருதம் ஆகிய மொழிகளோடும், கிரேக்க லத்தீன் மொழி (Greek-Latin) (உண்மையில் இவை இரண்டும் வேறு உட்பிரிவைச் சேர்ந்தவை) உட்பிரிவைச் சார்ந்த மொழிகளோடும் நேரடித் தொடர்பு கொண்டிருந்ததாக சான்றுகள் இலக்கியங்களில் காணப்படுகின்றன. இதனால் மொழி பற்றிய குறிப்புகளையும் அடுத்து மொழி பேசும் மக்களைப் பற்றிய குறிப்புகளையும் அவற்றின் உட்கிடையையும் பார்ப்போம்.

### 6.3.2.1. வடவர்கள்/வடமொழியினர்

அந்தணர், முனிவர், பார்ப்பார் என்று குறிக்கப்படுபவர்கள் வடமொழியோடும் வேதத்தோடும் வேள்விச் சடங்குகளோடும் தொடர்புபடுத்திப் பேசப்பட்டுள்ளார்கள். மேலும் அவர்கள் வாழ்ந்த குடியிருப்பும், தெருவும், ஊரும் சங்ககாலத் தமிழகத்தில் இருந்ததாகச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

பெரும்பாணாற்றுப்படை அடிகள் (297-30) அந்தணர் வீடு பசுஞ் சாணத்தால் மெழுகிய வாசலில் உள்ள காலில் கன்றுக் குட்டி கட்டப்பட்டிருக்கும் என்றும், கோழியும் நாயும் வேதத்தைப் படிக்கக் கேட்ட கிளியும் வேதத்தைக் கூறிக்கொண்டிருக்கும் தெரு என்றும் வருணிக்கின்றன. அப்படியே முனிவர்

வேள்வி செய்யும் புகையை வெறுத்துக் குயில் தன் பெடையோடு வெளியேறும் நகரம் பற்றிப் பட்டினப்பாலை (54 57) பேசு கிறது.

சிறுபாணாற்றுப்படை அடிகளில் (187,188) ஆமூர் என்ற ஊரே அந்தணர் வாழும் ஊராக இருந்ததை நல்லூர் நத்தத் தனார் குறிப்பிடுகின்றார்.

புறநானூற்று அடிகள் (2:22.24) அந்தணர்க்கும் வேள்விக் கும் இருந்த தொடர்பைக் குறிப்பிடுகின்றன.

தமிழ் மக்களாலும் அரசர்களாலும் மதிக்கப்பட்டவர்களாக இலக்கியங்களில் குறிப்பிடப்படுபவர் பார்ப்பார் அல்லது பார்ப்பனர்களே. அவர்களையும் வடமொழியோடு தொடர் புடையவர்களாகவே கருத வேண்டும். பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணனார் குறுந்தொகைப் பாடலால் (156.1.14) இந்தக் கருத்து உறுதி பெறுகிறது. சூதர், மாகதர், வேதாளிகர் என்று மதுரைக் காஞ்சியில் (670,71) குறிப்பிடப்படுபவர்களும் வடநாட்டினரே. சமண, பவுத்த உறைவிடங்கள் சங்க இலக்கி யங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. தவப்பள்ளி (பட்டின.53) என் பது சமணர், பவுத்தர் வாழும் இடங்களையும் 'மறங் காக்கும் கடவுட் பள்ளி' (மதுரைக் 467) என்பது பவுத்தர்கள் வாழும் இடங்களையும் சுட்டுகின்றன. இவர்கள் எல்லோரும் வட மொழியோடு தொடர்பு உடையவர்களே.

சங்க இலக்கியத்தில் பார்ப்பார் என்ற ஒரு பிரிவினரும் குறிக்கப்பட்டுள்ளார்கள். அவர்களையும் அந்தணர்களாகக் கருத வேண்டும் என்பது வேள்வி செய்ததற்காகப் பொன்னும் பொருளும் பெற்றவர்களாக அந்தணர், பார்ப்பார் ஆகிய இரு வரும் குறிக்கப்படுவதால் தெளிவாகிறது(புறம்.3-6,1.363674-6).

பார்ப்பார் என்ற பெயரால் சடங்குசெய்யாதவர்கள் அகநா னூற்றில் (24 1,2) குறிக்கப்பட்டுள்ளார்கள். அவர்கள் வேள்வி செய்யாததால் 'வேளாப்பார்ப்பார்' என்று குறிப்பிடப்பட்டுள் ளார்கள். அதே சமயத்தில் அந்தணர் என்று தமிழ்ப்புலவர் தங்களைக் குறிப்பிட்டதற்கும்சான்று உண்டு. கபிலர் 'யானே பரிசிலன் மன்னும் அந்தணன்' என்று (புறம். 200 13) குறிப்பிட்

டுள்ளார். ஆனால் பெயரால் வடநாட்டோடு தொடர்புடைய தாகக் கருதப்படுகிறார்.

ஆரியர் என்ற ஒருபிரிவினர் கழைக்கூத்தாடிகள், போர் வீரர்கள், அரசர் முதலியவர்களாய் இருந்ததாகச் சங்க இலக்கியம் குறிப்பிடுகிறது. மேலே குறிப்பிட்டபடி யானைப்பாகர் களும் ஆரியர் என்று குறிப்பிடப்பட்டுள்ளார்கள்.

| | | |
|---|---|---|
| கழைக்கூத்தாடிகள் | ஆரியர் கயிறாடு பறை | (குறுந். 7.3) |
| பொருநன் | ஆரியப்பொருநன் | (அகம். 386.5) |
| போர்வீரர் | ஆரியர் படை | (அகம். 336 22) |
| | ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர் | (நற். 170.6,7) |
| அரசர் | ஆரியர் அலறத்தாக்கி | (அக. 396. 16) |

இவர்களும் வடமொழியோடு தொடர்புடைய மொழியைத் தாய்மொழியாகக் கொண்டவர்களாகத்தான் இருக்கவேண்டும் 'வடவர்' என்ற சொல்லும் (நெடுநல். 51, பட்டின. 276, அகம் 340.6) பயின்று வந்துள்ளது.

### 6.3.2.2. யவனர்கள்

முன்னரே குறிப்பிட்டபடி யவனர்கள் பற்றிய குறிப்பு இலக்கியத்தில் இருக்கிறதே தவிர யவனர்கள் பேசிய மொழி பற்றிய குறிப்பேதும் இல்லை. யவனர்கள் தமிழ்நாட்டுக்கு அடிக்கடி வியாபார நிமித்தமாக வந்து சென்றார்கள் என்ற உண்மையை அகநானூறு (149. 9,10) புறநானூறு (56.18) மூலம் உணரலாம். தமிழ்நாட்டு மிளகு கிரேக்க நாட்டில் வணிகப் பொருளாக இருந்ததும் அங்கிருந்து பொன்னும் மதுவகைகளும் தமிழகத்துக்குக் கொண்டுவரப்பட்டதும் குறிப்பிடப்பெறுகின் றன. இந்தச் செய்தியைக் கிரேக்க வரலாற்றாசிரியர் குறிப்பு களும் உறுதிப்படுத்துவதை வரலாற்று ஆசிரியர் பலரும் எடுத்துக் காட்டியுள்ளார்கள். ஆனாலும் தமிழகத்தில் வந்து தங்கிய யவனர்கள் அந்தப்புரத்தில் காவலர்களாகப் பணிபுரிந் தார்கள் என்ற செய்தி மட்டுமே முல்லைப்பாட்டால் (60-66) அறியமுடிகிறது. மணிமேகலையில் யவனத் தச்சர் (19-108). என்ற தொடர் மூலம் தொழிலாளர்களாக மட்டுமே யவனர்கள் தமிழகத்தில் வாழ்ந்திருக்க வேண்டும் என்பது புலப்படுகிறது.

சுருக்கமாகச் சொன்னால் சங்ககாலத் தமிழகத்தில் பிற மொழி பேசும் பலவகை மக்கள் வாழ்ந்தார்கள், அவர்களில் வடமொழியோடு தொடர்புடைய பல சமூகநிலையைச் சேர்ந்த மக்கள் (பார்ப்பார் உயர்ந்தநிலை ஏனையோர் தாழ்ந்தநிலை) வாழ்ந்தார்கள்என்பதையும் அந்தச் சமூகத்தைச் சேர்ந்தவர் களில் சிறந்த தமிழ்ப் புலவர்களும் இருந்தார்கள் என்பதையும் நாம் பொதுமைப் படுத்தலாம்.

இதனுடைய வரலாற்று உள்கிடை, சமுதாய மதிப்பீடு மொழிதாக்கத்தின் உள்கிடை ஆகிய மூன்றையும் கவனித்தால் தான் மொழிவளர்ச்சியில் பிறமொழித் தொடர்பால் ஏற்பட்ட பலன்களைச் சரியாகக் கணித்துப் புரிந்துகொள்ள முடியும்.

வரலாற்று ஆசிரியர்கள் பலரும் ஆரியர்கள் தமிழகத்தில் கி.மு, வீலேயே வந்து குடியேறியிருக்க வேண்டும் என்று குறிப் பிட்டுள்ளார்கள். ஆனால், அவர்களில் பலவகைப்பட்ட சமூக நிலை இருந்ததையும், சிலர் அதிகம் தமிழ்ச் செல்வாக்குக்கு உட்பட்டவர்களாயும் வேறுசிலர் வடநாட்டுப் பிராமணர் களைப் போலத் தங்கள் மரபைப் போற்றுபவர்களாயும் காணப்படுவது முக்கியமாகக் கவனிக்கத் தகுந்தது. இதைக் கொண்டு ஹார்ட் (Hart, 1975:55)[2] ஆரியர்கள் சிறுகச் சிறுகப் பலகாலம் வந்திருக்கவேண்டும்; முன்னே வந்தவர்கள் தமிழ்ப் பழக்க வழக்கங்களோடும் தமிழ்மொழி இலக்கியப் பாரம்பரி யத்தோடும் இணைத்துக் கொண்டிருக்க வேண்டும்; பின்னே வந்தவர்கள் தங்களுடைய சமயக் கொள்கைகளையும் பழக்க வழக்கங்களையும் மாற்றிக் கொள்ளாமலே வாழ்ந்திருக்க வேண்டும் என்று குறிப்பிடுகிறார். யானைப்பாகர்கள், கழைக் கூத்தாடிகள் போன்ற சாதாரணமக்களும் அதாவது சமூகநிலை யில் கடைநிலை மக்களும் கூட பார்ப்பனர்களோடு குடியேறி இருக்க வேண்டும் என்பதையும் சங்க இலக்கியம் தெளிவு படுத்துகிறது.

### 6.3.2.3. சமூக மதிப்பு

பல நிலைகளைச் சேர்ந்த வடமொழியாளர்களுக்குள் வேதத் தொடும் வேள்வியொடும் தொடர்புடைய பார்ப்பனர்களே

பொதுமக்களாலும் அரசர்களாலும் மதிக்கப்பட்டார்கள். 'இறைஞ்சுக பெரும நின் சென்னி சிறந்த, நான்மறை முனிவர் ஏந்துகை எதிரே' (புறம்.6:19,20) என்று பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியிடம் காரிக்கிழார் கூறுகிறார் என்றால் முன்னரே அரசர்கள் பார்ப்பனர்களை மதித்தார்கள் என்பது பொருளாகிறது. 'ஆர்புனை தெரியல் நின் முன்னோரெல்லாம், பார்ப்பார் நோவன செய்யலர் (புறம்.43:B,14) என்ற இன்னொருபாடல் (சோழன் நலங்கிள்ளி தம்பி மாவளத்தான், தாமப்பல் கண்ணனார்) நேராகவே இந்த உண்மையைத் தெளிவுபடுத்துகிறது. மேலும், தமிழரசர் கள் வேள்வி செய்தார்கள் என்பதால் ஆரியர் பழக்கவழக்கங் கள் சிலவற்றை மேற்கொண்டார்கள். இந்த நிலையில் 'பார்ப் பார்க்கு அல்லது பணிபு அறியலையே' என்ற கபிலரின் பதிற்றுப்பத்து அடியும்(63 – 1). ……… 'காரிநின்னாடே, அழல் புறந்தரூஉம் அந்தணரதுவே' என்று மலையமான் திருமுடிக் காரியைக் கபிலர்பாடிய அடியும் (புறம் 122–2,3) அரசவை யில் பார்ப்பார்க்கு இருந்த செல்வாக்கைப் படம்பிடித்துக் காட்டும். இதனால் பார்ப்பனர்க்குத் தீங்கு செய்யக் கூடாது என்பது சமயநம்பிக்கை போல – சாதாரண காலத்தும் போர்க் காலத்தும் கடைபிடிக்கப்பட்டு அறநெறிபோல நிலவிய கருத் தும் இலக்கியங்களில் காணப்படுகின்றன.

ஆலத்தூர் கிழார் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனைப் பாடும்போது (புறம் 34:1–4), பசுக்களின் காம்பை அறுத்தவர்களும், பெண்களின் கருசிதைத்தவர்களோடு பார்ப் பனர்க்குத் தீங்குசெய்தவர்களும் பரிகாரம் கிடையாது என்று எதிர்மறையாக கூறுகிறார் என்றால் அவர்களுக்கு இருந்த சமூகமதிப்பின் அழுத்தம் தெளிவாக வெளிப்பட்டு விடுகிறது. இந்த மதிப்பைப் போர்க்கால அறமாக பசுக்களையும், பார்ப் பனர்களையும் பாதுகாப்பான இடத்துக்குக் கொண்டுச் செல்லுங்கள் என்று நெட்டிமையார் பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடும் போது வெளிப் படுத்தியுள்ளார் (புறம்.9).

இந்த இடத்தில் தமிழ் ஆராய்ச்சி அறிஞர்களிடையே நில வும் இருகருத்தின் வன்மை மென்மைகளை எடுத்துக்காட்டுவது

பொருத்தமாகவே இருக்கும்.

தொல்லாணை நல்லாசிரியர்
புணர் கூட்டுண்ட புகழ்சால் சிறப்பின்
நிலந்தரு திருவின் நெடியோன்

என்ற மதுரைக்காஞ்சியடிகள் (761;63) (முதலிரண்டடி) சங்க காலத்தில் தமிழ்ச்சங்கம் ஒன்று இருந்திருக்க வேண்டும் என்ற கருத்துக்கு ஆதரவாகப் பலராலும்(உ-ம். இராசமாணிக்கனார் 1963:39; தமிழண்ணல், 1980.66, சுப்ரமணியன், 1986.4) எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. 'தமிழ் உணர்ச்சியும் எழுச்சியும் மதுரையைச் சார்ந்தே உருப்பெறுவதை இவை காட்டுகின் றன' என்பார் கிருஷ்ணன் (1984:83 தொ.). ஆனாலும் இந்த அடிகளுக்கு முன்பு உள்ள 'நல்வேள்வித் துறை போகிய' (760) என்ற அடியைப் பார்க்கும் போது வேள்வியோடு தொடர்புடைய அந்தணர்களுடைய கூட்டத்தை விரும்பும் நிலந்தரு திருவின் நெடியோன் என்றுதான் பொருள் கொள்ள வேண்டியிருக்கிறது; அப்படியானால் முதலிரண்டு அடி களைத் தமிழ்ச்சங்கம் இருந்ததற்குரிய குறிப்பாகக் கொள்ள முடியாது. இந்த உண்மைக்கு வேறு இரண்டு ஆதாரங்களும் சார்பாகக் காணப்படுகின்றன. ஒன்று: 'கேள்வி முற்றியவேள்வி அந்தணர்' என்ற புறநானூற்றுப்பாடல் அடியில்(361;4)வேள்வி யோடு அந்தணர் தொடர்புபடுத்திக் கூறப்பட்டுள்ளார். இரண்டு: கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய பட்டினப் பாலையில் உள்ள

பல்கேள்வித் துறைபோகிய
தொல்லாணை நல்லாசிரியர்
உறழ் குறித்து எடுத்த உருக்கொடி

என்ற அடிகளில் (169 – 71) வடமொழி கற்ற ஆசிரியர்களே குறிக்கப்படுகிறார்கள் என்பதில் சந்தேகமே இல்லை. சங்க காலத்தில் கேள்வி என்பது அடிச்சொல்லின் பொருளான காதால் கேட்பதையும் (புறம் 167 – 4,360 – 2) வேதத்தையும் (கே.கே. பிள்ளை, 1966) சுருதி (sruti) யையும் (ஃபிலியோசா 1966:112) குறித்து வழங்கியுள்ளது. எனவே, மேலேகாட்டிய

மதுரைக்காஞ்சி அடிகளும் அந்தணர்களுக்கு அரசர்களோடு இருந்த நெருங்கிய தொடர்பை வெளிப்படுத்துவதாகவே உள்ளன.

குடும்ப வாழ்க்கையிலும் பார்ப்பனர்கள் நெருங்கிப் பழகினார்கள் என்பதற்குக் கற்பியலில் (32:) தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே தூதுபோகும் வாயில்களில் தோழி, தாய், செவிலி (செவிலித்தாய்), பாங்கன், பாணனி, பாடினி, இளையர் போன்றவர்களில் பார்ப்பாரும் சேர்க்கப்பட்டுள்ளதால் அறியமுடிகிறது. பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணனார் பாடிய குறுந்தொகை 156ஆம் பாடலில் 'பார்ப்பன மகனே பார்ப்பன மகனே' என்ற பாடல் பார்ப்பனர்களின் உருவ வருணனையோடு தலைவி ஒரு பார்ப்பன மகனைப் பார்த்துக் கேட்பதாகக் கூறும்போது ஒருவித நக்கல் உணர்ச்சி தென்பட்டாலும் பார்ப்பனர்கள் சமூகத்தில் பரவலாக அறியப்பட்டிருந்தார்கள் என்ற உண்மையை உணர்த்துவதாகக் கொள்வதில் தவறு இருக்காது.

அரசியல் நிலையில் வடபுலத்தாரும், ஆரியர்களும் எதிரிகளாகவே வருணிக்கப்பட்டுள்ளார்கள். தமிழ் நாடு பல அரசர்களால் ஆளப்பட்டிருந்தாலும் சேர, சோழ, பாண்டிய மூவேந்தர்களும் வடநாட்டு அரசர்களை எதிர்த்தார்கள்; வடநாட்டு அரசர்கள் தமிழ் அரசர்களுக்குப் பயப்பட்டார்கள் என்று சங்கப் புலவர்கள் பாடியுள்ளார்கள். வடபுலத்து மன்னர் வாடும்படி கடுமையான போர்புரிந்தவன் பாண்டியன் என்று இளநாகனார் என்ற புலவரும் (புறம்.52.516), சோழமன்னர்கள் ஆற்றலுக்கு அஞ்சி வடபுலத்து அரசர்கள் தூக்கம் இல்லாமல் இருக்கிறார்கள் என்று கோவூர் கிழாரும் (புறம்.31), ஆரிய மன்னர்கள் அலறும்படித் தாக்கி இமயத்தில் வில் பொறித்து அவர்களைப் பணித்தவன் சேரன் என்று பரணரும் (அகம். 396.16 - 17) பாடியுள்ளார்கள்.

இப்படிப்பட்ட பாடல்களை 'இன உணர்ச்சியைத் தூண்டி ஒற்றுமை போதிப்பன' என்பார் சிவஞானம் (1976:18); ஏனென்றால் இது உண்மையில் நடந்த அரசியல் போராட்டத்தின் விளைவு அல்ல.

அறிவுத்துறையைப் பொறுத்த வரையில் வேதம் சங்கத் தமிழர்களால் மிகவும் போற்றப்பட்டது என்பது 'நற்பனுவல் நால்வேதம்' (புறம்.15 17, நெட்டிமையார்), 'ஞாலம் நாலும் நலங்கெழு நல்லிசை, நான்மறை முதுநூல்' (அகம்.181:15,16-பரணர்- உலகமெல்லாம் புகழும் நன்மை பொருந்திய நல்ல புகழை உடைய நான்கு வேதமாகிய நான்கு நூல்), 'ஒருமுது நூல்' (புறம். 166.4-பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயனை ஆவூர் மூலங் கிழார் பாடியது) என்ற அடிகளால் அறியலாம்.

'அந்தணர் இருவரும், திறம் வேறுசெய்தியின் நூல்நெறி' என்ற கலித்தொகை (99.2,3) அடிகளுக்கு 'வியாழமும் வெள்ளி யுமாகிய குரு இருவரும் செய்த வழிவேறாகிய தொழில்களை உடைய அரசியலைக் கூறும் நூல்' என்று நச்சினார்க்கினியர் பொழிப்புரை எழுதியுள்ளார். இவை முறையே பாருகற்பத்திய சூத்திரம், சுக்கிரநீதி என்று கருதப்படுகின்றன. இவை சங்க கால தமிழகத்தில் அறிஞர்களுக்குத் தெரிந்த வடமொழி நூல்கள் என்று நாம் கொள்ளலாம்.

அதே சமயத்தில் ஆரிய அரசன் பிரகதத்தனுக்குத் 'தமிழ் அறிவித்தற்கு' கபிலர் என்ற அந்தணப் புலவரே குறிஞ்சிப் பாட்டு பாடியதாக பிற்குறிப்பு கூறுவதன் உள்கிடை என்ன? பரிபாடலில் (9) நான்மறை வல்ல வாய்மொழிப் புலவர்களை விளித்து தமிழை அதுவும் அகஇலக்கியத்தை ஆராயாத தலைவர் களவொழுக்கத்தை மேற்கொள்ளமாட்டார்' என்று தமிழ் அகஇலக்கியச் சிறப்பைக் கூறுவதன் அர்த்தம் என்ன?

இவை அரசியல் நிலையிலும் கருத்து (Ideology) நிலையி லும் சமூக முரண் இருந்ததைக் காட்டுவதாகக் கொள்ள லாம்.

**6.3.2.4. வடமொழி**

சங்க இலக்கியத்தில் வடமொழி என்பது படிக்காத யானைப்பாகன் யானையுடன் பேசும் சொற்களை யானைப் பேச்சைக குறிக்கவே பயன்படுத்தப்பட்டுள்ளது.

கவைமுட் கருவியின் வடமொழி பயிற்றிக்
கல்லா இளைஞர் கவளம் கைப்ப

என்று பொன் வணிகனார் மகனார் நப்பூதனார் இயற்றிய முல்லைப் பாட்டில் (35, 36) வந்துள்ளதைக் காணலாம். ஆனால் இதையே பெருங்குன்றூர் பெருங் கௌசிகனார் என்னும் அந்தணப் புலவர் 'விரவுமொழி பயிற்றும் பாகர்' (மலைபடு. 327) என்று குறிப்பிடுவதால் தமிழும் வடமொழியும் கலந்த மொழியோ என்று சந்தேகப்பட வேண்டியிருக்கிறது.

'ஆரியர், பிடிபயின்று தரூஉம் பெருங்களிறு' என்ற அகநானூற்று அடிகளில் (276 – 9,10) யானைகளோடு ஆரியர்க்கு இருந்த தொடர்பு புலப்படுத்தப்பட்டுள்ளது. எனவேதான் அவர்கள் யானையிடம் பேசும் பேச்சு 'வடமொழி' என்று குறிப்பிடப்பட்டுள்ளது போலும். அல்லது தாய்மொழி இல்லாத மொழியை, வடமொழி என்று பொதுப்பெயரால் குறித்தார்கள் என்ற கருதலாமா?

அதே சமயத்தில் வடநாட்டு அரசன் ஒருவனைக் கலித்தொகை வடமொழியோடு சமஸ்கிருதத்தோடு தொடர்புபடுத்திப் பேசியுள்ளதும் குறிப்பிடத் தகுந்தது. 'வயக்குறுமண்டிலம் வடமொழிப் பெயர்பெற்ற, மூத்தவன்' என்ற அடிகளில் (கலி. 25.1,2) திரிதராட்டிரன் என்பவனே 'வடமொழிப் பெயர் பெற்ற மூத்தவன்' என்று நச்சினார்க்கினியர் குறிப்பிட்டுள்ளார். இது வடமொழிப் புராணத்தோடு தொடர்புடைய செய்தி என்பதை யாரும் மறுக்க முடியாது. மேலும் வடமொழி என்பதும் மொழிப் பெயராகவே கையாளப்பட்டிருப்பதும் கவனிக்கத்தகுந்தது. இந்த மாற்றுப் பிரயோகங்களுக்கு உட்கிடை ஏதாவது உண்டா? என்பதையும் பார்க்க வேண்டும்

## 6.4 மொழித்தாக்கம்

மொழித் தொடர்பால் முதலில் மொழிச் சூழல் மாறுபடும்; ஒரு மொழி பேசும்நாடாக இருப்பது பன் மொழி நாடாக மாறும். அங்குள்ள மக்களில் ஒரு சிலராவது அன்றாட வாழ்க்கையில் ஒன்றுக்கு மேற்பட்ட மொழியைப் பயன்படுத்துவார்கள். அதனால் அவர்கள் தொடர்பால் ஒரு மொழி மட்டும் பேசுபவர்களும் இன்னொரு மொழிச் சொற்களைக் கையாளும் நிலை ஏற்படும்.

### 6.4.1. இருமொழிச் சூழல்

மேலே, தமிழ்நாட்டில் அந்தணர்கள் வாழ்ந்து வடமொழிக்கல்வியை மேற்கொண்டிருந்தார்கள் என்று பார்த்தோம். அவர்கள் தங்களுடைய அன்றாடத் தேவைகளுக்குத் தமிழ்மொழியை அறிந்திருக்க வேண்டும். எனவே வடமொழியும் தமிழும் தெரிந்திருந்த மக்கள் சிலராவது சங்காலத்தில் இருந்திருக்க வேண்டும் என்று முடிவுகட்டுவது தவறாகாது. அவர்கள் வடமொழியைத் தாய் மொழியாகவும் தமிழைப் பிறமொழியாகவும் கற்றுக் கொண்டிருக்க வேண்டும் என்பதால் அவர்களுடைய இருமொழியத்தை (Bilingualism) வடமொழி-தமிழ் இருமொழியம் என்று குறிப்பிடலாம்.

கபிலர் போன்ற புலவர்கள் தங்களை அந்தணர்களாகக் குறிப்பிட்டுள்ளார்கள். மேலும் கோத்திரத்தால் பெற்ற பெயருடைய புலவர்களும் வேறுபலரும் அந்தணப் புலவர்களாகக் கருதத் தகுந்தவர்கள் என்று மேலே (6.3.5.) குறிப்பிட்டோம். இவர்களுக் கெல்லாம் வடமொழி தெரியுமா? வடமொழி தெரியும் என்றால் வடமொழியை எப்படிப் படித்தார்கள் (இவர் களில் சிலருக்கு வடமொழி அறிவு இருந்திருக்கிறது. என்பது அவர்கள் கையாண்ட கடன் மொழிபெயர்ப்புச் சொற்களால் உணர முடிகிறது. உதாரணத்துக்குப் பின்பகுதியைப் பார்க்கவும்) அவர்களுடைய வடமொழித் திறன் எவ்வளவு ஆழமானது என்ற கேள்வியெல்லாம் எழுகின்றன.

புறநானூற்றுப் பாடல்களில் வான்மீகியார் என்ற பெயருடைய புலவர் ஒருவர் (புறம்.358) பாடிய பாடலுக்கும் வான்மீகி இராமாயணத்தின் அடிப்படைக் கருத்துக்கும் கருத்து ஒற்றுமை காணப்படுவதால் புறம்பாடிய வான்மீகியாரே சமஸ்கிருதத்தில் இராமாயணம் பாடியிருக்கவேண்டும் என்றும்; வான்மீகியாருக்குத் தாய்மொழி தமிழ் என்றும் மாணிக்கம் (1986:160) கருதுகிறார். இதனுடைய உள்கிடை என்ன? தமிழர்கள் சங்ககாலத்திலேயே வடமொழியை மிகவும் நன்றாகப் படித்துக் காவியம் இயற்றுகிற அளவுக்குப் புலமை பெற்றிருந்தார்கள் என்பதே அவருடைய கருத்தின் உள்கிடை.

இது எவ்வளவு தூரம் ஏற்றுக்கொள்ளக் கூடியது என்பது தெரியவில்லை. என்றாலும், சங்க இலக்கியப் புலவர்கள் சிலருக்கு வடமொழி அறிவும் உண்டு என்பதை யாரும் மறுக்க முடியாது. எனவே அவர்களைத் தமிழ் – வடமொழி இருமொழியம் உடையவர்களாகக் கருதலாம்.

தொல்காப்பியர், இளங்கோவடிகள். திருவள்ளுவர் போன்றவர்களும் வடமொழி அறிவு பெற்றவர்கள் என்பது இன்று பலராலும் ஒத்துக்கொள்ளப்படுகிறது. எனவே தமிழ் – வடமொழி இருமொழியுமே தமிழில் வடமொழிச்சொற்கள் புகுந்ததற்கு முதலாவது காரணம் ஆகும்.

### 6.4.2. சொற்களஞ்சியத் தாக்கம்

இன்னொரு மொழியோடு தொடர்பு ஏற்படும் போது இருமொழியம் ஏற்பட்டு மொழியமைப்பில் முதன்முதலில் சொற்களஞ்சியத்தில்தான் தாக்கம் ஏற்படும். சொற்களஞ்சியக் கடனாட்சியை அடிப்படையாகக் கொண்டே மொழி அமைப்பில் பிறநிலைகளில் தாக்கம் அமையும்.

பொதுவாக வடமொழிச் சொற்கள் என்னென்ன? அவை எப்படி தமிழாக்கம் செய்யப்பட்டன என்பது பற்றியே அனவரத விநாயகம் பிள்ளையும் (1919) வைத்தியநாதனும் (1971) விரிவாக ஆராய்ந்துள்ளார்கள். வைத்தியநாதன் கடனாண்ட சொற்களின் பொருட்புலன்கள் (Semantic fields) பற்றியும் குறிப்பிட்டுள்ளார்.

### 6.4.3. மறுகடனாட்சி

சங்க இலக்கியத்தில் வடமொழிச் சொற்களில் ஏமம் ல சேமம் என்று இரண்டு வேறு வடிவத்துடன் ஒரே சொல் காணப்படுகிறது. இதை வரலாற்று மொழியியலில் மறுகடனாட்சி (Reborrowing) என்று குறிப்பிடுவார்கள். அதாவது, பிறமொழியிலுள்ள ஒருசொல் இரண்டு வேறு காலகட்டத்தில் கடனாளப் பட்டிருக்கவேண்டும் என்றும் அதனாலேயே இரண்டு

வேறு வடிவங்கள் காணப்படுகின்றன என்றும் வரலாற்று மொழியியலாளர் விளக்குவார்.

வடமொழியிலிருந்து தமிழில் காணப்பட்ட சொற்கள் இரண்டு வித வடிவங்கள் இருப்பதற்கு மறுகடனாட்சியே என்று பர்ரோ (Borrow: 1947) குறிப்பிட்டு, அது எப்படி நேர்ந்தது என்பதையும் விளக்கியுள்ளார்.

ஏமம் (புறம். 3:3) - சேமம் (புறம். 102:5)
'பாதுகாப்பு'

ஆவம் (புறம். 14:8: - சாவம் (புறம். 14:9)
போர் (புறம். 323:5 'அம்பு' முதலியன.
அம்பறாத்தூணி—கபிலர்)

உயிரெழுத்துகளில் தொடங்கும் சொற்கள் காலத்தால் முந்தி கடனாளப்பட்ட சொற்கள் என்றும், சகர மெய்யை முதலாகக் கொண்ட சொற்கள் பின்னால் கடனாளப்பட்ட சொற்கள் என்றும் பர்ரோ (1947:155)[3] விளங்கியுள்ளார். ஏனென்றால் உயிரெழுத்தை முதலாக உடைய வடமொழிச் சொற்கள் பிற திராவிடகுறிப்பாகத் தென்திராவிட மொழி களில் காணப்படுவதாலும், தென்திராவிட மொழிகளில் உள்ள இனச் சொற்களிலும் சொல்லுக்கு முதலில்வரும் சகரம்கெட்டுப் போகும் தன்மை காணப்படுவதாலும் சகரமெய்கெட்டு உயிரெழுத்தில் துவங்கும் சொற்கள் தொல்தென்திராவிடத் திலேயே கடனாளப்பட்டிருக்க வேண்டும். இதற்குச் சான்றாக எல்லாத் தென்திராவிட மொழிகளும் ஐந்து, ஆறு என்னும், இரண்டு எண்ணுப் பெயர்களும் உயிரெழுத்தில் ஆரம்பிக்கப் நடு திராவிட மொழிகளில் சகரமெய் முதலாக உடையதாக இருப்பதால் தொல்திராவிடத்தில் அந்த இரண்டு எண்ணுப் பெயர்களும் சகரமெய்யை முதலில் பெற்றிருக்கவேண்டும் என்பார்கள் ஒப்பிலக்கண ஆசிரியர்கள். இவைபோன்று இன்னும் பல சொற்களைக் காட்டி தென்திராவிடமொழிகளில் சொல் லுக்கு முதலில் வரும் சகரமெய் கெடுவது ஒரு மாற்றமாக, இருந்திருக்க வேண்டுமென்று முடிவு செய்துள்ளார்கள் எனவே சகரமெய் சொல்லுக்கு முதலில் இல்லாததால் வடமொழி

மூலத்தில் சகர மெய்யை உடைய சொற்கள் தொல் தென் திராவிட காலத்திலேயே கடனாளப்பட்டிருக்க வேண்டும் என்றும், சகரத்தை முதலாக உடைய வடமொழிச் சொற்கள் பின்னரே கடனாளப்பட்டிருக்க வேண்டும் என்றும் கொள்ள வேண்டும். இது இரண்டு வரலாற்று உண்மைகளை விளக்கு கின்றது. ஒன்று: திராவிட மொழிகள் அந்தந்த மொழி வரலாறு ஆரம்பிக்கும் காலத்துக்கு முன்னரே–தொல் தமிழ் காலத்துக்கு (Pre - history) முன்னரே வடமொழியோடு தொடர்பு ஏற்பட்டிருக்க வேண்டும் என்பது. இரண்டு: வட மொழித் தொடர்பு நீடித்துவந்து, வடமொழி அறிவு பெருகியதால் திரும்பத் திரும்ப வடமொழிச் சொற்கள் கடனாளப்பட்டன, அதாவது, தொடர்பும், மதிப்பும் நீடித்து வந்தன என்பது.

### 6.4.4. கடனாட்சி

பொதுவாக, ஒரு மொழித் தொடர்பு ஏற்படும்போது அந்த மொழியிலுள்ள சிறப்பான பொருள்களையும் கருத்து களையும் குறிக்கும் சொற்களை அப்படியே கடனாள்வது உண்டு. அவை 'கடன்சொற்கள்' (Loan words) என்று அழைக் கப்படுகின்றன. அதாவது சொல்லைக் கடனாள்வது-கடனாட்சி (Borrowing) என்றும் அப்படிப்பட்ட கடனாண்ட சொற்களைக் 'கடன் சொற்கள்' என்றும் அழைப்பார்கள். அப்படிச் சொற் களைக் கடனாளும் போது சொல்லின் மூலவடிவம், கடனாளும் சமயத்தில் இருக்கும் மொழி அமைப்புக்கேற்ப மாறலாம். இதனால் ஒரு மொழியிலிருந்து பலவேறு காலகட்டத்தில் சொற்களைக் கடனாளும்போது அந்தக் காலகட்ட மொழி அமைப்புக்கு ஏற்ப வடிவங்களை மாற்றிக் கொண்டு கடனாளும் வீரசோழிய ஆசிரியர் ś என்பது ச,ய என்று இரண்டு விதமாகத் தமிழாக்கப்படும் என்று கூறியதை அந்த சொற்கள் இரண்டு வேறு காலகட்டத்தில் கடனாளப்பட்டிருக்கவேண்டும் என்று வரலாற்று மொழியில் விளக்க வேண்டும்.

### 6.1.4.1. தேவை

சொல்லையே கடனாளுவது தேவை கருதியது என்று அதற்கு ஒரு காரணம் கூறப்படும்.

சங்கத் தமிழில் உள்ள வடமொழிச் சொற்களில் வைத்திய நாதன் (1971) சமயசம்பந்தமாக 216 சொற்களும் இயற்கை சம்பந்தமாக 93 சொற்களும் கடனாளப்பட்டுள்ளாதக் குறிப்பிட்டுள்ளார். இந்தக் கணக்கில் சங்க மருவியநூல்களான குறள், சிலம்பு, மேகலை ஆகியவற்றையும் சேர்த்துள்ளார்.

அமரர், அந்தி, இந்திரர், கபிலர், பூதம், அரக்கன், வாணன், தவம், ஆவுதி, மத்திரம், தூமம் போன்றவை சமயத்தொடர்பான சொற்களும் சிறப்புப்பெயர்களான வடநாட்டு ஊர்ப்பெயர்கள் (பாடலி) ஆறு (கங்கை), மலை (இமயம்), அரசர்கள் (நந்தர்கள், கங்கர், மோரியர்கள்) விலங்கு (ஒட்டகம்) ஆகியவைகளும் கடன் சொற்களாகக் காணப்படுகின்றன. ஆனால் கடனாளப்பட்டுள்ள எல்லாச் சொற்களும் தேவை காரணமாக - புதியகருத்து புதியபொருள் என்றதன் காரணமாக - கடனாளப்பட்டது என்று கூறமுடி யாது, அப்படி தேவை இல்லாமல் சொல்லைக் கடனாள்வது நாகரிகம் கருதியது என்பார்கள். அதாவது, அந்தமொழி உயர் வாகக் கருதப்பட்டதால், நாகரிகம் கருதி தேவையில்லாமலும் சொற்கள் கடனாளப்பட்டது என்று பொருள்.

### 6.2.4.2 நாகரிகம்

வில் என்ற சொல் சங்க இலக்கியத்தில் 100 தடவைக்கு மேல் கையாளப்பட்டிருக்கும் இயற்சொல். ஆனால் அதே பொருளை உடைய சாவம் என்ற வடசொல் ஏழு தடவை பயன்படுத்தப்பட்டுள்ளது நாகரிகம் கருதி கடனாளப்பட்ட சொல். எனவே, சங்க இலக்கியத்தில் எத்தனை சொற்கள் இப் படித் தேவையில்லாமல் நாகரிகம் கருதி கடனாளப்பட்டிருக் கிறது என்றும் கணக்கிடவேண்டும்.

சில சமயங்களில் தேவையில்லாமல் கடனாளப்பட்டதாகக் கருதப்படும் சொற்கள் பொருள்புல மாற்றத்தால் தேவை யானதாகவும் அமைந்துவிடும்.

அங்கி என்பது தீயைக் குறிக்கும் சொல். தீ என்ற சொல் 50 தடவைக்குமேல் எல்லாத் தொகை நூல்களிலும் கையாளப் பட்டுள்ளது. அங்கி என்பது பட்டினப்பாலை, பரிபாடல், கலித் தொகை சிலம்பு, மேகலை ஆகிய நூல்களில் மட்டுமே காணப் படுகிறது. எனவே, பட்டினப்பாலை பாடிய அந்தணராகக் கருதப்படும் கடியலூர் உருத்திரங்கண்ணனார்தான் இலக்கி யத்தில் முதலில் பயன்படுத்தியுள்ளார்.

அவிர்சடை முனிவர் 'அங்கி வேட்கும்' என்ற அடியைப் (5-4) பார்க்கும்போது சொல் சூழலே வடமொழிக் கருத்தை ஒட்டியது என்பது புலனாகிறது. மேலும் 'வேள்வித்தீ' என்று சிறப்புப்பொருள் கொடுத்தால் அது சமய சம்பந்தமான சொல்லாக மாறித் தேவை காரணமாக கடனாளப்பட்டது என்று கொள்ளும்படி அமைந்துவிடும். இது ஒரு பிராகிருதச் சொல். இங்கு இன்னொன்றும் சுட்டிக்காட்டத்தகுந்தது. கருத் துச் சூழலே கடன் சொல்லைப் பயன்படுத்தத் தூண்டியிருக் கலாம் என்பதே அது.

சினம் என்ற சொல்லுக்குப் பதிலாக 'வேகம்' என்ற வடசொல் புராணச்செய்தியை விவரிக்கும்போதே கையாளப் பட்டுள்ளது. 'நஞ்சுடை வாலெயிற்று ஐந்தலை சுமந்த வேக வெந்திற(ல்) நாகம்' என்பது ஆதிசேடனைப் பற்றியது (புறம்.37.2). இந்தத் தொடரில் 'வேகம்' என்பது தவிர ஏனையவை தமிழ்ச் சொற்களே. புராணத் தொடர் பால் தடுக்க முடியாத படி ஒரு வடசொல்லை மாறோக்கத்து நப்பசலையார் கலந்துவிட்டார் போலும். கருத்துச் சூழலுக்கும் அங்கு கையாளும் சொல்லுக்கும் ஒருவித உறவு இருக்கிறது என்பதை இவை புலப்படுத்துகின்றன.

மாறாக இன உணர்ச்சி அதிகமாக வலியுறுத்தும் இடத்து கடன் சொல்லாக அமைய வேண்டியதும் உள்நிலை ஆக்கமாக அமைந்துள்ளது குறிப்பிடத்தகுந்தது. 'ஆரியர் அலறத்தாக்கிப், பேரிசை தொன்று முதிர் வடவரை வணங்கு விற்பொறித்து, வெஞ்சினவேந்தனைப் பணித்தோன்' என்று (அகம்.396.16-19) தமிழ்அரசர் வீரம் பேசும்போது இமயம் என்ற கடன்சொல்

லைப் பரணர் கையாளாமல் 'தொன்று முதிர் வடவரை' என் உள்நிலை ஆக்கமாகத் தொடரைக் கையாண்டதும் கருத்து வெளிப்பாட்டுக்கும் அதை உணர்த்தும் சொல்லுக்கும் உள்ள உறவு இருப்பதை வலியுறுத்தும். ஆனால் பரணர் நற்றிணை யில் (386.3) 'இமயம்' என்பதைக் கடன் சொல்லாகப் பயன் படுத்தியுள்ளார் (அன்னம்...இமயத்து உச்சி வானரமகளிர்க்கு மேவல் ஆகும்). எப்படியானாலும் சங்கப்புலவர்கள் தமிழ்ச் சொற்கள் இருக்கும்போது வடசொல்லை வேறுவேறு காரணங்களுக்குப் பயன்படுத்தியுள்ளார்கள் என்பது தெளிவா கிறது.

செலவு என்ற பயணத்தைக் குறிக்கும் சொல்லாகக் குறுந் தொகை (22:4), நற்றிணை (79:10) முதலிய அகநூல்களிலும் செல்லுதல் என்ற பொதுப்பொருளில் புறநூலிலும் (புறம் 30:1) பயன்படுத்தப்பட்டுள்ளன. ஆனால் அது ஆத்திரை (யாத் திரைஎன்பதன் திரிபு) என்று கள்ளில் ஆத்திரையார் (குறுந். 293:1) பயன்படுத்தியுள்ளார். யாத்திரை என்ற வடிவத்தையே பரிபாடலில் நப்பண்ணனார் (19:18) கையாண்டுள்ளார்.

ஞாயிறு என்ற சொல்லுக்குப் பதிலாக பரிதி என்ற வட சொல் சங்க இலக்கியத்தில் காணப்படுகிறது. அதை அந்தணர் என்று கருதக்கூடிய கடியலூர் உருத்திரங்கண்ணனாரும் (பெரும். 2) வான்மீகியாரும் (புறம்.378:1) அதே பொருளில் கையாண்டுள்ளார்கள். ஆனால் வளையம் என்ற பொருளில் 'பரிதி ஞாலம்' (புறம்.174:3) 'பரிதிவரு' (புறம்.224:71) புற நானூற்றிலும் பதிற்றுப்பத்திலும் காணப்படுகின்றன.

விண், விசும்பு, வான் ஆகிய பொருளைக் குறிக்க காயம் என்ற வட சொல்லைத் தொல்காப்பியரும் (தமிழ்ச் சொல் லின் பொருளை விளக்க வடசொல்லைக் கையாண்டுள்ளார். (விண்ணென வருஉம் காயப் பெயர் - எழுத்து. 305) குறுங் கோழியூர்கிழாரும் (புறம். 20:4) மாங்குடி மருதனாரும் (புறம். 30:4) கையாண்டுள்ளார்கள்.

நள்ளிருள் என்ற நடு இரவைக் குறிக்கும் (நற்.122.71 மலை படு. 195.) சொல்லாக சங்க இலக்கியத்தில் வந்துள்ளது. அதே

பொருளில் யாமம் என்ற வடசொல் கடன் சொல்லாக நிறைய வந்துள்ளது (அகம். 18:7, 24:15: குறுந். 32:2). தமிழ் வட மொழி கலவையாக, 'நள்ளிருள் யாமம்' என்றும் (குறுந் 107:3) வடமொழி+தமிழ் கலவையாக 'யாம இரவு' (அகம். 208:1) என்றும் கூட கையாளப்பட்டுள்ளது.

ஆ/ ஆன் என்ற தாய்மொழிச் சொல் மிக அதிகமாகப் பயின்றிருந்தும் 'பசு' என்ற வடசொல்லைக் கபிலர் (அந்தணர்க்-ஐங்கு. 271:3) மட்டுமே பயன்படுத்தியுள்ளார்.

பொன் என்பது பொதுப் பொருளாக உலோகத்தையும் சிறப்புப் பொருளாகத் தங்கத்தையும் உணர்த்தின. சங்க காலத்தில் பசும்பொன் என்ற தொகையும் அதே பொருளில் கையாளப்பட்டன. பொன் – உலோகம் என்று ஊகிக்க வேண்டியிருக்கின்றது. 'செம்பொன்' என்பது செம்பையும் (சிறுபா. 75 குறுந்.306:6) 'பசும்பொன்' என்பதைத் தங்கத்தையும் (புறம். 137: 10;நற். 151: 19, அகம். 188:1) குறிக்கப் (மதுரை. 410, பெரும்பாண். 164. புறம். 9:9, ஐங்கு. 24:2) பயன்படுத்தப் பட்டுள்ளன. ஆனால், தங்கத்தைக் குறிக்க தமனியம் என்ற வடசொல் கடன்சொல்லாகவும் கடன்கலவையாகவும் பயன் படுத்தப்பட்டுள்ளது. தமனியம் என்பதை இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனாரும் (சிறுபாண்.147) நக்கீரனாரும் (மதுரை· 704)'தமனியப் பொன்' என்று கடியலூர் உருத்திரங்கண்ணனாரும். தமனியப் பொற் சிலம்பு: பெரும் (332) கையாண்டுள்ளார்கள்.

கோழி/சேவல் என்ற சொற்கள் சங்க இலக்கியங்களில் வந்துள்ளநிலையில் வாரணம் என்ற வடசொல்லை மாங்குடி மருதனாரும் (மதுரை. 273) மருத இளநாகனாரும் (புறம்.52: 16நற்.21:8) சேரமான் வஞ்சனை திருத்தா மனாரும் (புறம்.398:3), காவிரிப் பூம்பட்டினத்து செங்கண்ணனானும் (நற்.389:8) மதுரை அளக் கர் ஞாழார் மகனார் மள்ளனாரும் (நற்.297:7) கையாண்டுள் ளார்கள். மருத இளநாகனார் 'கான வாரணம்' என்றே (புறம்

62:16) குறிப்பிட்டுள்ளார். பரிபாடலில் 'வாரணச் சேவல்' என்பது கடன்கலவையாக வந்துள்ளது. இதன் மூலம் சேவலில் புதிய வகையை வாரணம் குறித்ததாகக் கொள்ள வேண்டி யிருக்கிறது. வாரணம் என்பது யானையைக் குறிக்கக் கபிலர் கலித்தொகையில் (42: 2; 43:2) பயன்படுத்தியுள்ளார்.

குஞ்சரம் என்ற சொல் களிறைக்குறிக்கும் வடசொல். இதைத் தொல்காப்பியரும் (பொருள். 563:1), பதிற்றுப்பத்தில் காப்பியாற்றுக்காப்பியனார், பரணர் ஆகியவர்களும், அக நானூற்றில் (92:3) மதுரை பாலாசிரியர் நற்றாமனாரும், புற நானூற்றில் கோவூர்கிழாரும் (308:1)பயன்படுத்தியுள்ளார்கள். கோவூர்கிழார் அதே பாடலில் யானை (6 வது அடி) என்ற சொல்லையும் கையாண்டுள்ளதால் இங்கு நடை அழகுக்காகக் குஞ்சரம் என்ற சொல்லைக் கையாண்டாரோ என்று நினைக்க வேண்டியிருக்கிறது. (புறம்.308.6 – 11,12)

வேந்தூர் யானை ஏந்து முகத்ததுவே
... ... ... ...
புன்றலை மடப்பிடி நாணக்
குஞ்சரமெல்லாம் புறங்கொடுத்தனவே

என்ற அடிகளில் இந்த உண்மையை உணரலாம்.

இப்படிப்பட்ட கடன்சொற்கள் என்ன காட்டுகின்றன? புலவர்களின் வடமொழி அறிவை உணர்த்துவதோடு அன்றைய தமிழ்மொழிச் சமூகத்தில் வடமொழி ஓரளவு மதிப்பு பெற்றி ருந்தது என்பதையும் புலப்படுத்த வில்லையா?

பதாகை என்ற சொல்லைக் கடியனார் உருத்திரங்கண்ண னார் என்ற அந்தணரும் மாங்குடி மருதனார் என்ற வேளாள ரும் சங்க இலக்கியத்தில் பயன்படுத்தியுள்ளார்கள். பட்டினப் பாலையில் மதுரைத்தெருக்களில் பலவகைக் கொடிகள் கட்டப் பட்டிருப்பதை வருணிக்கும்போது கடியலூர் உருத்திரங் கண்ணனாரே கொடி என்ற சொல்லை நான்கு தடவை பயன் படுத்தி விட்டே, (168,171,175,180)'பல்வேறு உருவிற் பதாகை நீழல்' என்ற (182) கடைசியில் பதாகை என்ற வட சொல்லை பயன்படுத்தியுள்ளார். எனவே, மீண்டும் மீண்டும் ஒரே சொல்

லைக் கையாளக் கூடாது என்று நடையியல் கோட்பாட்டை ஒட்டி பதாகை என்ற சொல்லைக் கையாண்டிருக்கலாம் என்று கொள்ளலாம். ஆனாலும் அந்தச் சொல் முன்னரே பேச்சு வழக்கில் இருந்திருக்க வேண்டுமென்று ஊகிப்பது தவறு ஆகாது.

மாங்குடி மருதனாரும் கொடி என்ற சொல்லை மதுரைக் காஞ்சியிலேயே ஐந்து தடவை (366,368,370,371,372,) பயன் படுத்திவிட்டு 'பல்வேறு குழூஉக் கொடி பதாகை நிலைஇ' என்று (372), இறுதியில் கையாளுவதால் நச்சினார்க்கினியர் 'பெருங் கொடி' என்று பொருள் எழுதியுள்ளார். இங்கு மீமிசைச் சொல்லாக வந்தாலும் பிறமொழிச் சொல் – தாய்மொழிச் சொல் (கேட் வாசற்படி, ஷாப்கடை) என்ற முறையில் வராமல் தாய்மொழிச் சொல்-பிறமொழிச் சொல் என்று வந்துள்ள தால் சிறப்பு என்ன என்று ஆராயத் தகுந்தது. எனவே, இங்கு ஒரு செய்தி சுட்டிக்காட்டத் தகுந்தது. அதாவது, தேவையில் லாமல் நாகரிகம் கருதிக் கடனாளப்பட்ட சொற்கள் பொருள் மாற்றம் செய்து நுண்பொருள் உடையதாக அமைக்க முயலு வது மொழியின் இயல்பு ஆகும் என்பதே.

தேவையில்லாமல் வாங்கும்போது தனிச்சொல்லாகக் கடனாளாமல் தொடராக – அதுவும் கடன்மொழி பெயர்ப் பாகக் கடனாளுவது அந்த மொழியில் புலமை இருந்ததைக் காட்டுவதாகக் கொள்ளலாம்.

செருப்பு என்ற சொல் சங்க இலக்கியத்தில் (பதிற்.21:23; அகம். 129:13; புறம்.257:1) கையாளப்பட்டுள்ளது. ஆனா லும் கடியலூர் உருத்திரங்கண்ணனார் என்ற அந்தணப் புல வர் பெரும்பாணாற்றுப்படையில் (69) 'அடிபுதை அரணம்' என்ற தொடரை அந்தப்பொருளில் கையாண்டுள்ளார். இங்கு அரணம் என்பது வடசொல். இந்தத்தொடர் 'பாதரட்சை' என்ற சொல்லின் மொழிபெயர்ப்பு என்று உ.வே.சா. அடிக் குறிப்பில் குறிப்பிட்டுள்ளார். மொழி பெயர்ப்பு என்பதைவிட கடனாக்கம் என்பதே பொருத்தமாகவும் இருக்கும். வட மொழியில் பெயர்ச்சொல்+தொழிற்பெயர் என்று இருக்க

பெயர் சொல்+வினையடி+பெயர்ச்சொல் என்ற முறையில் அமைந்துள்ளது. இதன்மூலம் கடியலூர் உருத்திரங்கண்ணனார் வடமொழி அறிவு உடையவர் என்று ஊகிக்கலாம்.

### 6.4.5. உள்நிலை ஆக்கம்

பிற மொழித் தொடர்பு ஏற்பட்டுப் புதுக் கருத்துகளும் புதுப் பொருளும் (Object) பழக்கத்துக்கு வருகிறபோது கடன் சொற்களாகக் கையாளாமல் உள்நிலை ஆக்கமாகவும்(Internal creation)-கடன் நீட்சியாகவும் (Loan extention),கடன் மொழி பெயர்ப்பாகவும் – கடனாக்கமாகவும் மூன்று வகையில் சொற்களைப் படைத்துக் கொள்ளலாம். மேலும் கடன் கலவை (Loan blend) என்று இன்னொரு வகையையும் இதில் அடக்கலாம்.

கடன் நீட்சி என்பது மொழியில் முன்னரே சொற்களைப் புதிய பொருளில் கையாள்வது. இது அறிஞர்களால்-இரண்டு மொழி அறிவு உடையவர்களால் படைக்கப்படுவதாகக் கொள்ள வேண்டும். கடன் மொழிபெயர்ப்பு என்பது பிற மொழியிலுள்ள தொடர்களைச் சொல்நிலையில் மொழி பெயர்ப்பது. இதற்கும் இரண்டு மொழி அறிவு வேண்டும். கடனாக்கத்துக்கு அந்தப் பொருளைப்பற்றிய அறிவு இருந்தால் போதுமானது. ஒரு மொழியாளரே கடனாக்கம் செய்ய முடியும். எனவே, கடன் சொல், கடன் நீட்சி, கடன்மொழி பெயர்ப்பு செய்தால் பிறமொழி அறிவும் இருக்கவேண்டுமென்று ஊகிக்கலாம். இங்கு இப்படிப்பட்ட சொற்களைக் கொண்டு, சங்கப்புலவர்களின் மொழி அறிவுபற்றியும் ஊகிக்கும் முயற்சி மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. கடன் கலவைக்குரிய உதாரணங்கள் மேலே காட்டப்பட்டன.

உள்நிலை ஆக்கம் மொழியளவில் ஒரு தூய்மைவாதத்தின் பிரதிபலிப்பு; கருத்து கடனாக இருந்தாலும் அதைக் குறிக்கும் சொல் தாய்மொழிச் சொல்லாக இருக்கவேண்டும் என்ற எண்ணத்தினால் ஏற்படுவது. இங்கு மாறுபட்ட கருத்துமுரண் சமூகத்தில் இருப்பதைக்காணலாம். ஒருபக்கம் தமிழில் இருக்

கும் சொற்களுக்கும் பிறமொழிச் சொற்களைக் கடனாளுவது; இன்னொருபக்கம் பிறமொழி கருத்துகளைக் கையாண்டாலும் சொல் தூய்மையைப் போற்றி உள்நிலை ஆக்கமாகச் சொற்களைப் படைத்துக் கொள்வது. வைதீகச் சமயக் கடவுள் பெயர்கள் பல உள்நிலை ஆக்கமாகப் படைக்கப்பட்டுள்ளன. எனவே, சங்க காலத்தில் இருந்த சமூக முரண்பாட்டின் பிரதி பலிப்புதான் சொல்லாக்கத்தில் காணப்படும் முரண்.

**6.4.5.1. கடன் நீட்சி**

| | பழையபொருள் | புதியபொருள் |
|---|---|---|
| மறை | ரகசியம்-மறையவர் ஆதல்-குறுந்.97:4 | (நான்)மறை-புறம் 6:20 அருமறை-முருகு. 186 'வேதம்' |
| கேள்வி | காதாற்கேட்டல் புறம்.167.4,360.2 | சுருதி புறம்.361:4 |
| வேள்வி | விரும்பிச்செய்வது | யாகம் புறம்.361:4 மதுரை.360 |
| வேட்டல் (வினை) | வேட்டாங்கு பெரும்.449 | வேட்கும் 'யாகம் செய்யும்' பெரும்.498 |
| வேந்தன் | அரசன் புறம்.11.7-பட்டின.293 | இந்திரன் தொல்.அகத்.5.3 |
| வெள்ளி | உலோகம் புறம்.390:18,11:18 | நட்சத்திரம் புறம்.32:1 பதிற்.24:24 |
| உயர்ந்தோர் | தலைமக்கள் தொல்.பொருள்.33:1 | உயர்ந்தோர் (உலகம்) 'தேவர்' புறம்,214:10 பதிற்.74:2 |
| நெடியோன் | உயர்ந்தோன் 'பாண்டியன்' மதுரை.61 | நெடியோன் கோயில் 'இந்திரன்கோயில்' புறம்.214:3 |

| | | |
|---|---|---|
| | | நெடியோன் 'கடல் தெய்வம்' புறம்.9:10 |
| | | நெடியோன்- 'திருமால்' பதிற்.15:39 பெரும்.402 |
| | | நெடியோன் குன்று புறம்.114:6 அகம்.149;6 |
| தென்னவன் | பாண்டியன் புறம்.388:13 பட்டின.277 | இராவணன் மதுரை.40 |
| ஆடு (யாடு) | விலங்கு மலை.416 | மேடராசி நெடு.160 புறம்.228:1 |
| மேலோர் | உயர்ந்தவர்/ மேலே உள்ளவர் மதுரை.381 | தேவர் புறம்.240:6 |

9.4.5.2. (கடன்)மொழி பெயர்ப்பு

மொழி பெயர்ப்பாக வடமொழிச் சொற்கள் கையாளப் பட்டுள்ளதையும் வைத்தியநாதன் (1971) சுட்டிக்காட்டியுள் ளார். கடன் மொழி பெயர்ப்பு பிறமொழி அறிவைப் புலப் படுத்தும். மேலும் அது இருமொழியும் நீண்டகாலமாக இருந் தது என்பதை உணர்த்தும் என்று கூறி அதற்கு நிலை இரு மொழியம் (Stable bilingualism) என்றும் வெயின்ரிஷ் (Weinreich, 1953) குறிப்பிடுவார். இரு பிறப்பாளர் ('அந்தணர், பார்ப்பார்'- இருபிறப்பு-dvijanmam) புறம். 367:12 – ஔவை யார், முருகு. 182 – கபிலர். அந்தணர், பார்ப்பார் என்ற சொற் கள் இதே பொருளில் சங்க இலக்கிய நூல்களில் கையாளப் பட்டுள்ளது.

பனிபடு நெடுவரை (புறம்.6.1 காரிக்கிழார்) – இமயமலை.

ஹிமயம் என்பது பனி என்ற பொருள் உடையது. எனவே மொழி பெயர்ப்பாகக் கருதலாம். இமயம் – என்பதை கடன் சொல்லாகவும் (புறம்.2:24;34:21) கையாளப்பட்டுள்ளது. ‘பனிவார் சிமையம்’ என்று (பனி ஒழுகுகிற மலை) பொதுப் பொருளிலும் மதுரைக்காஞ்சியில் (148. பனிவார்சிமையக் கானம் போகி) காணப்படுகிறது. முக்கட் செல்வர் – ‘சிவன்’ – trinayana த்ரிநயன-மூன்று கண்(புறம். 6.181)முக்கட் செல்வன் (அகம்.181.16) – பரணர். கலித்தொகையில் முக்கண்ணான் (2:4,:04:12) என்றே வந்துள்ளது. இவையெல்லாம் கடன் மொழிபெயர்ப்புகளே. இவை கையாண்ட புலவர்களின் வட மொழி அறிவை ஓரளவு புலப்படுத்துகின்றன.

### 6.4.5·3. கடன் சொற்களும் உள்நிலை ஆக்கமும்

கடனாக்கம் என்பது புதியதொகைச் சொற்களை உருவாக் குவதே. புதிய தொகையை உண்டாக்கும்போது மூலமொழி குறிக்கும் பொதுப்பொருளைக் குறிக்கும் சொல் காணப்படும். எனவே, சிறப்புப்பொருளைக் குறிப்பதற்கு அடையாக இன் னொரு சொல் முதலில் சேர்க்கப்பட்டிருக்கும். எனவேதான் மூலமொழியில் தனிச் சொல்லாக இருப்பதும் தாய்மொழியில் புதிய தொகையாக ஆக்கப்படுவதும் ஆகிய இரண்டு நிலை களைக் காணமுடிகிறது.

யூபம் என்பது யாகசாலையில் நடப்படும் தூண். இதைக் கடன் சொல்லாகப் புறநானூற்றில் (15:21) நெட்டிமையார் பயன்படுத்தியுள்ளார். ஆனால் இதைக் கடனாக்கமாக ‘வேள் வித் தூண்’ என்று கோவூர்கிழாரும் (புறம்.400:19) வேள்வி... அருங்கடி நெடுந் தூண் என்று (அகம்.220 – 8) மருதன் இளநா கனாரும் ‘யூபநெடுந்தூண்’ என்று கடன் கலவையாகக் கருங் குழலாதனாரும் (புறம்.224.8) பயன்படுத்தியுள்ளார்கள்.

‘அவி’ என்பது வேள்வியில் இடப்படும் உணவுப் பொருள். அது பரிபாடலில் தான் (5.71) கடன் சொல்லாக உள்ளது. கடன் கலவையாக ‘அவி உணவு’ (அவி உணவினோர்– ‘தேவர்’ என்று புறநானூற்றில்(377:5) உலோச்சனார்(சமணர்)கையாண்

டுள்ளார். இதை 'நாற்ற உணவு' என்று மாங்குடி மருதனார் (மதுரை. 458). கடனாக்கமாகக் கையாண்டுள்ளார்.

தனியாகக் கடன்தாக்கம் இல்லாமல் எல்லா மொழியிலும் புதிய கருத்துகளைக் குறிக்கத் தொகைச் செல்லாக்கம் செய்யப்படும். இது அகநிலை வளர்ச்சியால் ஏற்படுவது ஆகும். வாழ்நாள் என்பது அப்படிப்பட்ட சொல்லே.

'வாழ்நாள் வகையளவு அறிஞரும் இல்லை' (நற்.314:2);
'வாழ்நாள் அறியும்' (பதிற்.89:18).

இந்தப் பொருள் ஊழி, வைகல் என்ற தமிழ் மொழியிலுள்ள தனிச்சொல்லாலும் குறிக்கப்பட்டுள்ளது.

'வாழ்தல் வேண்டும் இவண் வரைந்த வைகல் (புறம் 367-9)

'வரைந்து நீபெற்ற நல் ஊழியையே' (மதுரை.782).

இந்த இரண்டு சொற்களும் வேறு பொருளையும் குறிக்கும்.

வைகல்—கழிதல்(புறம்.359:9,363:16)
—நாள்(பொருநர்,158)
ஊழி—யுகம் (முருகு.164)
—காலம் (மதுரை. 21)

தொகைச் சொல்லை நீக்கும் பொருட்டோ அல்லது பல பொருள் ஒரு சொல்லைத் தவிர்க்கும் பொருட்டோ 'ஆயுள்' என்ற வடமொழிச் சொல் குடபுலவியனாராலும் (புறம்.18: 6), தாமப்பல் கண்ணனாராலும் (அந்தணர்-புறம்.43:21) மருதன் இளநாகனாராலும் (அகம். 184.4) கையாளப்பட்டுள்ளது.

'பொன்செய் கொல்லர்' என்ற தொடர் இன்றைய தட்டாரைக் குறிக்கும். அதை ஔவையார் (நற்.394:3) பயன்படுத்த, கம்மியன் என்ற வடசொல்லை நக்கீரனாரும் (நெடுநல். 57;85), காரிக்கண்ணனாரும் (புறம். 353:2) பயன்படுத்தியுள்ளார்கள். கடன் கலவையாகப் 'பொன்செய் கம்மியன்' என்று பொன்கொல்லன் வெண்ணாகனாரே (நற்.313.2) கையாண்டுள்ளார். அதே தொழில் செய்யும் குலத்தைச் சேர்ந்தவரே 'கொல்லன்' என்ற தமிழ்ச் சொல்லை விரும்பாமலும், கடன்

சொல்லை ஆதரிக்காமலும் ,கடன்கலவையை ஆதரித்துள்ளதன் உள்கிடை என்ன?

யானைப்பாகன் கையில் வைத்திருக்கும் கோலைக் 'கவை முட்கருவி' என்று நப்பூதனார் (முல்லை. 35) கூற 'அங்குசம்' என்ற வடசொல்லை (முருகாற்றுப்படை 110) நக்கீரர் கையாண்டுள்ளார். இது பிறநாட்டுக் கருவி யென்றால் கவை முட்கருவி என்பது கடனாக்கம் ஆகும். கருவி என்பது வட மொழி என்பதால் உண்மையாகக் கடன்கலவையாகக் கூடக் கருதலாம்.

இந்த நிலையில் நட்சத்திரங்கள் பற்றிய பெயர்கள் காட்டும் மொழியியல் உண்மையும் வரலாற்று உண்மையும் சிறப்பாக அறியத்தகுந்தது. தமிழில் காணப்படும். தொன்னாண்மீன் (தொல் நாள்மீன்) 'மிருகசீரிஷம்', (புறம்.229.8) நிலைநாள் மீன் 'மூலம்' (புறம்.229.7), தலைநாள் மீன் 'உத்தரம்' (புறம். 229.6) ஆகிய பெயர்கள் தமிழ்த் தொகைச் சொற்களே.இவை நட்சத்திரங்களின் பெயர்கள் அல்ல. பங்குனி மாதத்தில் முதல் பருவத்தில் நட்சத்திரங்கள் இருக்கும் நிலையைக் குறிக்கும் என்று ஹார்ட் (Hart, 1975:74)[4] கூறுவார். இவை காரணப் பெயர்களாக அமைந்தவை. எனவே, அசுவனி, பரணி, கார்த் திகை போன்ற 27 நட்சத்திரங்கள் பெயர் கடன் சொற்களாக வாங்கப்பட்டன. அதனால், தொல்காப்பியரும் நட்சத்திரப் பெயர்கள், இ,ஐ,ம் ஆகிய மூன்று இறுதி எழுத்துகளைக் கொண்டு முடியும் என்று குறிபிட்டுப் (எழுத்து, 247,286,331) புணர்ச்சிவிதியும் கூறியுள்ளார். எனவே, தமிழர்கள் வானவியல் அறிவிலிருந்து வடமொழியாளர் வானவியல் முறை மாறு பட்டது போலும். மேலும் பிற மொழிச் சொற்கள் இடுகுறி யாக அமைந்ததாலும் நட்சத்திரப் பெயர்களைக் குறிக்கும் வட 'மொழிச் சொற்களைக் கையாண்டிருக்க வேண்டும். குளமீன் 'புனர்வசு' (புறம். 395:35, நக்கீரர்) என்பதைக் கடனாக்க' மாகவோ, தமிழில் முன்னரே அமைந்த காரணப் பெயராகவோ கருதலாம். பிற நட்சத்திரப் பெயர்களிலும் காரணப் பெயர் களாகவோ, கடன் மொழிபெயர்ப்பாகவோ கருதலாம்.

| | | |
|---|---|---|
| வெண்மீன் | வெள்ளி-சுக்கிரன் | பட்டின. 1 |
| மைம்மீன் | சனி - | புறம். 117.1 |

| | | |
|---|---|---|
| செம்மீன் | செவ்வாய் | புறம். 60:2 |
| சிறுமீன் | அருந்ததி | பெரும்.303 |
| வடமீன் | ,, | புறம்.122.8 |

எனவே, பிற்காலத்தில் வடமொழிச் சொற்கள் பெரு வழக்கு ஆவதற்கு இடுகுறிப் பெயராகவும் ஒரு அறிவியல் துறையைச் சேர்ந்ததாகவும் அமைந்ததே காரணம் என்றும் நினைக்க வேண்டியிருக்கிறது.

கடவுளர் பெயர்களும் உள்நிலை ஆக்கமாகக் கையாளப் பட்டுள்ளன: வச்சிரத்தடக்கை நெடியோன் – 'இந்திரன் (புறம்.241.3 ஏணிச்சேரிமுட மோசியார்) மழுவாள் நெடி யோன்- 'பரசுராமன்' (அகம்.220.5- மதுரைமருதன் இளநாக னார்); 'சிவன்' (மதுரை.455- மாங்குடி மருதனார். நாஞ்சில் பானைக்கொடியோன் – 'பலராமன்' (புறம்.56.4 நக்கீரனார்.) எனவே, சமயச் செல்வாக்கிலும் சொல்தூய்மை பின்பற்றப் பட்டுள்ளது.

சங்ககாலத்தில் சமூகநிலையில் பிறமொழித் தொடர்பு ஏற்பட்டபோது, பிறமொழி பேசும் எல்லாச் சமூகத் தோரும் சுமுகமான உறவு இல்லை. ஆரிய அரசர்களே பகை வர்களாகக் கருதப்பட்டார்கள். அதைப்போலவே அறிவுத்துறை யில் வடமொழி நூல்களில்வேதத்தை ஒரு சிலர் மிக உயர்வாகக் கருத வேறுசிலர் வேதத்துக்கு இணையாக தமிழ் இலக்கியம் உயர்வானது என்று குரல் கொடுத்தார்கள். இதுவும் சமூக முரண்(Social conflict) இருப்பதையே புலப்படுத்துகிறது. அத னால்தான் 'தமிழ்' என்பதற்கு மொழியே அடிப்படைப்பொரு ளாக-வேர்ப்பொருளாகக்கொண்டார்கள் போலும்.

வாழ்வியல் நிலையிலும், கருத்துநிலையிலும் இருந்த சமூக முரண்களால் மொழித்தாக்கத்தை திர்கொள்ளும் முறை யிலும் தவிர்க்க முடியாதபடி மாறுபட்ட கருத்தை ஏற்படுத்தி

விட்டது. அதனால்தான் ஒரே கருத்து கடன்சொல், கடன் நீட்சி, கடன்கலவை ஆகிய பலமுறைகளைக் கையாண்டு வெளிப்படுத்தப்பட்டுள்ளது. என்றாலும் ஒருசிலர் பிறமொழி சிறப்புப் பெயர் (கடவுளர்கள் பெயர், இமயம்), பொருள் (அவி, யூபம் போன்றவை) ஆகியவைகளைக்கூட உள்நிலை ஆக்க மாகக்குறிப்பிட, வேறுசிலர் தமிழில் முன்னரே இருக்கும் சொற் களுக்கும் (யானை=குஞ்சரம்; வில்=சாபம் போன்றவை) கடன்சொற்களைக் கையாண்டுள்ளார்கள்.

---

# 7. தொல்காப்பியரின் மொழி உணர்வு

## 5.0. *முன்னுரை*

தொல்காப்பியம் மொழி அமைப்பின் இலக்கணத்தையும்– மொழியியலையும், இலக்கியத்தின் இலக்கணத்தையும் – இலக்கிய இயலையும் விவரிக்கும் நூல் என்பது எல்லோரும் அறிந்ததே. எனவே, அந்த இலக்கணத்துக்குரிய தரவுகளைத் தேர்ந்தெடுக்கும் போதும், அந்தத் தரவுகளை இலக்கணமாக்கும் போதும் இலக்கண ஆசிரியனின் மொழி உணர்வு அவனுடைய கால வரலாற்றுச் சமூகப் பண்பாட்டு நிலையைப் பொறுத்தே அமையும். ஏனென்றால் தேஷ்பாண்டே (1979) கூறியபடி இலக்கண ஆசிரியன் சூனியத்தில் வாழ்பவன் அல்ல. எனவே, இலக்கணத்தை மொழியியல். இலக்கிய இயல் நோக்கில் பார்ப்பதோடு சமூகவியல் நோக்கிலும் பார்க்கவேண்டும் என்று பல அறிஞர்கள் (உ.ம். Hymes. 1974) வற்புறுத்தி வருகிறார்கள். அப்படிச் சமூக இயல் நோக்கத்தில் பார்க்கும் போதே அந்த இலக்கணத்தின் சில விதிகள் அமைத்ததற்கான காரணம் புலப்படும்; இலக்கணத்தை முழுமையாகப் புரிந்து கொள்ள முடியும்.

தொல்காப்பியத்தில் சில சூத்திரங்கள் வடமொழி அமைப்பை மனதில் வைத்துக் கொண்டு சொல்லியிருக்க வேண்டும் என்று இன்று சிலர் (உ.ம் வேங்கடராசலு ரெட்டியார், 1944) எடுத்துக்காட்டியுள்ளார்கள். இல்லா விட்டால் அந்தச் சூத்திரங்கள் மிகைச் சூத்திரங்கள் என்றே சாதாரணமாகப் பார்க்கும் போது தோன்றும். உயிர் எழுத்துகளைக் குறில் (எழுத்து. 3), நெடில் (எழுத்து.4) என்று பிரித்துவிட்டு அவைகளுக்கு முறையே ஒரு மாத்திரை, இரண்டு மாத்திரை என்று

கூறிவிட்டு 'மூவளபு இசைத்தல் ஓரேழுத்தின்றே' என்ற இன்னொரு சூத்திரம் (எழுத்து.5) அமைப்பதற்குக் காரணம் வடமொழியில் மூன்று மாத்திரை உடைய புலுதா என்ற ஒன்று இருப்பதை மனதில் கொண்டு, அப்படிப்பட்ட உயிரொலி தமிழில் இல்லை என்று வலியுறுத்துவதற்கே. இதனால்அன்றைய தமிழகத்தில் வடமொழி தமிழ்மொழி ஆகிய இரண்டும் தெரிந்த அறிஞர்கள் இருந்து தமிழ்-வடமொழி அமைப்பினை ஒப்பிட்டு விவாதித்திருக்க வேண்டும் என்றும், அந்த நிலையில் தமிழில் மூன்று மாத்திரை உடைய உயிரொலி இல்லை என்ற தன் கருத்தை இந்தச் சூத்திரத்தின் மூலம் தெளிவுபடுத்தியுள்ளார் என்றும் கொள்ளலாம்.

தொல்காப்பியத்தில் காணப்படும் மொழி உணர்வுகளை மொழி அமைப்பு பற்றிய உணர்வு. நாட்டுணர்வு - அதாவது இலக்கியத்துக்கும் நாட்டுக்குமுள்ள உறவு, உலக உணர்வு அதாவது பிற மொழிகளுக்கும் தமிழுக்குமுள்ள உறவு என்ற மூன்று வகையாகப் பிரிக்கலாம்.மொழி அமைப்புபற்றிய உணர்வில் 1) நிலைமொழி பற்றிய உணர்வும், அதன் மதிப்பீடும்; 2) கிளைமொழிக் கோட்பாடு பற்றிய உணர்வும், மதிப்பீடும்; உறழ்ச்சியாக கூறியுள்ளவைகளில் காணப்படும் சில பொதுமைகள் ஆகியவையும் விளக்கப்படும்.

## 7.1. மொழி அமைப்பு உணர்வு

எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் ஆகிய இரண்டு அதிகாரங்களும் தொல்காப்பியர் தமிழ்மொழி அமைப்பை எவ்வளவு ஆழமாகவும், அகலமாகவும் அறிந்திருந்தார் என்பதைத் தெளிவுபடுத்தும். மொழி அமைப்பை விளக்கும் போது நேரடியாகப் பொதுமைப்படுத்தியும், பொதுமைப்படுத்தாமல் தனியாகவும், மொழி அமைப்பில் காணப்படும் ஒழுங்குகளை மட்டுமல்லாமல் உறழ்ச்சிகளையும் குறிப்பிட்டுச் சென்றுள்ளார். எனவே, மொழி உறழ்ச்சி பற்றி தொல்காப்பியத்தில் காணப்படுபவை அவரின் உணர்வுகளாகக் கருதத் தகுந்தவை.

தொல்காப்பியர் சொல்லதிகாரத்தில் (எச்சம்.1) செய்யுள் ஈட்டச்சொற்களாக இயற்சொல், திரிசொல், திசைச்சொல்,வட

சொல் என்று நான்கு வகைகளைக் குறிப்பிட்டு, அவைபற்றித் தொல்காப்பியத்தில் விளக்கும் செய்திகளை அடிப்படையாகக் கொண்டே மொழிஅமைப்பு பற்றிய உணர்வு – மொழி அமைப்பு உணர்வு இங்கு விளக்கப்படுகிறது.

### 7.1.1 இயற்சொல்

தொல்காப்பியர் (எச்சம், 2) இயற்சொல் என்பதற்கு 1) செந்தமிழ் நிலத்து வழக்கொடு பொருந்தியது, 2) தம்பொருள் வழாமல் இசைப்பது என்ற இரண்டு பண்புகளைச் சுட்டியுள்ளார். அதாவது முன்னது நிலப்பரப்பைப் பற்றியது; பின்னது மொழிக்கூறு பற்றியது.

சொற்கள் தம்முடைய பொருளில் மாறாமல் வழங்குவது என்பது ஒரு சொல் எங்கும் ஒரே பொருளில் வரும் என்பது போலத் தோன்றுகிறது. அப்படியானால் இது பொருண்மை இயல் (Semantics) நோக்கு உடையது. ஆனால் இளம்பூரணர் நாய் என்ற சொல் செந்தமிழ் நிலத்திலும், ஞமலி என்று பிறநிலத்திலும் வழங்கும் என்று உதாரணம் காட்டியது அகராதியில்– சொற்களஞ்சியத்தில் (Lexicon) மாறுபாடு இருக்கிறது என்று ஆகிறது. உண்மையில் 'வழக்கு' என்று தொல்காப்பியர் பொதுவாகக் குறிப்பிடுவதால் மொழியின் ஒலி, ஒலியன் உருபன், உருபொலியன், அகராதி ஆகிய எல்லாக் கூறுகளையும் உள்ளடக்கியதாகக் கொள்ளலாம். தொல்காப்பியரே எல்லாக் கூறுகளிலும் மொழி மாறுபாடு (Variation) இருப்பதை ஆங்காங்கே எடுத்துக் காட்டியுள்ளார். அவை பின்பகுதியில் விளக்கப்பட்டுள்ளன.

செந்தமிழ்நிலம் என்பது தமிழகத்தின் ஒரு பகுதி என்று தொல்காப்பிய உரையாசிரியர்களான இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் ஆகியவர்களும் நன்னூல் உரையாசிரியர்களும் கருதுகிறார்கள்; ஆனால் தெய்வச்சிலையார் மட்டுமே செந்தமிழ் நிலம் தமிழகம் முழுமையும் குறிக்கும் என்று கொள்கிறார். இது தமிழ்மொழி வரலாற்றில் ஏற்பட்ட மாற்றத்தின் விளைவு (விளக்கத்துக்குச் சண்முகம், 1984:71

பார்க்கவும்). எப்படியானாலும், செந்தமிழ் நிலத்து வழக்கு என்பது நிலைமொழி வழக்கு (Standard language) என்ற மொழியியலாளர் கருத்தோடு ஒத்தது.

தொல்காப்பியர் கையாண்ட சொற்களின் உள்கிடை கவனிக்கத் தகுந்தது. ஒன்று: தொல்காப்பியர் ஒரு பகுதி நிலப் பரப்பின் மொழி வழக்கை இயற் சொல் – இயல்வழக்கு–இயல் பானது என்றது. இரண்டு: அந்த நிலப்பரப்பைச் செந்தமிழ் நிலம் என்று கூறியது.

பொதுவாக ஒரு மொழியில் பல கிளைமொழிகள் இருக்கும். அரசியல், பண்பாட்டு, சமூக, பொருளாதாரக் காரணங் களுக்காக ஒரு கிளைமொழி வழக்கை அந்த மொழி பேசு வோர் நிலை மொழி வழக்காக ஏற்றுக்கொள்வார்கள். அத னால் இலக்கியம் படைப்பதற்கும் பொதுநிலையில் பயன் படுத்துவதற்கும் நிலைமொழி வழக்கே சிறந்ததாகக் கருதப் படும். எனவே, நிலைமொழிவழக்கை இயல்பானது என்று தொல்காப்பியர் கருதினாரோ என்று எண்ண வேண்டி யுள்ளது. ஆனால், அந்த மொழிப் பகுதியைச் செந்தமிழ் நிலம் என்று தொல்காப்பியர் குறிப்பிட்டதை மொழிக்கு உரிய அடையாகக்கருதி மொழி உணர்வைப் பிரதிபலிப்பதாகக் கொண்டு கிருஷ்ணன் (1984:61) விளக்கியுள்ளார்.

> (தொல்காப்பியத்தில்) மொத்தம் ஐந்து இடங்களில் வரும் ‘தமிழ்’ என்னும் சொல்லாட்சி மூன்று இடங் களில் அடைச்சொல்லோடு வருகிறது. மூன்று இடங் களிலும் ‘செம்’ (செம்மை) என்ற ஒரு சொல்லே அடைச் சொல்லாக வருகிறது. நூற்றுக்கணக்கான அடைச்சொற்கள் தமிழைச் சிறப்பிப்பதற்காகப் பிற் காலத்தில் இடம்பெறுகின்றன. அவற்றிற்குமுன்னோடி யாக அமைந்திருப்பதுபோல் செம்மை என்ற அடைச் சொல் தொல்காப்பியத்தில் முதன் முதலாக இடம் பெற்றிருக்கிறது.

என்ற அவரது வாசகம் வரலாற்றுப் பின்னணியில் இந்த அடையை வைத்துக்காட்டியுள்ளது. மேலும் இதனுடைய உள் கிடையாக அவர் கூறும் இரண்டு கருத்தும் கவனிப்பதற்குரியது.

> தமிழ்நாட்டின் பல பகுதிகளிலும் வாழ்ந்த மக்கள் பேசிய திசைச்சொல்லும் திசை மொழியும் காலப் போச்கில் புலவர் - கலைஞர் தொண்டால் இலக்கியத் தரம் பெற்ற சொல்லாகவும் செம்மைப்பட்ட மொழி யாகவும் (Standard language) வளர்ச்சி அடைந்து முழுமை பெற்றதை இவ் அடைமொழிமூலம் உணர்த்த லாம்.

என்றும் (ப.62) அடுத்து

> தமிழ்நாடு பலநாடுகளாகப் பிரிந்து நின்றதன் பய னாகப் பலதிசை வழக்குகள் பழைய காலம் தொடங் கியே எழுந்தன என்று டாக்டர் தெ.பொ. மீ. கூறு வார். திசை வழக்குச் சொற்கள் சிலவற்றையும் இலக் கண உரையாசிரியர் காட்டுவர். எனவே, இத்தகைய திசை வழக்குகள் இலக்கிய தரமும் திறமும் பெற்றுக் காலப்போக்கில் தமிழ் செம்மொழியாக உருப்பெற்று வந்ததன் உணர்வினைத் தொல்காப்பியரும் பனம் பாரனாரும் காட்டுவதாகக் கொள்ளலாம்

என்றும் (ப.63) கூறியுள்ளார். இது நிலைமொழி உருப்பெற்ற முறையை விளக்குகிறது. அதாவது, திசை மொழி வழக்குகள் காலப் போக்கில் புலவர்கள் தொண்டால் செந்தமிழ் வழக்காக அமைந்துவிட்டன என்பதே அவர் கருத்து. அதாவது, தமிழகம் முழுவதும் வழங்கிய பேச்சு வழக்குகள் செம்மைப் படுத்தப் பட்டு இலக்கிய வழக்காகி விட்டன என்று பொருள். அப்படி யானால் பேச்சு வழக்கு வேறு, இலக்கிய வழக்கு வேறு, இலக் கிய வழக்குக்கு அடிப்படை எல்லாக் கிளைமொழியுமே என்று அவர் கருதுவதாகக் கொள்ளலாம். இதைத்தான் சமூகமொழி யியலார் இருநிலை வழக்கு (Diglossia) என்று அழைக்கிறார் கள்.

இந்தக் கருத்தை முதன் முதலில் கால்டுவெல் (1856:78,80) குறிப்பிட்டார் (விவரத்துக்குச் சண்முகம், 1985:17 தொ.பார்க் கவும்). இன்னும் சிலர் அதை ஆதரித்துள்ளார்கள். (உ - ம்' Ferguson, 1959; ஆரோக்கியநாதன். 1986:92). இதில் பிரச் சனை என்னவென்றால் தமிழில் இருமொழி வழக்கு இன்று இருக்கிறது என்பதை யாரும் மறுக்கவில்லை; ஆனால், அது எப்பொழுது துவங்கியது என்பதில் தான் கருத்து வேறுபாடு.

கால்டுவெல்லும் அவரை ஒட்டி ஃபெர்கூசனும், ஆரோக்கிய நாதனும் சங்ககாலத்திலேயே ஆரம்பித்துவிட்டது என்று கருது கிறார்கள். கிருஷ்ணனின் மேலே குறிப்பிட்ட விளக்கம் இரு நிலை வழக்கு என்ற கருத்தையும் அது தொல்காப்பியர் காலத்தில் துவங்கிவிட்டது என்ற கருத்தையும் சுட்டுவதாக ஆகிறது. ஆனால், ஆரோக்கியநாதன் (1986) நூலுக்கு எழுதிய முன்னுரையிலே அண்ணாமலை (ix)

> முற்காலத்தில் தமிழில் செய்யுள் வழக்குக்கும் உலக வழக்குக்கும் பேரளவு வேறுபாடு இருந்தது என்று உறுதியாகக் கூற சான்று இருப்பதாகத் தெரியவில்லை

என்று குறிப்பிட்டுள்ளதால் அதை ஒத்துக் கொள்ளவில்லை என்பது தெரிகிறது. மேலும், வரலாற்று நிலையில் தொல் திராவிட மொழியையும் சங்கத் தமிழையும் ஒப்பிட்டுப் பார்க் கும்போது ஒரு சில கூறுகள் மட்டுமே மாறுபட்டு இருப்பதால் அன்றைய பேச்சு மொழியிலிருந்து பெரிய அளவில் மாறுபட்டு இலக்கியமொழி அமையவில்லை என்பது விளங்கும்.

தொல்காப்பியரும் இயற்சொல்லைச் 'செந்தமிழ் நிலத்து வழக்கு' (எச்சம். 1) என்றும் திசைச் சொல்லைச் 'செந்தமிழ் சேர் பன்னிருநிலத்து வழக்கு' என்றும் (எச்சம். 4) கூறியிருப்ப தால் ஒருபகுதி பேச்சு வழக்கே இயற்சொல்லாக-நிலைமொழி வழக்காக அமைந்திருக்கவேண்டும் என்றும் கொள்ளலாம். சங்க இலக்கியத்தில் மதுரையைத் 'தமிழ்கெழு கூடல்' (புறம்.58:13) 'தமிழ்நிலை பெற்ற......மதுரை' (சிறுபாண்:66:7) 'தமிழ் வையை' (பரி. 6:63) என்று தமிழோடு இணைத்து பேசியதற் குக் காரணம் நன்னூல் உரையாசிரியர்களும் இன்றைய அறிஞர் களும் கூறுவது போல பாண்டியநாட்டு வழக்கே இயற்சொல் என்பது ஆகலாம் (இளம்பூரணர் போன்றோர் கருத்து சங்க காலத்துக்குப் பொருந்தாது என்பதற்குச் சண்முகம் 1984:73 பார்க்கவும். இது சோழர்கால மொழி உணர்வைப் பிரதி பலிப்பதாகக் கருதலாம்).

இந்த முறை, ஒரு பகுதியின் மொழிவழக்கு நிலைவழக்காக அமைவது உலகமொழி பலவற்றிலும் காணப்படும் பொது

இயல்பு என்பதும் சுட்டிக் காட்டத் தகுந்தது. பொதுவாக ஒரு நாட்டின் தலைநகராகவோ அல்லது பண்பாட்டு முக்கியத்துவம் பெற்ற நகராகவோ அது அமையும். ஆங்கில மொழியின் நிலை மொழி லண்டன் நகரத்தில் படித்தவர்கள் பேசும் மொழியை ஒட்டியது. இன்று வங்காள மொழியின் நிலைமொழி கல்கத்தா வில் வாழும் படித்தவர்கள் பேச்சைத் தழுவியது. அப்படியே இன்றைய தெலுங்கு மொழியின் நிலைமொழி கிருஷ்ணா, கோதாவரிப் பகுதியில் வாழும் படித்தவர்களின் பேச்சு மொழியைப் பெரும்பான்மையும் தழுவியது. இந்தச் சமயத்தில் பேச்சு வழக்கிலிருந்து மாறுபட்ட பல கிளை மொழிகளுக்கும் பொதுவான வழக்கு ஒன்றிலிருந்து உருவாகும் நிலைமொழி வழக்கும் உலகத்தில் காணப்படுவதும் மறுப்ப தற்கு இல்லை. இதை மீக்கிளைமொழி (Supra dialectal norm) என்பார்கள். இத்தாலி மொழியின் நிலைமொழி இப்படிப்பட் டது. தமிழில் இடைக்காலத்தில்தான் இந்த நிலை ஏற்பட்டது. எனவே 'செந்தமிழ்' என்பதில் 'செம்' என்ற அடையின் உணர் வாகக் கிருஷ்ணன் கூறிய கருத்து ஏற்றுக் கொள்ளத் தகுந்தது அல்ல. ஏனென்றால் தமிழகத்தின் ஒரு பகுதியில் வாழ்ந்த உயர்ந்தவர்களின் பேச்சு வழக்கே இயற்சொல் என்று கருத வேண்டியிருக்கிறது.

அடுத்து 'செந்தமிழ்' என்பதில் 'செம்' என்ற அடை பயன் படுத்தப்பட்டதற்குக் கூறும் இரண்டாவது காரணம்வருமாறு:

> அயல்மொழியின் தாக்கம் ஒரு நாட்டின் மேலும், மொழின் மேலும் ஏற்படும் பொழுது தம் நாட்டு மொழியின் செம்மைப் பண்பை வெளிக்காட்டும் நோக் கத்தில் இவ் அடைமொழி பயன் படுத்தியிருக்கலாம்

என்று பொதுவாகவும் (ப.63)

> இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் தமிழுக்கு இணையாக இந்தியாவில் இருந்த மொழி சமற்கிருத மாகும். இம்மொழியும், மொழி பேசுவோரும் தமிழ கத்தில் செல்வாக்குப் பெறத் தொடங்கியதற்குச் சில சான்றுகள் தொல்காப்பியத்தில் காணக்கிடக்கின்றன. ......தொல்காப்பியத்தில் வரும் நூற்பாச் சான்றுகள்

> வடமொழி-வடமொழியாளரின் செல்வாக்கைத் தெளிவாகக் காட்டுவன. இத்தகைய வேற்றுமொழித் தாக்கம் தமிழில் ஏற்பட்டதன் விளைவாகத் தமிழின் சிறப்பு, பெருமை, தூய்மை ஆகியவற்றைத் தன்னுணர்வோடு சுட்டிக் காட்டும் புதுமை தொல்காப்பியர் காலத்தில் தொடங்கியிருக்கலாம்.

என்று சிறப்பாகவும் விளக்கியுள்ளார் பிறமொழித் தாக்கம் என்ற காரணம் அடிப்படையில் ஏற்றுக்கொள்ளத் தகுந்ததே. ஆனால், அவர் கூறும் விளைவுகள் அல்ல. இதை மொழிப்பற்றுணர்வு (Language loyalty) என்று சமூக மொழியியலாளர்கள் (உ - ம். Weinreich, 1953:100) அழைப்பார்கள். மொழிப் பற்று பிறமொழித் தொடர்பு ஏற்படும் போதே வெளிப்படும் என்றும், அப்போது அவர்களின் மொழி மொழிப்பற்றின் அடையாளமாகவும் காரணமாகவும் கருதப்படும் என்றும் கூறுவார்கள்[1]. அதனால் கிருஷ்ணன் கூறுகிற மொழியின் சிறப்பு, பெருமை, தூய்மை ஆகியவற்றைச் சுட்டுகிறாரா என்பது விவாதத்துக்குரியது. ஏனெனில் 'செம்' என்ற அடைமொழியில் இந்த உண்மைகளை ஏற்றுவது தொல்காப்பியர் கருத்துக்கு முரணானது போலத் தோன்றுகிறது.

மொழித் தூய்மை பற்றி கிருஷ்ணன் (ப.64)

> மொழித்தூய்மை கெடாமல் இருக்கவேண்டும் என்ற விழிப்புணர்வு தொல்காப்பியர் காலத்திலேயே உருப்பெற்றுவிட்டதற்கு வேறு சில சான்றுகளும் உண்டு. வடமொழி தமிழ்நாட்டில் செல்வாக்குப் பெறத் தொடங்கிய போது அதை அப்படியே ஏற்றுக்கொள்ளாமல் தமிழ் நெறிகளுக்கு ஏற்ப மாற்றங்கள் செய்ய வேண்டும் என்று தொல்காப்பியர் கூறுமிடங்களில் இவ்வுணர்வை ஊகிக்க முடிகிறது.

என்று குறிப்பிட்டுச் சொல்லதிகார 401 ஆம் சூத்திரத்தையும். மரபியல் 98 ஆம் சூத்திர 'மொழிபெயர்த்து அதர்ப்படயாத்தல்' என்ற வரியையும் மேற் கோளாகக் காட்டியுள்ளார்.

தொல்காப்பியர் சொல்லதிகாரத்தில் கூறுவது வடமொழிச் சொற்கள் தமிழ் மொழியில் வந்துவழங்கும்போது ஏற்படும் மாற்றங்களே; அதாவது தமிழாக்க நெறிகளே. அந்த நெறியில்

சில விதிகளுக்கு உட்பட்டு வருவனவற்றை இந்தச் சூத்திரத்தி லும், (எச்சம்.4) விதிகளுக்கு உட்படாது அதிக மாற்றம் பெற்று வருவதை அடுத்த சூத்திரத்திலும் விளக்கியுள்ளார். அப்படிப் பட்ட விதிகளுள் ஒன்றை வடமொழிச் சிறப் பொலிகள் தமிழி லுள்ள ஒலிகளாக (ஷகரம் டகரமாக மாறுவது போன்றது) மாற்றம் பெறும் என்று பொதுமையாகக் குறிப்பிட்டுவிட்டார். எனவே, இந்தச் சூத்திரத்தில் அதிக பட்சம் தொல்காப்பியர் எழுத்துத்தூய்மையை மட்டுமே குறிப்பிட்டுள்ளார் என்று கூற லாம்.

மொழித்தூய்மை என்பது கருத்து, சொல், எழுத்து என்று மூன்று வகையில் அமையலாம். தொல்காப்பியர் மொழிய மைப்பு விதியாகக் கூறிய ஒன்றை எழுத்துத் தூய்மை என்று வேண்டுமானால் எடுத்துக் கொள்ளலாம். அவர் கருத்துத் தூய்மையை ஆதரிக்கவில்லை என்பது தன்னுடைய நூலிலேயே வடமொழி-தமிழ் ஒற்றுமை வேற்றுமைகளை ஒப்பிட்டுக் கூறிய தால் அறியலாம். தமிழ் இலக்கண நூலில் வடமொழியோடு ஒத்தும் வேறுபட்டும் போகிற கருத்துகளைச் சுட்டிச் செல்ல வேண்டிய அவசியமே இல்லை. மேலும், மொழிபெயர்ப்பு என்பதை வழிநூல்களில் ஒன்றாகச் சொன்னதும் இந்த உண் மையை வலியுறுத்துகிறது. அப்படியே அவர் சொல் தூய்மையை ஏற்றுக்கொள்ளவில்லை என்பதைச் செய்யுள் ஈட்டச் சொற் களில் ‘வடசொல்’ என்ற ஒரு வகையைச் சேர்த்ததும் காட்டி விடுகிறது. மேலும் அவரும் அந்தம், காலம், சூத்திரம், ஏது போன்ற வடமொழிச் சொற்களைத் தன்னுடைய நூலில் பயன்படுத்தியுள்ளதும் அவர் சொல் தூய்மையைப் போற்ற வில்லை என்பது தெளிவாக்குகிறது. எனவே கிருஷ்ணனின் விளக்கம் இருபதாம் நூற்றாண்டின் உணர்வைத் தொல் காப்பியர் மேல் ஏற்றியதாகவே ஆகிறது. தொல்காப்பிய ருக்கு இருந்த உணர்வு அவர் காலத்தில் இருந்த மொழிச் சூழல்களைப் புலப்படுத்துவதாகவும் வடமொழிக்கு இணை யாகத் தமிழுக்கு எழுத்து, சொல், பொருள் என்ற ஒரு பெரிய இலக்கணம் செய்து தமிழர்களை அறிவு வழியே பெரு மைப்பட வைத்தார் என்று வேண்டுமானால் கொள்ளலாம்.

எனவே, கிருஷ்ணன் குறிப்பிடுவதுபோல 'செம்' என்பது மொழிப்பாதுகாப்பு, தூய்மை ஆகியவைகளைப் புலப்படுத்துவ தாகக் கொள்ளமுடியாது; கொள்வதும் பொருந்தாது.

செந்தமிழ் என்னும் போது சமஸ்கிருதம் என்ற சொல்லின் பொருள் சாயல் இருப்பது ஓரளவு உண்மையே. சமஸ்கிருதம் என்பதற்குச் செம்மையாகச் செய்யப்பட்டது என்பதே நேரடிப் பொருள். எனவே, செந்தமிழ் என்பது அந்தப் பொருளின் சாயலில் ஆக்கப்பட்டிருக்கலாமோ என்ற எண்ணம் சிலருக்கு (உ.ம் வையாபுரிப்பிள்ளை, 1956:76) உண்டு.[2] ஆனால், அவரு டைய விளக்கத்தைப் பார்க்கும் போது அது பொருந்தாது என்பதை உணரலாம். ஏனென்றால், சமஸ்கிருதம் என்பதற்கு மாறுபட்ட வழக்கு பிராகிருதம். அதற்கு இயற்கையானது என்று பொருள். ஆனால், செந்தமிழ் நிலத்து வழக்கையே இயற்சொல் என்று கூறுவதால் செந்தமிழ் நிலத்து வழக்கு என்பது இயற்கையானது என்று பொருள்படுகிறது. எனவே, சமஸ்கிருதம், பிராகிருதம் என்ற இரண்டு சொல்லிலும் காணப் படும் பண்புகளை இயற்சொல் என்பதற்கே ஏற்றிக் கூறியுள்ள தால் சமஸ்கிருதம், செந்தமிழ் என்பது மேல்போக்கான ஒற்று மையே தவிர முழு ஒற்றுமை அல்ல. மேலும், நிலைமொழி வழக்குகளை வழங்கும் நிலத்தைக் குறிப்பிடும் போது தான் 'செம்' என்ற அடையைக் கூறுவதாகக் காணப்படுவதும், அந்த அடை நிலத்துக்கே உரியது என்று வாதிடுவதற்கும் இடம் தரு கிறது. திசைச்சொல்லை விளக்கும் போது 'செந்தமிழ் சேர்ந்த' என்று நிலம் இல்லாமல் மொழிக்கு அந்த அடையைப் பயன் படுத்தியது போலக் காணப்பட்டாலும் 'செந்தமிழ்நிலம்' என்ற தொடர்தான் யாப்புக்காகச் 'செந்தமிழ்' என்று ஆகியிருக் கிறது என்பதும் அறியத் தகுந்தது. ஏனெனில், செந்தமிழ் என்பதற்குச் செந்தமிழ்நிலம் என்றே பொருள் கொள்ள வேண்டியிருக்கிறது. உரையாசிரியர்களும் அப்படியே பொருள் கொண்டுள்ளார்கள்.

### 7.1.2. திசைச் சொல்

திசை என்ற பொதுச் சொல்லுக்குத் திக்கு(Direction) என்று பொருள். தொல்காப்பியரும் 'இருதிசை புணரின் ஏயிடை

வருமே' என்ற சூத்திரத்தில் (எழுத்து.431) அந்தப் பொதுப் பொருளில் பயன்படுத்தியுள்ளார். ஆனால், செய்யுள் ஈட்டச் சொற்களில் ஒன்றான திசைச் சொல் என்பது ஒரு கலைச் சொல்லாய் இன்று 'கிளைமொழி' என்று வழங்கும் சொல்லின் பொருளில் ஆளப்பட்டுள்ளது. அவருடைய விளக்கம் வட்டாரக் கிளைமொழி என்ற கருத்தைப் புலப்படுத்துகிறது.

திசைச் சொல் என்பது செந்தமிழ் நிலத்தைச் சேர்ந்த பன்னிரண்டு நிலப் பகுதிகளில் வழங்குவது; அவை குறிப்பாக வழங்குவது என்ற இரண்டு பண்புகளைக் குறிப்பிட்டுள்ளார் (எச்சம்.4). இங்கும் முன்னது நிலப்பரப்பு பற்றியது; பின்னது அதன் இலக்கணத்தைப் (சிறப்புப் பண்பை) பற்றியது.

இளம்பூரணர் 'தத்தம் மரபினும், பின் வேறு வேறு வாய் பாட்டாலும் வழங்கும், என்றும் 'அவர் எவ்வாறு குறித்து வழங்கினாரோ, அஃதே அவற்றிற்கு இலக்கணம்' என்றும் குறிப்பிட்டது இரண்டு உண்மைகளைப் புலப்படுத்துகிறது. ஒன்று: வட்டாரத்துக்கு வட்டாரம் ஒரு பொருளைக் குறிக்கும் சொல் வேறுபடலாம். இரண்டு: அவர்கள் எந்த வடிவத்தால் அழைக்கிறார்களோ அதுவே அதற்குரிய வடிவம். நிலைமொழி வடிவத்திலிருந்து மாறுபட்டிருந்தாலும் அது பற்றிக் கவலை இல்லை. எனவே, மொழிபேசும் எல்லா மக்களுக்கும் ஒத்தது இயற்சொல் - அது மொழி முழுமைக்கும் பொதுவான நிலை மொழி.திசைச்சொல் அந்தந்த வட்டாரத்துக்கு மட்டுமே உரிய நிலைமொழி அதாவது, வட்டார நிலைமொழி. இது தொல் காப்பியர் மொழி எப்படி பயன்படுகிறது என்பதை உணர்ந் திருந்தார் என்பதைப் புலப்படுத்துகிறது.

'செந்தமிழ் சேர் பன்னிரு நிலம்' என்பது செந்தமிழ் நில மும் அதனை ஒட்டிய பன்னிரண்டு நிலப் பகுதிகளும் என்ற பொருளைக் குறிக்கிறதா அல்லது செந்தமிழ்நிலம் என்பது தமிழகம் பன்னிரண்டு பகுதிகளை உடையது என்ற பொருளைக் குறிக்கிறதா என்று இலக்கண உலகில் கருத்து வேறுபாடு காணப்படுகிறது. ஆனால், பன்னிரண்டு பகுதியாகப் பிற்காலச்

செய்யுள் ஒன்று காட்டப்படுகிறதே தவிர அதன் அடிப்படை பற்றியோ அந்தப் பாகுபாடு பற்றியோ யாரும் கவலைப்பட வில்லை. வையாபுரிப் பிள்ளை (1956:73) குடநாடு, பூழிநாடு, புனல்நாடு ஆகிய மூன்று நாடு பற்றிய குறிப்புகளே உள்ளன என்று எடுத்துக்காட்டியுள்ளார். மேலும் குட்டுவர், வேளிர், அருவாளர் ஆகிய மூன்று குடிகளைப் பற்றிய குறிப்பும் இலக்கி யத்தில் காணப்படுவதால் இன்னும் மூன்று நாடுகள் இருந் திருக்கவேண்டும் என்று ஊகிக்கலாம் என்பார் அவர். தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் (1965அ:105) தமிழ்நாட்டு வரைபடத்தில் அந்தப் பன்னிரண்டு பகுதிகளைச் சுட்டிக்காட்டியுள்ளார். ஆனால், அது எவ்வளவு தூரம் சங்க கால வழக்குக்கு (மொழி வழக்கு, நில அல்லது அரசியல் வழக்கு ஆகிய இரண்டு நிலை யில்) ஒத்தது என்று ஆராய வேண்டும். அப்படியே, ஆரோக்கிய நாதன் (1986:94,97) கருதுவது போல அரசியல் எல்லைகளை அடிப்படையாகக் கொண்டது என்பதற்கு ஆதாரம் இருப்ப தாகத் தெரியவில்லை.

தொல்காப்பியர் எந்த் அடிப்படையில் பன்னிரண்டு பகுதி குறித்தார் என்பதை அறிய முயற்சிக்க வேண்டும். அதுவே தொல்காப்பியம் பற்றியும் சங்ககால உண்மையான மொழி நிலையைப் பற்றியும் அறிந்து கொள்ள துணைபுரியும். எப்படியானாலும் நிலப்பகுதி-வட்டாரம் அடிப்படையில்மொழி அமைப்பில் மாறுபாடுஇருப்பதை உணர்ந்திருந்தார் என்பதே முக்கியம்.

இங்கு இன்னொரு முக்கிய செய்தியையும் குறிப்பிடவேண் டும். அது தான் தொல்காப்பியர் விளக்கும் மொழி அமைப்பி லிருந்து மொழி அமைப்பின் எல்லா நிலைகளிலும் உறழ்ச்சி காணப்படுகிறது என்பது. இவையெல்லாம் நேரடியாகத் திசைச் சொல் வழக்குகளாக ஏற்றுக் கொள்ள முடியாது என் றாலும் கோட்பாட்டு நிலையில் திசைச் சொல் என்று குறிப் பிட்டதற்கு ஏற்ப மொழி அமைப்பில் உறழ்ச்சிகளைக் கூர்ந்து கவனித்திருக்கிறார் என்பதற்குச் சான்றுகளாக அமையும் எனவே, இனி அவைகளைப் பார்ப்போம்.

## 7.2. மொழியமைப்பில் உறழ்ச்சி

### 7.2.1. ஒலி உறழ்ச்சி

நகரத்தை முதலாக உடைய முறைப் பெயர்ச் சொல்லில் வரும் உகரம் குற்றியலுகரம் என்று தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார் (சூ.67). இது 'நுந்தை' என்ற சொல்லைச் சுட்டுவதாக எல்லோரும் கொண்டுள்ளார்கள். அந்தச் சொல்லில் வரும் உகரம் முற்றியலுகரமாக உச்சரிக்கப்பட்டாலும்பொருள் வேறுபடாது என்று அடுத்த சூத்திரம் (68) குறிப்பிடுகிறது. எனவே, நுந்தை என்ற சொல்லில் முதலில் உள்ள உகரம் குற்றியலுகரம், முற்றியலுகரம் என்று இரண்டுவிதமாக உச்சரிக்கப்பட்டன.

தொல்காப்பியர் குற்றியலுகரத்தையும் முற்றியலுகரத்தையும் தனி எழுத்துகளாகக் கொண்டாலும் இந்த உறழ்ச்சியை ஒலிஉறழ்ச்சி என்பதே பொருத்தமாக இருக்கும்.

இந்த உறழ்ச்சிக்கு வரலாற்று பின்னணி உண்டு. முன்னிலைப்பன்மைப்பதிலீடுபெயர்* நீம்என்று ஒப்பிலக்கண ஆசிரியர்கள் கருதுகிறார்கள். அதன் வேற்றுமை ஏற்கும் வடிவம்* நிம் என்பதே. அப்படியே பல இனமொழிகளிலும் காணப்படுகிறது. தமிழில் கடைசியில் உள்ள மகரமான இதழ் ஒலியின் செல்வாக்கால் அதன் முன்னுள்ள இகர உயிர் உகரமாக மாறியிருக்க வேண்டும். இதுவே சிலகிளை மொழிகளில் குற்றியலுகரமாகவும் (இடை உயிராகவும் அல்லது இதழ் குவியாத மேல் பின்னுயிராகவும்) வேறுசில கிளை மொழிகளில் முற்றியலுகரமாகவும் (இதழ் குவிந்த மேல் பின்னுயிராகவும்) உச்சரிக்கப்பட்டிருக்க வேண்டும்.

### 7.2.2. ஒலியன் உறழ்ச்சி

தமிழில் மகரமும் னகரமும் தனித்தனி ஒலியன்களே (யான்:யாம்:தான்:தாம்). ஆனாலும் அஃறிணைச் சொற்களில் ஒன்பது தவிர ஏனையவற்றில் மகரமும் னகரமும் உறழ்ந்து வரலாம் (சூ.82)என்பார் தொல்காப்பியர். இலக்கிய வழக்கிலிருந்தும் உரையாசிரியர்கள் உதாரணங்களிலிருந்தும் குறி

லிணை அஃறிணைச் சொற்களிலேயே இந்த உறழ்ச்சி பெரும் பான்மையும் காணப்படுகிறது என்று பொதுமைப்படுத்தலாம். நிலம் ல நிலன்; மரம் ல மரன்; அழம் ல அழன் 'பிணம்'. எனவே இவைகளை மகர னகர ஒலியன் உறழ்ச்சியாகக் கொள்ளலாம்.

### 7.2.3. புணர்ச்சி உறழ்ச்சி

பல சொற்கள் புணரும் போது இயல்புப் புணர்ச்சியும் மிகுதிப் புணர்ச்சியும் உறழ்ந்து வந்துள்ளதாக விளக்கப்பட்டுள் ளது.

இகர, ஐகார ஈற்றுச் சொற்களில் வல்லெழுத்து மிகுந்தும் இயல்பாயும் வரும் (சூ.150).

பல, சில என்ற இரண்டு சொற்கள் தம்முள் தாம் புணரும் போது வல்லெழுத்து உறழ்ந்து வரும்; அதாவது, இயல்பாகவும் மிகுந்தும் புணரும் (சூ.215).

இப்படியே பல சூத்திரங்களில் வல்லெழுத்து இயல்பாகவும் மிகுந்தும் வருவதைப் புணர்ச்சி உறழ்ச்சி என்று குறிப்பாகவும் P/PP என்று பொதுவாகவும் விளக்கலாம்.

புணர்ச்சியில் வல்லெழுத்தும், மெல்லெழுத்தும் உறழ்ந்து வருவதாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது.

யா, பிடா, தளா ஆகிய மரப்பெயர்ச் சொற்களில் மெல் லெழுத்து மிகுந்தும் (சூ.229) வல்லெழுத்து மிகுந்தும் வரும் (சூ.230). யா அங்கோடு ல யா அக்கோடு; பிடா அங்கோடு ல பிடா அக்கோடு; தளா அங்கோடு ல தளா அக்கோடு. சுவையை உணர்த்தும் புளிப்பெயர் மெல்லெழுத்து மிகுந்தும் (சூ.245), வல்லெழுத்து மிகுந்தும் புணரும். புளிங்காய் ல புளிக்காய்.

இந்த வேறுபாடுகளை மெல்லெழுத்து/வல்லெழுத்துப் புணர்ச்சி உறழ்ச்சி என்று பொதுமைப்படுத்தலாம்.

அழன், புழன் என்ற சொற்கள் வேற்றுமை உருபோடு புண ரும்போது அத்து, இன் என்ற இரண்டு சாரியைகளும் உறழத் தோன்றும் என்று தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார் (சூ.193).

இங்கு உரையாசிரியர்கள் அழத்தை ~ அழலினை, புழத்தை ~ புழ வினை என்ற உதாரணங்களைக் கொடுத்துள்ளார்கள். இவை களை உண்மையில் அழம்/அழன் புழம்/புழன் என்ற இரண்டு அடிநிலைச் சொற்கள் இரண்டு வேறு சாரியை (அத்து/இன்) பெறுவதால் ஏற்படும் உறழ்ச்சியாகக் கொள்வதே பொருத்த மாக இருக்கும். அப்படியானால் இங்கு ம/ன ஒலியன் உறழ்ச் சியும் அதை ஒட்டி அத்து/இன் என்ற சாரியை பெறுவதால் புணர்ச்சி உறழ்ச்சியாகவும் கொள்ளலாம், இது இன்னொரு உண்மையைப் புலப்படுத்துவதாக அமைந்துள்ளது. அதாவது மொழி அமைப்பில் கிளைமொழிகள் மொழி உள் அமைப்பில் ஒரு கூற்றில் அமையும் வேறுபாட்டுக்கு இணையாக இன்னொரு உள் அமைப்பில் இன்னொரு கூற்றிலும் வேறுபாடு ஏற்பட்டுக் கிளை மொழிக்கிடையே உள்ள வேறுபாடு ஆழமானதாக அமையும்.

### 7.2.4. உருபன் உறழ்ச்சி

சார் என்ற வினைச் சொல் கருமம் அல்லாச் சார்ச்சியாக அமையும் போது இரண்டாம் வேற்றுமையோடு(சூ.556) ஏழாம் வேற்றுமையும் ஏற்று வரும்.

அரசனைச்சார் ~ அரசர்கண் சார்

இங்கு இரண்டு வேறு உருபன்களாக இருப்பவற்றில் உறழ்ச்சி அமைந்துள்ளது. அப்படியில்லாமல் ஒரு உருபனின் மாற்றுருபுகளுக்குள்ளே உறழ்ச்சி அமைதலும் உண்டு. இரண்டு மாற்றுருபுகள் ஒரே சூழலில் வரும்போது உறழ்ச்சியாகவே கருதப்படும். வினை முற்றுச் சொற்களில் தன்மைஒருமை விகுதி யாக, அம் ~ ஆம்(வந்தனம் ~ வந்தாம்).எம் ~ ஏம் (வந்தனெம் ~ வந்தேம் ஆகியவை உருபு (மாற்றுருபு) உறழ்சியாகக் கொள்ள லாம்.

### 7.2.5. அகராதியன் உறழ்ச்சி

மரபியலில் தொல்காப்பியர் ஒவ்வொரு விலங்குக்கும் ஒன்றுக்கு மேற்பட்ட இளமைப் பெயர்களையும் பெண்பாற் பெயர்களை யும் குறிப்பிட்டுள்ளார். அவை அகராதியன் உறழ்ச்சிக்கு நல்ல சான்று ஆகும்.

இரவின் கிளவியாக வரும் ஈ,தா, கொடு ஆகிய மூன்று சொற்களை ஒவ்வொரு சமூக நிலையிலும் உள்ளவர்பயன்படுத்த வேண்டும் என்று கூறுவது அகராதியன் உறழ்ச்சி சமூக வேறுபாட்டோடு இணைந்து போகிறது என்பதைத் தெளிவுபடுத்துகிறது.

### 7.2.6. தொடரியல் உறழ்ச்சி

செயப்படுபொருளைச் செய்தது போலக் கிளத்தல் அதாவது புதை வாக்கியத்தில் செயப்படுபொருளாக இருப்பதை எழுவாயாகப் பயன்படுத்துவது வழக்குக்கு உரியதாகத் தொல்காப்பியர் (சூ.731) குறிப்பிட்டுள்ளார். அதாவது, ஒருவன் திண்ணையை மெழுகினான் என்ற வாக்கியம் வழக்கு மொழியில் 'திண்ணை மெழுகிற்று' என்று வரும். எனவே, இதைத் தொடரியல் உறழ்ச்சியாகக் கருதலாம்.

## 7.3. கிளை மொழிப் பரப்புகள்

தொல்காப்பியர் கூறிய உறழ்ச்சிகளைக் கொண்டு அதிக பட்சம் கிளை மொழி பரப்புகளைக் (Dialect areas) கண்டு பிடிப்பது அவர் கால திசை மொழியைப் பற்றி முழுமையாகப் புரிந்து கொள்ள உதவும்.

தொல்காப்பியர் தேன் என்ற சொல்லுக்குத் தேங ~ தேற ~ தேக் என்ற மாற்று வடிவங்களை உறழ்ச்சியாகக் குறிப்பிட்டுள்ளார் எனவே,

தேன்குடம் ~ தேங்குடம் ~ தேற்குடம் ~ தேக்குடம்

என்று நான்கு வடிவங்கள் அமையும். ம/ன ஒலியன் உறழ்ச்சியாகவும், இயல்பு/வல்லினம் மிகுதி என்ற புணர்ச்சி உறழ்ச்சியாகவும் கொள்வது வேறுபாடுகளை எளிமையாக விளக்குவதாக அமையும். மேலும், ஒலியன் உறழ்ச்சியால் இரண்டாக இருக்கும் நிலப் பிரிவுகள் ஒவ்வொன்றும் புணர்ச்சி உறழ்ச்சியால் இரண்டாக்கப் படுவதால் நான்குவித வேறுபாடுகள் (இரண்டுவித உறழ்ச்சியால்) ஏற்பட்டு ஒவ்வொரு பகுதியிலும் ஒரு விதத்தில் ஒற்றுமையும் மற்றொரு விதத்தில் வேற்றுமையும் கொண்டிருப்பது இயல்பானதாகவும் அமைந்துவிடுகிறது.

| | அ | ஆ | இ | ஈ |
|---|---|---|---|---|
| ம/ன | தேம் | தேம் | தேன் | தேன் |
| இயல்பு/ மிகுதி | தேம்+குடம் | தேம்+குடம் | தேன்+குடம் | தேன்+ குடம் |
| | தேம் குடம் | தேம்க்குடம் | தேன்க்குடம் | தேன்குடம் |
| | தேங்குடம் | தேக்குடம் | தேற்குடம் | தேன்குடம் |

குமாரசுவாமிராஜா (1969) கருத்துப்படி தேற்குடம், தேக்குடம் என்பவை முறையே *தேன்க்குடம், *தேம்க்குடம் என்று முதலில் வல்லெழுத்து மிகுந்து தேற்குடம், தேக்குடம் ஆகின்றன என்று கொண்டு மிகுதி புணர்ச்சி இரண்டிலும் வருவதாக கருதப்படுகிறது. தேங்குடம் என்பது இயல்பு புணர்ச்சி என்று கூறுவதற்குக் காரணம் சங்கத்தமிழில் ஙகரம் தனி ஒலியன் அல்ல: மகரத்தின் மாற்றொலிதான். எனவே, ஒலியன் முறைப்படி தேங்குடம் என்பது தேம்குடம். அது ஒலிநிலையில் மட்டுமே தேங்குடம் என்று மாறியுள்ளது. ஒலியன் நிலையில் தேம்குடம் என்பதால் இயல்பு புணர்ச்சியாக அமையும்.

தொல்காப்பியர் அடுத்த இரண்டு சூத்திரத்தில் தேன்இறால் என்ற வருமொழியோடு புணரும்போது 'இயற்கை' ஆகவும் (சூ.343) 'ஒற்றுமிகு தகரமொடு' நின்றும் (சூ.344) புணரும் என்று குறிப்பிட்டுள்ளார். இதற்கு உரையாசிரியர்கள் தேனிறால், தேத்திறால் என்று உதாரணங்கள் கொடுத்துள்ளார்கள். எனவே, இங்கும் தேன், தேம் என்ற இரண்டு நிலை மொழிக் கொண்டு தேம்+அத்து என்ற சாரியை பெறுவதால் தேத்திறால் ஆயிற்று என்றும் தேன் சாரியைப் பெறாததால் தேனிறால் ஆயிற்று என்றும் விளக்கலாம். இதனால் நாம் மேலே கொண்ட ஒலியன் உறழ்ச்சி உறுதிப்படுகிறது. அதாவது ம/ன என்ற கிளைமொழி வரைகோடு அத்து/இன் என்ற மற்றொரு புணர்ச்சி உறழ்ற்ச்சி வரைகோடு பெறுவதால் கிளைமொழிப் பரப்பு உறுதி பெறுகிறது. இந்தக் கிளைமொழிப் பரப்பைக் கீழ்க்கண்டவாறு படம் வரைந்து விளக்கலாம்.




மேலே குறிப்பிட்ட அழத்தை/அழனினை என்ற வேறுபாடு ம/ன என்ற ஒலியன் உறழ்ச்சியையும், அத்து/இன் என்ற புணர்ச்சி உறழ்ச்சியையும் பெற்று அ,ஆ என்ற கிளைமொழிப் பரப்பு இ,ஈ என்ற கிளைமொழிப் பரப்பிலிருந்து வித்தியாசப் படுகிறது. எனவே, தமிழ்க் கிளைமொழிப் பரப்பில் ம/ன என்ற உறழ்ச்சியை ஒட்டி கிளைமொழி வரைகோடு (Isogloss) அடிப்படையானதாக அமைந்துவிடுகிறது.

இந்தக் கிளைமொழிப் பரப்புகள் பற்றி இன்னொரு உண்மையும் சுட்டிக்காட்டத் தகுந்தது. அடுத்தடுத்துள்ள இரண்டு கிளைமொழிப் பரப்புகள் ஒலியன் நிலையில் ஒத்திருந்து புணர்ச்சி நிலையில் வேறுபட்டும் புணர்ச்சி நிலையில் ஒத்திருந்து ஒலியன் நிலையில் வேறுபட்டும் இருப்பதால் மாறுபாடு சீரான நிலையில் அமைந்துவிட்டது என்றும் ஆகிறது. உதாரணமாக அ,ஆ என்ற இரண்டு கிளைமொழிப் பரப்பும் ஒலியன் நிலையில் (தேம் என்ற வடிவம் பெறும்) ஒன்றுபட்டுப் புணர்ச்சி நிலையில் (தேங், தேக்) மாறுபட்டுள் ளன. ஆனால், ஆ இ என்ற கிளைமொழிப் பரப்புகள் ஒலி

யன் நிலையில் மாறுபட்டாலும் (தேம்/தேன் என்ற இரண்டு வேறு வடிவம் பெறும்) புணர்ச்சி நிலையில் இரண்டுமே மிகுதிப் புணர்ச்சி (தேக்குடம் ல தேற்குடம்) பெறுகின்றன. அதாவது கிளைமொழிப் பரப்புகள் ஒன்றுக்கொன்று மாறுபட்ட வடிவங்களை, வேற்றுமைகளைப் பெற்றிருந்தாலும் மொழி அமைப்பு நிலையில் ஒற்றுமையும் வேற்றுமையும் கொண்டே அமைந்துள்ளன என்பது தெளிவாகிறது. ம/ன, அத்து/இன் அல்லது அத்து/ф என்ற இரண்டு கிளைமொழி வரைகோடுகள் தமிழ்மொழிப் பரப்பை நான்கு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கின்றன.

வெரிந் என்ற சொல்லுக்குரிய புணர்ச்சி மாற்றங்களும் இந்தக் கிளைமொழி வரைகோடுகளை உறுதி செய்யும்படி அமைந்துள்ளன. வெரிநுக்கடிது (சூ.298), வெரிநக்கடுமை (சூ.299) வெரிங்குறை (சூ. 300), வெரிக்குறை (சூ.301) என்று நான்கு வடிவங்கள் பெறுகின்றன. எனவே, அவைகளை வெரிந்/வெரிம் என்ற அடிப்படை வடிவங்களாகக் கொண்டு விளக்கலாம். அதாவது ந/ம என்ற ஒலியன் உறழ்ச்சியும் வேற்றுமைப் புணர்ச்சியும் அ/ф என்ற உறழ்ச்சியும் பெற்றுள்ளது. மகரக் கிளைமொழிப் பரப்பு இந்தச் சொல்லிலும் இயல்பு/மிகுதி என்ற புணர்ச்சி உறழ்ச்சி பெறுவதால் வெரிங்/வெரிக் என்ற மாற்று வடிவங்களைப் பெறுகின்றன.

| | அ | ஆ | இ | ஈ |
|---|---|---|---|---|
| ம்/ந் | வெரிம் | வெரிம் | வெரிந் | வெரிந் |
| ф/உ/அ | வெரிம் | வெரிம் | வெரிநு | வெரிந |
| இயல்பு/மிகுதி | வெரிங் | வெரிக் | வெரிநுக் | வெரிநக் |

இங்கு மூன்று கிளைமொழிப் பரப்புகள் அமைகின்றன. மேலே காட்டிய பரப்பு அடிப்படையில் விளக்கினால் அ,ஆ, இ/ஈ. (இகர ஈகாரமும் சேர்ந்தது) என்ற முறையில் அமையும். எனவே, தொல்காப்பியத்தில் காணப்படும் அமைப்பு உறழ்ச்சி

களைக் கொண்டு அதிகபட்சம் நான்கு கிளைமொழிகள் இருந்த தற்கான சான்று அமைப்பு நிலையிலேயே இருக்கிறது என்று கொள்ளலாம்.

தொல்காப்பியத்தில் சமூகக் கிளைமொழிகளும் துறை வழக்குகளும் இருந்ததற்கான சான்றுகள் காணப்படுகின்றன. அவையும் மொழி அமைப்பில் உள்ள உறழ்ச்சிகளை அடிப் படையாகக் கொண்டவை.

## 7.4. சமூகக் கிளைமொழி

தொல்காப்பிய பொருளதிகாரம் உயர்ந்தோர் (சூ.977, 979, 1163), மேலோர் (சூ.975), அடியோர், வினைவலர் (சூ.969), மேலோர்/கீழோர் (1090) என்று சமூக வேறுபாடு களைக் குறிப்பிட்டுள்ளது. ஆனால், சொல்லதிகாரத்தில் ஓரி டத்தில் மட்டும் இழிந்தோன், ஒப்போன், உயர்ந்தோன் (சூ.927 – 30) என்று வெளிப்படையாக குறிப்பிடப்பட்டுள்ளது. இது பொதுவாக மூன்று சமூகப் பிரிவைக் குறிப்பதாகக் கொள் ளப்படுகிறது (நீதிவாணன், 1977). அப்படியானால் ஒப்போன் என்றது இடைநிலையினரை – மத்திய வர்க்கத்தைக் குறிப்ப தாகக் கொள்ள வேண்டும். அப்படியில்லாமல் உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்ற இரண்டு சமூகப்பிரிவுகளே கொண்டு சமூக உறவுநிலையில் மூன்றுவகை அமைவதாகக் கொள்ளலாம்.

| பேசுவோன் | கேட்போன் | கூற்று | சொல் |
|---|---|---|---|
| இழிந்தோன் | உயர்ந்தோன் | இழிந்தோன் | ஈ |
| இழிந்தோன் | இழிந்தோன் | ஒப்போன் \| | தா |
| உயர்ந்தோன் | உயர்ந்தோன் | ஒப்போன் \| | தா |
| உயர்ந்தோன் | இழிந்தோன் | உயர்ந்தோன் | கொடு |

என்ற முறையில் அமைந்தால் சமூக உறவு காரணமாக மூன்று நிலை ஏற்படுகிறது; சமூகத் தொடர்பும் நெருக்கமாக அமை கிறது. முன்னதில் இடைநிலையோன் மட்டும் உயர்ந்தோனோ டும், இழிந்தோனோடும், ஒப்போனோடும் சமூக உறவு கொள்

கிறான், பின்னதில் உயர்ந்தோன், இழிந்தோன் ஆகிய இரு வரும் ஒருவர் மற்றவரோடும் தன்னை ஒத்தோரோடும் உறவு கொள்வதாய் அமைந்து சமூக உறவு நெருக்கம் உடையதாக அமைந்துவிடுகிறது.

## 7.4. துறை வழக்குகள்

வட்டாரவழக்குகளும் சமூக வழக்குகளும் பிறப்பால் ஏற்படுபவை. எனவே, இந்த நிலையில் ஏற்படும் மொழி அமைப்பு மாறுபாடு மொழி பயன்படுத்துவோரை ஒட்டி ஏற்படுவது. ஆனால், ஒரு மொழியைப் பல துறையில் பயன் படுத்துவதை ஒட்டி அமையும் துறை வழக்கு மாறுபாடு மொழியைப் பயன்படுத்துவதை ஒட்டி அமையும் துறைவழக்கு மாறுபாடு மொழிப் பயன்பாட்டை ஒட்டியது என்று குறிப் பிடலாம் (Halliday etal 1964:60).[3] துறைவழக்கு வேறுபாடுகளை உரைப்பாங்கு நடைபெறும் களன் (Field of discourse), ஊட கம் (Medium of discourse), நடை (Style of discourse) என்று மூன்றாக ஹாலிடேயும் பிறரும் பிரித்துள்ளார்கள். களன் என்பது அறிவியல் மொழி, ஆட்சிமொழி, இலக்கியமொழி போன்றவற்றையும் ஊடகம் என்பது பேச்சு மொழி, எழுத்து மொழி ஆகியவற்றையும் குறிக்கும்.

### 7.4.1. ஊடகம்

தொல்காப்பியர் வழக்கு/செய்யுள் என்று (சூ.946,501) உறழ்ந்தும், வழக்குக்கு உரியவை (சூ.506), செய்யுளுக்குரியவை (சூ. 522,534,595,680,696) என்று தனித்தனியாகவும் குறிப் பிடுபவை பேச்சுமொழி/எழுத்துமொழி - குறிப்பாக இலக்கிய மொழிக்குரிய வேறுபாடாகக் கருதலாம். இந்த உண்மையைப் பொதுநிலையில் 'வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின்' என்று பாயிரம் பொதுவாகக் குறிப்பிடுவது இங்கு சிறப்பாக எடுத்துக் காட்டத்தகுந்தது. எனவே, ஊடக அடிப்படையில் மொழி அமைப்பு வேறுபடுகிறது என்ற உண்மையைத் தொல்காப்பியர் உணர்ந்திருந்தார் என்பது தெளிவாகிறது.

### 7.4.2. களன்

இசை, இலக்கணம் (நூல்), இலக்கியம் (பாட்டு-செய்யுள்)

என்றதுறைகள் பற்றிய குறிப்புகள் தொல்காப்பியத்தில் நேரடியாக உண்டு. மேலும் கலைச்சொல் பற்றிய குறிப்பும் உண்டு. எனவே, தொல்காப்பியர் களனை ஒட்டி மொழி அமைப்பு மாறுபடலாம் என்ற கருத்தை உணர்ந்திருந்தார் என்று கொள்ளலாம்.

### 7.4.3. இலக்கணம்

ஒவ்வொரு எழுத்துக்கும் மாத்திரை இலக்கணத்தில் வரையறுக்கப்பட்டுள்ளது. ஆனாலும் அந்த எழுத்துகளின் மாத்திரையின் அளவு 'இசையோடு சிவணிய நரம்பின் மறை'யில் அதாவது யாழ்நூலில் மாறுபடலாம் (எழுத்து 33). அதாவது அளபு இறந்து உயிர்க்கலாம். இங்கு தொல்காப்பியர் யாழ்நூல் என்று பொதுவாகக் குறிப்பிட்டாலும் இசைத் துறையில் எழுத்துகள் இலக்கணத்தில் குறிப்பிட்ட மாத்திரையிலிருந்து அதிகம் பெற்று ஒலிக்கும் என்று கொள்ளலாம்.

இலக்கணம் என்பது ஆய்வுத்துறை; அறிவியல்துறை. எனவே, இலக்கியம், இலக்கணம் என்பன இரண்டு வேறு துறைகள். இதைத் தொல்காப்பியர் பாட்டு/நூல் என்று செய்யுளியலில் (சூ.1330) பிரித்துப் பேசியுள்ளார். எழுத்ததிகாரத்தில் இலக்கிய மொழி அமைப்பிலிருந்து இலக்கண மொழி அமைப்பு மாறுபடுவதையும் இலக்கணமொழியின் தனிப்பண்பையும் மூன்று சூத்திரங்களில் விளக்கியுள்ளார்.

சொல்லுக்கு முதலில் வரும் எழுத்துகளை விளக்கிவிட்டுக் கடைசியாக 'முதலா ஏன தம்பெயர் முதலும்'. என்ற ஒரு சூத்திரம் (66) காணப்படுகிறது. இதை உரையாசிரியர்கள் புறனடைச் சூத்திரம் என்றும் 'முதல் ஆகாத ஒழிந்த பெயர்கள் தம் பெயர் கூறுதற்கு முதலாம்' என்று பொழிப்புரை எழுதி டகரம், ணகரம் என்று உதாரணங்கள் கொடுத்துச் சென்றுள்ளார்களே தவிர இந்தச் சூத்திரத்தின் அவசியம், உள்கிடை என்ன? என்ற கேள்வியை எழுப்பவே இல்லை இதனால்தான் டப்பெரிது, ணந்நன்று போன்ற உதாரணங்களையும் கொடுத்துள்ளார்கள். 'தம்பெயர்' என்ற தொடர்

இங்கு முக்கியமானது. எழுத்துகளின் பெயர் பற்றிக் கூறும் இடம் இலக்கணமே. எனவே, இலக்கண நூல்களில் சொல்லுக்கு முதலில் வராத எழுத்துகளும் சொல்லுக்கு முதலில் பயன்படுத்தலாம் என்பதே கருத்து. இதன் மூலம் தொல்காப்பியர் தன்னுடைய நூலும் இலக்கண மரபிலிருந்து மாறவில்லை என்று காட்டி விட்டார். டகர, ணகரம் (சூ.91), ஙஃகான் (சூ.488), ளஃகான் (சூ.487), லகரம் (சூ.214) போன்றவைச் சொற்களாகத் தொல்காப்பியத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளன.

தொல்காப்பியர் சொல்லுக்கு இறுதியில் வரும் எழுத்துகளை விளக்கும்போது 'எஞ்சுதல் எல்லாம் எஞ்சுதல் இலவே' என்ற சூத்திரத்தின் மூலம் (77) சொல்லுக்கு ஈறாகாத எழுத்துகளையும் இறுதியில் வரும்படி பயன்படுத்தலாம் என்று உணர்த்துகிறார். இதற்கும் உரையாசியர் டெ பெரிது என்ற உதாரணதைக் கொடுத்துள்ளார்கள். இவை பொருத்தமாக இல்லை. எனவே வேங்கடராசுலு ரெட்டியார் (1944) 'மொழிக்கு ஈறாகாதன தம் பெயர் கூற ஈறாகிவருவதற்கு ஆட்சி இலது' என்று கூறியுள்ளார். ஆனாலும் தொல்காப்பிய உரைவளம் பதிப்பித்த சிவலிங்கனார் (1981:170) 'பெரிது டெ' என்ற உதாரணம் காட்டுதல் அமையும் என்னலாம்' என்று குறிப்பிட்டுள்ளார். இங்கும் தனிமெய் சொல்லுக்கு இறுதியில் வரவில்லை. தொல்காப்பியத்திலும் பிற இலக்கணத்திலும் உதாரணம் கிடையாது என்ற வேங்கடராசுலு ரெட்டியார் கருத்தே பொருந்தும்.

மேலும், தொல்காப்பியத்தில் மெய்மயக்கம் பற்றிய சூத்திரங்களுக்குப் பிறகும்

தம்மியல் கிளப்பின் எல்லா எழுத்தும்
மெய்ந்நிலை மயக்கம் மானம் இல்லை

என்ற சூத்திரம் (47) உள்ளது. இதையும் உரையாசிரியர்கள் இலக்கிய மொழியில் வராத மெய்மயக்கங்கள் இலக்கணமொழியில் வரலாம் என்றே விளக்கியுள்ளார்கள். இதற்கும் இலக்கண நூல்களில் உதாரணம் இல்லை. இதற்குக் காரணம் இலக்கண

நூலில் தனிமெய்யெழுத்துகளை அகர உயிரோடு சேர்த்துக் குறிப்பிடுவது தான். இந்த உண்மையையும் தொல்காப்பியர் 'மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்' என்ற சூத்திரத்தின் மூலம் (சூ.46) குறிப்பிட்டுள்ளார். எனவேதான் இலக்கண நூல்களில் புதிய மெய்ம்மயக்கங்களும், சொல்லுக்கு இறுதியில் இலக்கியத்தில் வராத புதிய எழுத்துகளும் காணப்படவில்லை. இருந்தாலும் தொல்காப்பியர் இப்படி மூன்று சூத்திரங்களில் இலக்கண நூலின் மொழி அமைப்பு முதல், ஈறு, மெய்மயக்கம் (இடை நிலை) ஆகிய மூன்று நிலையிலும் இலக்கிய மொழியின் அமைப்பிலிருந்து மாறுபட்டது என்பதை வலியுறுத்துவதற்காகக் கூறியிருக்கிறாரோ என்று எண்ண வேண்டியிருக்கிறது.

இந்த நோக்கில் பார்க்கும் போது திரிசொல் என்பதற்கு உரையாசிரியர்கள் கொடுத்த விளக்கம் சிறப்பானதாக அமையவில்லை என்று நினைக்க வேண்டியிருக்கிறது. எனவே, அடுத்து திரிசொல் பற்றிப் பார்ப்போம்.

### 7.4.4. திரிசொல்

ஒருபொருள் குறித்த வேறு சொல்லாகியும்
வேறுபொருள் குறித்த ஒரு சொல்லாகியும்
இருபாற்றென்ப திரிசொற் கிளவி

என்பதே திரிசொல் பற்றிய தொல்காப்பியச் சூத்திரம் (எச்சம் 3). வடிவம் திரிந்தது திரிசொல் என்று கொண்டு ஒரு பொருள் பல சொற்களிடையே வடிவ ஒற்றுமை ஓரளவாவது இருந்தால், உறுப்புத் திரிந்தவை என்றும் வடிவ ஒற்றுமையே இல்லாவிட்டால் முழுவதும் திரிந்தவை என்றும் பாகுபடுத்தி இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் ஆகிய மூவரும் விளக்கியுள்ளார்கள். சேனாவரையர் கருத்துப்படி கிள்ளை, மஞ்ஞை என்பன உறுப்புத் திரிந்தன. அதாவது அவை கிளி, மயில் என்று முறையே பொருள்படுவதால் கிளி: கிள்ளை; மயில்: மஞ்ஞை என்பன உறுப்புத் திரிந்தன ஆகும். விலங்கல், விண்டு என்பன முழுவதும் திரிந்தன. அவை இரண்டும் வெற்பு (மலை) என்று பொருள்படுவதால் அதனோடு

ஒப்பிடும்போது முழுவதும் திரிந்தன ஆகிறது. எனவே வடிவம் திரிவது என்பது ஒரு பொருள் குறித்த பலசொல் என்ற நிலையில் மட்டுமே பொருந்துகிறது. பலபொருள் குறித்த ஒரு சொல் நிலையில் திரிவது என்பதற்கு இடம் இல்லை. எகினம் என்பது அன்னமும், கவரிமாவும், புளிமாவும், நாயும் உணர்த்தும் என்று சேனாவரையர் உதாரணம் கொடுத்துள்ளார். இங்கு எகினம், அன்னம்; எகினம், கவரிமா என்று ஒருபொருள் பல சொல்லாகக் கொள்ளும் நிலையில் மட்டுமே திரிசொல்லாகக் கருத முடியும். எனவே, உரையாசிரியர்கள் வடிவம் திரிந்த சொல் என்ற கருத்து தொல்காப்பியர் கூறிய இரண்டு வகையில் ஒரு வகைக்கே பொருந்துகிறது.

தெய்வச்சிலையாரும் 'திரிந்து வருதலின் திரிசொல்லாயிற்று' என்று விளக்கினாலும் திரிவதில் இரண்டுவகை இருக்கிறது என்ற உண்மையை ஒத்துக்கொள்ளவில்லை. எப்படியானாலும் தொல்காப்பியர் கூறிய இரண்டுவகை திரிசொற்களில் ஒருவகை (ஒரு பொருள் பலசொல்) மட்டுமே பொருந்துகிறது அல்லது உதாரணம் கிடைக்கிறது. மேலும் எல்லா உரையாசிரியர்களும் உதாரணமாகக் கொடுக்கும் சொற்களும் மொழியில் இயல்பாக வழங்கும் ஒருபொருள் பலசொல்லும், பலபொருள் ஒரு சொல்லுமாக அமைந்து முன்னரே கிளவியாக்கத்திலும் உரியியலிலும் விளக்கப்பட்டுள்ளதால் அவைகளைத் திரிசொல் என்று தனியே கூறுவது பொருத்தமாக இல்லை. நன்னூல் உரையாசிரியரான சங்கர நமச்சிவாயர் 'எழுத்துக்கள் திரிந்தும் திரியாமையும் கருதியன்று' என்று கூறிவிட்டு அவர் புதியவிளக்கம் கொடுத்துள்ளதும் தொல்காப்பிய உரையாசிரியர்களின் கருத்து தவறு என்பதைப் புலப்படுத்திவிடுகின்றன (முழுவிளக்கத்துக்குச் சண்முகம், 1984: 75-83 பார்க்கவும்). அதே சமயத்தில் சேனாவரையர் மாற்றுக் கருத்தாக ஒன்றை குறிப்பிட்டு அது பொருந்தாது என்று கூறியதன் வன்மை, மென்மையை ஆராய்ந்தால் புதிய விளக்கம் கிடைக்கிறது.

'கட்டியசொல்' என்பதே மற்றொரு கருத்து. அது செய்யுள் வழக்காக வருவதில்லை; அதனால் அந்தக் கருத்து பொருந்தாது

என்பதே சேனாவரையர் வாதம். கட்டிய சொல் என்பது இன்றைய கலைச் சொல்லே ஆகும். நன்னூலார் (சூ. 271) 'அரிதுணர் பொருள்' என்ற விளக்கமும் அதற்குச் சங்கரநமச் சிவாயர்,

> கல்வி ஏதுவான் அன்றி இயல்பாகத் தம்பொருளை உணர நிற்றலின் இயற்சொல் என்றும் அவ்வியல்பிற்கு மறுதலைப்பட்டுக் கல்வி ஏதுவால் தம்பொருளை உணர நிற்றலின் திரிசொல்லும் கூறப்பட்டன

என்ற விளக்கமும் இந்தக் கருத்தைத்-திரிசொல் என்பது கலைச் சொல் என்ற எண்ணத்தை ஏற்படுத்துகிறது. மேலும் மீனாட்சி சுந்தரம் (1973:753) சேனாவரையர் கருத்து விளக்கமாக 'அறிஞர்கள் அமைத்துக் கொண்ட சிறப்புச் சொற்களே திரிசொல் ஆகும்' என்று கூறுவது திரிசொல் இன்று நாம் வழங்கும் கலைச் சொல்' என்பதை உறுதிப்படுத்துகிறது.அப்படியானால் 'கலைச் சொற்களான திரிசொற்கள் இலக்கிய வழக்கில் வந்துள்ளனவா என்றும், அவற்றையும் ஒரு நோக்கில் பலபொருள் ஒருசொல்; ஒரு பொருள் பல சொல் என்று பிரிக்கலாமா என்றும் பார்க்க வேண்டும்.

உயர்திணை, இயற்பெயர், என்ற இரண்டு இலக்கணக் கலைச் சொற்கள் 'உயர்திணை ஊமன்' என்று குறுந்தொகை யிலும் (224.5). 'இருவருக்கும் உரித்தாக ஒருவர் என்று ஓர் இயற்சொல் இலது எனின்' என்று குமரகுருபரர் செய்யுட் கோவையிலும் (54-2-4) வந்துள்ளன.

உயிர் என்பது ஆன்மாவையும் உயிரெழுத்துகளையும் மெய் என்பது உடலையும் மெய்யெழுத்துகளையும் குறிப்பது ஒரு சொல் பல பொருளுக்கு உதாரணம். பாலை, பிரிவு என்பதும் கற்பு, இல்வாழ்கை என்பதும் ஒரு பொருள் பலசொற்கள். எனவே, திரிசொல் என்று தொல்காப்பியர் குறிப்பிட்டதை இன்று கட்டிய சொல் என்றோ, கலைச் சொல் என்றோ கருது வதே சிறப்பானது. அப்படியானால் திரிசொல் என்பதைப் பொருள் திரிந்த சொற்கள், வடிவம் திரிந்த சொற்கள் (வடிவம்

புதிதாக உண்டாக்கப் பட்ட சொற்கள்) என்று விளக்கலாம். இலக்கணத்தில் உயிர், மெய் என்பன பொருள் திரிந்து வந்த சொற்கள். குறில், நெடில் என்ற கலைச் சொற்கள் குறு,நெடு என்ற அடிச் சொற்களிலிருந்து புதிய விகுதி (-இல்) சேர்த்து உண்டாக்கப்பட்டவை. பொதுவாகக் குறுமை, நெடுமை என்று வழங்க வேண்டிய சொற்கள் - இல் என்ற புதிய விகுதி சேர்த்துக் குறில்,நெடில் என்ற புதிய சொற்கள் ஆக்கப்பட்டிருப்பதால் வடிவம் திரிந்த சொற்களாகக் கருதலாம் (சண்முகம்: 1988). எனவே, தொல்காப்பியர் இலக்கணத் தமிழ், இலக்கியத் தமிழிலிருந்து அமைப்பில் மாறுபடுகிறது என்று சுட்டிக் காட்டியதற்கு ஏற்ப துறை தோறும் புதிய சொற்கள் வழங்க வேண்டியிருக்கும் என்பதைத் திரிசொல் என்பதன் மூலம் உணர்த்தியுள்ளார் என்று கருதலாம்.

## 7.5. உணர்வு மதிப்பீடு

தொல்காப்பியர் உறழ்ச்சிகளை விளக்கும்போது' உறழ்ச்சி என்று எடுத்து உரைக்காமலும், உறழ்ச்சி என்று விதந்து கூறியும் சென்றுள்ளார். அப்படி விதந்து கூறிய இடங்களில் சில உறழும் என்று குறிப்பிட்டு மதிப்பீடாக எதுவும் சொல்லாமல் சென்று விட்டார். சில இடங்களில், 'ஒத்தது', 'ஒரனைய 'செவ்விது' என்ற உடன் பாட்டு நிலையிலும், 'மானம் இல்லை' 'வரையார்', என்று எதிர்மறைநிலையிலும் மதிப்பீட்டுச் சொற்களைப் பயன்படுத்தியுள்ளார்.

பனி என்ற சொல்லுக்கு 'அத்தும், இன்னும் சாரியை ஆகும்' என்று கூறும்போது (சூ.241) உறழ்ச்சி உடையது என்ற குறிப்பில்லை. அப்படியே வெரிந் சொல் ஈற்றெழுத்து கெட்டு மெல்லெழுத்து வரும் என்று ஒரு சூத்திரத்தில் (300)கூறிவிட்டு அடுத்த சூத்திரத்தில் 'ஆவயின் வல்லெழுத்து மிகுதலும் உரித்தே' என்று விளக்கும் போது அது உறழ்ச்சியாக வருவது என்பது எடுத்துரைக்கப் படவில்லை.

அதே சமயத்தில் உறழ்ச்சியாக வரும் என்று மட்டும்-அதாவது மதிப்பீட்டுக் குறிப்பு இல்லாமலும் பல இடங்களில்கூறிச் சென்றுள்ளார்.

'வல்லெழுத்து இயற்கை . உறழத் தோன்றும்' (சூ.215), 'உறழ்வு ஆகும்' (சூ.1513), 'உறழ் ஆகுந' (சூ.1595), 'உறழும்' (சூ.342) போன்றவை அதற்குச் சான்றுகளாகும். எனவே, மதிப் பீட்டுச் சொற்கள் பயன்படுத்தப்பட்ட சூத்திரங்களே மொழி உணர்வினை அறிந்து கொள்ள உதவுகின்றன.

'உறழத் தோன்றல் ஒத்தது என்ப உணருமோரே' (சூ.193) 'சாரியை இயற்கை உடைமையும் இன்மையும் ஒடுவாயின் ஒக் கும்' (சூ.132.7), 'ஓரன்னய' (சூ.146), 'இயல்' (சூ.151), 'உரியவை உள' (சூ,156.5) என்று கூறியுள்ள இடங்களில் உறழ்ச்சி இயல் பானது, உறழ்ந்து வரும் இரண்டு வடிவங்களும் ஒத்தன, அதா வது ஒத்த பண்பு உடையவை என்று கூறுவதால் மொழியியல் அறிஞனுக்குரிய அறிவியல் உணர்வே புலனாவதாகக் கொள் ளலாம்.

ஒரு இடத்தில் மட்டும் உறழ்ச்சியாக வருவதைச் 'செவ்விது' (சூ.242.2) என்று குறிப்பிட்டுள்ளார். இளம்பூரணரும், 'நச்சி னார்க்கினியரும் அந்தச் சொல்லுக்குப் பொருள் எழுதவில்லை ல சரியானது என்று பாலசுப்பிரமணியனும் (1981), 'தக்கது' என்று சிங்காரவேலனும் (1988:77) பொருள் எழுதியுள்ளார்கள். இங்கு பனி என்ற சொல் அத்து, இன் என்ற இரண்டு சாரியைகளை யும் ஏற்கும் முதலில் குறிப்பிட்டு அடுத்து வளி என்ற பூதக் கிளவியும் 'அவ்வியல் நிலையியல் செவ்விது என்ப' என்று குறிப் பிடுகிறார். எனவே இங்கு மாட்டேறுதான் சரியானது என்று கொண்டால் உறழ்ச்சி பற்றி மதிப்பீடு இல்லாமல் போய்விடும்.

'திசைச்சொல்' என்ற கலைச் சொல்லில் கூட எந்தவித மதிப்பீட்டுக் குறிப்பும் இல்லை. அப்படியே திசைச் சொல்லை விளக்கும் போது கையாண்ட 'செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலம், 'தம் குறிப்பினவே' என்ற தொடர்களிலும் உயர்வு– தாழ்வு பற்றிய குறிப்பு இல்லை. ஆனாலும் நிலை மொழி சொற்களை இயற்சொல் என்னும்போது எதிர்மறையாக உயர்வு இன்மை தோன்றுகிறது. இது சமூக உணர்வின் பிரதி பலிப்பாக இருக்கலாம் என்பது மேலே விளக்கப்பட்டது.

சில உறழ்ச்சிகளை 'வரைநிலை இன்றே' (நீக்கும் நிலை இல்லை சூ. 219), 'வரையார்' (நீக்க மாட்டார்கள்-சூ. 421), 'மானம் இல்லை' (குற்றம் இல்லை-சூ.230,246,271,323) என்று எதிர்மறையாகக் குறிப்பிடும்போது ஒரு சிலர் தாழ்ந்தது, குற்றம் உடையது என்றுகொண்டிருந்த கருத்தை மறுப்பதுபோன்ற எண்ணம் உள்ளடக்கியிருக்கிறது. அதாவது, சமூகத்தில் ஒரு சிலர் உறழ்ந்து வரும் வடிவங்களில் ஒன்றைத் தவறானது என்று கருதியிருந்தார் என்பது புலப்படுகிறது. வரை (நீக்கு), மானம் (குற்றம்) என்பவை சமூக உணர்வின் பிரதிபலிப்பு; வரையார், மானம் இல்லை என்பவை நூலாசிரியனின் பரந்து பட்ட அறிவியல் ரீதியான உணர்வின் வெளிப்பாடு என்று நாம் கொள்ளலாம்.

பிற்காலத்தில் திசைச் சொற்கள் வழங்கும் பகுதிகளைக் 'கொடுந் தமிழ் நிலம்' என்றும், சில சொற்களை வேறு விதமாக உச்சரிப்பவர்களை 'அறிவிலாதர்' (வீரசோழியம் – 82) என்றும் வழங்குகிற வழக்குகளைக் கவனிக்கும்போதுதான் தொல்காப்பியரின் மொழி உணர்வு எவ்வளவு அறிவியல் பூர்வமானது என்பது தெளிவாகும்.

நாம் இதுவரை பார்த்தது ஒரே கால கட்டத்தில் மொழி அமைப்பில் காணப்படும் உறழ்ச்சிகள் பற்றியது. இதை மொழியியலாளர் படுக்கை நிலை (Horizontal) உறழ்ச்சி என்று கூறுவார்கள். மொழி அமைப்பு காலந்தோறும் மாறுவதையும் ஒரு வகை உறழ்ச்சியாகக் கருதலாம். அதைச் செங்குத்துநிலை (Vertical) உறழ்ச்சி என்று விளக்குவார்கள். எனவே, தொல்காப்பியம் மொழி மாற்றம் பற்றிக்கூறிய கருத்தையும் உறழ்ச்சியாக விளக்கலாம். 'கடிசொல் இல்லை காலத்துப் படினே' என்ற சூத்திரம் (எச்சம்.56) தொல்காப்பியர் காலந்தோறும் சொற்களஞ்சியத்தில் மாற்றம் ஏற்படலாம் என்றும் அந்த மாற்றங்கள் தள்ளத் தகுந்தவை அல்ல என்று கூறுகிறார் எனலாம். 'சொல் காலத்துப் படினே' என்பது சொற்களஞ்சியத்திலும் குறிப்பாக மொழி அமைப்பில் எல்லா நிலையிலும் (ஏனெனில் சொல் என்பது உருபன், வார்த்தை ஆகிய பல பொருளில் தொல்காப்பியத்தில் வந்துள்ளது, ஏற்படும் மாற்

றத்தையும் 'கடி சொல் இல்லை' என்பதால் தள்ளக் கூடியது அல்ல என்ற உணர்வையும் குறிப்பிட்டுள்ளார்.

இங்கு உணர்வு எதிர்மறையாக வெளிப்படுத்தப்பட்டிருப்பதால் தள்ளவேண்டும் என்ற கருத்துக்கு மாறானதாகத்தள்ள வேண்டியதில்லை என்று தொல்காப்பியர் கூறுவதாகக் கொண்டால் மொழி மாற்றத்தையும் விஞ்ஞான உணர்வோடு ஆதரிக்கிறார் என்று ஆகும்.

7.6. நாட்டுணர்வு

ஒரு இலக்கிய அல்லது இலக்கண ஆசிரியன் நாட்டுணர்வை மொழிவழியாகத் தான் வெளிப்படுத்துவான். அந்த முறையில் தொல்காப்பியர் எப்படி நாட்டுணர்வை வெளிப்படுத்தியுள்ளார் என்று பார்ப்போம்.

தொல்காப்பியர் இலக்கிய உணர்வு அதிகமாகப் பெற்றிருந்ததாலேயே பொருளதிகாரம் எழுதியிருக்க முடியும் என்றாலும் அது இலக்கண உணர்வாகப் பரிணமித்தது என்று ஓரளவு இலக்கண உருவாக்கம் என்ற இயலில் சுட்டிக் காட்டப்பட்டது. ஆனாலும் இலக்கிய உணர்வு நாட்டுணர்வோடு கலந்திருக்க வேண்டும் என்பதைச் செய்யுளியலில் ஒரு சூத்திரத்தில் புலப்படுத்தியுள்ளார்.

தொல்காப்பியர் செய்யுளியலில் 'யாப்பு' என்பதை எழுத்து அசை, சீர், அடி ஆகிய அடிப்படை உறுப்புகளோடு சேர்த்துக் கூறி அதற்குக் 'குறித்த பொருளை முடிய நாட்டல்' என்று விளக்கம் தருவதால் உள்ளடக்கம் பற்றிக் குறிப்பிடுகிறார் என்பது தெளிவாகிறது.

எழுத்து முதலாக ஈண்டிய அடியிற்
குறித்த பொருளை முடிய நாட்டல்
யாப்பென மொழிப யாப்பறி புலவர்

என்பதே அந்தச் சூத்திரம். இங்கு 'யாப்பறி புலவர்' என்பது வெறும் யாப்பதிகாரத்தை அறிந்த அறிஞர் என்று கொள்ளக் கூடாது. இலக்கியத்தை - இலக்கியப் பொருளை அறிந்த அறிஞர் என்றே கொள்ள வேண்டும். மேலும், எழுத்து முதல் அடி வரையுள்ள உறுப்புகள்வடிவம்-உருவம்பற்றியவை;'யாப்பு'

என்பது உள்ளடக்கம் பற்றியது என்றும் பிரிந்து உணர்ந்து கொள்ளவேண்டும். யாப்பு உள்ளடக்கத்தைப் பற்றியது என்ப தாலேயே இன்னொரு சூத்திரத்தில் யாப்பை இலக்கியவகை களோடு தொடர்புபடுத்திப் பேசுவதோடு, அந்த இலக்கிய வகைகள் மக்களோடு அதாவது தன் நாட்டில் வாழும் மக்க ளோடு உறவு கொண்டதாக இருக்க வேண்டும் என்பதையும் தொல்காப்பியரால் விளக்க முடிந்தது.

பாட்டு, (உ)ரை, நூலே, வாய்மொழி, பிசியே
அங்கதம், முதுசொல், அவ்வேழ் நிலத்தும்
வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பில்
நாற் பெயர் எல்லை அகத்தவர் வழங்கும்
யாப்பின் வழிய தென்மனார் புலவர்

என்பதே அந்தச்சூத்திரம். இங்கு முதல் இரண்டு அடிகளும் இலக்கிய வகைகளைக் குறிப்பிடுகின்றன என்பதில் சந்தேகமே இல்லை (உ.ம் தமிழண்ணல் 1978:23). கடைசி மூன்று அடிகளும் 'அகச்சான்றாக நூல்வரம்பு' காட்டுவதாக மாணிக்கம் (1984:16) கூறியுள்ளார். கடைசி மூன்று அடிகளையும் கிருஷ்ணன் (1984:70) எடுத்துக்காட்டி

> யாப்பின் உறுப்புகளைக் குறிக்கும் பொழுது மூவேந்தர் ஆட்சியையும் நினைவு கூறுகிறார்

என்று சுருக்கமாகக் குறிப்பிட்டு விளக்கமாக

> தொல்காப்பியர் காலத்தில் தமிழ்நாடு ஆட்சிப்பன்மை யால் சிற்றெல்லைப்பட்டு இருந்த போதிலும் ஒழுங்கு பட்ட நாட்டுணர்வு மிகுதியும் வளராது இருந்த நிலை யிலும் ஒழுங்குபட்ட தமிழ் நாட்டின் காவலர்களாக மூவேந்தரையே தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். தமிழ்நாடு என்றவுடன் மூவேந்தரையும் இணைத்துப் பார்க்கும் முயற்சி இக்காலம் வரை தொடர்ந்து வருவதினின்றும் மூவேந்தர் மரபு தமிழக வரலாற் றோடு பின்னிப் பிணைந்து கிடப்பது நன்கு புலனா கும். இந்த மூவேந்தர் மரபுக்கு முதல் சான்று தொல் காப்பியத்திலேயே காணக் கிடைக்கிறது. ...
>
> இன்றைய சமூகவியல் ஆய்வாளர் கூறும் இக்கருத் துக்களோடு தொல்காப்பியர் கூறும் மூவேந்தர் பற் றிய செய்தியையும் இணைத்துப் பார்த்தால் தமிழக

> நாட்டுணர்வில் மூவேந்தரின் பங்கினையும் மூவேந்தரையும் சிறப்பித்துப் பேசும் தொல்காப்பியர் உள்ளத்தில் தோன்றிய நாட்டுணர்வையும் அறிய முடியும். மூவேந்தரையும் தமிழ் நாட்டின் தலைவர்களாக (National leaders) அவர் காண்கிறார் எனலாம் (ப. 71 தொ.)

என்று பின்பகுதியில் கூறும்போது அரசியல் உணர்வு அதிகமாகவே வெளிப்படுகிறது. இன்று தமிழகத்தில் பாமர ரஞ்சமாக வழங்கும் கருத்தின் பிரதிபலிப்பு என்று கூடச் சொல்லலாம். ஏனென்றால் 'வண்புகழ் மூவர்' என்று தொல்காப்பியர் பொதுவாகக் கூறியதைப் பலரும் (உ.ம் வெள்ளைவாரணனார், 1956:2.219 தமிழண்ணல் 1978:23) மூவேந்தரைக் குறிப்பதாகக் கொண்ட கருத்து அடிப்படையில் சமூக சிந்தனைகளைக் கிருஷ்ணன் வளர்த்துக் கொண்டு போயிருக்கிறார் என்றே நினைக்க வேண்டியிருக்கிறது.

உண்மையில் தொல்காப்பியர் இந்த அடிகளில் நாட்டுக்கு அடையாக புகழ் மிகுந்த மூவர்-அதாவது புகழ் மிகுந்த மூன்று பேர் வாழும் நாடு என்று குறிப்பிட்டு அந்நாட்டுக்குள் வாழும் மக்கள் வழங்கும் யாப்பு வழிப்பட்டதாக- இலக்கியத்தின் உள்ளடக்கம் இருக்கவேண்டும் என்று கூறுகிறார். எனவே வண்புகழ் மூவர் அதிக முக்கியத்துவம் பெறவில்லை என்பதைத் தொடரியல் நோக்கில் ஊன்றிக் கவனிக்கும்போது அறிந்து கொள்ளலாம். ஆகவே இலக்கியம் உலகப் பொதுமையானது என்பதை விட நாட்டில் வாழும் மக்கள் அதாவது நாடு தழுவியதாக இருக்கவேண்டும் என்று தேசிய இலக்கிய உணர்வைத் தொல்காப்பியர் புலப்படுத்துவதாகவே தோன்றுகிறது.

அதனால்தான் தொல்காப்பியர் 'நூல்' என்று குறிப்பிட்டதை விரித்துப் பேசும்போது இன்னொரு வகையாகவும்-நூல் உரை, பிசி, முதுமொழி, மந்திரம், குறிப்பு என்ற வகையாகவும் விளக்கி அறிவியல் நூல்கள் எழுதுவதற்கான வழிகாட்டிகளாக நூலின் உள்ளார்ந்த பண்பு, புறப்பண்பு ஆகியவற்றையும் விளக்கிச் சென்றுள்ளதைக் காணலாம். அதாவது தான் மொழி அறிஞன் - சமூக உணர்வு உடையவன் என்பதையே

புலப்படுத்திச் செல்கிறார். ஆகையினால்தான் மொழி அமைப்பு நிலையில் பிறமொழிச் சொற்களை ஏற்றுக்கொள் ளலாம் என்று தைரியமாகக் கூறியதை ஒட்டி கருத்து அளவில் பிற மொழி கருத்துகளும் அறிந்து கொள்ளத் தகுந்தவை என்று அவரால் கூற முடித்தது. எனவேதான் நாட்டுணர்வை யும், தேசிய இலக்கிய உணர்வையும் தாண்டி உலக உணர்வு உடையவராகவும் தொல்காப்பியர் தன்னைப் புலப்படுத்திக் கொண்டுள்ளார்.

## 7.7. உலக உணர்வு

தொல்காப்பியர் உலக உணர்வை இரண்டு நிலையில் வெளிப்படுத்தியுள்ளார். ஒன்று: தனக்குத் தெரிந்த பிற மொழியான வடமொழி (சமஸ்கிருதமும் பிராகிருதமும்) கருத்துகளோடு தமிழ் கருத்துகளையும் ஒப்பிட்டு ஒற்றுமையும் வேற்றுமையும் சுட்டிக் காட்டியது. இது சிறப்பு நிலை என லாம். இன்னொன்று: கோட்பாட்டு நிலையில் வழி நூல்களில் ஒன்றாக மொழிபெயர்ப்பு நூல்களைக் குறிப்பிட்டது.

தொல்காப்பியர் மேலே குறிப்பிட்டபடி தன் கால நிலையை ஒட்டி வடவெழுத்து (எச்சம்.4), வடசொல் (ஷை), அந்தணர் மறை (எழுத்து.1020), மறை (செய்யுள்.178) ஆகிய வற்றைப் பற்றிப் பேசுவதால் வடமொழி, வடமொழி இலக் கியம் ஆகிய இரண்டையும் அறிந்திருந்தார் என்பதைக் காட்டி விடுறார். அங்கும் வடமொழி தமிழ் – ஒற்றுமையையும், (காமக் கூட்டம்......மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள் துறை யமை நல்யாழ் துணைமையோர் இயல்பு - களவு-1) வேற்றுமை யையும் (அகத்தெழுவளியிசை அளபிற்கோடல் அந்தணர் மறை -எழுந்து புறந்திசைக்கும் மெய்தெரிவளியிசை அளவு கூறல் – தமிழ் முறை-எழுந்து:102) வடமொழியின் சிறப்பு கருத்தினை யும் 'மறை(ரகசியம், என ஒழுகுதல் மறையோர் ஆறு' செய்யுள் 178) என்று மூன்று வகையாகக் குறிப்பிட்டுள்ளார். தமிழ் மொழிச் சிறப்பினை (மூவளபிசைத்தல் ஓர் எழுத்து இன்று (எழுத்து. 5) உயர்திணை என்மனார் மக்கட்சுட்டு; அஃறிணை அவரல பிற கிளவி-1) தனியே எடுத்துக் கூறாவிட்டாலும்

இலக்கணத்தின் நோக்குமே அதுதான். எனவே ஒப்பிலக்கிய ஆய்வின் எல்லா நிலைகளும் ஆராய்ச்சியாளன் என்ற முறையில் சுட்டிக்காட்டினாலும் வடமொழியைச் சுட்டிக்காட்ட வேண்டிய அவசியம் என்ன? வெறும் ஒப்பிலக்கிய நோக்கு என்ற ஆராய்ச்சி உணர்வு மட்டும் தானா? வேறு ஏதாவது சமூக உணர்வு அடங்கியிருக்கிறதா என்று பார்க்க வேண்டும்.

மொழி அமைப்பு நோக்கில் வடசொல்லை செய்யுள் ஈட்டச் சொல்லாகக் கூறியது, வரலாற்று உண்மையை-அந்தக் காலத் தமிழ் மக்கள் வடமொழி பேசும் மக்களோடு தொடர்பு கொண்டிருந்தார்கள் என்பதைக் காட்டுகிறது. எனவே அந்த மொழித் தொடர்பே வடசொல் தமிழில் புகுந்ததற்குக் காரணம். ஆகவே ஆராய்ச்சி உணர்வோடு வரலாற்றுணர்வும் 'வடசொல்' என்பதில் அடங்கியிருக்கிறது என்பதில் ஐயமில்லை. இந்த ஒப்பிலக்கிய செய்திகள் இன்னொரு உண்மையைப் புலப்படுத்துகின்றன. அதாவது தொல்காப்பியர் உள்ளிட்ட அந்தக் கால அறிஞர்கள் வடமொழி படித்திருக்கிறார்கள் என்பதே அது. வரலாற்றுத் தொடர்பால் மொழித் தொடர்பு ஏற்படும் போது அந்த மொழிக் கல்வி நடைபெறவேண்டும் என்ற அவசியம் இல்லை. எனவே மொழிக்கல்வி ஏற்பட்டுத் தன்னுடைய நூலில் ஒற்றுமை, வேற்றுமை, தனித்தன்மை ஆகியவற்றைச் சுட்டிக் காட்டுகிறார் என்றால் அந்த மொழிக்குச் சமூக மதிப்பு இருந்தது என்று பொருள். அந்தச்சமூக மதிப்பையும் இலக்கண ஆசிரியன் வரலாற்று உண்மையாக ஏற்றுக் கொண்டாலும் அந்த மதிப்பு காரணமாக ஒன்றை உயர்த்தி மற்றொன்றைத் தாழ்த்தாது சமநோக்கில் வைத்திருந்தார் என்பதையே ஒப்பு ஆய்வின் மூன்று நிலையும் (ஒற்றுமை, வேற்றுமை, தனித்தன்மை) சுட்டிக்காட்டி யதன் மூலம் உணர்த்தியுள்ளார். பிறமொழிபற்றித் தொல்காப்பியர் ஆய்வாளனுக்குரிய விஞ்ஞான உணர்வையே புலப்படுத்தியுள்ளார். அதே சமயத்தில் கோட்பாட்டு நிலையில் பிற மொழியில் சிறந்த கருத்து இருக்கலாம்; அவை பிறமொழி அறியாதவர்களும் அறிந்து கொள்ள வேண்டும் என்பதையே மொழிபெயர்ப்பு

என்ற அவருடைய கருத்து புலப்படுத்துகிறது. எனவே மொழி பெயர்ப்பு அவருடைய உலக உணர்வையும் பிற மொழியையும் சமூகத்தையும் மதிக்கும் உணர்வையும் காட்டுகிறது.

மொழிபெயர்ப்பு என்னும்போது புதைந்துள்ள சமூகப் பொருளையும் அறிந்து கொள்ள வேண்டும். முதலில் பிற மொழிக் கல்வியே மொழிபெயர்ப்புக்கு அடிப்படை. தாய் மொழி மூலம் படிப்பது சிறந்தது என்றாலும் உயர்கல்வி என்று வரும்போது ஒரு சிலராவது பிறமொழிக்கல்வியில் ஈடுபட வேண்டும் என்பது தெளிவாகிறது. அப்படிப் பிற மொழியைப் படித்து அந்த மொழியிலுள்ள கருத்துகளைத் தான் மட்டும் அறிந்து கொண்டதோடு திருப்தி அடையாது, தாய்மொழி மட்டும் படித்தவர்களும் பலன் அடைய வேண்டும் என்ற நோக்கு இருந்தால் தான் மொழிபெயர்ப்பு பணியில் ஈடுபட முடியும். எனவே, அறிவு நோக்கோடு சமூக நோக்கும், மொழி பெயர்ப்பு என்பது புலப்படுத்துகிறது. மேலும் மொழிபெயர்ப்பு உலகப்பார்வை உடையது என்பதும் வலியுறுத்தத் தகுந்தது.

> உலகப் பண்பாட்டு ஒருமைக்கு வழி வகுப்பது; ஒன்றிலிருந்து மற்றது ஒதுங்கியிருக்கும் தன்மையினைத் தகர்த்து ஒருவித ஒருமையை ஏற்படுத்த முயல்வது

என்று மொழிபெயர்ப்பின் சிறப்பினை விளக்கியுள்ள சிவத்தம்பி (1982:56-62) அதன் பண்பையும் பின் வருமாறு விளக்கியுள்ளார்:

> மொழி பெயர்ப்பு என்பது எழுத்தறிவுள்ள சமுதாயங்களில் ஏற்படும் ஓர் எழுத்துநிலை முயற்சியாகும். சிந்தனை, கருத்து விளக்கம், உந்தற்பாடு ஆகியவற்றின் வழியாக வந்து இலக்கிய வகையாகி நூலுருவிற் பேணப்படுகின்றன ...உலக வரலாற்றில் மொழி பெயர்ப்புகள் செங்குத்தாகவும், தள மட்டமாகவும் பண் பாட்டு ஒருமைக்கும், தொடர்ச்சிக்கும் உதவியுள்ளன.

மேலும்

> பிற மொழியில் அதாவது பிற பண்பாட்டுக் கோலம் ஒன்றின் அடியாகத் தோன்றிய மொழியில் உள்ள சிந்தனைகளோ ஆக்கமோ தன்மொழிக்கு-அதாவது தனது பண்பாட்டுக் கோலத்துக்கு இயைந்ததாக இருக்கும் பொழுது அல்லது தேவையானதாகக் கருதப்படும்

பொழுது ஆசிரியன் மொழிபெயர்க்கத் தொடங்குகிறான். (ப.69.)

என்று கூறுவதிலிருந்து மொழிபெயர்ப்பு ஏற்படும் சூழலையையும் அறிந்து கொள்ளலாம். எனவே, தமிழ் அறிஞர்களும் பிற மொழிகளிலிருந்து மொழிபெயர்ப்பில் ஈடுபட வேண்டும் என்பதையும் அந்தப் பணி வழிநூலாகக் கருதத் தகுந்தது என்பதையும் 'மொழி பெயர்ப்பு' ஒரு வழி நூல் என்று கூறியதன் மூலம் உணர்த்தி விட்டார்.

சங்க காலத்தில் மொழி பெயர்ப்பு நூல்கள் என்று கூறத் தகுந்தவைகளை காணமுடியாவிட்டாலும் 'மொழி பெயர்ப்பு' என்பதை ஒரு வகை வழிநூலாகக் கூறியதன் மூலம் பிற மொழிகளை மதிக்கிற பாங்கையும் உலக உணர்வையும் தொல்காப்பியர் புலப்படுத்தியுள்ளார்.

---

# அடிக்குறிப்புகள்

## 1. மொழி வளர்ச்சியும் மொழி உணர்வும்

1. There are two clearly distinct dimensions involved in the various usages of language and dialect. One of these is "structural", that is descriptive of the language itself; the other is "functional", that is, descriptive of its social uses in communication. Since the study of linguistic structure is regarded by linguists as their central task, it remains for sociologists or more specifically, sociolinguists, to devote themselves to the study of the functional problem.

2. The creation of writing system is itself necessarily an outgrowth of cultural contact, if not, of political and economic domination from outside. Thus creation of a writing system is singularly unlikely to be viewed dis-passionately and its propagation and acceptance by indigeneous networks are necessarily viewed as having implication for group loyalty and group identity.

3. காப்பியங்கள் உண்டான சமூகத்தில் காப்பியச் செம்பதிப்பு பற்றிய பிரச்சனை வரும். கிரேக்க மொழியில் இதைக் காணலாம். செம்பதிப்புப் பணி தொகையாக்கத்தோடு ஓரளவு ஒற்றுமை உடையது.

4. Indeed, folklore, i.e. oral literature, precedes literature i.e. written literature, logically as well chronologically.

5. In the texts as they have reached us. we must distin-guish among four components which very probobly represent four different chronological layers: the intro-ductory stanzas (invocation of Siva, Viṣṇu and Murugan') the texts themselves, the colophons; the commentaries.

The poems began to be edited and anthologized with the ceasation of a living bardic poetry.

6. The anthologisation done of the Sangam poems in the first instance we have in Tamil literary history of a major interest in consolidating the literary gains of the past.

## 2. எழுத்தாக்கம்

1. 'இந்தக்கல்வெட்டுக்கள் பிராகிருத மொழியில் எழுதப் பட்டவை என்று எனக்குத் தோன்றுகிறது. மிகப்பழைய கால மாகிய கி.மு. 3 ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட இவற்றைத் தமிழ்மொழி என்று கூறித்தமிழுக்குப் பழமை கொடுப்பது கூடாது. கி.மு. 3 ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுக்களைத் தற் காலத் தமிழுடன் பொருத்தி உருமாற்றுவது விழிப்புணர்வு இன்றித் தவறான வழியில் செலுத்துவதாகும் என்று பணி வுடன் தெரிவித்துக்கொள்கிறேன். (ப14)...

'இந்தப்பிராமி எழுத்துக் கல்வெட்டுக்களில் புதுமையாகக் காணப்படுகிற இரண்டொரு எழுத்துக்களைக்கொண்டு இந்தக் கல்வெட்டுக்கள் பிராகிருதம் அல்லாத தமிழ்மொழி என்று கருதுவது கூடாது' (ப15)
என்ற இந்தக்கருத்தும்

'சங்க காலத்திலே தமிழில் வட இந்தியமொழியான பிரா கிருதச் சொற்களே முதலில் கலந்தன. ஏனென்றால் பிராகிருத மொழியைப் பயின்றவர்கள் பௌத்த சமண சமயத்தார்களே. தமிழ்நாட்டில் எழுதப்பட்டுள்ள பிராமி எழுத்துக் கல்வெட்டுக் கள் எல்லாம் தமிழ் மொழியிலே எழுதப்பட்டுள்ளன. அவை கடைச்சங்க காலத்தில் கி.மு. 3 ஆம் நூற்றாண்டுக்கும் கி.பி. 3 ஆம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்டகாலத்தில் எழுதப்பட் டவை. அவை பிராகிருத மொழி பயின்ற பௌத்த சமணர் களால் எழுதப்பட்டவையாகையால் இத்தமிழ்த் தொடரின் இடையிடையே பிராகிருத மொழிச்சொற்களும் இடம் பெற் றுள்ளன. பிராகிருத மொழி கலவாத தமிழ்மொழித் தொடர்

களும் இந்தக் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன, (16 - 17) என்ற இந்தக்கருத்தும் முரணானவையே.

2. Archaic Sumerian writing was quite typical of early scripts in being primarily or exclusively used for humdrum administrative purpose... Even, the out standingly intellectual Greeks appear to have made very limited use of alphapetic writing for up to 400 years.

Practically everywhere, the first use of writing must have been for more or less official messages. The next uses would have been commercial and legal: accounting and the drawing up of contracts. Various magical or religious uses often occur at an early stage. Then one finds increasing number of governmental proclamation and edicts or text of treatises. Chronicles or ritual texts only appear later. Writing designed for instruction or entertainment later still (Sampson 1985, p.48)

The Social needs of the ancient Egyptians were king oriented, of the ancient Mesopotamians were tax-collected oriented of the ancient Chinese were the priest (magico - religious rites) oriented.

3. The Social needs (of the Ashokan inscriptions) were, royal degress, religious utterances and charity. Of these probably the former used it mostly extensively and in a perfect regular fashion, over a very long period of time; the latter two categories of inscriptions have not only extremely sporadic in time and space but also too short in extent to merit the compulsive neccessity for the birth of a script.

### 3. இலக்கிய உருவாக்கம்

1. If literary history is to provide the history of thought of that community, non - literary texts are of great importance.

2. The preponderance of the formulae in these poems, the repetition of phrases, lines, ideas or group of ideas the stock themes that come in different forms and finally tendency of these heroic poems to fall into cycles - all these would seem to signify that this corpus of works shares characteristics in common with other oral traditional poetry, heroic or otherwise. Attempt will be made here to analyse the early Tamil bardic poetry is the light of these principles, indicating the bases of an advanced oral literary tradition.

3. The bulk of the extant heroic poetry in Tamil portrays this age of transition - the dying of old communities and the emergence of new princes and kingdoms.

4. The pulavar were a class of poets who actually became more important in the post-Heroic era, though their origins hark back to earlier times... In early Tamil the poets represent this second stage (i.e. post Heroic stage)...

5. The power and position of poets were posterior to that of bards. But once the position of the 'wise ones' was well established, they seem to have taken over the functions and encroached on the domain of professional minstreals and bards... The ascendency of the poets coincided and overlapped with the influx and spread of Jaina and Buddhist religious philosophies in the Tamil country. This again was contemporaraneous with the rise of a powerful merchant class.

6. குதிரைகள் வெளிநாட்டிலிருந்து வந்தவையே. தேரும் (Chariots) ஆரியர்களால் அறிமுகப்படுத்தப்பட்டவையே. ஆகையால் குதிரை நூல் என்பது வடமொழியில் உள்ள நூலாக இருக்க வேண்டும் என்பார் ஹார்ட் (Hart, 1975;78) அவர் வாசகம் வருமாறு:

It is known that chariots were introduced to India by the Aryans; it is therefore not surprising to find the ancient Tamils using their books as texts for chariot driving and horse training.

4. தொகையாக்கம்

1. Same as 1.6
2. The poems began to be edited and anthologized with the ceastion of a living bardic poetry.
3. It is highly probable that this compilation of the poems of the bardic phase was to consolidate the literary gains of the immediate past and thus the continuity of the royal lines... The compliation of the Caṅkam poems, is thus a matter of literary historical interest.

5. இலக்கண உருவாக்கம்

1. A sociolinguistic approach to the history of linguistics is necessary, if it is to approach explanatory adequacy.
2. The treatment of linguistic structure has been closely linked to other interests such as logic, rhetoric, poetics, philosophy, theology-in short with the uses of language recognized and valued by the societies in which lines of national philology have emerged or to which they have spread.
3. The Sanskrit grammarians of the past did not live in a socio cultural, political vacuum nor did anybody else for that matter...Several aspects of Sanskrit grammatical theories make sense only if viewed in the light of their contemporary social, religious and political structures and upheavals.

4. I have elsewhere discussed certain linguistic peculiarities of Puṟaṉa:ṉu:ṟu which have not come within the ambit of Tolka:ppiya Sutras and drawn a reason therefrom to establish the anteriority of Puṟaṉa:ṉu:ṟu, to Tolka:ppiyam...Hence it is that I make bold to characterize these four (Agaṉa:ṉu:ṟu, Puṟaṉa:ṉu:ṟu, Naṟṟiṉai and Kuṟuntokai) collections as embodying some of the earliest compositions of Tamil genius.

5. The assigning of this work (Tolka:ppiyam) absolutely to a particular century may not be feasible at present, for its composition quite probably falls within the dark period of Tamil history.

6. It is but reasonable to hold that, that grammatical work is much nearer to the period of Paripa:dal than to the earlier works, Puṟaṉa:ṉu:ṟu, Agaṉa:ṉu:ṟu etc.

7. Tolka:ppiyam shows evidence of being compiled by more than one hand especially in Poruḷatika:ṟam. The different contributors may have lived at the same time or contributions may have been made over a considerable period. The above sections 3 to 5 (kaḷaviyal, kaṟpiyaḷ and poruḷiyal) show evidence of a interpolation is an attempt to reconcile the ideas contained in the Akattiṇai with ideas in such works as the Na:ṭyasa:stra and Ka:masu:tra:. It is strange that all these sections should elaborate on the theme of *Akam* and similar elaborations on *Puṟam* do not occur in Tol. as extant. The next two sections of Tolka:ppiyam, treating bha:va: and upama: may will be regarded as interpolation.

8. There is a certain amount of inconcistency between some of the sutras. This suggests that certain sutras were introduced probably by students who felt a gap in

the work or that Tolka:ppiyam itself was the work of a grammatical school developing its ideas from time to time, rather than that of an individual author... Therefore, we have to distinguish the older usage from the later usage in Tolka:ppiyam itself.

9. Parts of Tolka:ppiyam are quite late. Though some parts may be as early as has been claimed... (p.10) At least part of Tolka:piyam is several centuries later than anthologies (p.79.)

10. In the dialect which formed the basis of the early Tamil literary language, the palatal nasal was preserved but the vowel of the two series was confused as a result of a change of *ña* to *ñe*. This particular change can only have taken over a limited part of Tamil area, since the modern *na-*, *ne-*, reflect earlier *ña-*, *ñe-*, which must have reminded the usage in bulk of the koṭuntamil̲ area.

11. Tolka:ppiyan̲a:r has worked out a beautiful Tamil grammar on the models of Sanskrit Pra:tis'a:khyas, Ya:ska:'s Nirukta, Pa:ṇini's śiksa; and Pa:ṇini's grammar or that of his predecessors without doing the least violence to the genius of Tamil language.

12. Tolkappiyana:r clearly realised that Tamil was not related to Sanskrit either morphologically or genealogically and deftly exploited the ideas contained in the earlier grammatical literature in Sanskrit...without doing the least violence to the genius of the Tamil language.

13. While it is true that Tamil tradition reflected the Sanskrit tradition, Tolka:ppiyam bears some similarity to the system found in each of the Sanskrit texts considered here, it must be emphasized that the methods and procedures found in the Tolka:ppiyam are no

identical with those found in any single Sanskrit text. In other works one connot claim that Tolka:ppiyam follows closely any single text to formulate all of its rules.

14. Tolka:ppiyar establishes some connections between theatrical/dramatic conventions and poetic conventions.
15. The conventions derived from life are the subject matter of Tiṇai poetry and the conventions derived from the 'ku:ttus' and dramas of ancient Tamiḻakam are technalities followed by the Tiṇai poets traditionally.
16. These short works may be thus regarded as a kind of reaction, weak and impermanent, though, against the prevailing trend of the period which disapproved of and slighted the traditional conception of eros.

6. சங்ககால மொழி நிலையும் மொழி உணர்வும்

1. It is in situation of language contact that people most easily become aware of the peculiarities of their language as against others and it is here that the pure or standardized language most easily becomes the symbol of group 'integrity': language loyalty breeds in contact situations just as nationalism breeds on ethnic borders.
2. Brahmins must have been coming from North India for a long time. Three to four hundred years before the anthologies, Buddhism and Jainism existed in Tamilnadu, there is no reason to suppose that Brahmins 'were' not 'present' as well. (p.50).. There came to be many kinds of Brahmins, some who very much more Tamilized, while others resembled in most respects their northern counterparts.
3. It is clear that the existance of Ta. C - in early Tamil texts corresponding to a *Skt.* sibilant or even to *Skt. C* -, etc is exceedingly rare. Its reintroduction

however, has just begun as observed in instances like *ce:mam,ca:ttu*. We may be therefore to conclude that in earliest series of loan words the initial consonant was regularly lost and that since a few examples with C-are already found in the earliest texts, the period at which the earliest loan words, i.e. those suffering this loss, who acquired would seem to lie sometime previous to the earliest literary records.

4. The words referring to uttaram, mu:lam and mrgaśi:rsa are not the Tamil names of those asterisms but rather terms, denoting their positions in the first half of month paṅkuṉi. uttaram is the 'head' or the "top" asterism; mu:la, the stable or that is rising to take the place of uttaram: mrgaśi:rsa, the 'old' asterism which is "sinking" down, and presumably after having occupied the place of the top asterism and some time before.

7. தொல்காப்பியரின் மொழி உணர்வு

1. It is in this situation of language contact that people most easily become aware of the peculiarities of their language as against others and it is therefore that the pure or standardiced language most easily becomes the symbol of group identity. Language loyalty breeds in contact situations just as nationalism breeds on ethnic borders.
2. The term, 'sentamil' corresponds exactly with 'Sanskrit' and it would be fruitful to investigate when this term came in to existence
2. Language varies as its function varies; it differs in different situations. The name given to a variety of the language distinguished according to use is 'register' — (P. 87)...Register may be distinguished according to the field of discourse, mode of discoure and style of discourse (P.91).

## துணை நூல்கள்

### சங்க இலக்கியங்களும் இலக்கணமும்

1. அகநானூறு களிற்றுயானை நிரை, நாவலர். ந.மு. வேங்கட சாமி நாட்டார் வேங்கடாசலம் பிள்ளை
அகநானூறு மணிமிடைப்பவளம், நாவலர். ந.மு.வேங்கடசாமி நாட்டார் வேங்கடாசலம் பிள்ளை.
அகநானூறு நித்திலக்கோவை, கழகவெளியீடு, சென்னை 1944-61.

2. ஐங்குறு நூறு மூலமும் பழைய உரையும், உ.வே. சாமி நாதையர், 1903, (இரண்டாம் பதிப்பு 1920) ஐந்தாம் அச்சு 1957.

3. கலித் தொகை மூலமும் நச்சினார்க்கினியர் உரையும், அனந்த ராமையர் பதிப்பு 1925, மறுபதிப்பு, 1985 தமிழ்ப் பல் கலைக்கழகம்.

4. குறுந்தொகை மூலமும் உரையும், உ.வே. சாமிநாதையர் 1937.

5. நற்றிணை நானூறு மூலமும்உரையும், பின்னத்தூர் நாராயண சாமி ஐயர் 1952, திருத்திய மறுபதிப்பு 1976, கழகம், சென்னை.

6. பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியர் உரையும், உ. வே சாமிநாதையர் பதிப்பு 1889. ஏழாம் அச்சு 1984

7. பதிற்றுப் பத்து மூலமும் பழைய உரையும், உ.வே.சா பதிப்பு 1904, மூன்றாம் பதிப்பு 1941, ஐந்தாம் அச்சு 1949.

8. பரிபாடல் மூலமும் பரிமேலழகருரையும், உ.வே.சா. பதிப்பு 1918, இரண்டாம் பதிப்பு 1935.

9. புறநானூறு மூலமும் உரையும், உ.வே.சா. பதிப்பு 1894 மூன்றாம் பதிப்பு 1935, ஐந்தாம் அச்சு 1956.

10. தொல்காப்பியம் எளியஉரை, சொ. சிங்காரவேலன் ஞான வேல் பதிப்பகம், மயிலாடுதுறை 1988.

11. தொல்காப்பியம், சொல்லதிகாரம் - சேனாவரையம் கு.சுந்தர மூர்த்தி - (பதிப்பர்), அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 1981.

12. தொல்காப்பியம் சொல்லதிகாரம் - தெய்வச்சிலையார் உரை, கு. சுந்தரமூர்த்தி (பதிப்பர்), கழக வெளியீடு, சென்னை 1963.

## நூல்கள்

1. அகத்தியலிங்கம், ச. 1983, சங்கத்தமிழ்-I, அனைத்திந்திய தமிழ் மொழியியற் கழகம், அண்ணாமலை நகர்.

2. அருணாசலம், ப. 1975, தொல்காப்பியர், தமிழ்ப்புத்தகா லயம், சென்னை.

3. அருணாசலம், மு. 1979, 'இலக்கியம் கண்டதற்கு இலக் கணம் இயம்பல்', புலமை-5 (சி) பக். 66-72, சென்னை.

4. அறவாணன், க.ப. 1972, 'தமிழ் எழுத்து வைப்பு முறை சமஸ்கிருதத் தழுவலா', நான்காவது கருத்தரங்க ஆய்வுக் கோவை, கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை சார்பு வெளியீடு, அண்ணாமலைநகர்.

5. ——— ———1974, சைனரின் தமிழிலக்கணக்கொடை, ஜைன இளைஞர் மன்றம், சென்னை.

6. ஆரோக்கிய நாதன், 1986, மொழியியல் - இரட்டை வழக்கு மணிவாசகர் நூலகம், சிதம்பரம்.

7. இராசம் இராமமூர்த்தி, 1977, 'சங்க இலக்கியப் புறப் பாடல்களும்-புறப்பொருள் இலக்கணமும்'வையை, மலர்-4, மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம்.

8. இராசமாணிக்கனார், மா., 1963, தமிழ்மொழி இலக்கிய வரலாறு (சங்ககாலம்), (இரண்டாம் பதிப்பு 1969) பாரி நிலையம் சென்னை.

9. இராமச்சந்திரன், சி.ஈ. 1977, சங்கவரலாறு, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை.

10. இலக்குவனார், சி. 1963 *Tolka:ppjyam in English with Critical Studies*, Kural Neri Publishing House, Madurai.

11. கந்தசாமி, சோ. ந., 1975, 'பௌத்த சமய நூல்கள்' தெய்வத்தமிழ், பதிப்பர்-சஞ்சிவி, பக்.322-94 சென்னைப் பல்கலைக்கழகம் சென்னை.

12. ——— ——— 1977, தொல்காப்பியத் தெளிவு, அண்ணாமலைநகர்.

13. கிருஷ்ணமூர்த்தி, இரா, 1986. சங்ககாலச் சோழர் நாணயங்கள், சென்னை.

14. ——— ——— 1987, பாண்டியர் பெருவழுதி நாணயங்கள் சென்னை.

15. குருசாமி, ம.ரா.போ. 1974, சங்ககாலம், (முதல் பதிப்பு 1967) மெர்க்குரி புத்தகக் கம்பெனி, கோயம்புத்தூர்.

16. கேசவன்.கோ. 1979, மண்ணும் மனித உறவுகளும், சென்னை புக்ஹவுஸ் சென்னை.

17. சஞ்சிவி. ந. 1973, சங்ககால ஆராய்ச்சி அட்டவணைகள் சென்னைப் பல்கலைக்கழகம் சென்னை.

18. சண்முகம், செ.வை.' 1971. அ. "Some Problems in Old Tamil Phonology, *Indo-Iranian Journal*. 13.31-43

19. ——— ———, 1901. ஆ, *Dravidian Nouns-A Comparative Study*, Annamalai Uuiversity, Annamalai Nagar.

20. ——— ———1971. இ, "சங்கஇலக்கிய மொழியமைப்பு ஆராய்ச்சி" 2.326-34-

21. ——— ——— 1974, பழந்தமிழில் கிளைமொழிகள், இலண்டன் தமிழ்ச் சங்க ஆண்டு மலர், இலண்டன், பக்.52-61.

22. ——— ——— 1977, 'மொழி உணர்வு'. புலமை 3.2 பக். 1-29.

23. ——— ——— 1978, எழுத்துச் சீர்திருத்தம், அனைத்திந்திய தமிழ் மொழியியற் கழகம், அண்ணாமலை நகர்.

24. ——————————1981, 'சங்கத் தமிழில் நேரப்பெயர்கள்' மொழியியல், 3-4, பக். 39-64.

25. —————————— 1984 அ. சொல்லிலக்கணக் கோட்பாடு - I, தொல்காப்பியம் முதல்பகுதி, அனைத்திந்தியத் தமிழ் மொழியியற் கழகம், அண்ணாமலைநகர்.

26. —————————— 1984 ஆ. 'சோழர்கால மொழி உணர்வு' தமிழ்க்கலை. 2.2,3.19-29.

27. —————————— 1985 மொழியும் எழுத்தும், அண்ணா மலைநகர்.

28. —————————— 1986, சொல்லிலக்கணக் கோட்பாடு-2 தொல்காப்பியம் இரண்டாம் பகுதி, அண்ணாமலைநகர்.

29. —————————— 1987, 'தமிழ் இலக்கணங்களில் உரிச்சொல் ஆய்வு' மொழியியல் அனைத்திந்தியத் தமிழ் மொழியியற் கழக இரண்டாவது கருத்தரங்க மலர் (பதிப்பர். கருணாகரனும் பிறரும்) அண்ணாமலைநகர்.

30. —————————— 1988. 'Concept and coinage of technical terms in Tolka: ppiyam', *Journal of the Annamalai University* (Humanities) *Vol* 33. 147-55.

31. —————————— 1989, 'இடைச் சொற்களும் சொல் வகைப் பாடும், ஆய்வுக்கோவை. 21.2.

32. சாரங்கபாணி, இரா. 1972, பரிபாடல் திறன், மணி வாசகர் நூலகம், சிதம்பரம்.

33. சிவத்தம்பி.க. 1981, *Drama in Ancient Tamil society* New century Book House, Madras.

34. —————————— 1982, இலக்கியமும் கருத்து நிலையும் தமிழ்ப்புத்தகாலயம், சென்னை.

35. —————————— 1983, தமிழ் இலக்கியத்தில் மதமும் மானுடமும், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை.

36. ———————— 1986, *Literary History of Tamil* (A Historiographical analysis), Tamil University, Thanjavur.

37. சிவஞானம். மா.பொ., 1976,இலக்கியங்களில் இனவுணர்ச்சி, இன்ப நிலையம், சென்னை.

38. சுந்தர சண்முகனார், 1972, தமிழ் நூல் தொகுப்புக் கலை, முதல் தொகுதி, பாரிநிலையம், சென்னை.

39. சுந்தரம். இராம., 1978 சொல்புதிது சுவைபுதிது தமிழ் நூலகம், சென்னை.

40. ———————— 1979, 'சங்ககாலம்' புலமை-5

41. சுப்பிரமணியபிள்ளை, கா. 1930, இலக்கிய வரலாறு முதல்பாகம் (நான்காம் பதிப்பு 1953) ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம், சென்னை.

42. சுப்பிரமணியன், கா. 1982, சங்ககாலச் சமுதாயம் நியூ சென்சுரி புக் ஹவுஸ், சென்னை.

43. சுப்பிரமணியன் ச.வே. (தொ.ஆ), இலக்கணத் தொகை-எழுத்து, ஜெயகுமாரி ஸ்டோர், நாகர்கோவில்.

44. சுப்பிரமணியன், தி.நா. 1938, பண்டைத்தமிழ் எழுத்துகள், சென்னை.

45. ———————— 1957, 'The Tamil Paleography' in *South Indian Temple Inscriptions* Vol. III Pt. II PP 1499-1610, Govt Oriental Manuscript Library, Madras.

46. சுப்பிரமணியன்.ந. 1986 சங்ககால வாழ்வியல் சங்கத் தமிழரின் அரசமுறையும் சமூக வாழ்வும், நியூசென்சுரி புக் ஹவுஸ், சென்னை.

47. செயராமன், நா. 1975, சங்க இலக்கியத்தில் பாடாண் திணை, மீனாட்சி புத்தக நிலையம், மதுரை.

48. ———————— 1977, களம் கண்ட கருத்துக்கள், குமரன் பதிப்பகம் மதுரை.

49. சோமசுந்தர பாரதியார். ச. 1942, தொல்காப்பியர் பொருட்படலம் அகத்திணையிலும் புதிய உரையும், பசுமலை.

50. தமிழண்ணல், இரா. 1975 சங்க இலக்கிய ஒப்பீடுகள் இலக்கியக் கொள்கைகள், மூன்றாம் பதிப்பு, 1985, மீனாட்சி புத்தக நிலையம், மதுரை.

51. ———————— 1976, *Tradition and Talent in Caṅkam Poetry*, Madurai Publishing house, Madurai.

52. ———————— 1978, சங்க இலக்கிய ஒப்பீடுகள்: இலக்கிய வகைகள், (இரண்டாம் பதிப்பு 1979) சோலை நூலகம், மதுரை.

53. ———————— 1980, புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, (ஏழாம் பதிப்பு 1987), மதுரை.

54. தமிழவன் (கார்லோஸ்) 1975, 'ஐங்குறு நூற்றில் நாட்டுப் பாடல்கள் பண்பு' புலமை, 1-4, 53-71.

55. நாகசாமி.இரா. 1972, 'தமிழ் எழுத்துகள்', கல்வெட்டியல் (தொல் எழுத்தியலும் கல்வெட்டியலும்), (பதிப்பர். இரா. நாகசாமி முதலிய நால்வர், தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை.

56. ———————— 1979, 'Comments,' In *Gupta and* Ramachandran in 1979; 72 - 82.

57. நீதிவாணன், ஜெ., 1977, 'தொல்காப்பியத்துள் வட்டார வழக்குக் கூறுகள்' வையை, 4. 4-20.

58. ———————— 1979, நடையியல், முல்லை வெளியீடு, மதுரை.

59. ———————— 1982, 'Colophones in reconstruction'- *Proceedings of the third annual conterence of South Indian History*, (Eds.K. Rajayyan et al). Erode.

60. பவுன்துரை, இரா. 1986. தமிழகப் பாறை ஓவியங்கள் சேகர் பதிப்பகம், சென்னை.

61. பாலகிருட்டிணன், நா., 1988, தொல்காப்பிய பொருளதி கார வழி நற்றிணை ஆய்வு, சென்னை.

62. பாலசுப்பிரமணியன், கு.வெ. 1986, சங்க இலக்கியத்தில் புறப்பொருள், மீரா, புதுக்கோட்டை.

63. மகாதேவன், கதிர்., 1975, ஒப்பிலக்கிய நோக்கில் சங்க காலம், (இரண்டாம் பதிப்பு, 1977) மதுரை.

64. மாணிக்கம், வ.சு.ப. 1962, *The Tamil concept of love in Ahattiṇai*, Kazhagam, Madras.

65. ——————— 1984, தொல்காப்பியத்திறன், மணி வாசகர் பதிப்பகம், சிதம்பரம்.

66. ——————— 1986, 'தமிழ் வான்மீகியார்', ஆய்வுக் கோவை, 18.4. 156 – 60.

67. மாதையன், பெ. 1989, 'மகட்பாற் காஞ்சிப்பாடல்களும் சங்கச் சமூகச் சூழலும்', தமிழ்ப் பொழில், துணர். 63 மலர். 2. பக். 50 – 64, கரந்தை, தஞ்சாவூர்.

68. மீனாட்சிசுந்தரம், தெ.பொ., 1981, தமிழ் இலக்கிய வர லாறு, சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை.

69. வெள்ளை வாரணன், க., 1957, தமிழ் இலக்கிய வரலாறு-தொல்காப்பியம், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர்.

70. வேங்கடசாமி, மயிலை சீனி., 1959, மறைந்து போன தமிழ் நூல்கள், பாரி நிலையம், சென்னை.

71. ——————— 1981. சங்க காலத்துப் பிராமி கல்வெட் டெழுத்துக்கள் கழக வெளியீடு, சென்னை.

71. அ. வேங்கடராசுலு ரெட்டியார், வே. 1933. பரணர் சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை.

71. ஆ. ——————— 1944 எழுத்திகார ஆராய்ச்சி சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை.

72. வேலுப்பிள்ளை, ஆ., 1969, தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், சென்னை.

73. வையாபுரிப் பிள்ளை, எஸ்., 1949, தமிழ்ச் சுடர்மணிகள் (நான்காம் பதிப்பு 1968) பாரிநிலையம், சென்னை.

74. ——————— 1952, இலக்கிய தீபம் பாரிநிலையம், சென்னை.

75. ———————1956, *History of Tamil literature*, New Century Book house, Madras.

76. ஜான் சாமுவேல். ஜி. 1986, பண்பாட்டுக் கலப்பும் இலக்கிய ஒருமையும், ஐந்திணைப் பதிப்பகம், சென்னை.

76. அ.கிருஷ்ண்ன்,ப. 1984. தமிழ் நூல்களில் தமிழ்மொழி, தமிழ் இனம், தமிழ்நாடு, இளந்தமிழர் பதிப்பகம் சென்னை.

77. Anavaratavinayakam Pillai, S., 1919, *Dravidic Studies III. The Sanskrit element in the Vocabularies of the Dravidian Languages*, University of Madras, Madras, Reprint, 1974.

78. Balasubramaniyan, K., 1976, Historical development of A:ytam *in Dravidian Linguistics. V* Eds. Agesthialingam. S. & Subramaniyan, P.S., PP.561-82. Annamalai University, Annamalai Nagar.

79. ——— 1983, 'Homogenity and Integrity of Tolka:ppiyam and its authorship, *IJDL.XII* 429-41.

80. Burrow, T. 1943, 'Initial y and ñ in Dravidian' in *Collected Papers on Dravidian Linguistics* (by. T. Burrow) Annamalai University, Annamalai Nagar, 1968.

81. ——— 1947, 'The loss of initial c/s in south Dravidian', Ibid.

82. Caldwell, R. 1875, *A Comparative grammar of the Dravidian or South Indian family of languages*, 3rd Edition. revised reprinted by the University of Madras, 1956.

83. Chelvanayakam, V. 1969, 'Some problems in the study of Tolka:ppiyam in relation to Sangam poetry'- *pro-*

*ceeding of the first International Conference-Seminar of Tamil Studies*, 1966, Vol II, 38-44. Kualalumpur.

84. Deshpande, M.M. 1979. *Socolinguistic attitudes in India*, Karoma Publishers. Ann Arbor.

85. Emeneau, M.B. 1966. 'The dialects of old Indo-Aryan' in *Ancient Indo European dialects*, (Eds. Birnbaum. H. & Puhvel. J. Berkeley.

86. ——— 1970, *Dravidian Comparatve Phonology*: A sketch, Annamalai University, Annamalai Nagar.

87. Fasold, R. 1984, *The Sociolinguistics of Society*, Basil Blackwell, Oxford.

88. Ferguson, C.A., 1959, 'Diglossia', *Word*, 15, 325-40.

89. ——— 1968, 'Language development' in *Language problems of developing nations*, Fishman, J.A. et al New york.

90. Fishman. J.A. 1977, *Advances in creation and revision of writing systems*, Mouton The Hague.

91. Gift Siromony, 1982, 'The origin of Tamil script' *Tamil Studies, II*. PP.18-23. International Institute of Tamil Studies.

91. ——— 1983, 'Origin of the Tamil-Sanskrit script in *Origin Evoluution and reform of Tamil Script*, (Seminar papers), PP. 21-9, University of Madras.

92. Goyal, S.R., 1979, 'Brahmi-an invention of Early Mauryan Period' in Gupta & Ramachandaran, 1979.

93. Gupta. S.P. & Ramachandaran, 1979, *The Origin of Brahmi script*, D.K. Publications, Delhi.

94. Halliday et al. 1964, *The linguistic sciences and Language Teaching*, Longman, London.

95. Hart, G.L. III. 1975, *The poems of ancient Tamil-their milieu and their Sanskrt Counter part*, University of California press, Berkeley.

96. Haugen, E. 1966, 'Dialect, language, nation' in *Sociolinguistics*, (Ed. Pride, J.B.) PP.99-111.

97. Hymes. D. (Ed). 1974, *Studies in the History for Linguistics: Tradition and paradigm*, Indiana University press, Bloomington.

98. Jones, Daniel, 1967, *The Phoneme, its nature and use*, Cambridge.

99. Kailasapathy, K., 1968. *Tamil Heroic poetry*, Oxford University press, Oxford.

100. Krishnan, K.G. 1974, 'Brahmi script in Tamil Nadu' *Studies in Indian Epigrahy*, Vol.1. PP 26-30.

101. ——— 1983, 'Origin of Tamil script' in *Origin, Evolution and reform of Tamil Script* (Seminar papers) PP.15-19.

102. Kumaraswami Raja, N. 1969, *Post-Nasal Voiceless Plosives in Dravidian*, Annamalai University, Annamalai Nagar.

103. Mahadevan, I., 1969, 'Tamil Brahmi inscriptions of the Sangam age' - *Proceeding of the First International Tamil Confereance - Seminar*

104. ——— 1987. 'Orthographic system in early Tamil writing' - paper presented to Sixth International Tamil conference, Kualalumpur.

105. Mahalingam, T.V., 1967, *Early South Indian Paleography*, University of Madras, Reprinted, 1974.

106. Manuel. M. 1969. 'The use of literary conventions in Tamil classical poetry', *Proceeding of the first International conference - Seminar of Tamil Studies* vol. II PP. 63 - 9, Kualalumpur.

107. Marr. J.R. 1958. *The Eight anhologes*; Institue of Asian studies, Madras, (Printed in 1985).

108. Meenakshi sundaram. T.P. 1965 a, *A History of Tamil Language* Deccan, college poona.

109. ——— 1965 b. A *History of Tamil Literature*, Annamalai University, Annamalai nagar.

110. ——— 1974. *Foreign models in Tamil grvmmar*, Dravidian Linguistics Association, Trivandrum.

111. Murugaiyan, K., 1973, 'Did Tolka:ppiyar translate Pa:ṇiṇiya siksha?' *A:yvukko :vai* Vol - 5 pp 599 - 606, Madras.

112. Pillai, K.K. 1975. *A Social history of the Tamil Vol-I* 2nd edition, University of Madras, Madras.

113. Rajam, V.S., 1981. 'A Contrastive study of two ancient grammatical traditions: the Tamil Tolka:ppiyam compared with sanskrit RK. Pra:tisa:khya' - Thesis submitted to Pennsylvania University.

114. Ramaswami Aiyar, L.V. 1937. 'The language of Kalittokai' JORM II 191 - 204.

115. ———1937-38 'The language of Tiruvalluvar' JMS. 28.191.

116. ———1938, The morphology of Old Tamil verbs', *Anthropos* 33., 747-81.

117. Sampson, 9., 1985, *Writing systems: a linguistic introduction*, Hutchinson, London.

118. Sivaraja Pillai, K.N., 1932, *The chronology of early Tamils*, University of Madras, Madras.

119. Subrahmanyam, P.S., 1983, *Comparative Dravidian Phonologyi* Annamalai Universiy, Annamalai Nagar.

120. Subrahmaniya Sastri. P.S. 1934, *History of grammatical theories in Tamil and their relation to the grammatical literature in Sanskrit, Madras.*

121. Subramaniyam, P.R. 1968, 'Folklore as the precursor of literature' in *Four papers on literature and linguistics*, Meenakshi Puthakanilayam, Madurai.

122. Vaidyanathan, S., 1971, *Indo - Aryan Loan words in Old Tamil* Rajan Publishers, Madras.

123. Weinreich. U., 1953, *Languages in contact: Findings and problems*, Mouton, The Hague.

124. Zvelibil, K.V. 1973, *The Smiles of Murugan: on Tamil literature of South India*, E.J. Brill, London.

125. ——— 1974. *Tamil literature*, Otto Harras Sowitz, Wiesbadon.

126. D.E.D.R. *Dravidian Etymological Dictionary Revised Edition* by Burrow T.& M.B. Emeneau, Oxford, University press. Oxford, 1986.

127 *Index des mot de Litarture tomoule ancienne* III Vols. Institute Francis's D' Indoelogie, Pondicherry, 1967 - 70.


---



# Language development
# and
# Language Attitude

## (OLD TAMIL PERIOD)

1. Language development and language attitude
2. Creation of writing system
3. Formation of literature
4. Antholization
5. Formulation of grammar
6. Language situation and language attitude in Sangam age
7. Tolka : ppiyar's language attitude

Wrapper Printed at Karpakam Achakam, Madras-600 002.